# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி பன்னிரண்டு




புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி பன்னிரண்டு

பதிப்பாசிரியர்

இர. ஆலாலசுந்தரம், எம்.ஏ., பிஎச்.டி.,



புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு - தொகுதி XII

வெளியீட்டு எண் : 17

முதற்பதிப்பு : சூன் 2005

ISBN : 81-85452-18-0 (Set) Vol.9,10,11,12
81-85452-20-2 (Vol.12)



வெளியீட்டாளர் : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
112, காமாட்சி அம்மன் கோயில் வீதி,
புதுச்சேரி – 605 001.
இந்தியா.

அச்சிட்டோர் : அரசினர் மத்திய அச்சகம்
புதுச்சேரி – 605 009.

விலை :

# பதிப்பாசிரியர் முகவுரை

இப்பன்னிரண்டாம் தொகுதியோடு ஆனந்தரங்கப்பிள்ளையின் நாட்குறிப்பு முடிவுக்கு வருகிறது. இத்தொகுதிக்கு முந்திய மூன்று மாதப் பதிவுகள் கிடைக்கப் பெறவில்லை. இந்த இடைக்காலத்தில் தான் போர்ச் செலவுக்குக் கையிலே காசு இல்லாமலும் படையாட்களுக்கு உணவு கூடப் போட முடியாமலும் லல்லி தேவையில்லாமல் அவரசப்பட்டுச் சென்னைக் கோட்டையைப் பல வாரங்கள் முற்றுகை இட்டு, இனிமேலும் அதைப் பிடிக்க முடியாது என்ற நிலைக்குத் தள்ளப்பட்டுப் புதுச்சேரிக்கு மீண்டார். அது பிரெஞ்சுக் கம்பெனிக்கும் படைகளுக்கும் மிகுந்த தளர்ச்சியையும் வெற்றியில் நம்பிக்கையின்மையும் ஏற்படுத்திற்று. லல்லியின் மீதும் பிரெஞ்சு அதிகாரிகளுக்கு மதிப்பும் மரியாதையும் குறைந்து போயின.

பன்னிரண்டாம் தொகுதியில் பலவிதங்களில் மக்களைத் துன்புறுத்தி வெறியும் லல்லியும் அன்றாடம் ஆயிரம் ஆயிரமாக பணம் கறந்ததைப் பிள்ளையவர்கள் கண்ணீர் விட்டு விளக்குகிறார். ஆயினும், ஆங்கிலேயரின் பணபலமும் படைபலமும் நாளுக்கு நாள் பெருகிப் பிரெஞ்சுக்காரரால் ஈடுகொடுக்க முடியாமல் போயிற்று. விரைவிலேயே புதுச்சேரியை ஆங்கிலேயரிடம் ஒப்படைத்து விட்டுத் தாய்நாடு திரும்புவது தவிர வேறு வழியில்லை என்று பிரெஞ்சுக்காரர்களே முடிவுக்கு வந்தனர்.

1761ல் பிள்ளை கடும் நோய்வாய்ப்பட்டார். 1761 ஜனவரி பன்னிரண்டு பிள்ளையின் உயிர் பிரிந்தது. பிள்ளை இறந்த அன்று அவர் உடல் லல்லியின் அறிவுரைப்படி தகனம் செய்யப்பட்டது. நான்கு நாள் கழித்துப் பிரெஞ்சுக்காரர் வசம் புதுச்சேரி ஒப்படைக்கப்பட்டது. அதை வருணிப்பதற்குப் பிள்ளையில்லை. அப்பொழுது அவருக்கு வயது ஐம்பத்திரண்டு கிட்டத்தட்ட இரண்டு வருசம், நான்கு மாதம் நோய்வாய்ப்பட்டுக் காலமானார்.

**பிள்ளையவர்கள் பற்றி :**

ஆங்கிலப் பதிப்பின் பன்னிரண்டாம் தொகுதியைப் பதிப்பித்த H. டாட்வெல் அத்தொகுதிக்கான தனது முகவுரையில் பிள்ளையின் நாட்குறிப்புப் பற்றிக் கீழ்வருமாறு கூறுகிறார் :

But the clearest figure of the Diary is that neither of French leader not of French subordinate, but of Ranga Pillai himself, both when robed in gown and turban and girt with sword and dagger, he passes in his palankin through the Fort Gate to pay his respects and report the city news to the Governor of the day, and when his ceremonious garments are cast aside, he sits at ease in his hall, giving audience and advice to his friends and followers.

பிள்ளையின் தமிழ்நடை தொகுதிக்குத் தொகுதி செம்மைப்பெற்று வளர்ச்சியுற்றதை அவரது நாட்குறிப்பு முழுவதையும் கவனமாகப் படிப்போர் நன்கு அறியலாம். அதே போல அவர் விளக்க வந்த பொருள்களும் எளிமையும் செம்மையும் கூடி ஆண்டு தோறும் மேலும் மேலும் மிளிர்கின்றன.

இர. ஆலாலசுந்தரம்

# சனேரி 1760

***1760 வருசம் சனேரி மாசம் தேதி 2; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 22; புதவாரம்***

இத்தனாள் ராத்திரி பனிரெண்டடிச்சு ஒரு மணிக்கு தாண்டவசெட்டி யென்கிறவனும் அஞ்சாறு கம்மாளப் பசங்களுமாய் வந்து, "வீரபத்திர ஸ்வாமி யெப்போதும் யெழுந்தருளப் பண்ணுகிறதில்லை. யிப்போ யெழுந்தருளப் பண்ணினார்கள். யிது யெங்களவர்கள் சொல்லச் சொன்னார்," கஎென்று வந்து சொன்னார்கள். யிதுகளெல்லாம், "உங்களுக்கு யென்ன கவையிருக்குது. யிப்படி யேதாகிலும் உண்டானால் நயினார் வந்து சொல்ல வேண்டியது. உங்களுக் கென்ன யிப்படிப்பட்ட காரியங்களெல்லா," மென்றும் முன்னே விப வருசத்திலே யிங்கிலீசுக்காரன் கலாபத்தின் போது வேதபுரீஸ்வரர் கோவில் யிடிச்சுப் போடச்சே முசே துப்பிளேயிக்சு நம்மை அழைச்சு யிந்த கோவில் நிமித்தியம் சம்பா கோவிலாருக்கும் உங்களுக்கும் யென்னேரமும் யிட்டோட்டாயிருக்குது. உங்கள் மதமாம்படியே யென்னென்ன நடக்க வேணுமோ அதுகள் நடக்குறதுக்கு மில்லை, ஆனபடியினாலே யிடிச்சுப் போட்டோம். யிப்போ உங்கள் மதமாம்படியே உங்கள் சுவாமி கோவிலுக்கு அந்தண்டை யென்ன யிருக்குதோ, அதுகள் உங்கள் மதமாம்படி யென்னை சம்பிரங்கள் நடப்பிக்க வேணுமோ அதுகளெல்லாம் நடப்பிச்சுக் கொள்ளுங்களென்று (துரை) சொன்னார்."

***1760 வருசம் சனேர் மாசம் தேதி 3; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 23; குருவாரம்***

இத்தனாள் குமிசெல் கூடயில்லை. முசியே மொர்சேன் போகச்சே கூடப்போன சொலுதாதுகள் பந்தர் யிங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டபடியினாலே அவ்விடத்திலே யிருக்கக்கூடாமல்படி கஞ்சாலே போயிருந்து, அவ்விடத்திலேயும் யிருக்கக் கூடாமல்படி முசே மொர்சேன் பிறப்பட்டு வந்துவிட்(டார். அவர்) விட்டு விட்டு வந்த சொலுதாதுகள் முன்னூறுபேர் அவ்விடத்திலே ரொம்ப சோறு கஞ்சியில்லாமல் படிக்கிறபக் கஷ்டப்பட்டு, ஒரு கப்ப லொன்று கேழ்விக்கு (கடனுக்கு) வாங்கிக் கொண்டு முன்னூறு பேர் சொலுதாதுகள் யின்றைய தினம் வந்து சேர்ந்தார்களென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் சனவரி மாசம் தேதி 7; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 27; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கு முசே வெறியேர் (he-Verrier's) வீட்டுக்குப் போனோம். அவர் எழுந்திருந்து யெதிரே வந்து கட்டிக் கொண்டு ரொம்ப சந்தோஷமாய் ஆசாரம் பண்ணி உட்கார வச்சுக் கொண்டு, "நான் வந்து ஒரு மாசமாய் உம்மைப் பார்க்க வேணுமென்று ரொம்ப ஆசையாயிருந்தது. உமக்கு யில்லை. நீர் வந்து பழய ஸ்னேகிதம் முசே (லெ)னுவார் நாளைய சினேகிதம். நீர் நாசறு சங்குவை செயிக்க நடப்பிச்ச காரியம் கவைகளும் முசியே துப்பிளேயிக்சு நாளையிலே யிந்தப் பட்டணத்துக் காரியங்கள் நடப்பிச்சதும் யிதுகளெல்லாம் டில்லி அவ்விடங்களெல்லாம் கேட்டு உம்முடய கீர்த்தியை ரொம்பவும் சந்தோஷப்பட்டார்கள். அன்று முதல் உம்மைப் பார்க்க வேணும் என்று யெனக்கு ரொம்ப அபேக்ஷை யாயிருந்தது. யிப்ப உம்மைப் பார்த்தவுடனே யெனக்கு சந்தோஷமா யிருக்குது. முசியே (லெ)னுவார் நாளையிலே யிந்தப் பட்டணம் உண்டானதும் சகல செனங்களும் சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்துதும் யிப்போ இந்தப்பட்டண மிருக்கிறதும் துரைத்தனம் பண்ணுகுறவர்களுடைய நடத்தையும் யிந்த குமுசேலும் பார்த்தால் யெனக்கு ஒன்றும் சரிப்படயில்லை. முன்னே முசே னுவார்(?) நாளையிலே யிந்தப்பட்டணத்திலே ஆயிரத்தன்னூறு தரிநெய்தது யென்று எழுதி குடுத்ததுக்கு இரண்டாயிரம் தரி சரியாயிருக்க வேணுமென்று சொன்னார். அப்படிப்பட்ட பட்டணத்திலே யிப்போ நூறு தரிக்கி யில்லையாம். அப்படி வற்தகம் ஒண்ணுமில்லாமல் போனால் யிவர்கள் துப்பாக்கியைப் பிடிச்சுக் கொண்டு செய்ய வேண்டியதென்ன? யிப்போ நடக்கிற நடத்தைகளைப் பார்த்தால் நான் கண்டுதும்யில்லை, கேட்டதுமில்லை. அப்படி யிருக்குது. நீர் முசே துப்பிளேயிக்சு (M. Dupleix) நாளையிலே நாசர் சங்கை செயிச்சதும் நடப்பிச்ச காரிய காரியங்களைத் தொட்டு வெகு கீற்த்தியைப் பெற்றீர். அப்படிச் செய்த நீர் ஒரு காரியத்தைத் தொட்டு சீமா மூலம் வாங்கி உம்முட பேருக்கு யித்தனை யெல்லாம் வந்தது யிந்தக் காரியம் நீர் தப்பிதம் பண்ணீர்," யென்று சொன்னதுக்கு, "மெய்தான், வேளையினுடைய லக்ஷணம் அப்படியிருந்த," தென்று சொன்னோம்.[1] நீர் பழய ஸ்னேகிதன். நீர் முசே (லெ)னுவார் (?) கீழே யிருந்து அந்த புத்திப்படிஞ்ச படியினாலே உம்முடனேயே பேச (வேணு) மென்று யிருக்குது. நீர் வராமல் யிராதேயும். நாலிலே அஞ்சுலே வந்து கண்டு பேசிப்போம். பின்னை ஒருத்தரும் உம்முடய புத்திக்கு சமானம் யில்லை யென்று சொல்லி டங்காசாலை

[1] இது பற்றிய விவரம் முழுவதையும் எத்தொகுதியிலும் காணமுடியவில்லை.

சம்மதிக்கு முசே புலோ நம்முடனே சொல்லி யிருக்குறார். அந்தக் காரியம் நான் குமிசேலிலே பேசுகுறேன். நீரே நாம் உம்முலேயும் சத்து அதிகமானபடியினாலே யெனக்கு சொல்லத் தேவையில்லை? "யிப்படி லோகா பிறமமாய் மூணு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அப்பிறம் வெகுநேரமாச்சுது. நாம் குமிசெலுக்குப் போகவேணுமென்று சொன்னார். நாமும் யெழுந்திருந்து ஆசாரம் பண்ணி அனுப்பிவிச்சுக் கொண்டு வரச்சே தெரு வாசற்படி மட்டுக்கும் வந்து வழிவிட்டு ஆசாரம் பண்ணார். அப்பிறம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1760 வருசம் சனவரி மாசம் தேதி 11; பிறமாதி வருச்ம் தை மாசம் தேதி 1; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்னயென்றால், முசே லாலிக்கும் முசியே புசிக்கும் யென்னேரமும் கிச்சாட்டமாயிருக்கு தென்றும், அதன் பேரிலே முசே லாலி வெளியே பிறப்பட்டு ஒப்பிசேல்மாருக்கும் சமாதானம் பண்ணுகுரா ரென்றும், மகாராட்டியர் குதிரை பிறப்பட்டு பூந்தமல்லி, மயிலாப்பூர், திருப்பாச்சூர் சீமை யிதுகளெல்லாம் கொள்ளையிட்டு வல்லடி யிட்டார்களென்றும், அப்பாச்சி நயினார் தம்பி ரிஷபனாத நயினாரை வெட்டிக்காயப் படுத்தினார்களென்றும், தண்டுலே சிவுகுப் பணத்துக்கு ரொம்ப நெருக்காட்டமாயிருக்குதென்றும் யிப்படியாக வெள்ளைக்காரர் சொல்லச்சே கேழ்க்கப்பட்டுது.

## மார்ச் 1760

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 1; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 22; சனிவாரம்*

இத்தனாள் சென்னப்பட்டணத்திலே ஆறுகப்பலிலே மருந்து குண்டு யேத்தி புதுச்சேரியின் பேரிலே வருகுதென்றும், வந்தவாசியிலே யிருந்த யிங்கிலீசுக் காரருடைய பவுன்சு செஞ்சி அந்த வட்டங்களிலே சீமைகளெல்லாம் கட்டி பெருமுக்கல் கில்லா(வின்) பேரிலே வந்து யிப்பறமும் வருகுறார்களென்றும், அதன் பேரிலே பட்டணத்திலே யிருந்து செனங்கள் யெல்லாம் ரொம்ப காபிராப்பட்டுத் தத்தளிக்குறார்கள்(என்றும்), யித்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்னயென்றால் சீமையிலே யிருந்து ராசாவுடைய காரியமாய் முசே துப்பிளேயிக்சு கும்பினியார் காரியம் விசாரிக்க முசே ரேசு என்கிறவரும் (M. Roth) மோரிசு வந்து சேர்ந்தார்களென்றும், முசே லாலி அவர்களுக்குக் காகிதம் வந்ததாய் அவர் யிந்த சமாசாரம் சொன்னதாய்ப் பட்டணத்திலே யிருக்கிற வெள்ளைக்காரர், துரைகள், தமிழர் சகலமான பேரும் சொல்லிக் கொண்டார்கள்.

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 2; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 23; ஆதிவாரம்*

இத்தனாள் நேத்தைய தினம் சொல்லிக் கொண்ட படிக்கி சென்னப்பட்டணத்திலே கப்பலிலே மருந்து குண்டு ரஸ்து யேத்துகுறார்கள் என்கிறதும், வந்தவாசியிலே யிருந்த இங்கிலீசுக்காரருடய பவுன்சு பெருமுக்கல் வந்து சுத்திக்கொண்டு சண்டை போடுகிறபடியினாலேயும் யிப்பாலேயும் வழுதாவூர் மட்டுக்கும் அவர்கள் மனுஷர் வந்து காலாடுகிற படியினாலேயும் சுத்துப்பட்டு கிராமம் திண்டிவனம் சீமை யிதுக ளெல்லாம் கட்டிக் கொண்டபடியினாலே நம்முடவர்கள் பவுன்சு முறட்டாண்டிச் சாவடியிலே யிறங்கி யிருந்ததெல்லாம் வந்து, காட்டுமேடு லக்ஷமண நாயக்கன் மண்டபம் வந்து சேர்ந்தபடியினாலே பட்டணத்திலே யிருக்கிற செனங்களெல்லாம் ரொம்ப காபிராப்பட்டு யிருக்குறார்கள். இத்தனாள் முசே லாலி வந்த யிந்த மட்டுக்கும் சம்பாதிச்ச திரவியமும் சீமைக்கு அனுப்புகுறதுக்குத் தன்னண்டைச் சகல காரியத்துக்கும் தீவான்கிரியாயிருந்த முசே பசேனையும் (Bazin) பயணம் பண்ணி, திரவியமும் குடுத்து சீமைக்கி யெப்படிக் காகிதமெழுத வேணுமோ அந்தப்படி எழுதி நாகப்பட்டணம் போற கப்பலிலேயோ தலங்கம்பாடியார் கப்பலிலேயோ யேறி சீமைக்கிப்

பயணம் போறதாய் அனுப்பிவிச்சார். பிள்ளையும் முசியே ஷெவலியேர் கிரியோன் (Crillon) என்கிறவனும் பிள்ளையும் ராசாவுடைய சம்பந்தமா யிருக்கிற நாலத்து ரெண்டு பேரும் அவரவர் யிவ்விடத்திலே வந்து சம்பாதிச்சு பணங்காசு தட்டுமுட்டும் எடுத்துக் கொண்டு முசே பசேன் (Bazin) விசேஷிச்சு சம்பாதிச்ச பணங்காசு தட்டுமுட்டும் எடுத்துக் கொண்டு நாகப்பட்டணத்துக்குப் போயி அவர்கள் கப்பலிலே யேறி சீமைக்கிப் போறதாய் நழுவினார்கள். ஒருவேளை (எதிரே) கப்பல் காடி வந்தால் யென்னமாயிருக்குமோ என்கிறதாய் நழுவினார்கள்...

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 3; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 24; சோமவாரம்*

இத்தனாள் முசே பசேன் பிறகே சம்பா கோவில் பாதிரியள் சிறிது பேர் நாகப்பட்டணத்துக்குப் போனதின் பேரிலே பட்டணத்திலேயுள்ள செனங்கள் கிறுஸ்தவர்கள், சோனகர், தமிழர் யிவர்கள் தட்டு முட்டு வெள்ளி நகையள் டங்காசாலையிலே கொண்டு போய்க் குடுத்து ரொக்கமாய் நாற்பது ரூபாயுது அன்பது ரூபாயி ரொக்கமாயி வாங்கிக் கொண்டு அவரவர் வெளியே பயணமாய்ப் போகத் துவக்கினார்கள்.

### *1760 வருசம் மார்சு மாசம் தேதி 4; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 25; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் குமிசெல்க்கூடி தீந்தது. உள்கோட்டை கோவர்ணதோர் முசே லெறி முதலாகிய குமிசெல்க்காரர் காக்கவும் கடலோரமும் மூலைக்கொத்தளம் முதல் கொண்டு சின்ன துரை முசியே கில்லியார் (M. Guillard) முதலாகிய ஒப்பிசேல்மார் சொலுதாதுகள் கார்க்கவும், வெளிக்காரியமும் கோட்டைக் காரியமும் முசே லாலி பார்த்துக் கொள்ளவும் தீந்தது. அதன்பேரிலே வெளிகளிலே யிருந்த பவுன்சுகளை யெல்லாம் அழைப்பிச்சு குண்டுசாலை மொர்சாக்களிலேயும் பெருமாள் நாயக்கன் சாவடியிலேயும் யிப்படி நாலு வழியிலேயும் யிருந்த பவுன்சுக ளெல்லாம் கொண்டு வந்து வச்சதின் பேரிலே பட்டணத்திலேயுள்ள செனங்க ளெல்லாம் பயந்து காபிறாப்பட்டு கிறிஸ்துவர்களும் சோனகரும் கோமுட்டிகளும் சமுசாரத்துகளே பிறப்பட்டு வெங்கிட்டாம்பேட்டை, கூடலூர், பறங்கிப்பேட்டை யிந்த வட்டங்களிலே வெகு செனம் போயி விட்டார்கள். பட்டணத்திலே இங்கிலீசுக்காரர் வருகுறதும் நெசமான படியினாலே துரைகளும் செனங்க(ளும்) பயந்து வெளியே போறதைப் போகட்டுமென்று விட்டுவிட்டார்கள். மறிச்சால் ரொம்ப காபிராப்படும் என்று போகட்டுமென்று துரைகளும் யிருந்தார்கள்.

### *1760 வருசம் மார்சு மாசம் தேதி 5; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 26; புதவாரம்*

இத்தனாள் பட்டணத்திலே யுள்ள செனங்களிலே சின்னமுதலியார் வீட்டு பெண்டுகளும் அவர்களை சேர்ந்தவர்கள் வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகளும் சவுரிராயப் பிள்ளை வீட்டுப் பெண்டுகள் பிள்ளையளும் அவர்களைச் சேர்ந்தவர்கள் வீட்டுப் பெண்டுகள் பிள்ளையளும் குண்டூர் பாலி செட்டி வீட்டுப் பெண்டுகள் பிள்ளையளும் யிப்படியாகச் சமுசாரத்துடனே வெகுசனம் பாதி செனம் போயி விட்டார்கள். யிதுவரைக்கும் வெளியே போனதிலே நம்முடய வீட்டுப் பெண்டுகள் பிள்ளையளும் நம்மைச் சேர்ந்தவர்கள் வீட்டுப் பெண்டுகள் பிள்ளையளும் மாத்திரம் வெளியே போகயில்லை மத்தப்படி பட்டணத்திலே பாதி செனங்கள் சமுசாரத்துடனே போய்விட்டார்கள்.

இத்தனாள் முசே லாலி அவர்கள் லக்ஷமண நாயக்கன் மண்டபத்துக்குப் போயி அவ்விடத்திலே யிருந்த பவுன்சுகளெல்லாம் பிறிச்சு பெருமாள் நாயக்கன் சாவடியிலே சிறிது பேரும் மருந்து குண்டுகளும் தளிமேடு (Kunimadu) யிந்த மட்டுக்கும் நூறு குதிரை ராத்திரிகாலம் கஸ்துவரவும் கொத்தளங்களின் பேரிலே ஒப்பிசால்மார் சொலுதாதுகள் கார்க்கவும் பெரம்பை மேட்டிலே சிறிது பேரும் யிந்தப்படியாக பிறிச்சு அங்கங்கேயும் மருந்து குண்டுகளும் குடுத்து திட்டவட்டம் பண்ணி ராத்திரி ஒன்பது மணிக்கு வந்து சேர்ந்தார்.

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 6; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 27; குருவாரம்*

இத்தனாள் பெருமுக்கலிலேயும் சண்டை பண்ணிக் கொண்டு யிருந்த இங்கிலீசுக்காறர் யென்ன யிங்கே யிவர்களுடனே போறாடுகுறோமென்று பிறப்பட்டு பிளிச்சப்பள்ளத் தண்டை நம்முடவர்கள் பிரான்சுக்காறர் சிறிது பேர் வெள்ளைக்காறர் குதிரைக்காறர் யிருந்தவர்கள் பேரிலே வந்து விழுந்தார்கள். அதன் பேரிலே யிவர்கள் பிறப்பட்டு சிறிது பேர் பிறம்பை மேட்டையும் சிறிதுபேர் கோட்டைக்குள்ளேயும் வரச்சே வழுதாவூர் வாசற்படியை அடைச்சுக் கொண்டு உள்ளே விடுகுறதில்லை யென்று மறிச்சதின்பேரிலே வந்தவர்கள் யிப்படி யிங்கிலீசுக்காறர் வந்தார் களென்று சொன்னதின் பேரிலே உள்ளே விட்டார்கள். வருகுறவர்கள் பாக்கமுடையான்பட்டு யிதுகளெல்லாம் கொள்ளை வல்லடி அடிச்சுக் கொண்டு வந்தார்கள். அதின் பேரிலே வில்லியநெல்லூர் ஒழுகரை யிவ்விடங்களிலே யிருக்கிற செனங்கள் யெல்லாம் விரை விச்சு தானியம் தவசம் சமைக்கிற சட்டி பானை முதல் கொண்டு பட்டணம் கொண்டு வந்து சேர்ந்தார்கள். யிந்தச் சமாச்சாரம் முசே லாலி அவர்கள் கேட்டு

மூணு மணிக்கு பிறப்பட்டு வெளியே போயி செனங்களை யெல்லாம் பயப்படாதே யென்று சொல்லி பெரம்பை மட்டுக்கும் போயி நான் போயி இங்கிலீசுக்காரரையும் அவர்கள் பவுன்சுகளெல்லாம் அடிச்சு துரத்தி விடுகுறேன் என்று போனார். வெளியிலே யிருக்கிற செனங்கள் எல்லாம் பட்டணத்திலே வருகுறதும் பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெளியே போறதும் யிப்படி வெகு காபராப்பட்டு ஆர்பாட்டமாய் யிருந்தது.

***1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 7; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 28; சுக்கிரவாரம்***

இத்தனாள் இங்கிலீசுக்காரருடைய பவுன்சு மராட்டியர் குதிரை வந்து சேதுராப்பட்டு முத்திரைப்பாளையம் ஒழுகரை வகையிரா குண்டுசாலை அத்து யிந்த மட்டுக்கும் வந்து நாலத்து ரெண்டு பேர் செனங்களையும் காயப்படுத்தி மாடு கண்ணுகளையும் ஒட்டிக் கொண்டு அங்கங்கே வீடுவாசல் கலளயும் கொளுத்தினதின் பேரிலே வெளியிலே யிருக்கிற செனங்களெல்லாம் காபராப்பட்டு வெகுசனங்கள் பட்டணத்துக்கு வந்து சேர்ந்தார்கள். நம்முடவர்கள் பவுன்சு அங்கங்கே ட்டாணா யிருந்த வெள்ளைக்காரர் யெல்லாம் அவர்களுடனே யேன் சண்டை பண்ணுகுறோம் யென்று வாங்கி குண்டு சாலைக்குள்ளே வந்துவிட்டார்கள். அந்த சமாச்சாரம் முசே லாலி அவர்கள் கேட்டு அவரும் முசே லெறியும் பிறப்பட்டுப்போயி அவர்களுக்கெல்லாம் தைரியம் சொல்லி குண்டுசாலையிலே சிறிது பேரும் ஒழுகரையிலே சிறிது பேரும் லக்ஷமண நாயக்கன் மண்டபத்திலே சிறிது பேரும் யிந்தப் படியாக அங்கங்கே ட்டாணா வைச்சு திட்டப்படுத்தினார்கள்.

பின்னையும் இங்கிலீசுக்காரருடைய ஆறுகப்பல்களும் கூனிமேட்டு துறைக்கி யிப்பாலே காலாப்பேட்டு துறைக்கு நேராய் நங்கூரம் போட்டு நாலுகப்பல் உசந்திருக்கிறது. ரெண்டு கப்பல் சத்து தாழ்ந்து யிருந்தது. யிப்படி யிருக்கச்சே ஆலம்பிறவையிலே யிருந்து குச்சுப்பேட்டு வந்ததை கப்பலிலே யிருந்து நாலு படகின்பேரிலே சொலுதாதுகளும் வந்து துரத்தச்சே அவ்விடத்திலே நம்முடவர்கள் ட்டாணா யிருந்தவர்கள் அந்தப் பேட்டுக்காரரைப் பார்த்து சுட்டார்கள். அதின்பேரிலே பேட்டுக்காரர் ஓடிப்போயி விட்டார்கள். குச்சுப்பட்டுக் கறையி பிடிச்சு குச்சையெல்லாம் கறையிலே யிறக்கிப் போட்டார்கள். அதின்பேரிலே அந்த வட்டங்களிலே யிருந்த செனங்களெல்லாம் காட்டே ஓடிப்போயி விட்டதும் மேற்க்கே ஓடிப் போயிவிட்டதும் யிப்படியாக காபிராப்பட்டு ஓடினார்கள். பட்டணத்திலே யுள்ள வெள்ளைக்காரரும் குமுசேல்க்காரரும் ரூபாயாயி யிருக்கிறதை விராகனாக மாத்துகுறபடியினாலே 100–க்கு ரூபாய் 360 யிருந்தது. விராகன் 100க்கு ரூபாய் 367 ஆச்சுது. யித்தனாள் ராத்திரி முசே லெறி முதலாகிய குமிசெல்க்காரரெல்லாம் கடலோரம்

கொத்தளங்களெல்லாம் பீரங்கிகள் யெல்லாம் முஸ்தீது பண்ணிக் கொண்டு யிருந்தார்கள். இங்கிலீசுக்காரருடைய கப்பல் சமீபத்திலே வந்து யிருக்கிற படியினாலே.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 8; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 29; சனிவாரம்***

இத்தனாள் முன் 23 தேதி, 24 தேதி முதல் துவக்கி யின்றைய தினம் மத்தியானம் பதினைஞ்சு நாழிகை வரைக்கும் பட்டணத்திலேயுள்ள குலம்பூந்தவர் சோனகர், கோமுட்டியள், செட்டியள், பிராமணர் சகல சாதியிலேயும் வெகு செனங்கள் வெளியே போயி விட்டார்கள். யினிமேல் பட்டணத்திலே யிருக்கிறது அல்ப்ப சொல்பமெல்லாமல்லாமல் பின்னை வேறேயில்லை. பிராமணத்தெருவிலே யிருக்கிறவர்கள் அய்யண சாஸ்திரி, கோபாலகிருஷ்ணய்யன், குலசேகரம் வெங்கிட்ட நாரணப்பய்யர் யிப்படி மூணு நாலு வீட்டுக்காரர் போகச்சே... மத்தப்படி வெகு செனங்கள் வெளியே போயிவிட்டார்கள். பகலைக்கு மேலாக வெளிபோகிற செனங்களை வழியிலே போக வொட்டாமல் மறிச்சு மத்தியானம் வரைக்கும் உத்தாரம் யினிமேல் போறபேருக்கு முசியே லாலி அவர்கள் கடுதாசி வேணுமென்று போற செனங்களை யெல்லாம் போக வொட்டாமல் யெல்லாரையும் திருப்பிவிட்டார்கள். யிதிலே அய்யண சாஸ்திரி வீட்டுப் பெண்டுகள் குலேசேகரம் வெங்கட்ட நாராயணப்பய்யன் வீட்டுப்பெண்டுகள் பிள்ளையும் பிராமணத் தெருவிலே ரெண்டொருத்தர் வெளியே போகச்சே தெத்திலே மறிச்சு போற பேருக்கு முசே லாலி அவர்கள் சீட்டு வேணும். காட்டாமல் விடத்தக்கனதில்லை யென்று அவர்களைக் கூட்டிக் கொண்டு கோட்டைக்கு முசியே லாலி அண்டைக்கு அனுப்பிவிச்சதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

யித்தனாள் குமுசேல் கூடி யிப்படி பட்டணத்திலேயுள்ள செனங்களெல்லாம் போயிவிட்டபடியினாலே கடைகள் அரிசிக்கடை, பலசரக்குக்கடை, காய்கறிகடை ஒன்று தானும் போடாதபடியினாலே யிப்படி செனங்களெல்லாம் போயிவிட்டால் வெளிகளிலே யிருந்து தானிய தவசம் யெப்படி வரும்? சாமானுகள் யெப்படி வரும்? நாம் பட்டணத்திலே யிருக்கிற தெப்படி? ஆனபடியினாலே யினிமேல் வெளியே போற சனங்களை போக வொட்டாமல் படிக்கி நாலு வழிகளுக்கும் தாக்கீது பண்ணி போற பேருக்கு முசே லாலி அவர்கள் உத்தாரம் யில்லை விடத்தேவையில்லை யென்று உத்தாரம் பண்ணதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் கடைகள் ஒண்ணாகிலும் போடாதபடியினாலே யிருக்கிற வெள்ளைக்காரருக்கு யின்றையதினம் அரிசி காய்கறி சாமானுகள் அகப்படாமல் பிராது ஆனபடியினாலே, சின்னதுரை சாவடி கணக்குப் பிள்ளையினை, அழைச்சு கடைக்காரரை

கடை போடச் சொல்லி உத்தாரம் பண்ணதாய் சாவடி கணக்கப்பிள்ளையன் வந்து யிருக்கிற கடைக்காரரை அழைச்சு நாலஞ்சு கடை மாத்திரம் சாயங்காலம் போடவிச்சார்கள் யென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

முசியே புசியை இங்கிலீசுக்காரர் வரச்சொல்லி எழுதினதின் பேரிலே அவர் ஒரு மாச சம்பளம் அனுப்பிவிச்ச பணத்தை மறுபடி அனுப்பி விட்டு வந்து கண்டு பேசிக் கொள்ளச் சொல்லி எழுதினதின் பேரிலே யின்றைய தினம் குமிசேலிலே முசியே புசியை சென்னப் பட்டணத்துக்குப் போக உத்தாரம் குடுத்ததாய்[1] நாளைய தினம் முசே புசியும் பின்னையும் கூட ரெண்டொருத்தர் ஒப்பிசெல்மார் போறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் ராசாவுடைய தாலூக்கைச் சேர்ந்த வெள்ளைக்காரரெல்லாம் குண்டு சாலை பெரம்பை மேடு யிந்த வட்டங்களிலே யிருக்கவும் கும்பினீதாலூக்குடனே சேர்ந்த வெள்ளைக்காரர் பட்டணத்திலேயும் கோட்டையிலேயும் யிருக்கிறதாய் யின்றயதினம் குமிசேலிலே தீந்ததாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. நேத்தைய தினத்தைப் போலே யிங்கிலீசுக்காரருடைய மனுஷர் வந்து பெரம்பை மேடு யிந்த வட்டங்களிலே வந்து காலாடினவர்கள் யின்றையி தினம் பின்னை ஒன்றும் சமாச்சாரமில்லை நம்முடவர்கள் வுசுட்டே யேறி தண்ணியைக் குண்டு சாலைக்குள்ளே கொண்டு வந்து விடுகுறதாய் சமாச்சாரம், கேட்டோம்.

திருப்பாபுலியூரை போயி யிங்கிலீசுக்காரர் தோறணம் வச்சதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. ஒப்பிசேல்மார் பெரம்பை மேடு யெல்லாம் யெல்லப் பிள்ளைச்சாவடி, குண்டு சாலை யிந்த வட்டங்களிலே யிருந்தவர்கள் சமாச்சாரம் சாரம் குசப்பாளையம் யிவ்விடங்களிலே வந்து பூந்து வீடுவாசல் களெல்லாம் கொள்ளையிட்டு வீடுகளையும் பிரிச்சுக் கொண்டு போனார்கள். ஒழுகரை, ரெட்டியாபாளையம் யிவ்விடங்களிலெல்லாம் நம்முடவர்கள் வெள்ளைக்காரரும் பறையருமாய்த் தானே பூந்து கொள்ளையிட்டுப் போட்டார்களென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 9; பிறமாதி வருசம் மாசி மாசம் தேதி 30; ஆதிவாரம்*

இத்தனாள் சேஷாத்திரிப் பிள்ளையவர்கள் மூத்தபிள்ளை பெண்சாதி வள்ளியம்மாள் நம்முட தம்பி மாமியாருக்கு பதினாராம் நாள் கறுமாந்திரம் ஆனபடியினாலே, வெளியிலே போயி செய்யுறதுக்குப் பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெளியே பிறப்பட்டுப் போயி

[1] புசி அப்போது ஆங்கிலேயரின் போர்க் கைதியாகப் பெரோலில் புதுச்சேரியில் இருந்தார்.

விடுகுறபடியினாலேயும், இங்கிலீசுக்காரருடைய குதிரைக்காரர் பத்தும் அஞ்சுமாய் வந்து சமீபத்திலே கிராமங்களிலே கொள்ளையிட்டு வல்லடி யிடுகுறபடியினாலேயும், ஒழுகரை யிந்த வட்டங்களிலே யிருக்கிற செனங்களெல்லாம் பட்டணத்துக்குள்ளே வந்து விடுகுறபடியினாலேயும், வெளியே போயிச் செய்யுறதுக்கு யில்லாமல் யீசானிய மூலையிலே கேணிக்குளத்திலே கற்மாந்திரம் செய்தோம். பிறம்பை மேட்டிலே யிருந்த வெள்ளைக்காரர் சொலுதாதுகளெல்லாம் பயந்து குண்டு சாலைக்குள்ளே சாரம் குசப்பாளையம் யிவ்விடங்களிலே வந்து யிறங்கி கொள்ளையிடத் துவக்கின படியினாலேயும் வெளியிலே செய்யுறதுக்கு யில்லாமல் உள்ளே தானே செய்தோம்.

இத்தனாள் திண்டிவனம் பெருமுக்கலிலே யிறங்கி யிருந்த இங்கிலீசுக்காரருடைய குதிரையும் சேவுகத்துக்கு வைச்சுக் கொண்ட முராட்டியர் குதிரையும் அன்னூறு அறுநூறு குதிரை மட்டுக்கும் சிறிது பிண்டாரியளும் வந்து நம்முடைய திருவேங்கிடபுரம் அக்கிரகாரத்திலே யிறங்கி அவ்விடத்திலே யிருந்த, பிராமண ரெல்லாம் கற்மாந்திரமான படியினாலே பிராமண ரெல்லாம் யிவ்விடத்துக்கு வந்துவிட்டார்கள். பெண்டுகள் பிள்ளைகள் யிருந்தவர்களைப் பிடவை சீலை முதலாகிய மங்கிலிய சூத்திர முதல்க் கொண்டு பிடிங்கிக் கொண்டார்கள். அதன் பேரிலே அவர்களெல்லாரும் யிருந்து கொண்டு, யிது வசறத் ராயருடைய சத்திரம், தர்மத்திலே யிருக்குறோமென்று சொன்னதின் பேரிலே அவர்களின் பிறகே வந்த துபாசி காரியக்காரர் கொம்மாந்தானி(டம் இதை யெல்லாம் சொல்ல), யிவர்களை யெல்லாம் பயப்படாதெயென்று ஒரு வீட்டிலே யிவர்களை யெல்லாம் வச்சு வாசற்படியிலேயும் தோட்டத்திலேயும் சேவுகரை காவல் வைச்சு யிவர்கள் தட்டு முட்டு போனதுக்கு மனுஷரைக் கூட்டி தாக்கீது பண்ணி வாங்கிக் குடுக்கச் சொல்லச் சொன்னான்.

அதிலே கொள்ளையிட்டுக் கொண்டு வந்த குதிரைக்காரரிலே சிறிதுபேர்த் தனி மேடு யிவ்விடங்களிலே போயிவிட்டார்கள். மத்தபேர் யிருந்தவர்கள் கையிலே யிருந்த தட்டு முட்டு பிடவை சீலையை வாங்கிக் குடுத்தார்கள். அதின் பேரிலே அந்த கொம்மாந்தான் யிருந்து கொண்டு பிரான்சுக்காரர் சென்னப்பட்டணத்துக்கு வந்தவிடத்திலே திருவல்லிக்கேணி, பறங்கிமலை, சென்னப்பட்டணம் மட்டும் கொள்ளையிட்டு வல்லடி அடிச்சு ஆள் சிறை பிடிச்சு வெகு செனங்களை யெல்லாம் வெட்டிப்போட்டு யில்லாத வதை யெல்லாம் பண்ணினார்கள். நாங்கள் அப்படி செய்யத்தக்கதில்லை. ஆனாலும் யெங்கள் பிறகே வருகுற சேவுகர் கேளார் ஆகையினாலே நீங்கள் யேன் யிவ்விடத்திலேயே யிருந்தீர்கள். யினிமேல் யிங்கே யிராதீர்கள் யென்று சொன்னான். அதிலே யிவ்விடத்திலே யிருந்து பனிரெண்டு மணியடிச்சு ரெண்டு மணிக்கி முசியே புசி போனான். போனவன் அவ்விடத்திலே யிறங்கி யிவனும்

இங்கிலீசுக்காரருடைய கொம்மாந்தானும் சத்து நேரம் பேசியிருந்து அப்பிறம் பிறப்பட்டு சென்னப்பட்டணத்துப் பாட்டையாய் முசியே புசியும் இங்கிலீசுக்காரருடய குதிரைகளையும் விட்டுப்போட்டு போய்விட்டார்கள். பட்டணத்திலேயுள்ள விட்டு...

மத்தப்படி பெண்டுகள் எனப்பட்டவர்கள் யெல்லாம் சமுசாரத்துடனே போயிவிட்டார்கள். நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் சமுசாரத்துடனே யிருக்குறோம். மத்தப்படி பட்டணத்திலேயுள்ள செனங்களெல்லாம் வெளியே போயிவிட்டார்கள்.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 10; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 1; திங்கட்கிழமை***

இத்தனாள் காலமே ஒன்பது மணிக்கி குமிசெல் கூடி, பனிரெண்டு மணி மட்டுக்கும் பேசி கலைஞ்சு சந்தா சாயபு மகன் ரசாசாயபுவை அழைச்சு, "மேலண்டை மூலக் கொத்தளமும் அந்த அலங்கமும் உன் வசம் பண்ணுகுறோம், நீ அன்னூறு பேர் சிப்பாயி களை வைச்சுக் கொண்டு அவர்களுக்கு மூணு மாசத்துக்குச் சம்பளமும் நீ குடுத்து அவர்களை விசாரிச்சுக் கொள்ளுகிறதும் நீ ஒடுதி மத்தது சொல்லுகுறதும், நீதான் கப்பல் வருகுற மட்டுக்கும் யிந்தப்படிக்கி அன்னூறு பேர் சிப்பாயிகளை வச்சுக் கொண்டு நீ யிந்தப் படிக்கி கார்க்க வேணும்," என்று சொன்னதாகவும், பின்னையும் பட்டணத்திலே யிருக்கிற வெள்ளைக்காரர் தமிழர் யிருக்குற காரியத்தை நடத்துறவர் பின்னையும் புஷ்ட்டி யாயிருக்குறவர்களை யெல்லாம் யிந்தப்படிக்கி அவனவன் மானத்துக்குத் தத்கினாப்போல ஒவ்வொரு காரியங்களுக்கு ஒவ்வொருத்தரை நேமிக்கிறதாகவும் சேதி கேழ்விப்பட்டுது.

இத்தனாள் பட்டணத்திலே உள்ள செனங்கள், பெண்டுகள் பிள்ளைகள் வெகுபேர் போய் விட்டார்கள். அவர்களைக் கொண்டு போயி விடச் சிறிது பேர் ஆண்பிள்ளைகளும் போனார்கள். போனவர்கள் கூடலூர், திருப்பாதிரிப்புலியூர், வெங்கிட்டாம் பேட்டை, திருவதி வகையரா யிந்த வட்டங்களிலே போயி சேர்ந்தார்கள். கிறிஸ்துவர், சின்ன முதலியார் வீட்டுப் பெண்டுகள் பிள்ளையும் அவர்களைச் சேர்ந்தவர்களும் சிறிது பேர் காரைக்கால் அந்த வட்டங்களிலே சேர்ந்தார்கள்.

இத்தனாள் காலத்தாலே சின்னதுரை வெங்கிடாசல நாயக்கன் வளத்துக் கொண்டபய்யன் சின்ன துபாசியாயிருக்கிற(வன்) வந்து துரையுடனே ஒரு பேச்சுக் கண்டு பேச வேணுமென்றும் வீட்டுக்காகிலும் வந்து கண்டு பேசிக் கொண்டு போகலாம், யில்லாவிட்டால் கோட்டைக்கி வந்து கண்டு பேசிக் கொள்ளலாம் யென்று சொன்னானென்று சொன்னார்.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 11; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 2; செவ்வாய்வாரம்***

இத்தனாள் காலமே சின்னதுரை முசே கில்லியார் நம்முடனே வீட்டுக்கு வந்து "நேத்திய தினம் குமிசேலிலே உம்மை அழைச்சுச் சொல்லச் சொன்னது : யிங்கிலீசுக்காரருடைய கலாபம் துறுசா யிருக்கிறபடியினாலே ராசாவுடைய ஒப்பிசேல்மார் சொலுதாது(கள்) நம்முடவர்கள் தானே பட்டணத்தை கொள்ளையிட்டுப் போடுகுறதாயிருக்குது. ஆனபடியினாலே சிப்பாயிகளை வச்சு கொத்தளங்களை யெல்லாம் ஒவ்வொரு குமிசெல்க்காரரும் யிருந்து கோட்டையைக் காப்பாத்த வேணும் அதுக்கு ஒரு கொத்தளத்துக்கு உம்மை அன்பது பேர் சிப்பாயிகளை வைச்சு அவர்களுக்குச் சம்பளம் மாசம் ஒன்றுக்கு சனம் ஒண்ணுக்கு ரூ.6 விழுக்காடு மாசம் 1–க்கு முன்னூறு ரூபாய் குடுத்து, அந்தக் காரியம் கபுறு யெல்லாம் நீர் விசாரிக்கிறது. அவர்களுக்கு ஒடுதி மத்ததெல்லாம் நீர் குடுக்கிறது. பின்னையும் பட்டணத்திலேயுள்ள தமிழருக்கும் யிந்தப்படிக்கி அவரவருக்குத் தக்கினாப் போலே சிப்பாயிகளை வைச்சு அவர்களுக்கு அவரவர் சம்பளம் குடுத்து விடுகுறது. அந்த சிப்பாயிகளையும் நீர் தான் விசாரிச்சுக் கொள்ளுகிறது. அவர்களுக்கும் ஒடுதி காரியம் யெல்லாம் நீர் தானே சொல்லுகிறது. அவர்களெல்லாம் வந்து உமக்குக் கபுறு சொல்லுகுறது. யிந்தப்படி நீர் யிதுகளுக்கெல்லாம் யெசமானாயிருந்து விசாரிக்கச் சொல்லி குமிசேலிலே தீந்ததாய்," வந்து சொன்னார்.

அதுக்கு நாம் சொன்னது : "உத்தரவு மெய்தான் யிந்த வேளையிலே மெய்தான் குடுக்கவேண்டியதும் விசாரிக்க வேண்டியதும். நமக்கு சாகிராகியிருந்த திருமங்கலம் நெற்குணம் என்கிற ரெண்டு கிராமம் கட்டிக்கொண்ட படியினாலேயும் வருஷமாய் நமக்கு உத்தியோகம் பேருக்கு யிருக்குதென்கிற பேர் மாத்திரமே யல்லாமல் ஒரு காரியத்திலே யாகிலும் யில்லாமல் படிக்கி முசே லெறி பண்ணிப் போட்டார். நானும் ஒரு காரியத்திலேயும் யில்லாமல் படிக்கி வீட்டிலே தானே சும்மாயிருக்குறேன். தேவனாம்பட்டணம் சீமையிலே யெனக்கு அஞ்சு கிராமம் சாகீராயி நடந்தது. அதை இங்கிலீசுக்காரர் கட்டிக் கொண்டார்கள். அந்தச் சமாச்சாரமும் சீமைக்கு மினிஸ்தருகளுக்கும் முசியே தூப்பிளேயிக்சு திக்கிளர் சாம் எழுதியிருக்கிறார். யிப்ப தேவனாம்பட்டணம் சீமை யிவர்கள் வசமாயிருக்குது. அப்படியிருக்க அந்தக் கிராமமாகிலும் நமக்கு நடக்குறதுக்கு யில்லை யிதல்லாமல் யென்னுடைய மனவற்த்தனை சிலவுக்கு, அரிசி, பருப்பு, நெய், காய்கறி, கோழி யிதுகள் வாங்கினது பதினாயிரம் ரூபாய் மட்டும் ஊரிலே குடுக்க வேண்டியிருக்குது. அவர்களெல்லாம் வந்து பணம் கேழ்க்கிறார்கள். என்னுடைய காரியங்களெல்லாம் நாலு விதத்திலேயும்

ஒண்ணுமில்லாமலிருக்கச்சே, முசே லெறி தான் யெப்படி சொல்லுவார்களென்று?" சொன்னதின் பேரிலே முசே கில்லியாரிருந்து கொண்டு, "யிதுகளெல்லாம் மெய்தான். நானும் குமிசேலிலே யிதுகளை யெல்லாம் பேசுகுறேன். ஆனால் நீர் யிந்த வேளையிலே ஆகாதென்று சொன்னால் பட்டணத்திலே யிருக்குற தமிழரெல்லாம் ஒருத்தரும் சம்மதியில்லாமல் காபராப் பட்டுப் போவார்கள்," யென்று சொன்னார்.

ஆனால் கும்பினீர் முழுகிப் போற வேளையாய் வந்திருக்கச்சே, நாம் அன்பது வருஷமாய் பிரான்சுக்காரனுடைய கொடியின் கீழே யிந்தப் பட்டணத்திலே யிருந்து கும்பினீரையும் சேவிச்சிருக்கச்சே கும்பினீர் உடமையைச் சாப்பிட்டு யிந்த சரீரத்திலே யிருக்கிற ரத்தம் அவர்களுதாயிருக்கச்சே நாம் அல்ல வென்று சொல்லயில்லை. ஆனால் யெனக்கு யின்னம் சிறிது வீடுகள் யிருக்குது, சிறிது சாமான்களிருக்குது, அதுகளையாகிலும் வித்து முன்னூறு ரூபா குடுத்து விடுகுறேன்." அந்தச் சிப்பாயிகள் காரியம் கவையும், நாம் ஒடுதி குடுக்கிறதும் நமக்குத் தேவையில்லை, யென்றும் சொன்னதின் பேரிலே, "நல்லது யிதுகளெல்லாம் முசே லெறியுடனேயும் குமிசேலிலேயும் பேசி மறு உத்திரம் சொல்லி அனுப்பி வைக்குறோம்," என்று சொன்னார். பின்னையும் முன் நடந்ததும் பின் நடந்ததும் யிப்படிச் சிறிது சம்மதிய ளெல்லாம் பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டுப் போய்விட்டார்.

இத்தனாள் சாயங்காலம் கனகராய முதலியார் தம்பி தானியப்ப (தானப்ப?) முதலியாரையும் பெரியண்ண முதலியாரையும் ராமச்சந்திர ராயன் வகையிரா யிவர்களை யெல்லாம் சின்ன துரை முசே கில்லியார் சாயங்காலம் அழைப்பிச்சு நீங்கள் அன்பது அன்பது பேர் ஒவ்வொருத்தர் சிப்பாயிகளை வைச்சு அவர்களுக்கு சம்பளம் கொடுத்து ஒவ்வொரு...

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 12; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 3; புதன்*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : பெரம்பை மேடு குண்டு சாலை யிவ்விடங்களிலே யிருந்த வெள்ளைக்காரரெல்லாம் குசப்பாளையம் சாரம் யிவ்விடங்களிலே வந்து தோட்டம் துரவுகளெல்லாம் கொள்ளையிட்டு பிரிச்சுதாம் கொள்ளையிட்டுப் போட்டார்கள். அவர்கள் செய்யுற ரூட்டியை கடுதாசியிலே எழுதமுடியாது. பட்டணத்திலே யிருக்கிற துரைகளும் யேன் என்று கேழ்க்கிறதில்லை உள்ளே யிருக்கிறவர்கள் வெளியே போனாலும் வெளியே யிருக்கிறவர்கள் உள்ளே வந்தாலும் யேனென்று கேழ்க்கிறதில்லை. இங்கிலீசுக்காறருடய குதிரைகளும் நாலு ரெண்டு மாய் வந்து குண்டுசாலை மட்டுக்கும் கொள்ளையடிச்சுக் கொண்டு போனார்கள். பட்டணம் முழுகிப் போற வேளையிலே யெப்படி வருமோ

அப்படி வந்திருக்கிறது... இது யிந்த துரைகளினாலே ஒண்ணும் அகத்தக்கினது யில்லை சுவாமியுடைய தயவுனாலே காரியங்களெல்லாம் சுகப்பட வேணுமே யல்லாமல் மனுஷயெத்தனத்தின் பேரிலே ஒண்ணும்மில்லை.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 13; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 4; குருவாரம்***

இத்தனாள் குமிசேல் கூடி முசே லாலியும் ராசாவுடைய பவுன்சும் வெள்ளைக்காரரும் வண்ணாந் துறையிலே யிருக்கவும் கும்பினி சொலுதாதுகளும் கும்பினீர் தாலூக்கும் மனுஷரும் தமிழர் வைக்கப்பட்ட பேயி களும் கோட்டைக் கொத்தளங்கள் புருசுகள் யெல்லாம் கார்க்கவும். முன்னே தானே பெருமுக்கல் பிடிச்சுக் கொண்டு அவ்விடத்திலே யிருந்த வெள்ளைக்காரரையும் பிடிச்சுக் கொண்டு போய் விட்டானே யின்றைய தினம் ஆலம்பிறவை கோட்டையைப் பிடிச்சுக் கொண்டு அவ்விடத்திலே யிருந்த வெள்ளைக் காரரையும் பிடிச்சுக் காவல் பண்ணி சென்னபட்டணத்துக்கு அனுப்பி விட்டதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டது. யின்றைய தினம் குமிசேலிலே வெள்ளைக்காரரையும் பணம் கேட்டதாய் அவர்களும் டங்காசாலையிலே தட்டுமுட்டுகளைக் கொண்டு போயிப் போட்டு போயிகள் சம்பளத்துக்காக ஆயிரம்....

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 14; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 5; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே குமிசெல் கூடினார்கள் என்ன காரியத்துக்காக என்றால் பணங்காசு நிமித்தியமும் யிங்கிலீசுக்காரருடைய பவுன்சு ஆலம்பிறவைக் கோட்டையை வாங்கிக் கொண்டு வழுதாவூர் கோட்டையின் பேரிலே வருகுறார்களென்றும் சமாச்சாரம் கேட்டதின் பேரிலேயும் கூடினார்கள் என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. பின்னையும் என்ன காரியங்களிருக்குது. யிந்த காரியங்கள் நிமித்தியம் தான் குமிசேல் கூடினார்கள் என்கிறதாய் சொன்னார்கள்.

தெற்க்கே போன செனங்கள் கொள்ளிடக்கரையிலே கிருஷ்ணராயர் மனுஷர் கையிலே தட்டுமுட்டு களெல்லாம் பறி குடுத்து வெங்கிட்டாம் பேட்டை காடு வந்து சேர்ந்தார்கள் என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. பட்டணத்திலே கொஞ்ச நஞ்சமிருக்கிற செனங்கள் ஆலம்பிறவை கோட்டை யிங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டபடியினாலே வெளியே பிறப்பட்டுப் போயி விட்டார்கள். யின்னமிருக்கிற செனங்கள் நாளைய தினமும் போய்விடுவார்கள்.

சூரத்திலே யிருந்து கடுதாசி வந்தது என்கிறதாய் கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் மாரிசு மாசம் தேதி 15; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 6; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே குமிசேல்க் கூடினார்கள். குமிசெல் கூடினது பின்னை ஒன்றும் விந்தையில்லை. பணம் பேச்சு நிமித்தியமும் யிவ்விடத்திலே யிருக்கிற சொலுதாதுகளை வெளியே அனுப்புகுறதும் வெளியே யிருக்கிறவர்களை உள்ளே அழைப்பிச்சுக் கொள்ளுகிறதும் யிந்தப்படியாக கலாபனைகளேல் அல்லாமல் பின்னை யொன்றும் நமக்குத் தோத்தயில்லை. யின்றைய தினமும் கொஞ்ச நஞ்ச மிருக்கிற செனங்கள் வெளியே போனார்கள். 8 (ஊர்) கோட்டை யிங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டபடியினாலே

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 16; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 7; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு முன்னாலே உலாந்தக்காரர் கையிலே விலைக்கு வாங்கின அருனே என்கிற கப்பல் (Haarlen) தனாசேரிக்கு (Tenassarim)ப் போயிருந்தது. அவ்விடத்திலே யிருந்து கோதும்பை அரிசி, சர்க்கரை, கல்க்கண்டு, யீயம், துத்தனாகம், பலகைகள் தூள் ஏத்திக் கொண்டு கஞ்சாமுக்கு வந்து அவ்விடத்திலேயும் சிறிது நெல்லு அரிசியேத்திக் கொண்டு நேத்து ராத்திரி பதினெட்டு நாழிகைக்கு யிவ்விடத்திலே துறையை வந்துது. துறை தெரியாமல் வடக்கே ஒத்தி கூனிமேட்டுத் துறையண்டை போகச்சே பொழுது விடிஞ்சு போச்சுது. மறுபடி திருப்பிக் கொண்டு கரையை வரவேணும் என்றால் யெதிர்க்காத்தான படியினாலே கப்பல் வரக்கூடாமல் யிருக்கச்சே இங்கிலீசுக்காரருடைய கப்பல் ஒண்ணு யிந்தக் கப்பலைக் கண்டு பீரங்கி குண்டு போட்டு சுடச்சே அந்தச் சத்தம் யிவ்விடத்திலே கேட்டு யிவ்விடத்திலே யிருந்து நாலுபடகிலே (200) இறநூறு முன்னூறு பேர் சொலுதாதுகளும் யேத்தி அனுப்பி கரைவழியாகவும் சிறிது குவாடுது வெள்ளைக்காரரும் முசியே லாலி அவர்களும் போனார்கள். அதிலே யிவர்கள் கப்பல் நிறுவாகமில்லாமல் படிக்கி பொம்மையப்பாளையத் தண்டை கரையே ஒதுக்கிப் போட்டார்கள். இங்கிலீசுக்காரர் கப்பல் குண்டு வந்து யிந்த கப்பல் கொடி மரத்திலே பட்டு கப்பல் பத்திக் கொண்டு வெந்து போச்சுது. அதிலே யிருந்த மனுஷர் மாத்திரம் சேதமில்லாதபடிக்கி தப்பிவந்து விட்டார்கள். அதிலே யிருந்த சரக்குகளும் கப்பலும் ரெண்டு லக்ஷம் ரூபாயிக் குண்டு சேதமாய்ப் போனது. யிது யெதுனாலே யிந்தக் கப்பல் போச்சுதென்றால் யிவர்களுக்கு பொல்லாத காலமான படியினாலே

கரைவந்து பிடிச்ச கப்பல் துறை தெரியாமல் படிக்கி வடக்கே ஒத்திப்போயி யிப்படி சேதமாய்ப் போச்சுதென்று சகல செனங்களும் ரொம்ப தாபந்தப்பட்டார்கள்.

*1760 வருசம் மார்ச் மாசம் தேதி 17; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 8; திங்கட்கிழமை*

இத்தனாள் காலமே நேத்தயதினம் ஷேக்கு தூக்கி (Dukki) வந்து நம்மை கோட்டைக்கி வரச் சொன்னபடியினாலே நமக்குச் சீரம் சொஸ்தம் யில்லாதபடியினாலே அப்பாவுவை கோட்டைக்கி அனுப்பிவிச்சோம். அப்பாவு கோவர்ணமா மெத்தையின் பேரிலே போனவிடத்திலே சின்னதுரை முசியே கில்லியார் கண்டு யெங்கே வந்தாயென்று கேட்டார். நேத்து ராத்திரி சிப்பாயிகள் கப்பித்தான் ஷேக்கு தூக்கி வந்து சாதி குரத்துக்கும் வரச்சொல்லி சொன்னோம். நீங்களும் வாரும் சிப்பாயிகள் நிமித்தியம் திட்டம் பண்ணி வைக்க வேணுமென்று முசியே லாலி யவர்கள் உத்தாரமென்று சொன்னான். ஆனபடியினாலே வந்தேனென்று சொன்னதுக்கு யிதுகளெல்லாம் அவனுக்கு என்ன கவையிருக்குது. அதுவெல்லாம் நான் விசாரிக்குற தென்று ஷேக்கு தூக்கியை அழைச்சு யிதுவெல்லாம் உனக்குக் கவையில்லை உன் வேலையில்லை யென்று சொல்லிப் போட்டு முசே லெறியைக் கண்டு பேசி முசியே லாலி அண்டைக்கும் போயிக் கண்டு பேசிவந்து சாயங்காலம் மகானாட்டார் யெல்லாரையும் அழைச்சு நயினாருக்கும் அழைச்சுச் சொல்லி யெல்லாரும் வீட்டண்டையிலே வாருங்கள். சிப்பாயிகள் சம்மதியெல்லாம் நாம் திட்டம் பண்ணுகுறோமென்று சொல்லி அப்பாவுவை அழைச்சு உங்கள் சம்மதி அப்பதானே தீந்து போச்சுது. உங்களுக்குக் கவையில்லை நீர் வீட்டுக்குப் போமென்று சொன்னார். அந்த சேதி அப்பாவு வந்து பனிரெண்டு மணிக்கு கபுறு சொன்னான்.

*1760 வருசம் மார்ச் மாசம் தேதி 18; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 9; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்ன யென்றால் வெள்ளாழர், அகம்படையர், கோமுட்டியாள், செட்டியள், யெலவாணியர் யிப்படி சாதியாரெல்லாரையும் அழைச்சு வெள்ளாழருக்கு சிப்பாயிகள் முன்னூறு பேரும் அகம்படியருக்கு நானூறு பேரும் செட்டியளுக்கு முன்னூத்தன்பது பேருக்கும் கோமுட்டியளுக்கு நூத்தன்பது பேருக்கும் யெலவாணியருக்கு அன்பது பேருக்கும் யிந்தப்படிக்கி சாதி சாதிக்கும் யேகத்துக்கு ஆயிரத்து முன்னூறு பேர் சிப்பாயிகளுக்கு சம்பளம் குடுக்கச் சொல்லியும் மாசம் 1க்கு அன்பது பேர் சிப்பாயிகளுக்கு முன்னூத்தன்பது மூணு ரூபாயி விழுக்காடு குடுக்கச் சொல்லிச் சொன்னதாயும் அதுக்கு

யிவர்களெல்லாம் தாளும் தாளாதென்று சொல்லிக் கொண்டதாய் சேதி கேழ்க்கப்பட்டது. மத்தப்படி யிங்கிலீசுக்காரருடைய பவுன்சு முன்னே வந்து குண்டுசாலை மட்டும்.

*1760 வருசம் மார்ச் மாசம் தேதி 19; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 10; புதன்*

இத்தனாள் பெரியண்ண முதலி, கந்தப்ப முதலி, குண்டூர் பாலிசெட்டி, வீராசெட்டி யிவர்களை யெல்லாம் அழைச்சு கொத்தளங்களுக்கு சிப்பாயிகள் அவரவருக்கு திட்டம் பண்ணினபடிக்கி பணம் கொண்டு வரச்சொன்னதாய் சேதி கேட்டோம். மமுதல்லியும் ஆயிரம் குதிரைக்காரரும், ஆயிரம் பேர் கள்ளரும் ஆயிர் பேர் பாறுக்காரரும் வெள்ளைக்காரர் சட்டைக்காரர் நூறு பேரும் யிவர்களுடனே திருச்சிராப்பள்ளி விட்டு வாலிகொண்டாபுரம் வந்து சேர்ந்ததாகவும் செனங்கள் சொல்லிக் கொள்ளுகுறார்கள். யித்தனாள் நாளைய தினம் செனராலுடைய ஒடுதி காலமே கோவர்ணதோர் முதலாகிய குமிசெல்க்காரர் கணக்கர் குடித்தனம் பண்ணுகிறவர்கள் வெள்ளைக்காரர்கள் சமஸ்தமான பேரும் நாளையதினம் வரிசை வச்சு யெண்ணிக்கை பிடிக்கப் போறார்கள். செனராலுடைய உத்தாரம் நாங்களும் காலமே போகவேணுமென்று இவ்விடத்திலே ஒப்பிசேல்மார் சொன்னார்கள்.

*1760 வருசம் மாரிசு மாசம் தேதி 20; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 11; குருவாரம்*

இத்தனாள் காலமே கோவர்ணதோர் முதலாகிய குமிசெல்க்காரர் சகலமான பேரும் பெரிய வரிசை நின்றார்கள். முசே லெறி கத்தியைக் கையிலே பிடிச்சுக் கொண்டு குமிசேல்க்காரர் வரிசை வைச்சுக் கொண்டு யிருந்தார்கள். செனரால் அவர்கள் மெத்தை வீட்டின் பேரிலே யிருந்தவர்கள் தாழயிறங்கி வந்தார். வரச்சே தம்பூறு அடிச்சு யென்ன மரியாதைகள் பண்ணவேணுமோ அந்தப்படிக்கி செய்தார்கள். முசியே லெறி கத்தியை கையிலே உருவிப் பிடிச்சுக் கொண்டு யிருந்தவரை கத்தியை வைச்சுப்போட்டு துப்பாக்கியை யெடுத்துக் கொள்ளச் சொன்னார். அந்தப்படிக்கி முசே லெறி துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வரிசை திருப்பச்சே அது உத்தரவு சொல்லத் தெரியாதபடியினாலே ஒரு ஒப்பிசியாலை அழைச்சு வரிசை திருப்பச் சொன்னார். அவன் திருப்பச்சே முசே லெறி அப்பாலே யிருந்தார். யிந்தப்படிக்கி குமிசேல்க்காரர் கணக்கர் சகலமான பேரையும் வரிசை திருப்பி நீங்களெல்லாரும் சண்டைக்குப் போக வண்ணாந்துறையே போய் யிறங்கச் சொல்லி சொன்னதின் பேரிலே முசியே கில்லியாரும் (M. Guillard) முசே லசேலும் ரெண்டு பேரும்

நாங்கள் வெளியே போற மரியாதை யில்லை கோட்டையிலே தானே யிருக்கிறதென்று சொன்னதாகவும் அதன் பேரிலே ரொம்ப ஆர்பாட்டமாய் கோபிச்சுக் கொண்டு குதிரை சவுக்கை யெடுத்துக் கொண்டு அடிக்க கத்தூரதின் பேரிலே அவரவர் துப்பாக்கிகளைப் போட்டுவிட்டு ஒருத்தர் பேரிலே ஒருத்தர் விழுந்து ஓடச்சே லொறேன் தெ ரிஷாம் (Reginent de Lorraine) என்கிற பவுன்சு சொலுதாதுகளையும் ஒப்பிசியால்மாரையும் விட்டு அவரவர் துப்பாக்கிகளையும் பத்திரங்களையும் பிடிங்கி ஒரண்டை கும்பலாக குவிச்சார்கள். முசியே கில்லியாரை மேலண்டை கோட்டை வாசற்படி மேலே காவல் வைக்கச் சொல்லியும் முசே லசேல் கசோத்திலே போடச் சொல்லியும் பின்னையும் நாலுபேர் கணக்கரையும் முசே சென் முர்சே முசே துக்கோந்து என்கிறவனையும் விலங்குபோட்டு கசோத்திலே போடச் சொல்லிச் சொன்னதின் பேரிலே அங்கே யிருந்த கொமிசேல்காரர் கணக்கர் சகலமான பேரும் பயந்து நம்மையும் என்ன செய்வானோ யென்று அவரவர் சொல்லி ஓடிப் போனார்கள்.

யித்தனாள் கோட்டையிலே லொறேன் தெரிஷாம் (Regiment de Lorraine)[1] என்கிற பவுன்சு சொலுதாதுகளும் ரிஷமாம் என்கிற முசே லாலியுடைய சொலுதாதுகளும் முன்னூறு நானூறு பேர் மட்டுக்கும் கோட்டை மேல் வீடுகளெல்லாம் காவல் யிருந்தார்கள். யிந்தப்படியாய் செனரால் அவர்கள் ரொம்ப கோபதாபமாய்ப் பண்ணி யிப்படி யெல்லாம் செய்தபடியினாலே பட்டணமெல்லாம் காபராப்பட்டு ரொம்ப பயந்து சகலமான பேரும் தத்தளிச்சுப் போனார்கள். ஆனால் தமிழருடைய தெருவிலே ரொம்ப பயம் தோத்தயில்லை. வெள்ளைக்காரர் தெருவெல்லாம் பயந்து யின்னம் யென்னென்ன செய்வானோ வீடுவாசலு (யெல்லாம்) கொள்ளையிடுவானோ வென்று வெள்ளைக்காரரெல்லாம் யிண்ணையுடனே வெளியே ஓடிப்போறதாய் யோசனை அவரவர் பண்ணினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 21; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 12; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலத்தாலே நேத்தய தினம் வரிசை வைச்சப்படிக்கி காவல் வைச்ச குமிசேல்க்காரர் கணக்கர் தவிர மத்துப் பேர் முசே லெறி முதலாகிய குமிசெல்க்காரர் கணக்கர் சகலமான பேரையும் வரிசை யிருக்கச்சொல்லி ஒன்பது மணிக்கு செனரால் அவர்கள் ராசாவுடைய பர்வாணா ஒண்ணு கொண்டு வந்து மேல் வீட்டை விட்டு தாழே யிறங்கி

[1] லல்லியின் தலைமையில் Regiment de Lorraine, Regiment de Lally ஆகிய இரு படைகள் வந்திருந்தன.

வந்து சக்கிறத்தேர் முசே லங்கறனே (M. le Grenea) கையிலே குடுத்து படிக்கச் சொன்னதாகவும் அதிலே எழுதியிருக்கிறது. அந்த ராச்சியத்திலே ராசா ஆராரை யெந்த ஆக்கினை பண்ணுவாரோ ஆராரை யெப்படி செய்வாரோ அந்தப்படிக்கி யிவ்விடத்திலே யிவர் கொவர்ணதோர் முதலாகிய குமுசெல்க்காரர் ஒப்பிசியால் மார் சகலமான பேரையும் முசே லாலி அவர்கள் மனசுப்படிக்கி யெப்படி யெப்படி நடப்பிக்க வேணுமோ அந்தப்படிக்கி யிவ்விடத்துக்கு ராசாவாயிருந்து நடப்பிக்கிறதென்று அந்த பற்வானாவிலே ராசாவுடைய முகற் பண்ணி எழுதி யிருந்ததைப் படிச்சு உடனே அதை சகலமான பேரும் கேட்டு முகமெல்லாம் சுருங்கி ரொம்ப வியாகூலம் பிடிச்சு யிருந்தார்கள். அப்பறம் செனறால் அவர்கள் யிருந்துக் கொண்டு சொன்னது, "நீங்கள் நடந்த நடத்தைக்கித் தக்கினதாயி யிதுவெல்லாம் நடப்பிச்சேன். யினிமேலாகிலும் பார்த்து நடந்துக் கொள்ளுங்கள் யேதாகிலும் யெத்தாட்சியாய் நடந்தால் உங்களை வாச்சியாலே செதுக்கிப் போடுவேனென்று சொல்லி யிந்த மட்டுக்கும் யென்னுடைய அதிகாரம் உங்களுக்கு தெரியாமலிருந்தது. யினிமேலாகிலும் தெரிய வந்ததா?" யென்று சொல்லிப்போட்டு மெத்தை வீட்டின் பேரிலே யேறிப் போயிவிட்டார். முசே லெறியும் முகமெல்லாம் ரொம்ப சுருங்கி வெகுகிலேசத்துடனே மேல்வீட்டின் பேரிலே யேறிப் போனான். மத்த குமிசேல்க்காரர்கள் கணக்கர் வெள்ளைக்காரர் யெல்லாரும் ரொம்ப மனசு மக்கினமாய் அவரவர் ஒருத்தருடனே ஒருத்தர் சொல்லாமல் படிக்கி அவரவர் வீட்டுக்குப் பிறப்பட்டுப் போயிவிட்டார்கள். யென்று கேழ்விப்பட்டுது.

இத்தனாள் சாயங்காலம் முசே லசேலைக் கால்நடையாய் யிருபது பேர் குதிரைக்காரரையும் யிருபது பேர் சொலுதாதுகளையும் கூட்டி வழுதாவூர் கோட்டையிலே காலிலே விலங்கு போட்டு கோட்டையிலே காவலிலே போடச் சொன்னதாகவும், முசே சென் மொற்சே (M. Marcean) என்கிறவனும் முசே திக்கோந்து (de Conde) யெங்கிறவனையும் ரெண்டு பேரையும் செஞ்சிக் கோட்டையிலே கொண்டு போயி காலுக்கு விலங்கு போட்டு காவலிலே போடச் சொல்லி அவர்கள் பிறகேயும் சிறிதுபேர் வெள்ளைக்காரரையும் கூட்டி அழைச்சுக் கொண்டு போனார்கள் என்று சமாச்சாரம் வந்து சொன்னார்கள்.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 23; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 14; ஆதிவாரம்*

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு முசே லாலியும் ஊரிலே யிருக்கிற உசார் குதிரைக்காரரையும் காடுது குதிரைக்காரரையும் அழைச்சுக் கொண்டு யிறநூறு முன்னூறு பேர் சொலுதாதுகளுடனேயும் மருந்து குண்டு சரஞ்சாமுடனே பிறப்பட்டு ஆலம்பிறவையில் யிறங்கி

யிருக்கிற இங்கிலீசுக்காரர் பேரிலே போயி சண்டை பண்ணப் பயணமாய்ப் பிறப்பட்டு ராத்திரி ஆறுமணிக்கி வண்ணாந்துரைக்கிப் போயி யிறங்கினார்கள். சந்தா சாயபு குமாரனையும் கூட வரச்சொன்னதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 24; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 15; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே நேத்து ராத்திரி யிங்கிலீசுக்காரர் பேரிலே போயி விழவேணும் யென்று போன முசே லாலி கூனிமேடு மட்டுக்கும் போயி அவர்கள் அவ்விடத்திலே யில்லாதபடியினாலே மறுபடி திரும்பிக் கொண்டு காலமே ஏழு மணிக்குப் பிறப்பட்டுக் கோட்டைக்கு வந்து சேர்ந்தார். வந்தவர் ராத்திரி யெல்லாம் சாகரமாயிருந்த படியினாலே படுத்துக் கொண்டு நித்திரை போனார். நேத்து மத்தியானம் தானே யின்றைய தினம் குமிசேல்க் கூடவேணுமென்று குமிசெல்க்காரருக் கெல்லாம் சீட்டு அனுப்பிவிச்சிருந்த படியினாலே, குமிசேல்க் காரரெல்லாம் வந்து பதினோரு மணி மட்டுக்கும் காத்துக் கொண்டு யிருந்தார்கள். முசே லாலி கதவை அடைச்சுக் கொண்டு காம்பிராவிலே தூங்கின படியினாலே குமிசேல்க்கார ரெல்லாரும் காத்துக் கொண்டிருந்து பதினொண்ணரை மணிக்கிப் பிறப்பட்டு அவரவர் வீட்டுக்கு போயிவிட்டார்கள். மத்தப்படி பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படவில்லை.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 26; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 17; புதன்கிழமை*

இத்தனாள் கோட்டையிலே குமிசெல் மத்தது கூடயில்லை. பட்டணத்திலே கேழ்க்கப்பட்ட அதிசெயம், பாரிசிலே மராஷ்ட்டகத்திலே தெலுங்கிலே தமிழிலே நாலு காகிதம் யெழுதி முசே லாலி அவர்கள் கையெழுத்துப் போட்டு அவருடைய பாரீசு பெரிய முகறும் போட்டு, அந்தக் கடுதாசிகளை முத்திரைச் சாவடி நம்முட வீட்டுக்கு யெதிரே யிருக்கிற வீசனார் கோவில்,[1] சம்பா கோவில், கப்போசுக்கோவில், கோட்டை கடலோரம் கெவுணி வாசல்படிகள் யிந்த யிடங்களெல்லாம் ஸ்தாபிச்சு தமுக்கும் போடுவிச்சார். அது யென்ன யென்றால் 1760 வருசம் மார்ச் மாசம் 25 தேதி மகாராசஸ்ரீ முசே லாலி செனரால் பாதூர் சாயபு அவர்கள் சகலமான பேருக்கும் கட்டளையிடுகிறதாவது : துலுக்கர் கிறிஸ்துவர் அக்கியானிகள் குடிகள் சகலமான செனங்களுக்கும் உங்களுக்குள்ளே முன்பின் உள்ள வில்லங்கம் வியாச்சியம் எல்லாம்

---

[1] இக்கோவில் பற்றி ஆங்கிலத்தில் இல்லை.

யாதொரு பெரிய மனுஷர் ஏழைகள் யாராகிலும் அவர்கள் தன் தன் பாஷைகளிலே பித்திசாமெழுதி உள்க் கோட்டைக்குக் கீழண்டை வாசற்படியிலே பெட்டிக்கவுத்திலே கட்டி வச்சிருக்குறது. அந்தப் பெட்டியிலே கொண்டு வந்து போடுகுறது. அந்த பெட்டி சாவி யென் கையிலே மாத்திரம் யிருக்குது. ஆகையால் அந்தக் கேழ்வி உடனே நான் கேட்டு தீத்துக் குடுக்குறேன். அது அறியவும் என்று யிப்படியாக கடுதாசி படிச்சுப் பட்டணமெல்லாம் தமுக்குப் போட்டார்கள். யிதன் பேரிலே ஆரார் ஒடி பித்திசாம் போடுகுறார்களோ. அதுக்கு நடக்குறது யினிமேல் யறியவேணும்.

மயேயிலே யிருந்து யித்தனாள் ரெண்டு பேர் சிப்பாயிகள் குமிசேலுக்கு மய்யேயிலே யிருந்து கடுதாசி கொண்டு வந்து குடுத்தார்கள். அவர்கள் சொன்ன சேதி யென்ன யென்றால், பிரான்சுக்காரருடைய யிசுக்காதர் கப்பல் மோரிசு, மசுக்கரை விட்டுப் பிறப்பட்டுது, மய்யேயிக்கு நேராய் வந்து அதிலே மூணு கப்பல்க்காரர் வந்து மய்யே துறை பிடிச்சு கப்பலிலே யிருந்து ஒரு வெள்ளைக்காரன் கறையிலே யிறங்கி கடுதாசியைக் குடுத்ததாகவும், யிவ்விடத்திலே யிருந்து முசே லாலி அவர்கள் கப்பல்க்காரருக்கு குடுக்கச் சொல்லி யெழுதி யனுப்பிவிச்சு குந்த கடுதாசியை மய்யேயிலே யிருக்கிற பிரான்சுக்காரர் திலிக்கத்தோர்மார் (டைரக்டர்) அந்தக்கப்பல் வெள்ளைக்காரன் கையிலே குடுத்ததாகவும், அந்தக் கடுதாசியை வாங்கிக் கொண்டு அவன் கப்பலின் பேரிலே யேறிப் போனதாகவும், அந்தக் கடுதாசியை மய்யேயிலே யிருக்கிற திலிக்கத்தோர்மார் யிவ்விடத்துக்கு அனுப்பினார்களென்று அந்தக் கடுதாசி கொண்டு வந்த துலுக்கர் சொன்னான் யென்று செனங்கள் சொல்லிக் கேழ்க்கப்பட்டுது. மய்யே யிலேயிருந்து கடுதாசி கொண்டு வந்தவர்கள் நாங்கள் மய்யேயை விட்டுப் பிறப்பட்டு யின்று பதிமூணு நாளாச்சுது யென்று சொன்னபடியினாலே யின்றைய தினம் யேழெட்டு நாளைக்குள்ளே யிவ்விடத்துக்கு கப்பல் வந்து சேரவேணும்.

***1760 வருசம் மார்ச் மாசம் தேதி 27; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 18; குருவாரம்***

இத்தனாள் குமிசேல் மத்தது கூடயில்லை மத்தப்படி முசே லாலி அவர்கள் உத்தாரமென்று இங்கிலீசுக்காரருடைய கலாபத்துக்குப் பயந்து வெளியே போன செனங்களெல்லாம் பட்டணத்திலே வந்து சுகமாய் சம்சாரம் பண்ணிக் கொண்டிருக்கிறது. வராமல் போனவர்களுடைய வீடுவாசல் தட்டு முட்டு சகலமும் கும்பினியிலே யெடுத்துக் கொள்ளுவோமென்றும் தமுக்குப் போட்டார்கள். சூரிய உதயத்துக்கு

முதல் கொண்டு யெட்டு பத்துக் கப்பல் யிங்கிலீசுக்காரருது தெற்கே யிருந்து வடக்கே போற துறைக்கி நேராய்க் கண்டபடியினாலே குண்டுகள் யெடுத்து கொத்தனத்தும் பேரிலே சேர்க்கிற நிமித்தியம் பட்டணத்திலே யிருக்கிற போயியள் யெல்லாரையும் வரச்சொல்லி தமுக்குப் போட்டு வைச்சான். கப்பல் கண்டது நம்முடவர்களுது யென்று வெள்ளைக்காரர், தமிழர் சகலமான பேரும் சத்துநேரம் பிறமிச்சு கடலோரத்திலே போயி பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பிறம் சத்து நேரம் காண்பிச்சு யிங்கிலீசுக்காரருடைய கப்பலான படியினாலே வடக்கே ஓடிப்போச்சுது.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 28; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 19; சுக்கிரவாரம்*

இத்தனாள் பின்னை யொன்றும் விந்தையாய் சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. சின்னதுரை முசே கில்லியார் மகா நாட்டாரை யெல்லாரையும் அழைச்சு சிப்பாயிகள் சம்பளத்துக்கு மாசம் 1—க்கு அய்யாயிரம் ரூபாய் விழுக்காடு ரெண்டு மாசத்தைக்குப் பதினாயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லித் தீந்ததாய், அவர்களும் சம்மதிச்சதாய் அந்தப் படிக்கி சாதி சாதிக்கும் பிறிச்(சி) செழுதி வைக்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் மார்ச் மாசம் தேதி 29; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 20; சனிக்கிழமை*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : செஞ்சி சுத்தாரும் (சுற்றும்) யிருந்த கிராமங்களெல்லாம் யிங்கிலீசுக்காரருடய மனுஷர் கொள்ளை யிட்டார்களென்று கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 30; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 21; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி, ஆலம்பிறவை யிலிருந்து (?) இங்கிலீசுக்காரருடைய பவுன்சு பிறப்பட்டு பெருமுக்கலுக்கு வடக்கே திண்டிவனம் சீமை கேவூரிலே வந்து யிறங்கினார்களென்று சமாச்சாரம் வந்தது. அவர்கள் செஞ்சி மேலே போறார்கள் என்றும் சொல்லுகுறார்கள் நானாவிதமாய்ச் சொல்லுகுறார்கள். பின்னை யொன்றும் சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. யித்தனாள் வெள்ளைக்காரருடைய பண்டிகையான (Easter) படியினாலே பண்டிகை கொண்டாடி துரைகளெல்லாம் அந்த சம்பிரமத்திலே யிருந்தார்கள். ஆலம்பிறவை (?) கோட்டையிலே இங்கிலீசுக்காரருடைய மனுஷர் யிருக்கிறவர்கள் அன்பது பேர்

சிப்பாயிகளும் முப்பது பேர் காம்பிரியர்களும் இருபது சட்டைக்காரரும் யிருக்கிறார்கள். ஆக நானூறு பேர் மட்டுக்கும் யிருக்கிறார்கள். மரக்காணத்திலே நாற்பது பேர் சிப்பாயிகள் மட்டுக்கும் யிங்கிலீசுக்காரருடைய மனுஷர் யிருக்குறார்கள். யிந்தப் பிராந்தியங்களிலே அவர்களின் பேரிலே யின்னைய தினம் ராத்திரி செவாலியோர் என்கிற உசார் குதிரைகள் சிறிது குதிரைகளும் பந்தர் வடுகர் சேவுகத்துக்கு வைச்சுக் கொண்டு யிருந்த சிப்பாயிகள் நாற்பது பேரும் தண்டு போனார்களென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. யென்ன நடக்குமோ யினிமேல் அறிய வேண்டியது.

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : காரைக்காலிலே கும்மாந்தாமாயிருக்கிற முசே நிக்கோலாசு கட்டு மரத்தின் பேரிலே யிவ்விடத்துக்குக் காகிதம் அனுப்பினதாயும் அந்தக் காகிதம் கட்டு மரக்காரன் கொண்டு வந்து துரை கையிலே குடுத்ததாகவும், அந்தக் கட்டு மரக்காரன் சொன்ன விசேஷம் யிங்கிரேசிக்காரருடைய கப்பல் நாலும் ரெண்டு சுலுப்பும் முந்தாம் நாள் வெள்ளிக்கிழமை யன்று காரைக்கால் துரை வந்து பிடிச்சு அமிரால் மேஸ்தர் கொறநீசு (M. Carnish) யென்கிறவனும் சிறிது பேரும் கரையிலே யிறங்கி சனிகிழமையன்று ஊரைக் கொள்ளையிட்டுக் கோட்டையின் பேரிலேயும் மோர்சா போட்டு சண்டை பண்ண யெத்தனம் பண்ணுகுறார்களென்று சொன்னானென்று சொல்லி வந்து சேதி சொன்னார்கள்.

### *1760 வருசம் மார்ச்சு மாசம் தேதி 31; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 22; திங்கள்கிழமை*

இத்தனாள் யென் சாதகப்படிக்கி அன்பத்தோராம் வருஷம் ஆயி அன்பத்திரெண்டாம் வருஷம் வந்து முதல் நாளானபடியினாலே சிம்சுமார் சக்கிறப்படிக்கி, சூரிய கெதிப்படிக்கி, பூமண்டலத்துக்கு யெல்லாம் யின்று முதல்க் கொண்டு சல்லிய சக்கரம் திரும்பி விடுகுறதான படியினாலே, யிந்த சல்லிய சக்கிரம் மேஷசக்கரமானது முதலாய் கன்னியா ராசி வரைக்கும் ஆறு சக்கிரத்துக்கும் வருஷம் அன்பத்து நாலும் யிந்த நாலு சக்கரம் 1க்கு ராசியின் பேரிலே வருஷம் ஒன்பதாக, வருஷம் அன்பத்து நாலும் யிந்த ஆறு ராசியின் பேரிலே சூரியன் வோடுகிறபடியினாலே, யிது பகல்க் காலம் ஆனபடியினாலே சவ்விய சக்கிரம் யென்று சொல்லப்பட்டுது. முன் கெண்டம் நடந்துது. துலா ராசி முதலாய் மீன ராசி வரைக்கும் ராசி ஆறுக்கு வருஷம் அன்பத்து நாலும் ராத்திரி காலம் ஆனபடியினாலே அபசவ்விய சக்கிரமென்று சொல்லப்பட்டுது.

அபசவ்விய சக்கிரம் மூணு ராசியும் பூறு வாத்துமமான படியினாலே முன்னிருந்த பலனுக்கு யிறக்கம் குடுத்தாலும், அது தெரியாமல் வந்தது.

யிப்பறம் உத்தாராார்த்தம். மூணு ராசியும் அதிக யிறக்கமாய் வரையறவாய் அடிபடுகுற ராசியான படியினாலே மீன வரைக்கும் உள்பட்ட ராச்சியத்திலே கடிக்ஷரம் தாம்பிறங்களினாலே ராசாக்களுடைய அந்தக் கலகத்தினாலே ராச்சியங்களெல்லாம் ரக்ஷிக்கப்பட்டு திரவியம் சகியாது முதலான ரச வர்க்கங்கள் யெல்லாம் முன் சவ்விய சக்கிரத்துக்கு யெப்படி சகலமும் உற்பத்தியாச்சுதோ, அப்படி யிந்த அபசவ்விய சக்கிரத்துக்கு அந்தியம் மீன சக்கிரமான படியினாலே பூமியிலே முன் யெப்படி உற்பத்தியாச்சுதோ அப்படி சகலமும் அகப்பட்டுப் போச்சுது. யின்னைய திணம் முதல் கொண்டு விக்கிறம வருசம் முதலாய் அன்பத்து நாலு வருசம் மட்டுக்கும் முன் யெப்படி வயக்கப்பட்டுப் போச்சுதுதோ, அப்படி உற்பத்தியாயி திணம் திணம் அபிவிருத்தியாய் சகலமும் நடக்கும்.

யென் சாதகப்படிக்கும் சிமிசுமார சக்கிரப்படிக்கும் நாளை இருபத்தி மூணாந் தேதி செவ்வாய்கிழமை முதல்க் கொண்டு விக்கிறம வருசம் சித்திரை மாசம் முதல் தேதியென்று கணக்குப் பார்த்துக் கொள்ள வேண்டியது. பூமி சக்கிரப்படிக்கிப் பஞ்சாங்கக் காரர் சொல்லுகுறபடி சவுரமான படிக்கி விக்கிரம வருசம் சித்திரை மாசம் முதல் கொண்டு பாத்துக் கொள்ள வேண்டியது. பலாபலன் பூமியுலே நடக்கிறபடியினாலே பூச்சக்கிரப்படிக்கி விக்கிறம வருசம் சித்திரை மாசம் முதல் புதன்கிழமை முதல் கொண்டு பலாபலன் பார்த்துக் கொள்ள வேண்டியது.

யித்தனாள் வலது பாரிசத்திலே கீழ் வரிசையிலே ஒத்தைப்பல் வரிசையிலே அந்திய ஒத்தைப்பல் மத்தியானம் பனிரெண்டு நாழிகைக்கு ஒத்ததைப் பல் ஒண்ணு விழுந்தது. யிதுக்கு முன் தாது வருஷம் கார்த்திகை மாசத்தையிலே யிடது பாரிசத்திலே மேல் வரிசையிலே ரெட்டைப் பல்லிலே கடைசி பல்லுக்கு யிப்பறத்துப் பல்லு ஆதியாய் வெகுதானிய வருசம் கார்த்திகை மாதத்துத்க்கு வருஷாவருஷம் காற்திகை மாசத்தையிலே மூணு பல்லு விழுந்தது. அங்கே ஆடி மாசம் முதல் ரோகம் ஆரம்பமாம் என்கிறது. கார்திகை மாசத்தையிலே அதிகமாயி நிவற்தியாகிறது. யிந்த வருஷம் கார்த்திகை மாசம் ரோகம் ஆரம்பிச்சபடியினாலே பங்குனி மாசம் 22 தேதி பனிரெண்டு நாழிகைக்கு வலது பாரிசத்திலே கீழ்வரிசையிலே ஒரு பல்லு விழுந்தது. ரோகம் நிவர்த்தி (ஆகி) யாயி சொஸ்தமாச்சுது. ஆனபடியினாலே, யிது முதல் சவ்விய சக்கிரத்துக்கு மேஷ சக்கிர முதலாய்ப் பார்க்க வேண்டியது. ஆனபடியினாலே பலாபலன் யினி அனுபோகத்திலே அறிய வேண்டியது. யிது வரைக்கும் ராசி சூரியன் மீனத்திலே யிருந்தபடியினாலே அபசவ்விய சக்கிரபலன் யிதுவரைக்கும் நடந்தது. அமிசை சூரியன் தனுசிலே

யிருந்தபடியினாலே சவ்விய சக்கிர பலன் மேஷாதியாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டியது.

இத்தனாள் கோட்டையிலே குமிசெல்க் கூடினார்கள். என்ன யென்றால் காரைக்காலின் பேரிலே யிங்கிலீசுக்காரர் வந்து யிறங்குறதுக்கும் சுத்துப்பட்டுகளிலே யிங்கிறேசுக்காரருடைய மனுஷர் நடமாடுகுறத்தை தொட்டும் யிதுகளைக் கொண்டு எல்லாம் நடக்க வேண்டியதுக்கு யோசனை பண்ணியும், யிதுகளுக்கு சிலவுக்குப் பணம் காசு நிமித்தியம் சுமை பண்ணுகிறதுக்கும் யோசனை பண்ணினார்களென்று சேதி கேழ்விப்பட்டுது.

## ஏப்ரல் 1760

***1760 வருசம் அபரீல் மாசம் தேதி 1; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 23; செவ்வாய்***

இத்தனாள் வேலூரிலே யிருந்து ரசாசாயபுக்கு கடுதாசி கொண்டு வந்தவன் நம்முடைய சேவுகன் கிஷ்ணாசி சொல்லச் சொன்னான் யென்று சொன்ன சேதி யென்ன யென்றால் முன்னாலே சலாபத்து சங்கும் நிசாமல்லியும் நானாபேரிலே யெதித்துச் சண்டை பண்ணவிடத்திலே நானா முறிஞ்சு, சேக்கு இபிராம் முதலாகிய சிறிது பேர் விழுந்து போனதாயும் அதன் பேரிலே நானா அபசெயப்பட்டுப் போனா னெங்கிற சமாச்சாரம் கேழ்க்கப்பட்டு யிருந்தோம். மறுபடியும் கும்முக்குக் கூட்டி பலன் சேகரிச்சுக் கொண்டு நானா வந்து சலாபத்து சங்கு நிசாமல்லியுடனே சண்டை பண்ணயிடத்திலே சலாபத்து சங்கு நிசாமல்லியுடனே சண்டை பண்ண யிடத்திலே சலாபத்து சங்கும் நிசாமல்லியும் முறிஞ்சு அப்பாலே போயி யிறங்கி நானாவுக்குச் சந்தி அனுப்பி, நானாவுக்கு புராணபுரி சீமையும் அந்தக் கோட்டையும் தவுலாதாபாத்து சீமையும் அந்தக் கோட்டையும் அபரங்காபாத்து சீமையும் அந்தக் கோட்டையும் யிந்த மூணு சீமையையும் உனக்கு இனாமாய் விட்டுவிட்டோம், கர்னாட்டக சுபாவுக்குச் சவுதாயி யென்ன உண்டோ அதுவும் நீர் வாங்கிக் கொள்ளும், ஆற்காட்டு சீமையை யெப்படி பந்து பஸ்து பண்ண வேணுமோ அந்தப்படிக்கிப் பண்ணிக் கொள்ளும் யென்று சந்தி சமாதானம் நடந்தது. ஒருத்தருக்கொருத்தர் ஆணை சத்தியம் பிறமாணிக்கம் பண்ணிக் கொண்டு முன்னாலே நிசாமிருக்கச்சே நானாவுக்கும் நிசாமுக்கும் யெப்படி நடந்ததோ அந்தப்படிக்கி நடந்துக் கொள்ளுவோமென்றும் உடம்படிக்கையானதாய் அதன் பேரிலே நானா வேலூர் முறுத்து சல்லிக்கானுக்குக் கடுதாசி எழுதி சித்திரை மாசத்தையிலே ஆற்காட்டுக்குப் பன்னீராயிரம் குதிரை அனுப்பிவிக்குறோம், நீர் கூட யிருந்து ஆற்காட்டு சீமை யெந்தப்படிக்கி பந்து பஸ்து பண்ண வேணுமோ அந்தப்படிக்கி பண்ணவேண்டியதென்று கடுதாசியும் யெழுதி சீரொப்பாவும் குதிரையும் ரத்தினம் யிழைத்த துராயும் சிரப்பேஞ்சும் பர்வானாவும் அனுப்பிவிச்சதாகவும், வந்த வெகுமானத்தை வெளியிலே தானே வைச்சு முறுத்த சல்லிக்கானும் அவனுடைய சகலசம் பிறமத்துடனே போயி எதிர் கொண்டு அழைத்து வந்து பீரங்கியள் போட்டு சக்கரை வழங்கி சந்தோஷம் கொண்டாடி, ஆற்காடு சீமை பந்துபஸ்து பண்ணுகிறதின் பேரிலே இருக்குறானென்கிற சமாச்சாரம் சொல்லச் சொன்னான் யென்று யிதுகளுக்கெல்லாம் நான் கூட யிருந்து பார்த்துக்

கொண்டு யிருந்தேனென்று சொல்லச் சொன்னான்... யிந்த சமாசாரத்துக்குத் தானே வேலூர் முறுத்த சல்லிக்கான் ரசா சாயபுவுக்குக் கடுதாசி யெழுதி வரவிட்டான். ரசா சாயபும் யென்னைக் கேட்டான். மெய்தான் யிந்த பெருமானம் வந்ததுக்கும் முறுத்த சல்லிக்கான் சகல சம்பிறமத்துடனே போய் எதிர்க்கொண்டு அழைச்சு வந்து பீரங்கியள் போட்டு சர்க்கரை வழங்கி சந்தோஷம் கொண்டாடினார்கள். நானும் கூடயிருந்து வந்தேன் என்று நம்முடனேயும் கடுதாசிக் கொண்டு வந்தவன் யிந்த சமாச்சாரம் சொன்னான்.

***1760 வருசம் அபரீல் மாசம் தேதி 2; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 24; புதன்கிழமை***

இத்தனாள் காரைக்காலிலே கொம்மாந்தா மாயிருக்கிற முசியே நிக்லோசு (M. Nicolas) முசே லாலிக்கும் முசே லெறிக்கும் கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சான். அந்தக் கடுதாசி கொண்டு வந்தவன் நம்மண்டைக்கு வந்து சொன்ன சமாச்சாரம் யென்ன யென்றால் இங்கிலீசுக்காரர் வெள்ளிக்கிழமையன்று வந்து யிறங்கி சனிக்கிழமையன்று பட்டணத்திலே பிறவேசிச்சு பழய கோட்டையின் ஆத்தோரத்திலே யிருந்ததை பிடிச்சுக் கொண்டு அவ்விடத்திலே நம்முடவர்களுது கொடி போட்டுக் கொண்டு யிருந்த மாத்திரத்திலே யிங்கிரேசுக் கொடி போட்டுக் கொண்டு மோர்சா போட்டு சண்டை பண்ண யெத்தனம் பண்ணுகுறார்கள். சீனப்பய்யன் முதலான சிறிது பேரெல்லாம் தலங்கம்பாடி பிறையாறு யிந்த வட்டங்களிலே போயி விட்டார்கள் திருவேங்கிடத்தா பிள்ளை மாத்திரம் கோட்டைக்கு உள்ளே யிருக்குறார். பட்டணத்திலே யிருக்குற கடைக்காரர்கள் செனங்களை நீங்கள் கடைகள் காதிகள் போட்டுக் கொண்டு பயப்படாதே தைரியமாயிருங்கள் அல்லவென்றால் உங்கள் தட்டு முட்டு களையெல்லாம் எடுத்துக் கொண்டு போகவேணுமென்றால் போங்கள் யிருக்க வேண்டுமென்றால் சிப்பாயிகளை கடைகளுக்கு காவல் வைக்குறோம். யெங்கள் மனுஷர் கொள்ளை வல்லடி யிடாமல்ப் படிக்கி யென்று சொல்லுகுறார்கள். நாங்கள் யிப்போ யெப்படி தட்டுமுட்டு யெடுத்துப் போவோம் என்றால் ஆனால் கடைகள் வீட்டுக்கு முத்திரையும் போடுங்கள் யெங்கள் முத்திரையும் போடுகுறோம் ஒரு சிப்பாயிகளையும் காவல் வைக்குறோம். சோராவரி பண்ணாமல் படிக்கி யென்று இங்கிலீசுக்காரருடைய மனுஷா சொல்லுகுறார்கள் யென்று முசே லாலிக்கும் முசே லெறிக்கும் கடுதாசி கொண்டு வந்த சேவுகன் சொன்னான். கோட்டையிலே யிருக்கிற விடத்திலே வந்து விழபோம்பு (Boonle) சுடுகுறான் அவர்கள் மனுஷர் வெளியே பிறப்பட்டால் பீரங்கி குண்டாலே போடுகுறான் யிங்கிலீசுக்காரர்கள் யின்னம் ஒன்றும் சுமயில்லை யென்று சொன்னான்.

### *1760 வருசம் அபிறேல் மாசம் தேதி 3; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 25; குருவாரம்*

இத்தனாள் முசே லாலியும் முசே லெறியும் மகாநாட்டாரை அழைப்பிச்சு கலாபமானபடியினாலே கோட்டை சுத்திலும் அகழியிலே மண் யெடுக்க வேணுமென்று நீங்கள் சகலமான பேரும் வந்து மண்யெடுக்க வேணும் என்று சொன்னதின் பேரிலே மகா நாட்டார் யிருந்து கொண்டு சொன்னது "யிப்படி தாங்கள் தானே சொன்னால் நாங்கள் செய்ய வேண்டியது என்ன ஒருக்காலங்களிலே யிந்தப் பட்டணம் தோணின நாள் முதல்க் கொண்டு (இப்படிப்பட்ட வேலையை நாங்கள் செய்ததில்லை) யென்று சொன்னதின் பேரிலே, ஆனால் முன்னே நாங்கள் மண் எடுக்குறோம் பிற்பாடு நீங்கள் யெடுங்கள் யென்று சொன்னதின் (வெள்ளைக்காரர்) சொன்னதின் பேரிலே மகாநாட்டார் சொன்னது "நீங்கள் யேன் மண் யெடுக்கிறீர்கள் யெடுக்கத் தேவையில்லை. நாங்கள் யெடுக்குறோம்" யென்று சொன்னதின் பேரிலே முசியே லெறியும் முசே லாலியும் சொன்னது, "உங்களுக்குள்ளே தமிழர் யெத்தனை பேரிருக்குறார்கள் அத்தனை பேரும் எல்லாரையும் நாளை காலமே யேழு மணிக்கு அழைப்பியுங்கள்" யென்று சொன்னதுக்கு மகாநாட்டார் சொன்னது "யெத்தனை பேரை என்று அழைத்து வருவோம் யெங்களாலே ஆகாது. நீங்கள் தமுக்குப் போடச் சொல்லிச் சொன்னால் எல்லாரும் வருவார்கள்" ளென்று சொன்னதின் பேரிலே அந்தப்படிக்கி பட்டணத்திலேயுள்ள சகலமான சாதிகள் செனங்களை யெல்லாம் நாளை காலமே யேழு மணிக்கி கோட்டைக்கி தென்னண்டை வரச்சொல்லி தமுக்குப் போட்டார்கள். தெரு வீதிகளிலே பள்ளம் மேடு யில்லாதபடிக்கி நெரவி குப்பை செத்தையில்லாமல் சுத்தம் பண்ணச் சொல்லியும் சாக்கடைத் தண்ணீர் தெளிக்கச் சொல்லியும் தமுக்குப் போட்டார்கள். பட்டணத்திலே பிரபுக்கள் வாயினாலே நாங்கள் மண் சுமக்குறோம் யென்றும் பட்டணத்திலே யிருக்கிற பெரிய மனுஷர் சகலமான பேரையும் மண் சுமக்கச் சொல்லியும் யிந்தப்பட்டணம் தோணின அறுபது வருஷமாயும் பிறவாத விசேஷம் பிரபுக்கள் வாயினாலே பிறக்கிறது. யெதுனாலே யென்றால் பட்டணத்துக்கு ஒரு பிரசாபதி உண்டோ அவர் மீன சக்கிர அந்தியத்திலே மரணத்தை அடைஞ்சு மேஷ சக்கிரம் ஆதியாய் பிரபஞ்சம் வேறே நடக்குமென்று முன்னமே சீதா ராமசோசியர் சொன்ன சாஸ்திரப்படிக்கி சரிக்கட்டிக் கொண்டு வருகுறபடியினாலே, மேல் சொல்லப்பட்ட பலனும் சரிப்படுமென்று செனங்களும் சொல்லிக் கொள்ளுகுறார்கள். நமக்கு சரிதானென்று நெசமாய் தோத்தியிருக்குது. இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : நேத்து ராத்திரி ரெண்டு பேர் ஒப்பிசியால்மார் ரெண்டு பேர் வெள்ளைக்காரர் வீட்டுக்கு வரவழைப்பிச்சு

அந்த ஒப்பிசியால்மார் ரெண்டு பேரையும் குத்திப்போட்டு அப்பாலே ஒரு பிராமணன் வீட்டுத் தோட்டத்திலே புதைத்துப் போட்டு, மீராப்பள்ளியிலே வைத்தார்கள். அந்த தோட்டக்காரன் இதை அறிஞ்சு கொண்டு நயினாருடனே போயி சொல்லிப் போட்டான். நயினார் துரையுடனே சொன்னதாயும் அந்தப் பிணத்தை முசே புலோ பின்னையும் ரெண்டொருத்தர் போயி பார்த்து அண்டையிலே குடியிருக்கிற வெள்ளைக்காரர் கணக்கன் முசியே கல்லியோர் (M. Caillot) யென்கிறவனையும் பின்னையொரு வெள்ளைக்காரனையும் பின்னையும் கசோத்திலே போட்டு வைச்சதாகவும், அவர்களை மறுபடி அழைச்சு கேட்டவிடத்திலே நாங்களறியோம், ஆரோயெவரோ யென்று சொல்லி சாக்ஷி அத்தாட்சி உண்டா ஆராகிலும் கண்டார்களா யென்று சொன்னதின் பேரிலேயும் சாயங்காலம் காவல் விடுதலையாய் விட்டு விடுவார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது. யிந்த பங்குனி மாசம் 17 தேதி முதல்க் கொண்டு நித்தியம் ஒருத்தர் ரெண்டு பேர் ஒப்பிசியால்மாரை ஒருத்தருக்கொருத்தர் குத்திப்போட்டு புதைச்சுப் போடுகிறதும் யிந்தப்படிக்கி தினம் தப்பாமல் படிக்கி ஒருத்தர் ரெண்டு பேர் ஒப்பிசியால்மார் குத்துப்பட்டு செத்துப் போறார்கள். யின்றைய தினமும் ராத்திரி ஒரு ஒப்பிசியால் குத்துப்பட்டு செத்துப் போனான். யித்தனாள் யிங்கிலிசுக்காரருடைய குதிரை சமீபத்திலே வந்து என்கிறதின் (?) பேரிலே யிவ்விடத்திலே முசே லாலி அவர்கள் நூத்தன்பது யிரநூறு குதிரை மட்டுக்கும் வெள்ளைக்காரர் குதிரைக்காரரை அனுப்பிவிச்ச விடத்திலே அவர்கள் போயி இங்கிலிசுக்காரரை அடிக்காவிட்டாலும் வில்லியநெல்லூரிலே போயி யிறங்கி மயிசூர் வெங்கிட்ட நாரணப்பய்யன் குடியிருந்த வீடு முதல் கொண்டு ஒன்பது பத்து வீடுகள் மட்டுக்கும் கொளுத்திப் போட்டார்கள். அந்த வீடு தானே வெந்து தணிஞ்சுப் போச்சுது. அவ்விடத்திலே யிருந்த வீடுகளெல்லாம் கொள்ளை வல்லடி அடிச்சுப் போட்டார்கள். அதன் பேரிலே அவ்விடத்திலே யிருந்த குடிகள் எல்லாம் ஓடிப்போயி விட்டார்கள் என்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 4; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 26; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலமே ஒன்பது மணிக்கி முசே லாலி வழுதாவூருக்குப் போரோமென்று சிறிது காடுது குதிரைக்காரரும் அவருமாய்ப் பிறப்பட்டு வண்ணாந்துரையே போய் அங்கே யிருந்த வெள்ளைக்காரர் சொலுதாதுகளிலே சிறிது பேரும், யிந்தக் குதிரைக்காரரையும் வெளியே போயி யிறங்கச் சொல்லி அனுப்பிவிட்டு, அப்பிறம் மறுபடி திரும்பி கோட்டைக்கி வந்துவிட்டார்.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 5; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 27; சனிக்கிழமை***

இத்தனாள் நேத்தியதினம் காரைக்காலுக்குப் போக வேணும்மென்று முசே பிமேலும் (M. Fumall) யிறுநூறு வெள்ளைக்காரர் குதிரையும் அறுநூறு எழுநூறு பாறுக்காரரும் குதிரையும் போகச்சே, சிங்கர் கோவில் அழிசிபாக்கம் அந்த வட்டங்களிலே யெல்லாம் கொள்ளை அடிச்சுக் கொண்டு தெற்கே போனார்கள் என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. யிவர்கள் தான் வில்லியநெல்லூரிலேயும் வீடுகளையும் கொளுத்தினவர்கள் விழுப்புரத்திலே நம்முடவர்கள் யிருந்தவர்கள் பேரிலே இங்குலீசுக்காரருடைய மனுஷர் வந்து விழுந்து சண்டை பண்ணி நம்முடவர்கள் முறிஞ்சு போனார்கள் என்றும் இங்கிலீசுக்காரர்கள் விழுப்புரம் தோரணம் வைச்சுக் கொண்டு போனார்களென்றும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 6; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 28; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : இங்கிலீசுக்காரர் காரைக்காலிலே யிறங்கி யிருந்தவர்கள் பேரிலே கோட்டையிலே யிருந்த நம்முடவர்கள் சிறிதுபேர் சொலுதாதுகளும் சிறிது பாறுக்காரரும் பிறப்பட்டு இங்கிலீசுக்காரர் பேரிலே வந்து விழுந்து நாற்பது பேர் சொலுதாதுகளையும் சிறிது பேர்கள் சிப்பாயிகளையும் கொன்று போட்டு, மறுபடியும் கோட்டையே போய் விட்டார்களென்று யிங்கே வந்து ஒப்பிசியால்மார் சொன்னார்கள்.

***1760 வருசம் அபிறேல் மாசம் தேதி 7; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 29; திங்கட்கிழமை***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், முந்தானாளாகிய சனிக்கிழமையன்று காரைக்கால் கோட்டையின் பேரிலே இங்கிலீசுக்காரர் போடுகிற போம்புனாலே கோட்டையிலே யிருக்கிறவர்களுக்கு நிறுவாகம் யில்லாமல் படிக்கி யிருந்தபடியினாலே கோட்டைக்கு யெசமானாயிருந்த முசியே நிக்கொலாசு உடம்படிக்கையாய் இருபது நாழிகைக்கு கோட்டையை இங்கிலீசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுப் போட்டார்களென்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. இத்தனாள் மோக்கு வட்டம் வழுதாவூர் திருமங்கலம் நெற்குணம் அந்த வட்டங்களிலே இங்கிலீசுக்காரர்களுடைய குதிரைகள் வந்து நடமாடுகிற படியினாலே அவ்விடத்துக் குடிகளெல்லாம் அங்கங்கே ஓடிப்போனார்கள்

என்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டது. காரைக்கால் இங்கிலீசுக்காரர் பிடிச்சபடியினாலே அவ்விடத்திலே அன்னூறு அறுநூறு கரிசை மட்டுக்கும் நெல்லு யிருந்தது.

சென்னப்பட்டணத்திலே யிங்கிலீசுக்காரருக்கு சோத்துக்கு யில்லாத வேளைக்கு நல்ல சமையத்திலே அகப்பட்ட படியினாலே நெல்லெல்லாம் கப்பலிலே யேத்தி அனுப்பிவிக்குறார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 8; பிறமாதி வருசம் பங்குனி மாசம் தேதி 30; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் சென்னப்பட்டணம் கெவுனி வாசல் படியாலே மோர்சா கட்டு[1] எடுத்துக் கொண்டு போனார்களென்றும், யீசானிய மூலையிலே மோர்சா போடுகிறதுக்கு கொண்டு போறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. யின்றைய தினம் வரைக்கும் அபசவ்வியக் கிரகம் துலா மாதியாய் மீன வரைக்கும் ஆறு ராசிக்கும் அன்பத்து நாலு வருஷம் சரி அதிலே அந்தியம் மீன ராசி பிறசோத்பதி வருசம் ஆதியாய் பிரமாதி வருசம் பங்குனி மாசம் 9 க்கும் மீன ராசிக்கு சுக்கிரன் வந்து உச்சனாதன் ஆனபடியினாலேயும் புதன் வந்து நீச்சனாதன் ஆனபடியினாலேயும், ராசினா தத்துவம் பிரகஸ்பதியுட ராசியானபடி யினாலேயும், பிறசோற்பதி வருசம் ஆதியாய் பிறமாதி வருசம் பங்குனி மாசத்துக்கு வருஷம் ஒன்பதுக்கும் சுக்கிறன் உச்சனாத்தத் துளமும் நீச்ச புதாளாயிருக்கிறவர்கள் அந்த சுக்கிராளின் கீழே உங்களுடைய அயிசுவரியத்துக்கு உங்களாங்காட்டும் பாத்தியக் கற்தா யென்று சுக்குராளின் கீழே நீச்ச புதாளாய்த்தான் உத்தியோகம் சத்தியோகம் அமுல் சீமை பூமி சகலமும் நீச்ச புதாளாய்த் தானே யிது வரைக்கும் யிருந்தது. அனுபவிச்சுக் கொண்டு வந்தவர்கள் சீனா தத்துவத்துக்கு அபசவரிய பிராமணாள் யிருக்குறவர்கள் சுக்கிற வர்க்கத்தின் கீழே அமில் மத்தமுண்டானதும் அனுபவிச்சுக் கொண்டு வந்தார்கள். யிப்படி சாஸ்திரம் எந்தர்படிக்கி முசுமார் சக்கிரப்படிக்கி ஒட்டோ அந்தப்படிக்கிச் சரியாய் நடந்து வந்தது.[2]

நாளை விக்கிரம வருசம் சித்திரை மாசம் முதல் கொண்டு மேஷக் கிரக மானபடியினாலேயும், யிந்த சக்கிரம் மேஷாதியாய் கன்னி வரைக்கும் அன்பத்து நாலு வருசம் சவ்வியக் கிரகச் சக்கரமான படியினாலேயும் அந்தக் கிரகம் ஒடுகிற படியினாலேயும், யிதுக்கு மேஷ சக்கரம் வந்து

---

[1] மணல் மூட்டைகள்.

[2] ஆங்கிலப் பதிப்பிற்குப் பயன்படுத்தப்பட்ட மூலமும் பிரதியும் ஒன்றோடொன்று சற்று மாறுபடுகின்றன.

ஆதியான படியினாலே மேஷத்துக்கு சூரியன் உச்சனாதனும் சனிவந்து நீச்சனாதனும் அங்காரகன் வந்து ராசினாதனும் ஆனபடியினாலே யிவர்களுடைய காலம் நாளை விக்கிரம வருசம் சித்திரை மாசம் முதல் புதவாரம் முதல்கொண்டு வருகிறபடியினாலே யிந்த அனுபோகம் பார்க்க வேண்டியது.

*1760 வருசம் ஏப்ரல் மாசம் தேதி 9; விக்ரம வருசம் சித்திரை மாசம் தேதி 1; புதவாரம்*

இத்தனாள் விக்கிரம வருசமான படியினாலே முன் சவ்விய சக்கரம் அன்பத்துனாலு வருசம் அபசவ்விய சக்கரம் அன்பத்து நாலு வருஷமும் ஆக நூத்தி எட்டு வருசமும் ஆயிப்போம். மறுபடி நூத்தியெட்டு வருசத்துக்கு விக்கிரம வருசம் ஆதியாய் மேஷ ராசிமுதல் மீன ராசி வரைக்கும் ராசி பனிரெண்டுக்கு ராசி 1—க்கு வருசம் 9 ஆக, நூத்தெட்டுக்கும் மேஷம் முதல் கன்னி வரைக்கும் சவ்விய சக்கிரமான படியினாலே, யிதுக்கு சூரியன் ராசாவான படியினாலே சூரியவமிசம் வந்து நந்தகோபால வமிசமானபடியினாலே, யினிமேல் யிந்த 108 நூத்தெட்டு வருசமும் கோபால வமிசத்தார்கள் யிந்த ராச்சியத்துக்கு ராசரீகம் பண்ணி, யிதுக்குள்ளே சவ்விய சக்கிரமான கன்னி வரைக்கும் அன்பத்து நாலு வருஷமிருந்து, அப்பிறம் அபசவ்வியம் துலாம் ஆதியாய் மீன வரைக்கும் அன்பத்து நாலு வருஷமும் சிறிது விறுத்தியும் சிறிது விரோதமும் ஆக ஆக நூத்தெட்டு வருஷத்துக்கும் கோபால வமிசத்தார் ராசரீகம் பண்ணி அப்பால் மிலேச்சர அந்தமாய் நூத்தெட்டு வருஷம் நடக்கும்என்று யிந்தப்படிக்கி ஆண்ட, சக்கிரம் சூரியன் உச்சக்கிரகம் நடக்கிறதென்று சொல்லி சீத்தாராம சோசியர் சொன்னதும் எழுதிக் குடுத்ததும் முன் மீன சக்கிர அந்தியும் பிறமாதி வருசம் வரைக்கும் அவர் சொன்னபடிக்கி, டில்லி முதல் ராமேசுவரம் வரைக்கும் யேரோப்பு ராசியம், ரோம் தேசம் தீவான்திரம் வகையரா சூரியனுடைய கிறண மட்டுக்கும் படுகிற யிடங்களெல்லாம் ராசரீக்கம் தப்பி ஆராசிகமாய் டில்லி பட்டணத்துக்குள்ளே கூட பார்ஷாவை வெட்டிப் போடுவிச்சு மறுபடி ஒரு பார்சாவை வைக்க, அவனும் பிறப்பட்டு ஓடிப்போக, டில்லி பட்டணத்திலே யிருக்கிற பெண்டுகள் சகலமான பேரும் வலசைகள் போக யிந்தப்படிக்கி ராச்சியங்களெல்லாம் ஆளுசகமாய் நடக்குதெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. இந்தப்படிக்கி பிறமாதி வருசம் வரைக்கும் சாஸ்திரம்சொன்னபடிக்கி சரி யினிமேல் விக்கிரம வருஷம் நடக்கிற அனுபோகம் அறிய வேண்டியது.

இத்தனாள் பட்டணத்திலேயுள்ள பல்லக்குக்காரர் போயிண்டாக்காரர் குண்டு கிராமம் ஒழுகரை அரியாங்குப்பம் அழிசிபாக்கம் சிங்கர் கோவில் சுத்துப்பட்டு கிராமம் யெல்லாம் யிருக்கிற

ஆளுகள் யெல்லாரையும் கும்பினியிலே வேலை செய்யத்தக்கதாக வரச்சொல்லி தமுக்குப் போட்டு விச்சார்கள். பின்னை யொன்று விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

இத்தனாள் சந்தா சாயபு மகன் ரசா சாயபு பல்லக்கின் பேரிலே யேறிக்கொண்டு வெளியே போகச்சே நடுவழியிலே பல்லக்கிலே யிருந்தவனைத் தாழயிறங்கச் சொல்லி பல்லக்கையும் போயிண்டாக்களையும் பத்துபேர் சொலுதாதுகள் பிடுங்கிக் கொண்டு போயிவிட்டார்களாம். மறுபடியும் முசே லாலியுடைய உத்தாரம் வாங்கிக் கொண்டு சாயங்காலம் பல்லக்கு யேறிக் கொண்டு வெளியே போகச்சே, மயோர்களுக்கு மாத்திரம் உத்தாரம் ஆயிருந்தது. சொலுதாதுகளுக்குச் சொல்லவில்லை யானதால் மறுபடியும் அவமரியாதை பண்ணி அவருக்கு மாத்திரம் உத்தாரம் என்று சொல்லி அனுப்பிவித்ததின் பேரிலே விட்டுவிட்டார்கள்.

***1760 வருசம் அப்றில் மாசம் தேதி 10; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 2; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு சேனோர் லாத்தூர் (Senhor La Tour) வந்து கண்டுப் பேசிக் கொண்டிருந்து தனக்குக் குடுக்க வேண்டிய ஒன்பதினாயிரம் ரூபாய்க்கும் வேறே சீட்டு யெழுதிக் குடுக்கச் சொல்லியும் ஒரு வருஷத்துக்கு வட்டிப்பணம் முன்னே குடுக்கச் சொல்லி கேட்டேனே, அதுக்கு நூத்தி தொண்ணூறு ரூபாய் குடுத்தீரே மத்த ரூபாயும் குடுக்கச் சொல்லி கேட்டான். அதுக்கு மூணு கெடுவாய் குடுக்குறோமென்று சொன்னோம். கப்பல் சமாச்சாரம் ஆனி மாசத்தையிலே வரும். யிப்ப வருகிறதில்லை யென்று சொன்னான். நாம் யிந்த சித்திரை மாசத்தையிலே வருமென்று சொன்னதுக்கு, வருகுறதில்லை, உமக்கும் நமக்கும் பந்தய மென்ன என்று யிப்படி பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டுப் போயி விட்டான்.

ராத்திரி பதினொண்ணரை மணிக்கு இங்கிலீசுக் காரருடைய படகு கரையோரத்திலே கண்டு தென்கிறதாய் ரெண்டு பீரங்கி போட்டு, தம்பூறு அடிச்சு சகலமான பேரும் வெள்ளைக்காரர் குமிசெல்க்காரர் சகலமான பேரு் கோட்டை யண்டை வந்திருந்து மறுபடியும் அவரவர் யிருக்கிற யிடங்களிலே பிறப்பட்டு போயிவிட்டார்கள்.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 11; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 3; சுக்கிரவாரம்***

இத்தனாள் பகலைக்கு மேலாய் கேழ்க்கப்பட்ட சேதி : ராமலிங்க பிள்ளை, பாபுராயன், ராமச்சந்திரராயன் குண்டூர் பாலிசெட்டி சஞ்சயசெட்டி

யிவர்களை அழைச்சு சிலவுகளுக்கு குடுக்க வேண்டியதென்று முசே லாலி கேட்டவிடத்திலே ராமலிங்கபிள்ளை மாத்திரம் நாலாயிரம் ரூபாய் ரொக்கமும் சிறிது சாமானுகளும் குடுக்குரோமென்று உடம்படிக்கை பண்ணிக் கொண்டு வந்து விட்டதாயும், மத்தப்பேரை பணம் கேட்டவிடத்திலே நாங்கள் முன்னேயும் குடுத்திருக்கிறோம், யெங்களுக்கு குடுக்கிறதுக்கு யில்லை யென்று சொன்ன விடத்திலே மூணு நாளைக்குள்ளே பணம் குடுத்தால் ஆச்சுது, யில்லாவிட்டால் உங்களை அப்படி செய்வோம் யிப்படி செய்வோம் கசோத்திலே போடுவோம் யென்றும் சொல்லி போகச் சொல்லி பிறகே வீட்டுக்கொரு சேவுகரை சேருவைக்காறனை அனுப்பி வாசற்படியிலே வச்சார்கள் என்கிறது கேழ்க்கப்பட்டுது. பின்னையும் பதினோரு பேர் வழி யென்றும் பதினாறு பேர் வழியென்றும் சொல்லுகுறார்கள். யிதிலே குண்டு கிராமம் குத்தகைக்காரர் பேரும் எழுதியிருக்குதென்று சொல்லுகுறார்கள். யிந்த பேர் வழியை எழுதி நயினார் கையிலே குடுத்து தண்டச் சொன்னதாகவும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

சாயங்காலம் அஞ்சு மணிக்கி முசியே லாலி அழைச்சு வரச்சொன்னாரென்று ஒரு சேருவைக்காரன் வந்து அழைச்சான். நமக்கானால் சரீரம் சொஸ்தமில்லாத படியினாலே ரெண்டு மாசமாய் வெளியே வாரதில்லை யென்று சொன்னதின் பேரிலே, அந்த சேருவைக்காரன் போய் மறுபடி சொன்னவிடத்திலே, அப்பாவு வையாகிலும் முன்னாலே வீடுகள் எடுத்து எழுதின கணக்கும் எடுத்துக் கொண்டு அழைச்சு வரச் சொன்னார்கள் யென்று மறுபடியும் அந்தச் சேருவைக்காரன் வந்து சொன்னான். அப்பாவு போனவிடத்திலே முசே கேல்துவில் என்கிறவன் (M. Gadeville) அப்பாவுவைக் கண்டு முன்னாலே வீடுகள் எழுதியிருக்குதே அந்தக் கணக்கு கொண்டு வந்தியாவென்று கேட்டவிடத்திலே, வந்த சேருவைக்காரனும் வயணமாய் சொல்லாமல் போனான். ஆனாலும் முன்னாலே தானெழுதி துரைகள் கையிலே தானே குடுத்திருக்குறோம் என்று சொன்னதின் பேரிலே, அதுவெல்லாம் யெனக்குத் தெரியாது, முசே லாலியுடைய உத்தாரம் அந்த வீடுகள் எழுதின கணக்கு கேட்டு வாங்கச் சொல்லி யென்றும் சொல்லிவிச்சதின் பேரிலே, ஆனால் நல்லது, அந்தக்கணக்கு யிருந்தால் பார்ப்போம் என்று சொல்லிப்போட்டு, அப்பாவு வந்து யிந்த சமாச்சாரம் சொன்னான். இன்றைய தினம் யிதுகளெல்லாம் யெதுனாலே யிப்படி யெல்லாம் காபிராப்படுகுதென்று கேட்டால் நம்மண்டை கணக்கு எழுதின முசே கிளேக்கு (M. Glegg) என்கிறவனை முன்னாலே முசே லெறி கந்தப்ப முதலி முன்னிலையாய் ஊரிலேயுள்ள செனங்கள் கையிலே வரிவாங்கினபோது தானே முசே கலிக்கு (?) ஒரு பித்திசா மெழுதினான் யென்ன வென்றால், பணம் யிருக்கிற விடங்கள் அறியாமல் யேழை

சாதிகளை யேன் கொல்லுகுறீர்கள், யிதுகளுக்கெல்லாம் துலுக்கர்கள் ஆகட்டும் வெள்ளைக்காரர் ஆகட்டும் ஒரு தமிழரை யெசமானாய் வைச்சு அவர்கள் முன்னிலையாய் யெந்தக் காரியம் நடப்பிச்சால் சகல காரியமும் கட்டி நடக்கும். அதை விட்டுப்போட்டு துரைத்தனம் பண்ணுகுறவர்களுடைய ஒசர்ந்த துபாசியைத் தானே விட்டு பணம் தண்டச் சொன்னால் பணம் என்னா தண்டி ஆகப்போகுது? கும்பினீருக்கு சிலவு அடையப் போகுதா? யென்று யிப்படியெல்லாம் முசியே லாலியுடைய இந்தந்த மென்று (?) கையிலே எழுதி குடுத்திருந்தான். அதுக்கு நகல் நம்முடைய வீட்டிலே யிருந்தது. அது நாம் அறியோம். மத்தியானம் நாம் தூங்கச்சே (முசே கிளேக்) வந்து அந்த மேசைப் பலகை சாவி அவன் கையிலே யிருந்தபடியினாலே திறந்து, அந்தக் கடுதாசியை எடுத்துக் கொண்டு போகச்சே நம்மை வந்து நம்முட மனுஷனை எழுப்பி யிப்படி முசே கலிக்கு கடுதாசி யெடுத்துப் போறானென்று சொன்னதின் பேரிலே நாம் யெழுந்து, யேதென்று கேட்டவிடத்திலே, (கிளக்) அது யெனக்குச் சேர்ந்த சம்மதி கடுதாசி யென்று சொல்லிப் போட்டு போய் விட்டான். அதின் பேரிலே தான் யிவர்களை யெல்லாம் அழைச்சுப் பணங்காசு கேட்டதும், யிந்த சமாச்சாரம் சம்மதிகள் யெல்லாம் நடந்தது. யிதல்லாமல் வீடுகள் எடுத்தெழுதின கணக்கு நம்முடைய கையிலே யிருக்குதென்று சொன்னதும் மெய்தான். ஆகையினாலே, யிந்த கணக்கு குடாமலிருந்தால் பொல்லாப்பு வரும், ஆகையினாலே நான் அந்த கடுதாசி குடுக்கிறதாய் யோசனை பண்ணி யிருக்குறோம்.

இத்தனாள் ஊரிலே வெள்ளைக்காரர் கத்தியை உருவிக் கொண்டு வீடுகளிலே பூந்து வெகுசோரா வாரிகள் பண்ணுகிறதிலே பட்டணமெல்லாம் அதலகுதலப்பட்டுப் போச்சுது. செனங்களையும் ரெண்டொருத்தரைக் குத்தியும் வெட்டியும் யிப்படி யெல்லாம் சோராவரி பண்ணார்கள்.

*1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 12; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 4; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே பட்டணத்திலே யிருக்கிற தமிழர் பேரிலே முன்னாலே வரியெழுதி யிருந்த கணக்கை அப்பாவு எடுத்துக் கொண்டு போயி முசே கெதிவேல் (M. Gadeville) கையிலே குடுத்தவிடத்திலே அந்தக் கணக்கைப் பார்த்து யிதுதானா மெத்தவும் அல்ப்ப சொல்ப்பமாயிருக்குதென்று சொல்லி அதை வாங்கிக் கொண்டு நல்லது நீர் போம் உங்கள் தகப்பனாருக்கு சலாம் சொன்னோமென்று சொல்லுமென்று யனுப்பிவிச்சான். அந்த சமாச்சாரம் அப்பாவு வந்து நம்முடனே சொன்னான். அப்பால் கோட்டையிலே நடந்த சமாச்சாரம் யென்ன வென்றால் கங்கிபாடி வீராசெட்டி குண்டூர் பாலிசெட்டி

ஆதிவராகசெட்டி குமாரன் அழகிய மணவாள செட்டியும் திருவம்பலசெட்டி குழந்தைசெட்டி பாபுராயன் ராமச்சந்திரராயன் யிந்த யேழு பேரையும் மணிக்கூண்டின் பேரிலே காவல் வைச்சார்களென்றும் மத்தப்போர் தைலப்ப செட்டி பிச்சகுப்பன் முசியே துப்பிளேயிக்குசு கணக்கு ரங்கப்பன் முதலி குமாரன் வகையிரா சிறிது பேரை நயினார் வீட்டிலே கொண்டு போயி வைச்சு பணத்துக்கு சம்மதி பண்ணச் சொன்னார்களென்றும் யிந்தப்படிக்கி கேழ்விப்பட்டுது. பின்னையும் குருவப்ப செட்டி தர்மசிவ செட்டி மாந்தை முதலி மூணுபேரையும் யெங்கேயென்று கேட்டவிடத்திலே வெளியே போயி விட்டார்கள் என்று சொன்னதின் பேரிலே அவர்கள் காவல் வைச்சுப் போன சேவுகரைப் போயி அழைச்சு வரச்சொல்லி சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

யித்தனாள் இங்கிலீசுக்காரர் குதிரை ஆயிரம் குதிரையும் ரெண்டாயிரம் பாறுக்காரரும் ஆயிரம் வெள்ளைக்காரரும் மேஸ்தர் கர்னல் கூட்டு யென்கிறவனும் வந்து வழுதாவூர் பூத்துரை யிதுகளை சுத்திக் கொண்டு யிந்தவட்டங்களிலே யிறங்கி அவர்கள் குதிரை குண்டுசாலை மட்டுக்கும் வந்து காலாடினதின் பேரிலே யிங்கே யிருந்து நம்முடவர்களை யிருநூறு குதிரை மட்டுக்கும் போனவர்கள் அவர்கள் குதிரை விஸ்தாரமாயிருந்த படியினாலே யிவர்கள் திரும்பி வந்து விட்டார்கள்.

இந்த காலி மெலியேயைத் தொட்டு ரொம்ப யிவ்வடங்களி லெல்லாம் காபராப்படடு பட்டணத்து செனங்கள் வெளியே போயிருந்து வந்தவர்கள் கலாபத்தினாலேயும் பணத்து நிமித்தியம் காவல் கட்டு பண்ணுற படியாலேயும் இங்கிலீசுக்காரர் சமீபத்திலே நெருங்கி வாரபடியினாலேயும் மறுபடியும் வெகு செனங்கள் வெளியே போயிவிடுகுறார்கள். யித்தனாள் நம்முடய அமுல்தாரர் திருமங்கலம் நெற்குணம் இந்த யிடங்களிலே யிருந்து கொண்டிருந்த அண்ணாமலை முதலியும் பொன்மலை பிள்ளையும் அவ்விடத்திலே யிங்கிலீசுக்காரர் குதிரைகள் காலாகுகிற படியினாலே யிருக்கக் கூடாமல் படிக்கிப் பிறப்பட்டு வந்து விட்டார்கள்.

***1760 வருசம் ஏப்ரல் மாசம் தேதி 13; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 5; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கி லபெலேன் என்கிற பிறகாது கப்பல் முன்னே யிவ்விடத்திலே யிருந்து கோந்துதே ஸ்தேங் (Comte de Estaing) அலவரேசு முசேவினுட பெண்சாதி மகளுடனே பிள்ளை யிவர்களை யேத்திக் கொண்டு மோரிசிலே கொண்டு போயி விட்டுப் போட்டு மறுபடி அவ்விடத்திலே யிருந்து யிவ்விடத்துக்கு யித்தனாள் சேதி கொண்டு வந்துது. யிந்தக் கப்பலிலே 50 அன்பது

வெள்ளிப் பெட்டி வந்ததாய் கேழ்க்கப்பட்டுது. யிதுக்கு முன்னே காரைக்காலின் பேரிலே இங்கிலீசுக்காரர் அமிரால் மேஸ்தர் கோற்னேசு என்கிறவன் (Admire Mr. Cornish) போயி சண்டை பண்ணின விடத்திலே மோரிசுலே யிருந்து கொம்பாஞ்சுதெ யிந்து (Compagniede Indes) யென்கிற கப்பல் அறுபது வெள்ளிப் பெட்டியும் யேத்திக் கொண்டு மோரிசுலே யிருந்து யிவ்விடத்துக்கு வந்தது. காரைக்கால் துறையண்டை வரச்சே இங்கிலீசுக்காரன் கப்பல்கள் கண்டு துரத்துனதாகவும் அகப்படாமல் மேலாக ஓடிப்போனதாகவும் கேழ்க்கப்பட்டது. இன்ன விடமென்று தெரியவில்லை. அதுவும் யெட்டு பத்து நாளையிலே வந்து சேருமென்று யிந்தக் கப்பல்க்காரன் சொன்னதாய் நம்முடைய வீட்டுக்கு வருகிற ஒப்பிசியால்மார் சொன்னார்கள். இந்தக் கப்பலிலே வந்த கடுதாசி முசே லாலியும் முசே லெறியும் பார்த்துக் கொண்டு யிருந்ததாய் சேதிக் கேழ்க்கப்பட்டது. முசியே புலோ பெண்சாதி மகளுடைய பிள்ளை அஞ்சு வயது பிள்ளை சீமைக்கிப் போனது. மோரீசு அண்டை போகச்சே அம்மை கண்டு செத்துப் போச்சு தென்கிற சமாச்சாரம் வந்ததின் பேரிலே அப்பாவுவை அனுப்பி முசியே புலோ பெண்சாதி அவள் மகள் அவள் புருஷன் துசொசாயி (Dusaussaye) யிவர்கள் போயி துக்க உபசாந்தியாக விசாரிச்சுப் போட்டு வந்தான். நேத்து துவக்கி இங்கிலீசுக்காரன் கர்னால் கூட்டு யென்கிறவன் (Colonel Coote) வழுதாவூர் கோட்டையின் பேரிலே வந்து யிறங்கி மோர்சா போட்டுக் கொள்ளுறதுக்கு யெத்தனம் பண்ணுகிறதின் பேரிலே கோட்டையிலே யிருந்து பீரங்கி போட்டுக் கொண்டே யிருக்கிறான். யிவ்விடத்திலே யிருந்து நம்முடவர்கள் பவுன்சு நேத்து போயி பிரம்பை மேட்டிலே யிறங்கினார்கள். யின்றைய தினம் முசே லாலியும் மத்த வெள்ளைக்காரர்களும் யேகத்துக்குப் போயி பிரம்பை மேட்டிலே போயி சேர்ந்தார்கள். இன்று ராத்திரிக்கி இங்கிலீசுக்காரருடைய பாளையத்தின் பேரிலே போயி விழப்போறார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 14; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 6; சோமவாரம்***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி நேத்திய தினம் வந்த லபெலன் என்கிற (Balaine) கப்பலிலே அன்பது பெட்டி வெள்ளி வந்ததென்று எழுதிவிச்சோமே வெள்ளி வந்ததில்லை. அந்தக் கப்பலிலே வந்தது (25) இருபத்தஞ்சு கட்டு சகலாத்தும் முன்னாலே இங்கிலீசுக்காரர் கையிலே பிடிச்சது. சிறிது பட்டு நூலும் வெள்ளைக்காரருக்கான உடுப்புகளும் சிறிது மருந்து குண்டும் கோதும்பை சிறிது வந்ததாய் கேழ்க்கப்பட்டுது. இதல்லாமல் வெள்ளி வந்ததில்லை. முன்னே வந்த கொம்பனேஞ்சு தே யிந்து என்கிற கப்பலிலே அறுபது பெட்டி வெள்ளி வந்ததென்று

சொன்னது அந்த கப்பல் வந்தால் தெரியும். இத்தனாள் முசே லாலி சகலமான பேரும் அறியத் தக்கதாக சொன்னது யென்ன யென்றால் இந்தக் கப்பலிலே தனக்குத் தலைவனாகிய ராசா எழுதி யனுப்பி வைச்சது. சீமையிலே பிரான்சுக் காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் சண்டை யாயிருக்குதே சண்டை தீந்து சமாதானம் ஆகிற மட்டுக்கும் அவ்விடத்துக்குத் தானே யெசமானாய் யிருயென்று எழுதி யனுப்பிவிச்சார் யென்று சகலமான பேரையும் வைச்சுக் கொண்டு சொன்னாரென்கிறதாய் வெள்ளைக்காரர்கள் சொல்ல கேழ்க்கப்பட்டுது. இதல்லாமல் இந்தக் கப்பலிலே சீமைக் கடுதாசி வந்ததை முசியே லாலி தாம் பார்த்துக் கொள்ளுகிறதைப் பார்த்துக் கொண்டு மத்தக் கடுதாசிகளை அவரவருக்கு வந்ததை குடாமல் சுட்டுப் போட்டாரென்கிறதாய் வெள்ளைக்காரர் சொல்ல கேழ்க்கப்பட்டுது. இங்கிலீசுக்கான் வழுதாவூரின் பேரிலே மோர்சா போட்டு சண்டை போடுகிறதாய் மடியப் போட்ட மத்தசாஞ்சாமெல்லாம் வந்தவாசிக்கி எடுத்து அனுப்பி வைக்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

நம்முடையவர்கள் மூவ்வாயிரம் சொலுதாதும் 1000 ஆயிரம் குதிரையும் ஆராயிரம் யேழாயிரம் பேர் சிப்பாயிகளும் பெரம்பை மேட்டிலே போயி யிறங்கி யிருக்க சமீபத்திலே வழுதாவூரை கோட்டையின் பேரிலே யிங்கிலீசுக்காரர் மோர்சா போட்டு சண்டை பண்ணச்சே யேன் பாத்துக் கொண்டு யிருக்குறார் களென்று கேட்டால் வழுதாவூர் கோட்டையிலே நம்முடையவர்கள் யிருக்கிறவர்கள் வெள்ளைக்காரர்கள் காபிரியளிலே நூறுபேரும் போயிகளிலே நூறு யிறுநூறு பேரும் யிருக்குறார்கள். யிவர்கள் பிலனும் இங்கிலீசுக்காரர் வெகு பெலத்துடனே வந்து சண்டை பண்ணுகுறார்கள். அவர்கள் பெலனும் பார்ப்போம். என்கிறதாய் நம்முடையவர்கள் சண்டைக்குப் போகாமல் பார்த்துக் கொண்டு யிருக்குறார்கள் யென்று செனங்கள் சொல்லிக் கொள்ளுகுறார்கள். இங்கிலீசுக்காரர்கள் ராத்திரி பத்து மணிக்கி மட்டும் கோட்டையின் பேரிலே பீரங்கி சுட்டு மறுபடி சுடாமலிருந்தது யெதினாலே யென்றால் அவர்கள் குதிரைக்காரரும் பாறும் முஸ்தீது பண்ணிக் கொண்டு நம்முடவர்கள் பிரம்பை மேட்டிலே யிறங்கி யிருந்தார்கள். அவர்கள் பேரிலே வந்து விழுந்ததின் பேரிலே நம்முடவர்கள் அசந்திருந்த படியினாலே நம்முடவர்கள் பிறப்பட்டு ஒழுகரை ரெட்டிப்பாளையம் பாதிரி கோவில் குண்டுசாலை யிவ்விடங்களிலே வந்துவிட்டார்கள். இங்கிலீசுக்காரர் வந்தவர்கள் பிரம்பை மேட்டிலே யிருந்த ரெண்டு மூணு குடிசைகளை கொளுத்திப் போட்டு அவ்விடத்திலே நம்முடவர்கள் போட்டுவிட்டு வந்த மூட்டை முடிச்சுகள் கொஞ்சம் நஞ்சம் யிருந்ததை எடுத்துக் கொண்டு போயிவிட்டார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 15; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 7; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலமே முசே லாலி பிரம்பை மேட்டுக்கு மட்டுக்கும் சுவாரி போயி வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது. இங்கிலீசுக்காரரும் வழுதாவூர் கோட்டையின் பேரிலே மோர்சாவைச்சு சுறுக்காய் தானே பீரங்கியும் போம்பையும் போடுகுறார்கள். ஊரிலேயும் போயி பிறவேசிச்சு யிருக்குறார்கள். நம்முடவர்கள் யித்தனை பவுன்சுயிருந்தும் சமீபத்திலே யிருக்கச்சே மத்தத்துப் போகாமலிருக்குறது மெத்த ஆச்சரியமாயிருக்குதென்று செனங்கள் சொல்லிக் கொள்ளுகுறார்கள். யிவர்கள் கோட்டைக்கு மத்தத்து பண்ணாத படியினாலே யின்னைய தினம் கோட்டை விட்டுமென்றும் சொல்லிக் கொள்ளுகுறார்கள். பட்டணத்திலே ரெண்டு மூணு நாளாய் வற்தகரைப் பிடிச்சு பணம் குடுக்கச் சொல்லி கோட்டையிலே காவல் பண்ணியிருந்தவர்கள் நேத்தயதினம் மகாநாட்டாரண்டைக்கி வந்து வற்தகர் எங்களுக்கானால் லக்ஷபத்திருபதினாயிரம் ரூபாயி வரிபோட்டுக் குடுக்கச் சொல்லுகுறான் யிதை நீங்கள் மகானாட்டார் பேரிலே போட்டுக் கொண்டு யெப்படியாகிலும் யிதுக்கு மார்க்கம் பண்ண வேணும் யில்லாவிட்டால் அவரவர் ஆஸ்தியெல்லாம் நாங்களெடுத்து எழுதிக்குடுப்போம் என்று சொன்னதின் பேரிலே மகாநாட்டார் உங்கள் பேரிலே போட்டவரிக்கி எங்களுக்கென்ன கவையென்று நேத்து சாயங்காலம் சொன்னதின் பேரிலே யின்றையதினம் போயிகள் வந்து வற்த்தகரை அழைச்சுப் போயி கோட்டையிலே மறுபடியும் காவல் வைச்சார்கள். யிந்த காபராவினாலே பட்டணத்திலே யுள்ள செனங்களெல்லாம் ரொம்ப காபராப்பட்டு வெகுசனங்கள் வெளியே போயி விடுகுறார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 16; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 8; புதவாரம்*

இத்தனாள் காத்தாலே பனிரெண்டு அடிச்சு ஒண்ணரை ரெண்டு மணிக்கு கொம்பினீதெசெந்து (Compagnies des Indes) என்கிற கப்பல் ஒன்று முன் அஞ்சாந்தேதிக்கு வந்த பேலேன் என்கிற கப்பலுக்கு முன்பாக வந்தது வரவேணுமென்று சொன்னார்களே அந்தக் கப்பல் வந்து துரைபிடிச்சு நங்கூரம் போட்டு கப்பலிலேயும் பதினோரு பீரங்கியும் போட்டார்கள். கப்பல் கப்பித்தானும் யிறங்கி கடுதாசியும் கொண்டு வந்து கோட்டைக்கிப் போனான் என்கிறதாய் கேழ்க்கப்பட்டுது. அந்தக் கப்பலிலே யிருந்து ரெண்டு பாதிரியள் யிறங்கினார்களென்று கோவிலிலே வந்திருக்கிறார்கள். அவர்களை சேதி விசாரிக்க சின்ன துரை முசே கில்லியார் சாயங்காலம் அஞ்சு மணிக்கி கால்நடையாய் அரிகங்கக்காரன் குடைபிடிக்க நடந்து வந்து அந்தப் பாதிரிகளை கண்டு பேசிப்போகச்சே

பிராமணத்தெருவிலே நகல் குருவய்யன் வீட்டண்டை வந்து வேர் தடுக்கி கீழே விழுந்து சத்துநேரம் சோகாயிருந்து தெளிஞ்சு மறுபடி வீட்டுக்குப் போனாரெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. யிவர் விழுந்ததுக்குப் பட்டணத்திலே சகலசனங்களும் ரொம்ப தாபந்தியப்பட்டுக் கொண்டார்கள். யிவர் சகல சனங்களுக்கு ரொம்ப உபகாரமாய் நடப்பிக்கிற படியினாலே சனங்கள் ரொம்ப தாபந்தப்பட்டார்கள். யிந்தக் கப்பலிலே வந்த தினிசுகள் யினிமேல் விசாரிச்சு எழுதவேண்டியது. யித்தனாளும் வழுதாவூர் கோட்டையின் பேரிலே சண்டை நடந்து கொண்டிருக்குது. நம்முடவர்களுக்கும் கோட்டைக்காரருக்கும் மத்தத்து போனதில்லை கோட்டைக்காரனும் யிதுவரைக்கும் இங்கிலீசுக்காரருக்கு கடாபு கொடுத்துக் கொண்டு யிருக்குறான். யினிமேல் என்ன நடக்குமோ தெரியாது. இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கி இங்கிலீசுக்காரரை கொல்னேல் மேஸ்தர் கூத்தென்கிறவனும் வழுதாவூர் கோட்டையின் பேரிலே லக்கை யேறி கோட்டையைப் பிடிச்சுக் கொண்டு கோட்டையிலே யிருந்த பிரான்சுக்காரருடைய சொலுதாதுகள் சிப்பாயிகளை யெல்லாம் காவல் பண்ணிக் கொண்டு கோட்டையிலே இங்கிலீசுக்காரர் கொடியும் போட்டுக் கொண்டார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

முன்னாலே சீத்தாராம சோசியர் சொல்லி யிருக்கிற சாஸ்திரம் யென்ன வென்றால் மனுஷன் சரீரத்துக்கு பக்கத்து வேர் ஆணிவேர் அனைத்தும் ஆக நாலு வேறும் ஆக அறுபது வேர் யிதிலே பக்கத்து வேறு அன்பத்து நாலும் அத்துப்போயி வடக்கத்து வேர் மேர்க்கத்தி வேர் யிருந்தால் ஆயுள்த்திராணி யிருக்கும் தெர்க்கத்திவேர் கிழக்கத்திவேரும் அத்துப்போயி தெற்கித்து வேரும் கிழக்கத்தி வேரும் யிருந்தால் ஆயித்தாரணம் சரியென்று சொன்னபடிக்கு சரி நமக்கு அன்பத்துதொன்பதே முக்கால் அரைக்கால் வேறும் அத்துப்போயி தெற்கத்தி வேரிலே அரைக்கால் வேரிருந்தபடியினாலே பரம உத்தியாயும் ஒன்பது நாழிகை குறைய நூறு வருஷமும் சரியாயிருக்குமென்று சொன்னார். யிப்ப பட்டணத்துக்கும் சனிக்கிரகம் அந்தியமான படியினாலே பட்டணத்துக்கும் பக்கத்து வேர் அன்பத்து நாலும் அத்துப் போச்சுது. ஆணிவேர் நாலுக்கும் வடக்கத்து வேரும் கிழக்கத்தி வேரும் அத்துப்போச்சுது. ஆனால் தெற்க்கத்தி வேரும் மேர்க்கத்தி வேரும் யிருக்குதென்று யிருந்தோம். தெர்க்கத்து வேரும் அத்துப் போச்சுது. யின்னையுடனே மேர்க்கத்து வேரும் அத்துப்போச்சுது. ஆனபடியினாலே யிந்தப் பட்டணத்துக்கும் ஆயுத்தாறணம் சரி பிரான்சுக்காரருக்கு விதித்திருக்கிற படியினாலே யினிமேல் வேறொரு பிரபுக்கள் வந்து செஞ்சிக் கோட்டையைப் பிடிச்சுக் கொண்டு யிப்பயிருக்கிறவர்கள் அபசவ்விய சுக்கிராள் ஆனபடியினாலே யிவர்களெல்லாம் யெடுப்பட்டுபோம் யினிமேல் வருகுறவர்கள் சவ்விய சுக்குராளான

படியினாலே செஞ்சி கோட்டையிலே போயி பிடிச்சு பிலத்து தஞ்சாவூர் கோட்டையும் பிடிச்சு சென்னப்பட்டணமும் பிடிச்சுக் கொண்டு கோல்கொண்டையிலே போயி செனரால் போட்டு (general pottu) இந்த ராச்சியங்களெல்லாம் பிராஞ்சுக்காரருக்குத் தானே நடக்கும் லக்கினாதிபதியான சூரியன் உச்சனாதனாய் யேர்ப்பட்டு நிர்க்கிற போதும் சுக்கிர வர்க்கங்களெல்லாம் அடிபட்டுப்போம் யிது சீதாராம சோசியர் சொன்ன சாஸ்திரப்படிக்கி அனுபோகம் சரி...

*1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 17; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 9; குருவாரம்*

இத்தனாள் இங்கிலீசுக்காரர் வந்து வில்லியநெல்லூர் கோபுரத்தின் பேரிலே இங்கிலீசுக் கொடியும் போட்டுக் கொண்டு வில்லியநெல்லூர் சீமை தமாம் குண்டுசாலை வரைக்கும் தோறணம்கட்டிக் கொண்டு யெங்கும் குண்டு சாலை வரைக்கும் இங்கிலீசுக்காரருடைய மனுஷராய்த் தானே யிருக்குறார்கள். யித்தனாள் நம்முடவர்களுக்கும் யிங்கிலீசுக்காரருக்கும் பிரம்பை மேட்டிலே சண்டையாயி நம்முடையவர்கள் முறிஞ்சு கொஞ்சம் சேதமாய் பிறப்பட்டு ஒழுகரை யெல்லைப் பிள்ளைசாவடி யிவ்விடங்களிலே நம்முடவர்கள் வந்துவிட்டார்கள். குண்டுசாலை அரியாங்குப்பம் தவிர மத்தயிடங்களெல்லாம் யின்றையவரைக்கும் இங்கிலீசுக்காரருடைய தோறணம் ஆச்சுது, பெருமாள் நாயக்கன் சாவடி, குண்டுசாலை, அரியாங்குப்பம் யிது வரைக்கும் இங்கிலீசுக்காரராய் யிருப்பார்களென்று சுப்பா சோசியர் சொன்னபடிக்கி சாஸ்திரம் யிதுவரைக்கும் சரி யினிமேல் யென்ன நடக்குமோ அதுவும் அறிய வேண்டியது முன் பவ வருசம் வரைக்கும் நம்முடவர்களுக்கு அரியாங்குப்பம் முருங்கப்பாக்கம் ஒழுகரை குண்டுக் கிராமம் காலாபேட்டு யிந்த அதிரிலே யெப்படி யிருந்தார்களோ அந்தப்படிக்கி காலாப்பேட்டு தவிர மத்த அரியாங்குப்பம் முருங்கப்பாக்கம் ஒழுகரைக் குண்டு கிராமம் குண்டுசாலை யிந்த அதிருலே யின்றைய வரைக்கும் நின்னார்கள். நாளை முதல் கொண்டு யென்ன கதி நடக்குமோ அது அறிய வேண்டியது.

இத்தனாள் முசே கெதி வேல் என்கிறவன் பாளையக்காரனாயிருக்கிற வெள்ளைக்காரன் மகாநாட்டாரை அழைப்பிச்சு பணம் தண்டியாச்சுதா யென்று கேட்டதின் பேரிலே யின்னம் தண்டியாகயில்லை யென்றும் யிவர்கள் சொன்னதின் பேரிலே அவன் மகானாட்டாருக்குள்ளே செட்டியள் ரெண்டொருத்தரை கையாடி நீங்கள் முன்னாலே முசே கில்லியாருக்கு அய்யாயிரம் ரூபாயிக் குடுக்குறோமென்றல்லவா உடம்படிக்கை பண்ணிக் கொண்டீர்கள். யிப்ப

யென்னா யெண்ணாயிரம் ரூபாயாய் குடுக்க வேணும் யில்லாவிட்டால் காவலிலே வைப்பேன் என்று சொன்னதின் பேரிலே மகாநாட்டாரெல்லாம் வந்து சட்டப் பெருமாள் அய்யன் மடத்திலே கூடி வரிப்பிறிச்சு யெழுதுகுறார்களே என்குறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் பாபுராயன் ராமச்சந்திர ராயன் கணக்கு ரங்கப்ப முதலி குமாரன் கும்பினி வர்த்தகர் வகையிரா பதிமூணு பேரைக் காவல் வைச்சு லக்ஷத்திருபதினாயிரம் 120000 ரூபாயி குடுக்கச் சொல்லி வைச்சு யிருக்கிறபடிக்குத் தானே யிருக்குது. பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் எல்லாம் யிங்கிலீசுக்காரர் வந்து வில்லியநெல்லூர் கோபுரத்தின் பேரிலே கொடி போட்டுக் கொண்டு அவர்களும் வந்து நம்முடவர்கள் வெளியே யிறங்கி யிருக்கிற பவுன்சின் பேரிலே சண்டை பண்ணுகுறபடியினாலேயும் இவ்விடத்திலேயும் வரிகளைப் போட்டு பணங்காசுகளுக்கு சுறுக்குப் பண்ணுகிற படியினாலேயும் வெளியே போயிருந்து வந்த செனங்கள் எல்லாம் மோசம் வந்தது. யினிமேல் யிருக்கப் போகாதென்று யின்னைய தினம் வெகுசெனங்கள் வெளியே பிறப்பட்டுப் போயிவிட்டார்கள். யின்றைய தினம் பட்டணத்திலேயுள்ள செனங்கள் அதலகுதலப்பட்டு தத்தளிக்குறது கடுதாசியிலே எழுதி முடியாது. தேவடியாள் முத்தப்பிள்ளை பேரிலே நமக்குப் பதினாயிரம் அய்யாயிரம் வரவேண்டியதுக்கு ராமலிங்கம் பிள்ளை யிப்ப சத்தியமாய் நானூறு ரூபாயி வாங்கிக் கொள்ளச் சொல்லி உடம்படிக்கைப் பண்ணினதின் பேரிலே யிவ்விடத்திலே பணம் கேட்ட விடத்திலே யிங்கே பணமில்லை. கிராமத்துக்கு வந்தால் தாரோமென்று சொன்னான். அதன் பேரிலே ராமலிங்கம்பிள்ளை காகிதம் ஒண்ணு குடுத்தான். அந்தக் காகிதம் கொண்டு நம்முடய சேவுகரும் போயி திருவெண்ணை நல்லூர் யிவ்விடங்களெல்லாம் தேவடியாள் முத்தப்பிள்ளையைத் தேடிப்பார்த்துக் காணாமல் படிக்கி மறுபடி நம்முட சேவுகர்கள் ராமலிங்கம் பிள்ளை எழுதிக் குடுத்த கடுதாசி கொண்டு வந்து விட்டார்கள்...

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 18; விக்கிரம வருசம் சித்திரை மாசம் . தேதி 10; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி ராமச்சந்திர ராயன் பாபுராயன் கணக்கு ரங்கப்ப முதலி மகன் கும்பினி வர்த்தகர் வகையிரா பதிமூணு பேரை பணம் குடுக்கச் சொல்லி கோட்டையிலே காவல் வைச்சு சாப்பாட்டுக்கு விட்டு மறுபடியும் காவல் வச்சு பணம் கேட்டுக் கொண்டு யிருந்தார்களே. அவர்கள் முசே லெறி கோவர்ணதோர் அவர்களைக் கண்டு பேசி நீங்கள் எங்களைக் காவலிலே வச்சுப் பணம் கேட்டால் நாங்கள் எங்கே யிருந்து குடுக்கப் போறோம் முன்னே தானே யிருக்கிறதைக் குடுத்தோம். யிப்பவும் மகாநாட்டாரையும் அழைச்சு

அவர்களுடனே சொல்லி எங்களையும் கூட்டிவிட்டால் அவர்களும் நாங்களும் யோசனை பண்ணிக் கொண்டு முன்னே யெழுதின வரிப்படிக்கு வரியெழுதி பணத்துக்கு ஒரு மார்க்கம் பண்ணுகுறோம் என்று சொன்னதின் பேரிலே முசே லெறி கோவர்ணதோர் மகாநாட்டாரை எல்லாம் அழைச்சு கும்பினி சிலவுக்கு ரெண்டு லக்ஷம் ரூபாய் யிப்ப குடுக்க வேணும் என்று சொன்னதுக்கு, "நீங்களும் யிவர்களும் யேகோபிச்சுக் கொண்டு லக்ஷம் ரூபாயிக்கு மத்தத்துப் படுத்தி குடுக்க வேணும் என்று சொன்னதின் பேரிலே மகாணாட்டடாரிருந்து சொன்னது," நாங்கள் முன்னே தானே நாலு விதத்திலேயும் யிருக்கிற தட்டு முட்டுகளும் வித்து குடுத்து விட்டோம். யினிமேல் யெங்களுக்கு குடுக்கிறதுக்கு யில்லை யென்று சொன்னதின் பேரிலே அப்படியல்ல. யிந்த வேளைக்கு சிலவுக்கு யில்லாதபடியினாலே நீங்கள் யில்லையென்று சொல்லப் போகாது. பாபுராயன் கும்பினி வர்த்தகர் வகையிரா பதிமூணு பேரையும் வைச்சுக் கொண்டு பணத்துக்கு யெந்த விதத்திலே தகப்படுத்த வேணுமோ அந்தப்படிக்கி யோசனை பண்ணிக் கொண்டு சம்மதி பண்ணுங்கோள் என்று சொன்னதின் பேரிலே மகானாட்டாருக்குள்ளே ரெண்டொருத்தரை வெள்ளாழக் கனகசபை உள்க் கையாயி ராமச்சந்திரராயன் போட்டுக் கொண்டபடியினாலேயும் அவர்களுக்கு மாத்திரம் யிந்த விசேஷம் சம்மதி மத்தப் பேரும் கானாட்டாருக்கு சம்மதி யில்லாதபடியினாலே அவர்கள் சொன்னது. "நாங்கள் மகாநாட்டார் வந்து யேழை முன்னே தானே யிருக்கிறதை குடுத்து விட்டோம். யினிமேல் குடுக்குறதுக்கு யெங்களுக்கு நிறுவாகமில்லை. யெங்கே பணம் யிருக்குதோ அங்கே வாங்கிக் கொள்ளுங்கோள் அவர்களுக்கும் எங்களுக்கும் வியாச்சியம் யென்ன யிருக்குது." அக்கரை யில்லை யென்றும் சொன்னதுக்கு உன் பேரிலே முசே லெறி கோவர்ணதோரை முன்னே தானே கட்டிக் கொண்டிருக்கிறபடியினாலேயும் மகாநாட்டாருக்குள்ளே ரெண்டொருத்தர் உள்க்கையா யிருக்கிற படியினாலேயும் முசே லெறி சொன்னது தில்லை மேஸ்திரி பேசச்சே காதிலே ரெண்டு கடுக்கனும் கையிலே ரெண்டு மூணு மோதிரமும் போட்டுக் கொண்டு போனதைப் பார்த்து யிப்படி அவரவர் கடுக்கனும் மோதிரமும் வித்துக் குடுத்தால் யிந்தப் பணம் சரியாயிப்போம். போங்கள் நீங்களெல்லாம் கூடி யோசனை பண்ணிக் கொண்டு பணத்துக்கு சம்மதி பண்ணுங்களென்று நயினாரை அழைச்சு யிவர்களை யெல்லாம் ஒரு தாவிலே சேத்து வரிப்பிறிச்சு எழுதி அவரவர் பேரிலே பணம் எவ்வளவு சொல்லுகுறார்களோ அதை அவர்கள் கையிலே பணம் வாங்கிப் போடச் சொல்லி அழைச்சுக் கொண்டு போகச் சொல்லி சொன்னதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் மகாநாட்டார் சொன்னது பட்டணத்திலே யிருக்கிற செனங்களெல்லாம் வெளியே பிறப்பட்டுப் போயி விட்டார்கள். ஆர் கையிலே பணம் வாங்குறது யென்று சொன்னதுக்கு உன் பேரிலே ஆனால் செனங்களை ஒருத்தரையும் வெளியே போகாமல் தாக்கீது பண்ணி வைக்குறோம் வெளியே போனவர்களிலே யெசமான் மாத்திரமிருந்து மத்தப்பேர் போயி விட்டால் அவர்கள் வீடு எழுதத் தேவையில்லை யென்றும் பெண்டுகள் பிள்ளைகளிருந்து யெசமான் வெளியே போயிருந்தால் அவர்கள் வீடுகள் யெல்லாம் எடுத்து எழுதச் சொல்லி சாவடிக் கணக்கப்பிள்ளைகளை யெல்லாம் அழைச்சு முசே லெறி கோவர்ணதோர் உத்தாரம் பண்ணதாய் சேதி கேழ்க்கப்பட்டது. அந்தப் படிக்கி தெருவுகளிலே சிறிது வீடுகளை எடுத்து எழுதுகிறதாய் சாவடி மணியக்காரர் வந்து நமக்கு கபுறு சொன்னார்கள்.

இங்கிலீசுக்காரர் வழுதாவூர் வாங்கிக் கொண்டு வெளி சீமை யெல்லாம் தோரணம் வைச்சுக் கொண்டு அந்த மட்டுக்கும் உள்ளே யிருக்குறார்கள். யினிமேல் என்ன நடப்பிப்பார்களோ அது அறிய வேண்டியது. நம்முடவர்களும் பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் கையிலே பணம் வாங்கிக் கொள்ள வேணும் என்கிற நினைவின் பேரிலே யிருக்குறார்களே யல்லாமல் சத்துருவின் பேரிலே எதித்து சண்டை பண்ணி செயம் பண்ணுவோம் என்கிற நினவுயில்லை. அந்தக் கறணியுமில்லை யிவர்களும் அந்த மட்டிலே யிருக்குறார்கள் யித்தனாள் ராத்திரி யெட்டு மணிக்கு குண்டுசாலைகளுக்கெல்லாம் பட்டணத்திலே யிருக்கிற செனங்களை ஒருத்தரையும் வெளியே விடாமல் படிக்கி தாக்கீது பண்ணதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 19; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 11; சனிக்கிழமை*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி மகாநாட்டார் யெல்லாரும் சேஷாசல செட்டியள் வீட்டிலே கூடி சாதி சாதிக்கும் பெரிய மனுஷராய் யிருக்குறவர்களிலே நாலு பேரை சாதி சாதிக்கும் அழைச்சு அனுப்பிவிச்சதின் பேரிலே கந்தப்ப முதலி பெரியண்ண முதலி சவுரிராயப்பிள்ளை யிவர்கள் வந்தவர்களிலே கந்தப்ப முதலியிருந்துக் கொண்டு யெங்களை ஏன் அழைச்சு அனுப்பிவிச்சார்களென்று கேட்டதின் பேரிலே முசே லெறி கோவர்ணதோர் ரெண்டு லக்ஷம் ரூபாய் குடுக்கச் சொல்லி கேழ்க்குறார். அதுக்கு யோசனை பண்ணிக் கொண்டு யிதுக்கு ஒருவரி பிறிச்சு எழுத வேணுமே அது நிமித்தியம் அழைச்சோ மென்று சொன்னதின் பேரிலே கந்தப்ப முதலி உதாளப்பட்டு யெங்களைப் போலே லக்ஷம் அன்பதுனாயிரம் நீங்கள் குடுத்தீர்களா உங்களைப் போலே பணம் காசுகளை சாக்கு சாக்காய் கட்டி சலங்கின் பேரிலே போட்டு

நாகப்பட்டணம் தலங்கம் பாடி தஞ்சாவூர் யிவிடங்களிலே அனுப்பி விட்டோமா? யிருக்கிறவன் குடுக்கிறதுதானே யெங்களை அழைக்க வேண்டிய காரியம் என்ன யிருக்குது யென்று சொன்னதின் பேரிலே துரைகளுத்தாரத்தின் பேரிலே அழைச்சோமென்று சொன்னதின் பேரிலே ஆனால் துரையண்டைக்குப் போவோம் வாங்களென்று கந்தப்ப முதலி அழைச்சதாகவும் அதிலே சாணார் பின்னை ரெண்டு மூன்று நாட்டாண்மைக்காரரிருந்து கொண்டு முன்னேயும் நாங்கள் யேழைகள் வரி குடுத்தோம். பணக்காரர் ஆரும் குடுக்கயில்லை. யிப்பவும் யேழைகளைத் தானே கொல்லுகுறதா யிருக்குது. ஆனால் யிப்ப அவனவன் ஆஸ்தி பாஸ்தியளை சத்தியமாய் பெருமாள் கோவிலிலே போயி சுவாமி முன்பாக யெழுதி வச்சு அதன் பேரிலே பணம் யிருக்கிறவன் குடுக்குறான் என்று சொன்னதாகவும் அதன்பேரிலே ராமச்சந்திரராயன் கனகசபை முதலி பின்னையும் யிருக்கிறவர்கள் சத்தியமென்று சொல்லச்சே யோசனை யென்ன யிருக்குது. ஆனால் யிந்த ஞாயம் பகலைக்கு மேலாய் துரையுடனே சொல்லுவோமென்று யெல்லாரும் அவரவர் வீட்டுக்குப் போயிவிட்டார்கள். யினிமேல் யென்னமாய் தீருமோ அது அறிஞ்சு யெழுத வேண்டியது. மத்தியானம் கலைஞ்ச மகானாட்டார் சாயங்காலம் சம்பா கோவில் அண்டையேகத்துக்கு கூடி கோட்டைக்கி முசே லெறி கோவர்ணதோரண்டைக்கி கண்டு பேசப் போனவிடத்திலே சமையமில்லாமலிருக்கச்சே அதிலே பத்து மணிக்கி மேலே கோட்டையிலே ரெண்டு பீரங்கிப் போட்டு தம்பூறு அடிச்சு வெள்ளைக்கார ரெல்லாம் வரிசை வைச்சு அந்த கபிலியைத் தொட்டு சமயம் யில்லாமல் காலமே ஆகட்டுமென்று மகானாட்டார் பிறப்பட்டு வந்துவிட்டார்கள்.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 20; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 12; ஞாயிற்றுக்கிழமை***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : நேத்து பகலைக்கு மேலாக இங்கிலேசுக்காரருடய மனுஷர் யிறுநூறு குதிரைக்காரர் மட்டுக்கும் போயி கூடலூர், திருப்பாபுலியூர், மஞ்சகுப்பம் யிதுகளெல்லாம் தோரணம் வைச்சுக் கொண்டார் களென்றும், இங்கிலீசுக்காரர் மனுஷர் விஸ்தாரமாய் வாரார்களென்றும், வருகுறதுக்கு முன்னே தானே நம்முடவர்கள் அங்கே யிருந்த கும்மாந்தான் போட்டிருக்கிற சட்டையுடனேயும் பின்னையும் யிருந்த சொலுதாதுகள் சட்டைக்காரர் முப்பது பேரு மட்டுக்கும் படகின் பேரிலே யேறி யிவ்விடத்துக்கு வந்து விட்டார்கள், இங்கிலீசுக்காரர் மனுஷர் சுகமாய் தோரணம் வைச்சுக் கொண்டு அமுலுக்கும் ஒரு பிராமணனை வைச்சு யிருக்குறார் களென்றும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் பனிரெண்டு மணிக்கி மகாநாட்டாரெல்லாம் கூடி ஒருத்தருக்கொருத்தர் ஆஸ்தி பாஸ்தி யெழுதி கையெழுத்தும் போடச் சொல்லி விசேஷங்கள் நடந்த விடத்திலே, ராமச்சந்திர ராயனும் பாபு ராயனும் கையெழுத்துப் போட சம்மதியாமல் போனபடியினாலே, நல்லது யெல்லாரும் போயி முசே லெறியுடனே சொல்லிக் கொள்ளுவோ மென்று போனவிடத்திலே, முசே லெறி யிருந்து கொண்டு ரெண்டு லக்ஷம் ரூபாயி நீங்கள் குடுக்க வேணுமென்று சொன்னதின் பேரிலே, மகாணாட்டாரிருந்து கொண்டு நாங்கள் குடுத்துக் குடுத்து கெட்டுப் போனோம், யெங்களுக்கு குடுக்குறதுக்கு யில்லை யென்று சொன்னதின் பேரிலே, யிவர்களை யெல்லாம் காவலிலே போட்டுவையும் யென்று உத்தாரம் பண்ணதாகவும் அதன் பேரிலே ராமச்சந்திரராயன் பாபுராயன் கும்பினி வர்த்தகர் வகையிரா பதிமூணு பேரும் மகானாட்டார் நாட்டாமைக் காரரிலே பதிமூணு பேரும் ஆக யிருபத்தாறு பேரும் மேலண்டை கோட்டை வாசற்படி மேலே காவலில் வைச்சதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. முசே லாலி மூணு நாளாய் சரீரம் சுவஸ்தமில்லை யென்று காம்பிராவிலே தானே ஒருத்தரையும் வரவாண்டாமென்று கதவைச் சாத்திக் கொண்டு யிருக்குறார் யென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 21; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 13; திங்கட்கிழமை***

இத்தனாள் பகலைக்கு மேலான மூணு மணிக்கு முசே புலிக்கு (M. Pouly) ரெண்டாவதாக யிருக்கிற வெள்ளைக்காரன் ஒருத்தன் குதிரையின் பேரிலே யேரி(றி)க் கொண்டு நயினாரும் வந்து முசியே லெறி அழைக்குறாரென்று நம்மை அழைச்சார்கள். நமக்கு நாலு மாசமாய் சரீரம் சுவஸ்தம் யில்லை யென்று யிருக்கச்சே அது தெரியாதா என்று சொன்னதின் பேரிலே, உங்கள் மனுஷரை ஆரையாகிலும் அனுப்பி வையுமென்று சொன்னதின் பேரிலே, நாம் மேலுகிரிச் செட்டியை அனுப்பி வைப்போமென்று யோசனை பண்ணினோம், அதிலே அந்த வெள்ளைக்காரன் யிருந்துக் கொண்டு சொன்னது : "உங்களையும் பாப்பய்யப் பிள்ளையையும் பெரியண்ண முதலியையும் அழைச்சு வரச் சொன்னது. பெரியண்ண முதலியும் பாப்பய்ய பிள்ளை மகனும் அப்படி தானே போயிருக்குறார்கள். நீர் வரயில்லையே. உம்முட தம்பி மகன் யிருக்குறாரே, அவரையாவது அனுப்பி வை," யுமென்று சொன்னான். அதன் பேரிலே அப்பாவுவை அனுப்பி விச்சோம். அவர்கள் அப்பாவு வைக்கூட்டிக் கொண்டு வங்காளத்திலே யிப்ப வரி வாங்கிறதுக்கு யேர்ப்பட்டிருக்கிற, குமிசேலியேராய் யிருந்து வந்திருக்கிற முசியே கொடுத்தேன். (Mr. Courtin) என்கிறவன் அண்டைக்கு அழைச்சுக் கொண்டு போனார்கள். அவன் அப்பாவு வை, "மெத்தையின் பேரிலே

போயிரும் நான் வாறேன்," என்று சொன்னான். அப்பாவு மகானாட்டாருக்கிற மேலண்டைக் கோட்டை வாசற் படிமேலே அவர்களிருக்கிற விட்த்திலே வந்து யிருந்தார்.

அப்பறம் முசே குடுத்தேன் என்கிறவன் வந்து அப்பாவுவை அப்பாலே அழைச்சு நீங்கள் யிப்ப யெம்மாத்திரமாகிலும் கும்பினி சிலவுக்கு குடுக்க வேணுமென்று கேட்டதின் பேரிலே, "எங்களுக்கு யென்ய யிருக்குது? முன்னே பதினாயிரம் ரூபாயி தெண்டத்துக்குத்தானே உடமை தட்டு முட்டு யெல்லாம் டங்காசாலையிலே வித்துக் குடுத்தோம். மறுபடி முசே லசேல் பணம் வாங்கினபோது நம்மைப் பணம் கேட்டவிடத்திலே நம்முட நிறுவாகமெல்லாம் சொல்லிக் கொண்டோம். அவர் அதுகளெல்லாம் நன்றாய் விசனிச்சுப் பார்த்து மெய்தான் ஒண்ணுமில்லை யென்று தெரிஞ்சு விட்டு விட்டார். யிது சகலமான பேரும் அறிவார்கள்," என்று சொன்னதின் பேரிலே, "நல்லது மகாநாட்டாரை ரெண்டு லக்ஷம் ரூபாய் குடுக்கச் சொல்லிக் கேட்டிருக்குறோம். அந்த ரூபாயை அவர்களை கேட்டு வாங்கிப் போடு," மென்று சொன்னான். அப்பாவு சொன்னது : "அவர்களெல்லாம் யிதோ யிருக்குறார்கள். நீங்கள் தானே கேளுங்கள். நீங்கள் சொன்னதை அவர்களுடனே சொல்லுகுறேன். அவர்கள் சொல்லுகிற உத்தரத்தை உங்களுடனே சொல்லுகுறேன் யென்று சொன்னதின் பேரிலே மகாநாட்டாரை பணம் கேட்டவிடத்திலே அவர்கள் யெங்கள் கையிலே பணமேது முன்னே தானே குடுத்து விட்டோம். பணமில்லை யென்று சொன்னதின் பேரிலே ஆனால் நீங்கள் யெல்லாம் காவலிலே யிருங்களென்றும் சொல்லி ராமச்சந்திரராயனையும் பாபுராயனையும் மேலண்டை கோட்டை வாசற்படியிலே கசோத்திலே போடச்சொல்லி மத்தப்பேரை யெல்லாம் வாசற்படி மேலே காவலிலே வைக்கச் சொன்னான். அப்பாவுவையும் ராத்திரிக்கு மாத்திரம் நீரும் கூடயிரும் யில்லாவிட்டால் நன்றாய் யிராதென்று சொன்னான். அப்பாவு ராத்திரிக்கி கோட்டையிலே தானே மகாநாட்டாருடனே கூடயிருந்தார். முசே லெறி துபாசி கந்தப்ப முதலியையும் கூட காவல் வைச்சார்கள். அப்பாவுவையும் பெரியண்ண முதலியையும் பாப்பய்யபிள்ளை மகனையும் அழைப்பிச்சு ராமச்சந்திரராயன் அவன் தான் முசே லெறியுடனே சொல்லி அழைப்பிச்சு அவன் யிவர்கள் போனவுடனே பாத்தியா நான் அழைப்பிச்சேனென்று அங்கே யிருந்த மகாநாட்டாருடனே சொல்லி நகைச்சான். அவர்களுக்குத் தானே உடனே கசோத்திலே போடச் சொல்லி சுவாமி தயவு பண்ணினார். யிப்படி அவமரியாதை பண்ணினதுக்கு முசியே கில்லியார் சின்னதுரை யானபடியினாலே அவருக்கும் முசே புலோவுக்கும் முசே வெரியேர் பின்னையும் ரெண்டு பேர் குமிசெல்க்காரருக்கும் சொல்லி அனுப்பிவிச்சதுக்கு அவர்கள் சொல்லி யனுப்பின உத்திரவு

நாங்களெல்லாம் யிந்த சேவுகருக்குச் சமானம் யெங்களுடனே சொல்லியாகுறதென்ன யென்று சொன்னார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 22; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 14; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலமே பத்து மணிக்கி வங்காளத்திலே யிருந்த குமிசெலியோர் முசே கொடுதியேன் (M. Courtin) அப்பாவுவை அழைப்பிச்சு யென்ன மகாநாட்டாருடனே பேசினாயா பணத்துக்கு சம்மதியாச்சுதா யென்று கேட்டதின் பேரிலே அப்பாவு சொன்னது அவர்களை கேட்டவிடத்திலே குடுக்கிறதில்லை யென்று சொல்லுகுறார்கள் யென்று சொன்னதுக்கு நல்லது யின்னம் அவர்களை அழைச்சு கேளும் நீங்கள் வந்து கும்பினியோர் குடுத்தியோர் ஆனபடியினாலே கும்பினிக் காரியம் வந்தால் நீங்கள் அல்லவா விசாரிக்க வேண்டியது யென்று சொன்னதின் பேரிலே மகாநாட்டாரை அப்பாவு அழைச்சு கேட்டதுக்கு அவர்கள் சொன்னது பட்டணமானால் ரொம்ப நொந்து போச்சுது. நீங்கள் ரெண்டு லக்ஷம் ரூபாயி கேட்டால் யெங்கே யிருந்து குடுக்கப் போறோம் சொல்பமாய் தாளுமானதாய் சொன்னால் பார்ப்போமென்று நேத்து பிகுவாய் சொன்னவர்கள் யின்றைய தினம் சத்துலகுவாய் சொன்னார்கள். அந்த உத்தரவு முசே கொடுத்தினுடனே (Mr. Coutin) யிப்படி லகுவாய் தீத்து அவர்களும் குடுக்குறாப்போலே சொன்னால் மார்க்கப்படுத்துவோ மென்று சொன்னதுக்கு அவன் சொன்னது. நல்லது யிந்தப் பட்டணத்திலே யிருக்கிற பெரிய மனுஷர் அவரவர் ஆஸ்தியும் எவ்வளவு யென்று எழுதிக் கொடுயென்று கேட்டதின் பேரிலே அப்பாவு சொன்னது அவரவர் ஆஸ்தி எங்களுக்கு யெப்படி தெரியுமென்று? ஆனால் யெங்கள் தகப்பனாரை கேட்டு வருகுறோமென்று சொல்லிப் போட்டதின் பேரிலே நல்லது கேட்டு வாருமென்று சொல்லி யிதுகளுக்கெல்லாம் உங்கள் தகப்பனாரைக் கண்டு பேசவேணும். அவர் வந்தாலும் நல்லது அல்லவென்றால் கும்பினிர் காரியமான படியினாலே நான் வந்து கண்டு பேசிக் கொள்ளுகுறேன் யென்று சொன்னதுக்கு அவர் வருகுறதுக்கு நாலு மாசமாய் சரீரம் சொஸ்தமில்லாமல் வயிறு பேதியும் பல்லு நோவுமாயிருக்குறார். உளுக்காந்திருக்கிறதுக்கே வருத்தமாயிருக்குது. ஆனால் போயி கண்டு பேசி வாறேனென்று சொன்னதின் பேரிலே நல்லது போயென்று சொல்லி முசே லெறியுடனே முசே கொடுத்தேன். சொன்னதுக்கு அவனுக்கு முன்னே நம்முட பேரிலே யிருக்கிற அக்கிசத்தை மனதிலே வைத்துக் கொண்டு முசே லாலியுடைய உத்திரவு வேணுமென்று சொன்னதின் பேரிலே முசே கொடுத்தேன் போயி முசியே லாலியைக் கண்டு பேசி வந்து அப்பாவுவை வீட்டுக்குப் போயி சாப்பிட்டு உங்கள் தகப்பனாருடனே

கண்டு பேசி வாயென்று போகச் சொல்லி மகாநாட்டாரையும் சாப்பிட்டு வரச்சொல்லி சொன்னான். நான் அவ்விடம் விட்டு வீட்டுக்குப் பிறப்பட்டு வந்துவிட்டேன். அவனும் வீட்டுக்குப் போயி விட்டான். ராமச்சந்திராயனும் பாபுராயனும் வீட்டுக்குப் போயிவிட்டான். ராமச்சந்திர ராயனுக்கும் பாபுராயனுக்கும் சாப்பாட்டுக்கு விடச்சொல்லி அவன் வீட்டுக்குப் போயி கேட்டவிடத்திலே அது முசே லாலியுடைய உத்தாரம் வேணும். நாலு மணிக்கு கண்டு பேசி சொல்லுகுறேனென்று சொன்னான். யிந்த சமாச்சாரமெல்லாம் அப்பாவு வந்து நம்முடனே சொன்னான். யிதுக்கு நாம் சொல்லி யனுப்பி விச்ச உத்தரவு அப்பாவுடனே பட்டணத்திலே யிருக்குறவர்களுடைய ஆஸ்தி நமக்கு யெப்படி தெரியும்? நாம் ஒரு துகையை எழுதி விச்சால் அவர்கள் கேட்டால் உத்தரிக்க வேணும். பட்டணத்திலே முசே லசேல் மூணு லக்ஷம் ரூபாயி பிறிச்சு லக்ஷத்தி முப்பதினாயிரம் லக்ஷத்தி நாற்பதினாயிரம் ரூபாய் தண்டுகிறதுக்கு செனங்களை வெகு கஸ்திப்படுத்தி ஆறுமாசம் சென்றது. பாதிப்பணம் தண்ட அதுக்கு முன்னே பட்டணம் சுகமாயிருக்கச்சே முசே லெறி எண்பத்தினாயிரம் ரூபாயி வாங்கினபோது மூணுமாசம் சென்றது யிப்படி யெல்லாம் யிருக்க யிப்பவா பட்டணம் வெகு வீடாவாயாப் போச்சுது. பத்து வருஷமாய் நாளுக்கு நாள் பட்டணம் தாழ்ந்து கொண்டே வந்தது யிப்பவா பட்டணத்து செனங்கள் யெல்லாம் வெகுசாய் வெளியே போயிவிட்டார்கள். சத்துருக்கள் சமீபத்திலே கிட்ட வந்திருக்கிறான். ஆஸ்திக்காரனாய் யிருந்தவர்களெல்லாம் பிச்சைக்காரனாய்ப் போயிருக்கிறான். பிச்சைக்காரனாயிருந்தவர்களெல்லாம் சத்து ஆஸ்திக்காரனாய் யிருக்கிறான். ஒண்ணுமில்லை யென்று யிருந்தவனெல்லாம் வெளியே பூட்டகமாய் திரிஞ்சு கொண்டு உள்ளே பார்த்தால் ஒண்ணுமில்லாமலிருக்கிறவர்களாய் யிப்படி பட்டணம் வந்து வெகு பீடிலே யிருக்குது. நீங்கள் வந்து லக்ஷம் ரெண்டு லக்ஷம் என்றால் குடுக்கமாட்டார்கள். யிப்பவும் நீங்கள் ஏதாகிலும் நெளிவு பண்ணி சொல்பமாய் ஒரு துகை தீத்துக் கேட்டால் யெப்படியாகிலும் பார்ப்போம் என்று சொல்லச் சொல்லி அனுப்பி விச்சோம். அப்பாவு போயிருக்கிறார் சொன்ன சமாச்சாரத்துக்கு மறுசேதி யின்னம் ஒண்ணும் வரயில்லை. அது தெரிஞ்சு எழுத வேண்டியது.

முசே கில்லியாரை யிந்த வரி தண்டச் சொல்லி முசே லாலி அழைச்சு சொன்னதின் பேரிலே முசியே கில்லியார் சொன்னது போயிகள் சம்பளத்து நிமித்தியம் ஒன்பது பேர்வழி 1–க்கு அன்பது ரூபாயாக போயிகள் திட்டம் பண்ணினதும் மகாநாட்டாரை அய்யாயிரம் ரூபாயி குடுக்கத் திட்டம் பண்ணியும் வைக்க எனக்கு பிராணனுக்கு வந்துது. யினிமேல் அந்த யோசனை யேழைகளுடைய கையிலே வாங்க என்னாலே ஆகாது யென்று சொன்னதுக்கு ஆனால் சின்னதுரை உத்தியோகம்

உனக்குத்தேவையில்லை யென்று சொன்னதுக்கு மெத்த நல்லது நானும் முன்னே தானே தேவையில்லை யென்று சொல்லி யிருந்தேன். நீராய்த் தானே சொன்னீரே யல்லாமல் என்று சொல்லி ஆசாரம் பண்ணிப்போட்டு யிந்த சமாச்சாரம் முசே லெறியுடனே சொல்லிப் போட்டு முசே கில்லியார் வீட்டுக்கு வந்து விட்டாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

அன்னைய தினம் காலமே அஞ்சு மணிக்கு துவக்கி பீரங்கி போடுகுறதே யல்லாமல் முன்னாளையிலே போடுகிறதில்லை. முசே லாலி சுப்பியேர் வந்த நாள் முதல்க் கொண்டு போனவருஷம் மூணாம் வருஷமும் பண்டிகையே கொண்டாடவில்லை. பண்டிகை யன்னைக்கு வெளியே ஒழுகரை அவ்விடங்களிலே போயிருந்து வந்து விடுவார் முசே லாலி. ராசாவுடைய மனுஷரான படியினாலேயும் லூயித்தினாந்து செனராலான படியினாலேயும் (Lieu texant General) அவருக்கு மாத்திரம் பண்டிகைக்கு முன்னாள் சாயங்காலம் யிருபத்தோரு பீரங்கி போடுகுறது அந்தப்படிக்கு முசே லெறிக்கு சந்தோஷம் வரும்படியாய் முசே லாலி யின்னைய தினம் யிருபத்தோரு பீரங்கி போடுவிச்சு சாயங்காலம் ஆறுமணிக்கு ராமச்சந்திரராயனையும் பாபுராயனையும் சாப்பாட்டுக்கு விட்டு மறுபடி கசோத்திலே யிருந்து விட்டு ராத்திரி முழுதும் வீட்டிலேயே யிருந்து காலமே கோட்டையே வரச்சொன்னதாயும் சேதி கேழ்க்கப்பட்டுது. முன்பக்கத்திலே யெழுதின வயணம் நாளைய தினம் முசே லெறியுடைய பண்டிகையானபடி யினாலே யின்று சாயங்காலம் ஆறு மணிக்கு கோட்டையிலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். கோவர்ணதோரா யிருக்கிறவர் பண்டிகைக்கு...

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 23; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 15; புதன்கிழமை*

இத்தனாள் காலத்தாலே முசே லெறியுட பண்டிகையான படியினாலே 21 பீரங்கி போட்டார்கள். கப்பலிலேயும் இருபத்தோரு பீரங்கி போட்டார்கள். ஒன்பது மணிக்கு சின்னதுரை முசே கில்லியார், குமிசெல்க்காரர் நாலத்து ரெண்டு பேர் வந்து முசே லெறியையும் கண்டார்கள். பூசை கேழ்க்கிறதுக்குக் கோவிலிலேயும் முஸ்தீது பண்ணினார்கள். பீரங்கி போடுகுறதுக்கும் கொடியும் பிடிச்சுக் கொண்டு முஸ்தீதாய் யிருந்தார்கள்.

யிப்படி யிருக்கச்சே முசே லாலிக்கும் முசே லெறிக்கும் யென்ன விசேஷம் நடந்ததோ தெரியாது. அதன் பேரிலே கோவிலுக்குப் போயி பூசை கேழ்க்கிறதையே கட்டோடே தள்ளிப்போட்டு கோட்டையிலேயும் யிராமல் படிக்கி முசே னுவார் (?) வீட்டுக்கு[1] மத்தியானம் சாப்பாட்டுக்கு

[1] Noir, Lenoire இரண்டையும் குழப்பி எழுதியுள்ளார்.

பிறப்பட்டு முசே லெறி போய் விட்டார். வெள்ளைக்காரருக்குள்ளே நடக்கிறது கோவர்ணதோரா யிருக்கிற வனுக்குத்தான் பீரங்கி போட்டு, கோவிலுக்கு சகலமான பேரும் போயிருந்து பூசை கேட்டு வீட்டுக்கு வந்து விருந்துகள் பண்ணி பண்டிகை கொண்டாடி வருகிறது வழக்கமாயிருக்குதே. மத்தப்படி யெப்படி பிச்சைக்காரனாயிருந்தாலும் அவனுக்கு தக்கின ஸ்னேகிதருடனே நாலுபேர் கூட கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வீட்டுக்கு வந்து தனக்கு உள்ளது சாப்பிட்டு சந்தோஷமாயிருந்து மத்ததும் முஸ்தீப்பு பண்ணி . சந்தோஷமாய் விளையாடிக் கொண்டு யிருக்குறது அவர்களுக்குள்ளே நடக்கிறது அப்படி யிருக்க யின்னைய தினம் முசே லெறிக்கும் முசே லாலிக்கும் யென்ன விசேஷம் நடந்துதோ அதைத் தொட்டு கோட்டையிலே யிருக்குந்தனிலும் கதவை அடைச்சுக் கொண்டு ஒருத்தரையும் வரவாண்டாம் யென்று சொல்லிப் பிறப்பட்டுப் போய் விட்டார்.

இத்தனாள் முசே கொடுத்தேன் என்கிறவன் முசே கதேவீல்லி என்கிறவனையும் அழைச்சுக் கொண்டு மகாநாட்டார் யிருக்கிற விடத்துக்கு வந்து நேத்து சொன்னீர்களே ராமச்சந்திர ராயனையும் பாப்புராயனையும் கண்டு பேசிக் கொண்டு பணத்துக்கு சம்மதி சொல்லுகுறோமென்று சொன்னீர்களே? யென்ன யென்று கேட்டவிடத்திலே, மகாநாட்டார் சொன்னது : "நீங்கள் ரெண்டு லெக்ஷம் ரூபாயி கேட்டால் யெங்களாலே குடுக்கிறதுக்கு யிருக்கிறதா? யெங்களுக்கு தாளுமானது சொன்னால் அதுக்கு சம்மதி சொல்லுகுறோ" மென்று சொன்னதுக்கு, பணம் குடுத்தாலாச்சுது குடாவிட்டால் உங்களை யெல்லாம் தூக்கிப் போடச் சொல்லி முசே லாலியுடைய உத்தாரம் யென்று சொன்னதுக்கு, மகா நாட்டார் சொன்னது, "நீங்கள் வந்து துரைகள் யெப்படி செய்ய வேணுமோ அப்படிச் செய்யலாம். யிதோ யிருக்குறோம். தூக்கிப் போடுங்கோள், சம்மதிதா," ளென்று சொன்னதின் பேரிலே, "முன்னே அப்படி செய்யுறதில்லை. நீங்கள் யெத்தனை பேரோ அவர்களை யெல்லாம் சீட்டிலே யெழுதி சோடிதி போடுறது. எவன் பேர் முன்னே விழுகுறதோ அவனை முன்னே தூக்கிப் போடுகிறது. அதைப் பார்த்து மத்தப் பேர் யிருக்கிறவர்கள் பணம் குடுத்தால் ஆச்சுது. யில்லாவிட்டால் பிறகு யெல்லாரையும் தூக்கிப் போடுகுறதே," யென்று சொன்னதுக்கு, "அப்படி யென்னத்துக்கு? யிப்பத் தானே தூக்கிப் போடுங்கோ, ளென்று சொன்னார்கள். அப்படி யிருக்கச்சே முசே லெறி அவ்விடத்திலே வந்தவிடத்திலே, யிதுகளெல்லாம் முசே கொடுத்தேன் சொன்னதின் பேரிலே, "மெய்தான் முன்னேயும் அவர்களானாலும் நாலு தரம் மூணு தரம் குடுத்திருக்குறார்கள். யிப்பவா செனங்களெல்லாம் ரொம்ப மெலிஞ்சு போயிருக்குறார்கள். ரெண்டு லெக்ஷம் ரூபாய் யிப்ப யேகத்துக்குக் கேட்டால் யெங்கே யிருந்து குடுப்பார்கள். பணத்தையும் ஒரு மார்க்கமாய்

துகையை கலுவு பண்ணி ஒருதவணை தீத்துப் பண்ணிக் குடுக்கச் சொன்னால் அவர்களும் நல்ல தென்று சம்மதிப்பார்கள். யேகத்துக்கு யிப்படிக் கேட்டால் யென்ன மாய் குடுப்பார்களென்று?" சொன்னதின் பேரிலே, முசே கொடுத்தேன் சொன்னது, "முசே லாலியுடைய உத்தாரம் ரெண்டு லக்ஷம் ரூபாயும் சரியாய் வாங்கச் சொல்லி யென்று சொன்னதின்," பேரிலே, முசே லெறி சொன்னது, "யிப்படி செய்தால் பட்டணத்திலே யின்னம் கொஞ்சம் நஞ்சம் யிருக்கிற செனங்களும் பிறப்பட்டு போய் விடப்போறார்கள். ஒரு பணமாகிலும் வரத் தக்கினது யில்லை. வீண் காபிராப்பட்டுப் போறதே யல்லாமல் மத்தப்படி காரியம் ஆகத் தக்கினதில்லை," யென்று சொல்லி விட்டுப் போயிவிட்டார்.

அப்பிறம் முசே கொடுத்தேனும் (M. Courtain) முசே கதெவேலும் (M. Gadeville) ரெண்டு பேரும் ராமச்சந்திரராயனையும் பாப்புராயனையும் அப்பாலே அழைச்சு யேகதேசமாய்ப் பேசிக் கொண்டிருந்து அவர்கள் ரெண்டு பேரையும் கீழண்டைக் கோட்டை வாசற்படி கசோத்திலே வெள்ளைக்காரருடனே கூடப் போடச் சொன்னார்கள். அவர்கள் பேசிக் கொண்டது யென்னமோ அது அப்பாவுக்கு தெரியாது. மகாநாட்டாரிலே தில்லை மேஸ்திரியும் அழகிய மணவாளச் செட்டியும் ரெண்டு பேரும் முகனையாயிருந்து பேசினபடியினாலே அவர்களையும் கூட கசோத்திலே போடச் சொல்லி முசே கொடுத்தேனும் முசே கதேவிலும் வீட்டுக்குப் போயி விட்டார்கள். யிவர்கள் நாலு பேரையும் கசோத்திலே போட்டார்கள். கசோத்திலே யிருக்கிற வெள்ளைக்காரர் மேலே உமியுறதும் கடுக்கனை ஒடிக்குறதும் யில்லாத அனீதி யெல்லாம் பண்ணிப் பணம் குடுக்கச் சொல்லிக் கேட்டதிலே அவர்களுக்கு யெம்மாத்திரம் பணம் குடுத்து அவரவர் கடுக்கனையும் கழட்டி வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள்.

மகா நாட்டாரை யின்னைய தினம் சாயங்காலம் மட்டுக்கும் சாப்பாட்டுக்கு விடயில்லை. யிந்த சமாச்சாரமெல்லாம் பனிரெண்டடிச்சு ஒரு மணிக்கி அப்பாவு வந்து நம்முடனே சொன்னார். யினிமேல் ராத்திரிக்கு யென்ன நடக்குமோ, நாளையதினம் யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது.

லபலென் (La Beaume) என்கிற பிறகாது கப்பலிலே வந்த சீமை கடுதாசி, முசே கொதேயுடைய கடுதாசி ஒன்றும் கும்பினியாருடைய கடுதாசி, ஒண்ணும் ரெண்டு கடுதாசியையும் யின்னைய தினம் முசே புலோ தன்னுட கணக்கப்பிள்ளை வேலாயுதப் பிள்ளை கையிலே குடுத்து அனுப்பிவிச்சார். அவன் கொண்டு வந்து நம்முட கையிலே குடுத்தான்.

இத்தனாள் ராத்திரி ராமச்சந்திரராயனும் பாபுராயனும் இருபதினாயிரம் ரூபாயை பிறம்பாய் தீத்துக் கொண்டு போனார்கள். காவல் விடுதலை பண்ணிக் கொண்டு போனார்கள். மகாநாட்டார்

சொன்னது : கிறிஸ்துவரிலே சின்னய முதலி சூரப்ப முதலி வகையிரா ஏழெட்டு பேர் வழி மட்டுக்கும் அழைக்கச் சொன்னார்கள். அவர்களையும் அழைக்க மனுஷர்கள் போனார்கள். யெப்போ ராமச்சந்திரராயனும் பாபுராயனும் விடுதலையாயிப் போனார்களோ, அப்போ தானே கந்தப்ப முதலியையும் முசே லெறி அழைக்குறானென்று ஒரு பதிலாமை போட்டு (வர)க் கொண்டு அவனும் போயிவிட்டான். யின்னைய தினம் ராத்திரி நடந்த சேதி யிது.

*1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 24; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 16; வியாழக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே அப்பாவு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லாலி முசே லெறி முசே கில்லியார் முதலாகிய குமிசெல்க்காரர் யெல்லாம் வந்து பதினோரு மணி மட்டுக்கும் குமிசேல் கூடியிருந்து கலைஞ்சு போனார்களென்றும், குமிசேலிலே யென்ன நடந்துதோ அது தெரியாது, அந்தப் பிறபஞ்சத்திலே யிருந்தார்களே யல்லாமல் மகாநாட்டாருடைய பேச்சுவார்த்தை ஒண்ணும் நடக்காமல்படிக்கி யிருந்தது யென்று பனிரெண்டு அடிச்சு ஒரு மணிக்கு அப்பாவு வந்து நம்முடனே சொன்னார். தில்லை மேஸ்திரியும் அழகிய மணவாளச் செட்டியும் கசோத்திலே போட்டிருந்துதே அவர்களை விட்டு சாப்பாட்டுக்கு போகச் சொன்னார்கள். இத்தனாள் குமிசேலிலே நடந்தது யிப்படி பட்டணத்திலே சனங்களைப் பணத்து நிமித்தியம் காபரா பண்ணினால் முன்னேயே வெகு சனம் வெளியே பிறப்பட்டுப் போயி விட்டார்கள், யின்னம் யிருக்கிற செனங்களும் போயி விடுவார்கள். அப்பால் பணமும் வராது. பட்டணமும் யெடுபட்டுப் போயி விடும் யென்று விசேஷம் நடந்ததின் பேரிலே, முசே லாலியிருந்து கொண்டு, "யிதுகளுக்கெல்லாம் யெனக்குத் தெரியாதே, உங்களுக்கல்லவோ தெரியும். நான் யிந்த சோலிக்கு வரயில்லை யே... பணத்து சம்மதி முசே லெறி பாரமாய் விட்டுப் போட்டுப் போனதாய்," சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் வரைக்கும் சிதம்பரம் பரங்கிப்பேட்டை யிதுகளெல்லாம் யேகத்துக்குத் தோரணம் வச்சுக் கொண்டார்கள். செஞ்சியிலே யிருக்கிற பிரான்சுக்காரருடய கும்மாந்தாம் மாத்திரம் வெளியே பிறப்பட்டு சேராவாரி பண்ணிக் கொண்டு திரியுரான். மத்தப்படிக்கி சீமையள் யெல்லாம் இங்கிலீசுக்காரர் வசமாய்ப் போச்சுது. அப்பு முதலியும் ரெட்டிப்பாளையம் நொள்ளைக்கண்ணு சதாசிவ ரெட்டியும் வில்லியூர் சீமைக்கும் நசர் பதினெண்ணாயிரம் ரூபா குடுத்து குத்தகை இருபத்தினாலு பொடி பணம் (சின்னப்பணம்) விலை விராகன் இருபத்தையாயிரம் வராகனாய் தீத்துக் கொண்டார்கள் என்று சேதி கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம்

முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் யிருந்து கொண்டு முசே லசேல் வரி தண்டின கணக்கிலே சிறிது பேர்வழி எடுத்தெழுதிக் கொண்டு யிப்ப யிருக்கிறவர்கள் பேர்வழியும் எழுதிக் கொண்டு, ஆறு மணிக்கி மகாநாட்டாரை அழைப்பிச்சு பணம் கேட்டவிடத்திலே அன்பதுனாயிரம் (50000) ரூபாயானால் நாங்கள் யெப்படியாகிலும் சம்மதி சொல்லுகுறோமென்று மகாநாட்டார் சொன்னதின் பேரிலே, முசே லெறியும் முசே கொடுத்தேனும் சொன்னது : முசே லாலியானால் ரெண்டு லக்ஷம் ரூபாயி உங்கள் கையிலே சரியாய் வாங்கச் சொல்லிச் சொல்லுகுறார் நீங்கள் சரியாய் குடுக்க வேணுமென்று சொன்னதின் பேரிலே மகாநாட்டார் சொன்னது : பணமானால் குடுக்குறதுக்கில்லை, தூக்கிப் போடுங்கள். யிப்போதானே சம்மதி யென்றாலும் உங்களை யெல்லாம் தூக்கிப் போடுவோமென்று சொன்னதின் பேரிலே மெத்த நல்லது தூக்கிப் போடுங்கள் யென்று சொன்னதின் பேரிலே, முசே லெறி சொன்னது : நீங்கள் குழம்பு சாராயக் குத்தகைக்காரன் பாஞ்சு முகாந்திரமாய் முசே கதுவேலு (M. Gadevelle) என்கிறவனுடனே லக்ஷத்து முப்பதினாயிரம் (1,30,000) ரூபா யாய் பேசினீர்களே யெங்களுடனே யிப்படிப் பேசுகுறதென்னா என்று கேட்ட விடத்திலே, மகாநாட்டார் சொன்னது : "நாங்களானால் லக்ஷத்து முப்பதினாயிரம் ரூபாய் பேசினதில்லை பாஞ்சு யென்கிறவன் அவனாய் வந்து எங்களுடனே லக்ஷத்து முப்பதினாயிரம் ரூபாயாம் தீத்துப் போடுறேனென்று வந்து பேசினான். அதுக்கு நாங்கள் சொன்னது : முன்னே முசே லசேல் லக்ஷத்து முப்பதினாயிரம் ரூபாயி வாங்கினதுக்கு தூக்கு மரங்கள் போட்டும் கசோத்திலே போட்டும் யில்லாதெல்லாம் பண்ணவும் ஆறுமாசம் செண்ணுது, அந்த ரூபாயி தண்டுகுறதுக்கு. அப்படி யிருக்க யிந்த வேளையிலே ஒரு காசு அகப்படுமா போயென்று சொல்லி அனுப்பி விட்டோம். அம்மட்டே யல்லாமல் நாங்களாய்ப் பேசினதில்லை யென்று," சொன்னதின் பேரிலே முசே லெறியும் முசே கொடுத்தேனும் பேசிக் கொண்டது : "பாத்தியா, முசியே கதுவேல் என்கிறவன் வந்து குமிசேலிலே முசே லாலியுடனே சொன்னானே என்று ... லக்ஷத்து முப்பதினாயிரம் ரூபாயாய் மகாநாட்டார் பேசினார்களென்று யிப்படி தான் பொய்யும் புனை சுருட்டும் பேசுகிறதென்றும், முசே கதிவேலு முகாந்திரமாய் யிந்தச் சம்மதி குடுக்கத் தீருகிறது, யிவர்களுக்கும் சம்மதியில்லாத படியினாலே யிப்படி யிவர்கள் ரெண்டு பேரும் பேசிக் கொண்டு வந்ததாய் சொன்னார்கள். அதின் பேரிலே முசே கொடுத்தேன் சொன்னது, "உங்கள் கையிலே ரொம்ப பணமிருக்குது, குடுக்கலா மென்று சொன்னதுக்கு யிவர்கள் சொன்னது," யெங்கள் பெண்டுகள் கட்டின பிடவையுடனேயும் நாங்கள் யெட்டு முழப் பிடவையுடனேயும் வெளியே பிறப்பட்டுப் போக உத்தாரம் குடுங்கள், யெங்கள் வீடு ஆஸ்தியெல்லாம் யெடுத்துக் கொள்ளுங்கள்," யென்று சொன்னதுக்கு, உங்கள் பணம் காசு தட்டு முட்டு சகலமும் தலங்கம்பாடி

நாகப்பட்டணம் யிவ்விடங்களிலே வெளியே அனுப்பிவிட்டீர்கள். யினிமேல் நீங்கள் குடுக்க வேணுமென்றால் வெளியிலே யிருந்து அழைப்பி விக்கவேணுமென்று சொன்னதின் பேரிலே, சூனாம்பேட்டு ராமிச் செட்டி மகன் சுப்பி செட்டி யென்கிறவன் முசே கொடுத்தேன் காதிலே போயிச் சொன்னது : உங்களைத் தனியே அழகு மணவாள செட்டியும் தில்லை மேஸ்திரியும் கனகசபை முதலியும் நாலு பேரும் கண்டு பேச வேணுமென்று சொல்லுகுறார்களென்று சொன்னதுக்கு, நல்லது நாளை காலமே வாயென்று சொல்லி யிவர்களை யெல்லாம் வீட்டுக்குப் போயி சாப்பிட்டு ராத்திரிக்கு யிருந்து நாளை காலமே வரச் சொல்லிப் போட்டு பிறப்பட்டுப் போயிவிட்டான். மகாநாட்டார் நேத்திய மட்டுக்கும் பேசின பிகுவிலே யிருந்தபடியினாலே, யின்னைய தினம் குமிசெல் கூடி யிவர்களை காபரா பண்ணப் போகாது லகுவிலே விடவேணுமென்று யோசனை பண்ணினார்கள். அந்தக் குமிசெலிலே யிவர்களிராமல் படிக்கி பிகுவு விட்டு, யிவர்கள் ஒரு துகை யேற்ப்படுத்தினபடியினாலேயும் யிவர்களிலே நாலுபேர் தனிச்சுக் கண்டு பேசவேணுமென்று சொன்னபடியினாலேயும் அவர்களுக்கும் யிவர்கள் கையிலே பணம் வாங்கிறதுக்கு லகுவு பிறந்து யின்னம் யிவர்கள் கையிலேயே வாங்கலாமென்று திடப்பட்டது.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 25; விக்கிரம வருசம் சித்திரை மாசம் தேதி 17; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் அப்பாவு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறியும் முசியே கொடுத்தேனும் ரெண்டு பேரும் யிருந்து கொண்டு அப்பாவுவை அழைப்பிச்சு, "முத்தா பிள்ளை, கணக்கு ரங்கப்ப முதலி மகன், நீங்கள் மூணு பேரும் இருபதினாயிரம் ரூபாயி குடுக்க வேணும்," யென்று கேட்டதின் பேரிலே, அப்பாவு சொன்னது : யெங்களுக்கு குடுக்கிறதுக்கு யில்லை. பணமிருந்தால் குடுப்போம். ஆறு வருஷமாய் தொழில் துறை ஒண்ணும் யில்லை. உத்தியோகமும் யில்லை. ஆனபடியினாலே வீட்டிலே உளுக்காந்திருக்கிறோம். மூணாம் வருஷம் பதினாயிரம் ரூபாய் குடுத்த போது, யிருக்கிற தம்டு முட்டு சகலமும் டங்காசாலையிலே உருக்கி வித்துக் குடுத்து விட்டோம். கொஞ்சம் நஞ்சம் யிருந்தது சாப்பாட்டு சிலவுக்கு யில்லாமல் படிக்கி, வித்துப் போட்டு யினிமேல் யெங்களுக்குக் குடுக்கிறதுக்கு யில்லை," (வரவேணும்) யென்று சொன்னதின் பேரிலே, கசோத்திலே யிருக்கலாம் யென்று சொன்னதுக்கு, "தாங்கள் துரைகள் யிப்படி சொன்னால் நாங்கள் செய்ய வேண்டியது யென்ன வென்று சொன்(னார்)". அப்பாவு பதில் சொன்னதுக்கு கசோத்திலே வை யென்று சொன்னார்கள். அப்பிறம் கணக்கு ரங்கப்ப முதலி மகனை அழைச்சு பணம் கேட்டதுக்கு, "யென் கையிலே ஆனால்

ஒரு காசு யில்லை யென் தகப்பனார் சம்பாதிச்சது கொஞ்சம் பணம் அவர் காலம் பண்ணிப் போகச்சே நான் சிறுபிள்ளையான படியினாலே அதே பணத்தை பெரியண்ண முதலி வசத்திலே வச்சு யென்னையும் அவர் வசத்திலே ஒப்பிவிச்சார். அவர் மாசம் நாலஞ்சு யெனக்கு சாப்பாட்டுக்கு குடுத்து வந்தார். யிப்ப அவரைப் பணம் கேட்டால் கும்பினியார் யெடுத்துக் கொண்டு போனார்கள், யென் கையிலே யிப்ப ஒண்ணுமில்லை, யென்று சொல்லுகுறார். அதைக் கேட்டு வாங்கிக் கொள்ளுங்கள், "யென்று சொன்னதுக்கு முசே லெறி சொன்னது : "ஞாயம் தான். பணம் யிருக்கிற விடத்திலே வாங்க வேண்டியது தானென்று," சொன்னதுக்கு, முசே கொடுத்தேன் சொன்னது: "முசே அப்படிச் சொன்னால் பணம் வராது. யிவன் கையிலே வாங்க வேணுமென்று," சொன்னதின் பேரிலே, முசே லெறி ஒண்ணும் சொல்லாமலிருந்தான். யிவர்கள் மூணு பேரையும் கசோத்திலே போடச் சொன்னார்கள்.

கசோத்திலே வைச்சார்கள். அப்பிறம் சூரப்ப முதலி, வறுலாம் முதலி, ரெண்டு பேரையும் இருபதினாயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லி கேட்டதுக்கு அவர்களும், "யெங்கள் கையிலே ஒரு காசு யில்லை. ரெண்டு தரம் மூணு தரம் முன்னே யிருந்ததெல்லாம் குடுத்திருக்குறேன், யினிமேல் குடுக்குறதுக்கு யில்லை," யென்று சொன்னதுக்கு, யிவர்களையும் கசோத்திலே வைக்கச் சொன்னார்கள். பாப்பய்யப்பிள்ளை மகனை ஆராயிரம் ரூபாயும் குண்டூர் நரசிம்ம செட்டியைப் பதினாயிரம் ரூபாயையும் கேட்டதுக்கு, அவர்களும் ஒண்ணும் யில்லை குடுக்குறதுக்கு என்று சொன்னார்கள். அதுக்கு அவர்களையும் கசோத்திலே வைக்கச் சொன்னார்கள். யிந்த யேழு பேரையும் கசோத்திலே வைச்சார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 26; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 18; சனிக்கிழமை*

இத்தனாள் நமக்கு சரீரம் சுவஸ்த மில்லாதபடியினாலே மயிலாப்பூர். பிசுப்பு பாதிரி நொறொனா அண்டைக்குச் சொல்லியனுப்பி, முசே லாலி பேருக்குப் பித்திசாம் ஒன்று எழுதிக் குடுத்தனுப்பி விச்சோம். அந்த பித்திசாமை பனிரெண்டு மணிக்கு முசே லாலி கையிலே குடுத்து பிசப்பு பாதிரி கண்டு பேசின விடத்திலே, முசே லாலி சொன்னது : "தட்டு முட்டு நகைகள் ரொம்ப யிருக்குதென்று சொல்லுகுறார்களே வித்து குடுக்கலா," மென்று சொன்னதுக்கு, பாதிரி சொன்னது : "ஒண்ணுமில்லை யென்று யெழுதிக் குடுத்திருக்கச்சே யெப்படி கேழ்க்கிறது? இருந்தாலல்லவா வாங்கலாம் குடுக்கிறதுக்கு? நிறுவாகமில்லை," யென்று சொன்னதுக்கு, நல்லது விசாரிச்சுக் கொண்டு விட்டு விடுவோமென்று முசே லாலி சொன்னார்.

அப்பறம் பகலைக்கு மேலாய் முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் யென்னமோ யோசனைப் பண்ணிக் கொண்டு

அப்பாவுவை அழைச்சு மத்த ஆறு பேரையும் பணத்துக்கு யென்ன சொல்லுகுறீர்கள் யென்று கேட்டதுக்கு அப்பாவு சொன்னது, "சகலமும் தங்களுக்குத் தெரியும். உங்களுடனே சொல்லிக் கொண்டோம். அப்படி யிருக்க பணம் கேட்டால் நாம் செய்ய வேண்டியதென்ன? யிருந்தால் கும்பினீர் காரியத்துக்கு யில்லாமல் யென்ன செய்ய? யிருந்தால் குடுப்போம்," யென்று சொன்னதுக்கு, "யின்னம் கசோத்து வருமென்று சொன்னதுக்கு, அதன் பேரிலே உங்கள் மனது கசோத்திலேயாகிலும் போடுங்கள், யின்னம் யெங்கேயாகிலும் வைச்சுக் கொள்ளுங்கள். உங்கள் மனதுயென்று சொன்னதுக்கு நல்லது வீட்டுக்குப் போங்கள் ராத்திரிக்கு யிருந்து காலமே வாங்களென்று சொல்லிப் போகச் சொன்னார்கள். யெல்லாருமாய் வீட்டுக்கு வந்து விட்டார்கள். யிதுகளெல்லாம் அப்பாவு வந்து நம்முடனே சொன்னார் மத்தப்படி மகாநாட்டாரை அழைச்சு பணங்காசு கேட்டதில்லை. அவர்களையும் சாயங்காலம் யேழு மணிக்கு சாப்பாட்டுக்கு விட்டார்கள்.

வழுதாவூரிலே யிருந்து யிங்கிலீசுக்காரருக்கும் நம்முடவர்களுக்கும் பிரம்பை மேட்டிலே சண்டையாயி அவர்களும் அந்தண்டை வாங்கிப் போயி விட்டார்கள். யிவர்களும் யிப்பாலே வாங்கி வந்து விட்டார்கள்.

### *1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 27; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 19; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே பத்து மணிக்கு அப்பாவு கோட்டைக்கிப் போயிருந்த விடத்திலே முசே லெறியும் முசே கொடுத்தேனும் யிருந்துக் கொண்டு அப்பாவுவை அழைச்சு பணத்துக்கென்ன சொல்லுகுராய் யென்று கேட்டவிடத்திலே, "நேத்துத் தானே பித்திசாமும் எழுதிக் குடுத்தோம். அதைப் பார்த்து கொண்டால் சகலமும் தாங்களுக்குத் தெரியவரும். அப்படி யெங்கள் கையிலே யிருந்தால் கும்பினீ காரியத்துக்கு யில்லையென்று சொல்லுகுறதில்லை," யென்று சொன்னதுக்கு, முசே லெறியும் முசே கொடுத்தேனும் சொன்னது: யெவ்வளவாகிலும் குடுயென்று சொன்னதின் பேரிலே, "யெப்படி குடுக்கச் சொல்லுகுறீர்கள்? அஞ்சாறு வருஷமாய் உத்தியோகம் சத்தியோகமில்லை அதனால் வீட்டிலே சும்மா உளுக்காந்து யிருக்குறோம். யெந்த விதத்திலே யெங்களுக்குப் பணம் யிருக்குது? யிருந்தால் குடுப்போம்," யென்று சொன்னதுக்கு, உங்கள் தகப்பனார் ஏன் வரயில்லை யென்று கேட்டதுக்கு, அவருக்கு சரீரம் சொஸ்தமில்லை யென்று சொல்லி யிருந்தேனே யென்று சொன்னதுக்கு, ஆனால் உனக்கு ரொம்ப கஸ்திவரும், யின்னம் கசோத்திலே யிருக்க வேணும் யென்று சொன்னதுக்கு, அப்பாவையும் முத்தப் பிள்ளை கணக்குரங்கப்ப முதலி மகனையும் மூணு பேரையும் ஒரு கசோத்திலே வைக்கச் சொன்னார்களாம். மத்த சூரப்ப முதலி

வருணா முதலி, பாப்பய்ய பிள்ளை மகன் குண்டூர், நரசிம்ம செட்டி யிவர்கள் நாலு பேரையும் அழைச்சுப் பணம் கேட்ட விடத்திலே அவர்களும் அந்த உத்திரவு தான் சொன்னார்கள். அவர்கள் நாலு பேரையும் ஒரு கசோத்திலே வைக்கச் சொன்னார்கள்.

இங்கிலீசுக்காரருது பத்துப் பனிரெண்டு உருப்படி கப்பலும் சுலுப்புகளுமாய் கூடலூர் துறைக்கு நேராய் யிருக்கு என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. முராரி ராயனுடைய பவுன்சு யிருபதினாயிரம் முப்பதினாயிரம் குதிரையும், அதுக்கு சறுதாராய் பலவந்தராவும் கடப்பை யண்டை வந்துதென்றும், மத்தளவாருட தளவாய் முசிலி நாயக்கன் அவர்களண்டைக்கி போனார்களென்றும் பொம்மராசப்பாளையத்திலிருந்து வந்த மனுஷர்கள் நமக்கு சேதி சொன்னார்கள்.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 28; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 20; திங்கள்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி முசே லாலி தவிர முசே லெறி முசே கில்லியார் முதலாகிய குமிசெல்க்கார ரெல்லாம் குமிசெல்க் கூடி, பனிரெண்டு மணிக்கி குமிசெல் கலைஞ்சார்கள். குமிசெல் கூடின சேதி யென்ன வென்றால் மைசூர் அயிதர் நாயக்கனும் சிறிது பவுன்சுடனே வந்து ஆற்காடு யிந்த சீமைகளெல்லாம் கட்டிக் குடுக்கவும் யிங்கிலீசுக்காரரை அடிச்சு சென்னப்பட்டணமும் பிடிச்சு யிவர்கள் அறிய காரியங்களெல்லாம் பத்தே பண்ணி குடுக்கவும், யிவர்களுக்கு அவர்களுக்கு இறைவாசநல்லூர் குடுக்குறது, சீமையும் தியாகதுர்கத்தையும் அதனுடைய சாகீரும் யினாமாய் குடுக்கவும், மாசம் லக்ஷம் ரூபாயும் குடுக்கிறது, பதினெட்டு ராத்தல் குண்டு ஓடுகிற பத்து பீரங்கியும் செல்லுமென்ற மருந்து குண்டுகள் குடுக்கவும் மாசம் லெக்ஷ ரூபா குடுக்கிறது, ரெண்டு மாசம் பொறுத்து பணம் வாங்கிக் கொள்ளவும் யிதுக்கு முசே லாலி கடுதாசி யெழுதி கையெழுத்துப் போட்டு குடுக்கவும் அதுக்கு குமிசெல்க்காரர் சாமீனாயி—எழுதி கையெழுத்துப் போட்டு குடுக்கவும்—யிந்தப்படிக்கி மைசூராயெழுதி அனுப்பிவிச்சதுக்கு யிவர்களும் சம்மதிச்சு கடுதாசி காகிதமெழுதிக் குடுத்து பதில் கடுதாசி எழுதி யனுப்பிச்சதையும் பின்னையும் மகாநாட்டாருடனே சேர்ந்த சம்மதி பணத்து நிமித்தம் முசே லெறியும் முசே கொடுத்தேனும் அல்லவா வாங்கிறதுக்கு ஏற்பட்டு யிருந்தார்கள் யென்றும், யின்னைய தினம் குமிசேலிலே முசியே கில்லியாரையும் முசே புலோவையும் முசே கொடுத்தேனையும் விசாரிக்கச் சொன்னதாய் அவர்கள் முசே கில்லியார் வீட்டிலே மூணு பேரும் கூடி முன்னே முசே லசேல் வரி தண்டின கணக்கும் அவன் எழுதிக் குடுத்த கணக்கும் கொண்டு வரச் சொல்லி

அதுகளெல்லாம் பாத்துக் கொண்டு யிருக்குறார்கள் என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இனிமேல் யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது. யிப்பறம் சாவடி மணியம் சீயால் பிள்ளையும் சவுரி முத்தையும் நயினாரையும் அழைப்பிச்சு பட்டணத்திலே ஆரார் பணக்காரர் யிருக்கிறவர்கள், அவர்கள் பேர்வழி யெல்லாம் யெழுதி வையுங்களென்று கேட்டதுக்கு, சியாலுப் பிள்ளையும் சவுரி முத்தும் யிருந்து கொண்டு யெங்களுக்கு அவரவர் ஆஸ்தி என்ன தெரியும் யென்று சொன்னதுக்கு, முசே கொடுத்தேன் ஊரிலே யிருக்கிற செனங்களிலே பொறுக்குப் பேராய் பிரான்சுலே யெடுத் தெழுதி யிருந்த கடுதாசியை முசே புலோ கையிலே குடுத்து முசே புலோ சாவடி மணியக்காரர் கையிலே எழுதி விக்குறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யினிமேல் நடக்கிறது யென்னமோ அது அறிய வேண்டியது. மயிலாப்பூர் பிசுப்பு பாதிரியார் அக்காள் மகனுக்கு கல்லியாணமான படியினாலே முசே லாலி முதலாய் எல்லாரும் விசுப்பு பாதிரி வீட்டுக்கு வந்திருக்குறார் களென்கிறதாய் கேழ்க்கப்பட்டுது. நேத்திய தினம் குமுசேலிலே முசே லாலி மூணு சாப்பிதா எழுதி குடுத்ததாகவும் அதிலே யெழுதி யிருந்த வயணம் ஒரு சாப்பிதாவிலே வருணாசிரம தர்மமாம் படியே பிராமணாள், வெள்ளாழர், அகம் படையர்கள், இடையர் யிப்படி யாக ஒண்ணும், அதுவும் யிதுவுமாய்க் கலந்து கட்டி ஒரு சாபிதாவும், அங்கே ஒரு பேரும் யிங்கே ஒரு பேருமாய் ஒரு சாப்பித்தாவும் யிப்படி மூணு சாபிதா எழுதியிருக்கிறதிலே, ஊசப் பயறு விக்குற கோமுட்டிக்கு கூட ஆயிரம் ரூபாயி குறைஞ்சு எழுதியிருக்கிற பேர்யில்லை. அழுக வெத்திலை சொத்தைப் பாக்கு விக்கிற செட்டிக்கு கூட ஆயிரம் ரூபாயிக்கு குறைஞ்சு எழுதி யிருக்கயில்லை. அதிலே ஒரு சாபிதாவிலே நமக்கு நாற்பதினாயிரம் ரூபாயும் ஒரு சாப்பித்தாவிலே முப்பதினாயிரம் ரூபாயும் ஒரு சாபிதாவிலே இருபதினாயிரம் ரூபாயும் எழுதி யிருக்குதென்று சொல்லுகுறார்கள். யிந்த சாப்பிதாவை குமிசேலிலே முசே லாலி குடுத்து யிந்தப்படிக்கி பட்டணத்திலே பணம் யிருக்கச்சே சத்துருவும் வந்து கிட்ட யிருக்கச்சே தண்டு சிலவுக்கு யில்லாமலிருகிற சம்பளக்காரருக்கு சம்பளம் குடுத்தால் அல்லவா சத்துருவை செயம் பண்ணலாம். ஆனபடியினாலே யிந்தப்படிக்கி பணத்தை வாங்கச் சொல்லி சொன்னதின் பேரிலே குமிசெல்க்காரர் யெல்லாம் வாயைத்திறந்து ஒண்ணும் பேசாமல் யிருந்து எழுந்து போய்விட்டார்கள்.

யிந்தப்பணங்கள் வாங்கிறதுக்கு முசே கில்லியாரையும் முசே புலோவையும் முசே திப்பிளாமையும் முசியே கொடுத்தேனையும் இந்த நாலு பேரையும் நேமிச்சதாகவும், அதிலே, முசே திப்பிளாம் (Duplant)

நமக்கேன் யிந்த சோலி யென்று, யெனக்கு சரீரம் சொஸ்த மில்லையென்று வீட்டிலே தானே யிருந்து விட்டான். மத்த மூணு பேரும் முசே கில்லியார் வீட்டிலே யிருந்து கொண்டு யிந்த சாப்பித்தாப்படிக்கி சாவடி மணியக்காரன் கையிலே எழுதிவிக்குறார்கள். முசே கில்லியாரும் முசே புலோவும் யிதுயென்ன அனியாயம், யேழையள் பிச்சைக்காரர் யிவர்களையெல்லாம் வதைக்கிறதுக்குக் காலம் வந்து தென்று ரொம்ப தாபந்தப்பட்டுக் கொண்டார்கள். சாபிதா எழுதிக் கொடுத்தவர்கள் ஒரு சாப்பிதா கந்தப்ப முதலியும் ஒரு சாப்பித்தா, சூனாம்பேட்டு ராமி செட்டி மகன் சுப்பனும் ஒரு சாபிதா விநாயகன் மகன் ராசகோபாலும் யிப்படியாக மூணு சாப்பித்தாவும் மூணுபேர் எழுதி குடுத்ததாய்க் கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 29; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 21; செவ்வாய்***

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு முசே கில்லியார், முசே புலோ, முசே கொடுத்தேன், முசே திப்பிளாம் நாலு பேருமாய் முசே கில்லியார் வீட்டிலே யிருந்து கொண்டு நம்மை அழைச்சு வரச்சொல்லி, அபித்தான் (புதுவை) ஒப்பிசியால் ஒருத்தனை அனுப்பிவிச்சார்கள். அவன் வந்து சொன்னது, உம்மை அழைச்சு வரச்சொன்னார்கள். வந்தால் என்னுடனே கூட வாரும், வராவிட்டால் சொலுதாதுகள் வருவார்கள் யென்று சொன்னதின் பேரிலே, மெய்தான் யெனக்கு சரீரம் சொஸ்த மில்லாதபடியினாலே வரயில்லை யென்று சொல்லப் போறேன் என்கிறதின் பேரிலே, அவர்கள் அந்த விசேஷம் சொன்னார்கள். நீர் வந்து ஒப்பிசியால் வந்து அழைக்கிறபடியினாலே வாறோமென்று சொல்லி, முசே கில்லியார் வீட்டுக்குப் போனோம். போனவிடத்திலே நாலுபேரும் யிருந்து கொண்டு சொன்னது, "முசே லாலி லுஸ்துரு ஒன்று சாபிதா நூத்தறுபது பேர்வழி எழுதிக் குடுத்திருக்குறார். அது சாவடி கணக்கப்பிள்ளைகள் கையிலே எழுதியிருக்கிறது. அதை நீர் பார்த்து சுவாமி கிட்ட பொதுவாய் அவரவருடைய நேர் நிறுவாகம் பாத்து ஒருத்தருக்கொருத்தர் அக்கசுகளை மனசிலே வைச்சுக் கொண்டு, யெகத்தாட்சியாய் எழுதாமல் படிக்கி ரெண்டு லக்ஷம் ரூபாயிக்கு சரியாய்ப் பார்த்து துகை யெழுதச் சொல்லி சின்ன முதலியாரையும் கூட யிருந்து எழுதுகுறபடிக்கு அழைச்சனுப்பி வைச்சதுக்கு, அவர் சரீரம் சுவஸ்தமில்லாமல் கால்பிடிப்புமாய் வீங்கியிருக்கிறது. நடக்கக் கூடா தென்று சொல்லி யனுப்பி விச்சிதின் பேரிலே ராமச்சந்திரராயனை அழைச்சு வரச்சொல்லிச் சொன்னார்கள்." யிந்தப்படி நம்மையும் சாவடி ஞாயக்காற சாமி பிள்ளையும், நயினார், சாவடி மணியம் அழகப்ப முதலி, சியாலு பிள்ளை,

சவுரிமுத்துப்பிள்ளை, மூணுபேருமாய் ராமச்சந்திரராயன் யிருசப்ப செட்டி முத்துசெட்டி யெட்டு பேரையும் யிருந்து கொண்டு ரெண்டு லக்ஷம் ரூபாயிக்கு துகை சரியாய் வருமா? அவரவருடைய நேரம் நிறுவாகம் பார்த்து எழுதச்சே யென்னதுகை ... வருமோ யென்று நாம் சொன்னதுக்கு, "நல்லது, யெழுதுங்கள் யெழுதிப்போட்டு பிறகு போங்க," ளென்று சொல்லிப் போட்டு பிறப்பட்டுப் போயிவிட்டார்கள்.

அப்பிறம் யேழு மணிக்கி அவர்கள் வந்தவிடத்திலே நாமும் ராமச்சந்திரராயனும் சொன்னது : "நாலு பேர்வழி கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராயப் பிள்ளை, பாப்பய்யப் பிள்ளை யிவர்கள் ஆஸ்தி மாத்திரம் தெரியாது. மத்தப் பேர்வழியள் ஒரு வயணமாய் லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் யெழுதுகுறோம்," யென்று சொன்னதுக்கு, அவர்கள் ரொம்ப கோபிச்சுக் கொண்டு ரெண்டு லக்ஷம் ரூபாயிக்கும் சரியாய் எழுதினாலேயாச்சுது, யில்லாவிட்டால் உங்களை கசோத்திலே போடுவேன், அப்படி செய்வேன். யிப்படி செய்வேன் என்று சொல்லிப்போட்டு முசே கொடுத்தேன் என்கிறவன் பிறப்பட்டுப் போயி விட்டான்.

அப்பால் ஏழு மணிக்கி துவக்கி எழுதத் துடங்கி யெழுதச்சே நாமும் ராமச்சந்திர ராயனும் ரெண்டு பேரும் முசே கில்லியாருடனேயும் முசே புலோவினுடனேயும் சொன்னது : "ரெண்டு லெக்ஷம் ரூபாய்க்குச் சரியாய் எழுதச் சொல்லச்சே, நீங்களேன் எழுதச் சொல்லுகுறீர்களே யெப்படி எழுதுகுறது? நிறுவாகம் யில்லை," யென்று சொன்னதுக்கு "உங்களுக் கென்னா? முசே கொடுத்தேன் சொல்லச்சே நீங்களேன் அதுக்கு தகராா் பண்ணுகுறீர்கள்? சரியாய்த் தானே எழுதிப் போடுங்கோள்," என்று சொன்னார்கள். அப்பிறம் யிப்படி பலவந்தப்படுத்தி எழுதச் சொன்னால் நாம் செய்ய வேண்டிய தென்ன யென்று ராத்திரி முப்பது நாழிகை (முழுவதும் நீர் அருந்தக் கூட விடாமல்) யும் தர்க்கத்துக்கூட யில்லாமல் யிருந்து கந்தப்ப முதலி பெரியண்ண முதலி சவுரிராய பிள்ளை, பாப்பய்யப்பிள்ளை நாலுபேரும் தள்ளி, மத்தப் பேர்வழி யெல்லாம் யெழுதி லக்ஷத்து நாற்பதினாயிரம் லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் எழுதி, காலமே குடுத்ததின் பேரிலே அதைப் பார்த்துக் கொண்டு முசே கொடுத்தேன் என்கிறவன் ரொம்ப கோபிச்சுக் கொண்டு, சரியாய் ரெண்டு லக்ஷமும் எழுதச் சொன்னதுக்கு, நாம் சொன்னது : "கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை மூணுபேரும் முன்னே விஸ்தாரமாய் பணம் குடுத்திருக்குறார்கள். அவர்கள் கடன்பட்டு யிருக்குறோம், ஒண்ணுமில்லை யென்று சொல்லிக் கொண்டு யிருக்குறார்கள். பாப்பய்யப் பிள்ளைக்கு ஒண்ணுமில்லை. யிப்படி யிருக்க அவர்களுக்கு ஆஸ்தி யிருக்குதென்கிறது யெங்களுக்கு யெப்படி தெரியும்?" என்று சொன்னதுக்கு, "அவர்கள் முன்னே குடுத்தார்களே.

அப்படி யின்னம் நாலத்தனை ஆஸ்தி யிருந்தது யென்று எனக்குச் சொல்லி யிருக்குறார்கள், யெழுதலா," மென்று சொல்லி எழுதினால் ஆச்சு யில்லாவிட்டால் உங்களை கசோத்திலே போடுவேன், கப்பலிலே யேத்தி மசுக்கரையிலே மோரிசுக்கு யேத்தி விடுவேன், ரொம்ப கஸ்தி வரு" மென்று ரொம்பவும் கோபிச்சுக் கொண்டு போனார். முசே கொடுத்தேன் என்கிறவன் (கையில்) அதன் பேரிலே ரெண்டு லக்ஷம் ரூபாயிக்குச் சரியாய் எழுதிக் குடுத்தோம். அதை வாங்கிக் கொண்டு மத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கி சாப்பாட்டுக்குப் போகச்சொல்லி உத்தாரம் குடுத்தான். செவ்வாய்க் கிழமை முப்பது நாழிகை தூகத்துக்குத் தண்ணீர் கூட சாப்பிடாமல் காவலிலேயே போட்டு வைச்சு பிறகு விட்டான். அப்பிறம் அவரவர் வீட்டுக்குப் பிறப்பட்டு வந்து விட்டோம்.

***1760 வருசம் அபிரேல் மாசம் தேதி 30; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 22; புதன்கிழமை***

இத்தனாள் சாயங்காலம் நூத்தறுபது பேர் வழிக்கும் கணக்கு யெழுதிக் குடுத்து அனுப்பிவிச்சுக் கொண்டு சாயங்காலம் வீட்டுக்கு வந்தோம். அந்த நூத்தறுபது பேர்வழிக்கும் பிரஞ்சிலே எழுதியிருக்கிற லீஸ்துரு படிக்கி நம்முடைய வீட்டிலே தமிழிலே ஒண்ணும், தெலுங்கிலே ஒண்ணும் ரெண்டு பிரதி யெழுதி யிருக்குறது.

## மே 1760

***1760 வருசம் மே மாசம் தேதி 1; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 23; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசியே கில்லியார் வீட்டுக்குப் போனவிடத்திலே முசே கில்லியார், முசே புலோ, முசே கொடுத்தேன், முசே திப்பிளாம் நாலு பேரும் யிருந்து கொண்டு நேத்து யெழுதின லிஸ்துப்படிக்கி பிடிச்சுக் கொண்டு விபகரிக்க வேண்டியதெல்லாம் கேட்டார்கள். அதுக்கு நாம் சொல்ல வேண்டிய உத்தரப்பிரதி உத்தாரம் எல்லாம் சொன்னோம். மறுபடியும் தீராமல் யிருந்தபடியினாலே பகலைக்கு வந்து சாப்பிட்டு மறுபடியும் சாயங்காலம் போனவிடத்திலே அவர்கள் விபகரிக்க வேண்டியதெல்லாம் கேட்டார்கள். நாமும் சொல்லத் தக்கன உத்திரமெல்லாம் சொல்லி ஆன உடனே அவர்களுக்குச் சம்மதியானபடிக்கி துகைகளைப் போட்டுக் கொண்டார்கள். நாம் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 2; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 24; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே கில்லியார் வீட்டிலே முசே புலோ, முசே கொடுத்தேன், முசே திப்பிளாம், முசியே கில்லியார் நாலுபேரும் கூடி நேத்து அவர்கள் மனசுப்படி துகைகள் போட்ட லிஸ்துருலே நாலு பேரும் கையெழுத்துப் போட்டு அதை எடுத்துக் கொண்டு கோட்டைக்குப் போகச்சே நமக்கு எழுதின வரிக்கி நிறுவாகம்யில்லை. தாளாதென்று குமிசெலுக்கு யெழுதின பித்திசாமை நாம் குடுத்தோம். குடுத்த விடத்திலே முசே புலோ மாத்திரம் பாத்து, யிது ஞாயம் தானென்று சொன்னார். மத்தப் பேரெல்லாம் சொன்னது, ஞாயத்து வழிக்காட்டும் யிந்தப் பித்திசா மெழுதின முசே லாலி அனியாயமாய் வாங்கச் சொல்லி சொல்லி யிருக்கிறார். அப்படி யிருக்கச்சே யிதுக்கு ஞாயமில்லை யென்று பித்திசாம் நம்முடைய கையிலே தானே குடுத்து விட்டுப் போயிவிட்டார்கள். அந்தப் பித்திசாமை குமிசெலுக்கு குடுக்கச்சே முசே லாலி, லங்கறனை (M. La grenee) கையிலே குடுத்தோம். அதுக்கு நக்கல் நம்முடைய கையிலே யிருக்குது.

***1760 வருசம் மே மாசம் தேதி 3; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 25; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசே கொடுத்தேன் வீட்டுக்குப் போயி

அவனுடனே நாம் சொன்னது, "நம்முட பிள்ளையைக் கோட்டையிலே காவலிலே வைச்சுயிருக்கிறது". நம்முடைய நிறுவாகமும் யிப்படி யிருக்கு தென்று சொல்ல வேண்டிய ஞாயமெல்லாம் சொல்லிக் கொண்டவிடத்திலே, அவன் குரூரமாய்த் தானே யிடங்குடாமல் மகக்கரைக்கு யேத்தி விடுவேனென்று சொன்ன விடத்திலே, முசே புலோ வந்தார். வந்தவர் முசே கொடுத்தேனுடனே சொன்னது, "நீர் யிவருட ஞாயமாய் எல்லாம் கேட்டு யிப்படி அனியாயம் பண்ணுகிறது நல்லதல்ல," யென்று நம்மை வெளியே போகச் சொல்லி, பின்னையும் சொன்னது, "யிவருடைய விபகாரத்துக்கெல்லாம் சீமையிலே யிருந்து கும்பினியாருடைய கடுதாசியும் மினிஸ்தருகளுடைய கடுதாசியும் குமிசெலுக்கு வந்திருக்குது. அந்த ஞாயமும் நீர் அறிவீர். அப்படி யிருக்க நீர் முசே லாலிக்கும் தெரியப்படச் சொல்லி முசே லெறிக்கும் சொல்லி ஒரு மார்க்கம் பண்ண வேணுமென்று சொல்லத்தக்கின தென்ன உண்டோ அதுகளெல்லாம் சொன்னதுக்கு, அவன் யிடம் குடாமல் படிக்கே பேசினான். அதின் பேரிலே முசே புலோ சொன்னது, "யிப்படி பட்டணத்திலே யிருக்கிற செனங்களையும் மத்தப்பேரையும் மாறணம் ஓமம் (சாகப்) பண்ணினால் நாமென்ன கப்பலிலே ஒரு காலும் கரையிலே ஒரு காலும் ஆக யேறிப் போற காலம் வந்தால், அல்லவா யிப்படி யெல்லாம் அனியாயம் பண்ண வேண்டியது," யென்று சொல்லத் தக்கன விசேஷங்கள் என்ன உண்டோ அதுகளெல்லாம் சொன்னார். என்ன சொன்னாலும் அவன் கேளாமல் படிக்கித்தானே யிடங் குடாமல் படிக்கிச் சொன்னதின், பேரிலே அவர் பிறப்பட்டு வந்துவிட்டு, நம்முடனே சொன்னது, "உம்முட சம்மதிக்குப் பட்டணத்திலே யுள்ள செனங்களுக்காகவும் யென்னாலே யென்ன சொல்ல வேணுமோ அதுகளை யெல்லாம் சொன்னேன். ஒன்றும் கேளாமல் பிறப்பட்டுப் போய் விட்டான்." மறுபடியும் நாம் போயி முசே கொடுத்தேனைக் கண்டு பேசினவிடத்திலே அவன் குரூரமாய்த் தானே பணம் குடாமல் தீராது. குடாமல் போனால் உங்களை யெல்லாம் மகக்கரைக்கியேத்தி விடுவேன் என்று சொன்னதுக்கு நாம் சொன்னது, "முன்னே தானே சீமைக்கிப் போக வேணுமென்று யிருக்குறேன். மெத்த நல்லது, யென்னையும் யென்னுடைய பந்து சனங்களையும் பட்டணத்திலே யிருக்கிற செனங்களையும் கூட யேத்தி விட்டால் அப்படித்தானே சீமைக்கும் போயி பார்த்துக் கொண்டு வாறோ," மென்று சொன்னதுக்கு, முசே போர்சேயும் (Porcher) அவன் பெண்சாதியும் ரெண்டு பேரும் யிருந்து கொண்டு, "தமிழருடைய பணமெல்லாம் வெளியே போயிருக்குது, யிதுக்கு ஒரு தவணை பண்ணினால் அவர்கள் அழைப்பிச்சுக் குடுப்பார்கள்," என்று சொன்னதுக்கு நாம் சொன்னது, வெள்ளைக்காரரைப் போலே லக்ஷம் ரெண்டு லக்ஷம் சம்பாதிச்சு பெட்டி பெட்டியாய் வெளியே யென்ன

---

[1] அப்பாவு.

அனுப்பிவிட்டோமா? வெள்ளைக்காரரிடத்திலே சேவிச்சவர்களு(க்கும்) பிடவை துணி வித்தவர்களுக்கு பணம் யெங்கே யிருக்குது வெளியே அனுப்புகுறதுக்கு? என்று சொல்லிப்போட்டு பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

*1760 வருசம் மே மாசம் தேதி 4; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 26; ஆதிவாரம்*

இத்தனாள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கி முசே துபுவா (M. Dubois) நம்மை அழைச்சணுப்பிவிச்சார். நாம் போன விடத்திலே ஒரு லீஸ்து ஒன்று காண்பிச்சார். அதிலே அறுபதி பேர்வழிக்கு அஞ்சு லக்ஷத்தி எண்பத்தையாயிரத்து நானூறு ரூபாயிக்கு எழுதியிருந்தது. அதுக்கு யென்ன வயணம் என்று கேட்டதுக்கு, அதைப் பார்த்து நாம் சொன்னது, "யிது கடுதாசியிலே எழுதிப் பார்க்குற துகையே யல்லாமல் வாங்குற பணமில்லை," யென்று சொன்னதுக்கு, "நல்லது யெல்லாம் நாளை வாரும், யிதுகளுக்கெல்லாம் யோசனை பண்ணிக் கொள்ளுவோம்," என்று சொன்னார் நல்லதென்று வீட்டுக்கு வந்துவிட்டேன்.

இத்தனாள் இங்கிலீசுக்காரருடைய கப்பல் கரையிலே சமீபத்திலே வந்த படியினாலே கரையிலே யிருக்கிற கப்பலிலேயும் கொத்தளத்தின் பேரிலேயும் யிருந்து குண்டு போட இங்கிலீசுக்காரன் கப்பல்களைப் பார்த்துச் சுட்டான். அதின் பேரிலே அவன் ஒசந்து ஓடிப் போயிவிட்டான். மேலண்டை யிங்கிலீசுக்காரருடைய குதிரை குண்டுசாலை மட்டுக்கும் வந்து காலாடின படியினாலே நம்முடவர்கள் லக்ஷமணனாயக்கன் மண்டபம், பெரம்பையிலே யிருந்தவர்கள், யெல்லப்பிள்ளைசாவடி, குண்டுசாலை யிவ்விடங்களிலே வந்து விட்டார்கள். இந்த லீஸ்துருப் படிக்கி பணம் வாங்கப் போறார்களென்று முன்னே போன செனங்கள் யின்னய தினம் வெளியே போயிவிட்டார்கள்.

*1760 வருசம் மே மாசம் தேதி 5; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 27; சோமவாரம்*

இத்தனாள் பகலைக்கு மேலாக முசே துபுவா வீட்டுக்குப் போனவிடத்திலே அங்கே ராமலிங்கம் பிள்ளையும் வந்திருந்தான். அய்யண்ண சாஸ்திரி, கோபால கிஷ்ணய்யன் இந்த நாலு பேரும் சேர்ந்து யோசனை பண்ணி ராத்திரி ஒன்பது மணி மட்டுக்கும் யிருந்து கொஞ்சம் நஞ்சம் எழுதினான். அப்பறம் நாளைக்கி வீட்டிலே தானே யிருந்து யிதுகளுக்கெல்லாம் யோசனை பண்ணி எழுதிக் கொண்டு வாறோமென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 6; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 28; மங்களவாரம்***

இத்தனாள் காலத்தாலே ராமலிங்க பிள்ளையும் அய்யண்ண சாஸ்திரியும் கோபால கிருஷ்ணய்யனும் மூணுபேரும் நம்முடைய வீட்டுக்கு வந்தார்கள். நாம் கூட நாலு பேருமாயிருந்து யிவர்கள் அறுபது பேர்வழிகளிலேயும் அஞ்சு லக்ஷத்தெண்பத்தை யாயிரம் சில்லரையாய் எழுதியிருந்ததை அந்த அறுபது பேர்வழிகளிலேயும் தொண்ணூறு ஆயிரம் ஆகத் தீத்து எழுதி முன்னே எழுதின நூத்தறுபது பேர்வழியிலே அன்பது அறுபது பேர்வழி மட்டுக்கும் சேத்து லக்ஷத்தன்பதினாயிரம் சேத்து துகையாக்கி சாயங்காலம் (?) மணிக்கி கையிலே பிரான்சிலே எழுதி வைச்சு, ராமலிங்கபிள்ளை, அய்யண்ண சாஸ்திரி, கோபாலகிருஷ்ணய்யன் மூணுபேரையும் போயி யிந்த லீஸ்துரு முசே துபுவா கையிலே கொடுங்கள். நாம் நாளைக்காலமே வந்து யிதுகளுக்கெல்லாம் வயணம் சொல்லுகுறோமென்று சொல்லி அனுப்பி விச்சோம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 7; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 29; புதவாரம்***

இத்தனாள் காலமே முசே தெபுவா வீட்டுக்குப் போன விடத்திலே நேத்து எழுதின லீஸ்துரு படிச்சுக் காண்பிச்சு, யிதுகளிலே அவரவரை அழைச்சு கேழ்க்கிற விடத்திலே ஒருத்தருக்கு நூறு யேற யிருக்கும் ஒருத்தருக்கு நூறு குறைய யிருக்குமே அல்லாமல் மத்தப்படி ரொம்ப வித்தியாச மிராது யென்றும் சொன்னதின் பேரிலே மெய்தான் நல்லது கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை, கணக்கு ரங்கப்ப முதலி யிவர்களுக்கு வரி யெழுதி வைய்யுமென்று கேட்டதுக்கு நாம் சொன்னது : "யிவர்களுடைய ஆஸ்தி யெனக்குத் தெரியாது. கந்தப்ப முதலி யிவர்கள் உத்தியோக மெல்லாம் மூணு நாலு வருஷமாய்த்தான் உத்தியோகம் பண்ணது. யிதிலே பெரியண்ண முதலி லக்ஷம் ரூபாயி குடுத்தான். சவுரிராய பிள்ளை முப்பதினாயிரம் ரூபாயி குடுத்தான். கந்தப்ப முதலி அன்பதுனாயிரம் ரூபா கொடுத்தான். அதல்லாம் கும்பினி வண்டி மாட்டுச் சிலவுக்கு முப்பதினாயிரம் கடன் போட்டு யிருக்குறான். அதுகளுக்கெல்லாம் முசே லாலியின் கையெழுத்துக் கடுதாசியும் முசே லெறியுடைய கையெழுத்துக் கடுதாசியும் வச்சிருக்கிறான். யிப்படி யெல்லாம் கும்பினீருக்குக் குடுத்திருக்குறார்கள். அவர்களானால் கடன்பட்டு யிருக்குறோமென்று சொல்லுகுறார்கள். அவர்களுடைய ஆஸ்தி எனக்குத் தெரியாது. அவர்களுக்கு நீங்கள் துரைகளாய்த் தானே பார்த்துப் போட்டுக் கொள்ளுங்கோ," ளென்று சொன்னதின் பேரிலே, நல்லது, நீர் வீட்டுக்குப் போமென்று சொல்லிப் போகச் சொன்னார். நாம் வீட்டுக்கு வந்து விட்டோம்.

முசே தெபுவா அந்த லீஸ்துருவை யெடுத்துக் கொண்டு முசே லெறி அண்டைக்குப் போயி காண்பிச்ச விடத்திலே முசே லெறி நம்மை அழைச்சனுப்பி விச்சார். நாம் கோட்டைக்கிப் போனோம். போனவிடத்திலே முசே லெறியும் முசே தெபுவா, முசியே கில்லியார், முசே கொடுத்தேன். நாலுபேரும் யிருந்தார்கள். அவர்கள் சொன்னது : "உன் தம்பி மகனைக் கசோத்திலே வைச்சிருக்குதே, உனக்கு கேழ்க்கயில்லையா?" யென்று கேட்டார்கள் நாம் சொன்னது : "நமக் கென்ன வெழ்க்கம். யிந்த பட்டணத்திலே சகல கீற்தியும் பெத்தோம். யிப்போ சகல அபகீற்தியும் அபமரியாதையும் படுகுறோம்," யென்று சொன்னதுக்கு, "அப்படி சொல்லப் போகாது. யெந்த விதத்திலேயும் பலவந்தமாய் அன்னியாயமாய்ப் பணம் வாங்குவோம். வாங்காமல் விடத்தக்கனதில்லை. பணத்துக்கு ஒப்புக் கொள்ளுங்கள்," யென்று சொன்னதுக்கு, "இருந்தல்லவா பணத்துக்கு ஒப்புக் கொள்ளவேணும். யில்லாவிட்டால் யெப்படி ஒப்புக் கொள்ளுகிறது?" என்று சொல்லத்தக்கின விசேஷமெல்லாம் சொன்னதின் பேரிலே, அவர்களும் கண்டிதமாய்த் தானே அப்படிச் செய்வேன் யிப்படிச் செய்வேன் யென்று சொன்னதின்பேரிலே, நல்லதென்று பதினாயிரம் ரூபாயிக்கு ஒரு மாச தவணைக்கு ஒப்பிக் கொண்டு கையெழுத்துப் போட்டுக் குடுத்தோம். குண்டூர் நரசிம்ம செட்டியும் நாலாயிரம் ரூபாயிக்கு சம்மதிச்சு கையெழுத்துப் போட்டு குடுத்தான்.

அப்பிறம் வீட்டுக்கு வரச்சே பகலைக்கு மேலாகச் சாப்பிட்டு வாரும், யிதுகள் தீருந்தனிலும் நீரும் கூட யிருந்து தீர்க்க வேணும் யென்று சொன்னதுக்கு, "யென்னாலே ஆகாது, யிந்தப் பணம் சம்பாதிக்க வேணும்" யென்று சொன்னதுக்கு, நீர் வராமல் போனால் கோட்டையிலே பலவந்தமாய்தானே (Confinement) (அடைத்து) வைப்போம். யிது தீரந்தனிலும் யிருமென்று சொன்னார்கள். ஆனால் நல்லது என்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு அப்பாவுவையும் நரசிம்ம செட்டியையும் அழைச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். டங்காசாலை பாபுராயனை அன்பதினாயிரம் ரூபாயிக்கு சம்மதி குடுக்கச் சொல்லி கேட்டார்கள். அதுக்கு அவர் சொன்னது, "நேத்துதான் நான் பதினாலாயிரம் ரூபாயும் புகயிலைக் கிடங்கு பாபுராயனும் ஆராயிரம் ரூபாயும் ஆக யிருபதினாயிரம் ரூபாய் குடுத்தோம். யினிமேல் யென்ன யிருக்கு?" தென்று சொன்னதுக்கு, "அது வந்து கடலோரம் உத்தியோகம் ராமச்சந்திரர்ர்யனுக்குப் பதினாலாயிரம் ரூபாயும் புகையிலைக் கிடங்கு பாபுராயனுக்கு நாலாயிரம் ரூபாயும் இந்த அன்பதினாயிரம் ரூபாயி டங்காசாலை உத்தியோகம் பாபுராயனுக்கும் காரைக்கால் உத்தியோகம் சீனிவாசராயனுக்கும் (அதே) என்று சொல்லி கசோத்திலே டங்காசாலை பாபுராயனை போட்டார்கள். அப்பிறம் பாப்பய்யப் பிள்ளை மகனை அழைச்சுக் கேட்டதுக்கு, அவன் சொன்னது, "முன்னே தானே யிருந்த

தட்டுமுட்டு களெல்லாம் வித்து சகலமும் எடுத்துக் கொண்டீர்கள். யிப்போ யெங்கே யிருக்குது? யென்கையிலே ஒண்ணுமில்லை. ஆனால் ரெண்டு ஆனையும் அஞ்சாறு வீடுகளும் யிருக்குது. யிதுவே யல்லாமல் வேறே யொன்றுமில்லை," யென்று சொன்னதுக்கு, நம்மை யென்ன யென்று கேட்டார்கள். நாம் சொன்னது, "மெய்தான் அவனுக்குக் குடுக்குறதுக்கு அவகாசமில்லை. ரெண்டு ஆனையும் அஞ்சாறு வீடுகளும் யிருக்குது. பின்னை வேறே யில்லை," யென்று சொன்னதுக்கு, அப்படி யிருக்க சீஞ்சோறு (துரைகள்) களெல்லாம் அன்பதினாயிரம் ரூபாயி பேருந்துகையால் போட்டு யிருக்குறார்கள். ஆனபடியினாலே முசே லாலியுடனே சொல்லி நாளை விட்டு விடுவோமென்று கசோத்திலே மறுபடியும் வைக்கச் சொன்னார்கள். பகலைக்கு மேலாயி அஞ்சாறு பேர்வழி மட்டுக்கும் தீந்து அதுக ளெல்லாம் தமிழிலே ஒரு பிறதி எழுதி யிருக்குது. அது பாத்துக் கொண்(டால்) தெரிய வருமென்றும், அதல்லாமல் டங்காசாலை பாபுராயனை அழைச்சுக் கேழ்க்கிறபோது துரைகள் சொன்னது, "நீரென்ன, உமக்கு ரெண்டு லக்ஷம் விராகனுக்கு ஆஸ்தியிருக்குது. அதிலே லக்ஷம் லக்ஷத்தன்பதினாயிரம் வராகன் படகிலே போட்டு தெற்கே அனுப்பிவைச்ச(தில்) தேவுக்கோட்டை அண்டையிலே இங்கிலிசுக்காரர் கையிலே அகப்பட்டு மறுபடி தப்பிவிச்சுக் கொண்டு யிவ்விடத்துக்கு வந்து சேர்ந்தது. அப்படி யிருக்க நீய் அன்பதினாயிரம் ரூபாய் குடுக்கலா," மென்று கசோத்திலே போடச் சொன்னார்கள்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 8; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 30; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே சூரப்ப முதலி, வருணா முதலி, அழகிய மணவாளசெட்டி, சிறிது பேர்வழி தீந்தது. "இருக்கிற பொழுது அவரவர் முன்னே குடுத்தோம். பின்னை குடுத்தோம். யிப்ப யென்ன யிருக்குது? ஆனால் கசோத்திலே கிடந்து அபஸ்தைப்பட மாட்டாமல் தீத்துக் கொள்ளுகுறோம்," என்று கண்ணீர் விட்டு அழுது கொண்டிருக்கிற பேரும், லபா லபா யென்று வாயிலே அடிச்சுக் கொண்ட பேரும் யிப்படியாக யித்தனாள் சிறிதுபேர் தீத்துக் கொண்டு போனார்கள். யிதுகளுக்கெல்லாம் நம்முடைய கையிலே யிருக்கிற சாபித்தாவை பார்த்துக் கொண்டால் பேர்வழிகள் யெல்லாம் தெரியவரும்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 9; விக்கிறம வருசம் சித்திரை மாசம் தேதி 31; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே கனகசபை முதலி, தில்லை மேஸ்திரி, தேவராய செட்டி,

அருமை செட்டி நாலு பேருக்கும் தீரச்சே கனகசபை முதலியார் சொன்னது, "யெனக்கானால் ஒண்ணுமில்லை. நான் கோவில் காரியம் விசாரிச்சுக் கொண்டு நாட்டாமைக் காரனென்று திரியுறதே யல்லாமல் உத்தியோகம் சத்தியோகம் ஒண்ணுமில்லை," யென்று சொன்னதின் பேரிலே, "ஆனால் உனக்குப் போட்ட ஆயிரம் ரூபாயும் உங்கள் யினத்தார் யிந்தக் கணக்கிலே அகப்பட்ட பேர்வழி போகமத்தப் பேர் வழியிலே யிந்த ஆயிரம் ரூபாயுக்கும் மேலே ஒருகாசு அதிகமாய்த் தண்டாமல் படிக்கி ஆயிரம் ரூபாயும் தண்டிக் கொள்ளச்" சொல்லி சொன்னார்கள். அந்தப் படிக்கித்தான் தில்லை மேஸ்திரிக்குப் போட்ட ஆயிரத்தன்னூறு ரூபாயும் தண்டிக் கொள்ளச் சொல்லிச் சொன்னார்கள். தேவனாய செட்டிக்கு அப்படிதான் உத்தாரங் குடுத்தார்கள். அறம் செட்டிக்கும் எழுதின ஆயிரம் ரூபாயிக்கு அவன் சொந்தத்திலே அன்னூறு ரூபாயும் யினத்திலே அன்னூறு ரூபாயும் தண்டி செலுத்தச் சொல்லி உத்தாரம் குடுத்தார்கள். யிந்தப்படியாகப் பின்னையும் அவரவர் சொந்தத்திலே சிறிது பேர் வழியும் தீந்தது. யிதுகளுக்கெல்லாம் "நம்முடைய கையிலே யிருக்குற சாபித்தாவை பார்த்துக் கொண்டால் பேர் வயணங்களெல்லாம் தெரியும். யிதல்லாமல் யிந்த லீஸ்துறு எழுதின பேர்வழியிலே சிறிது பேர் செத்துப் போனவர்களும் உண்டு. அவர்களுடைய பெண்டுகள் பிள்ளைகள் யிருந்து அஞ்சாறு மாசத்துக்கு முன்னே தானே போயி விட்டவர்களும் உண்டு. யிந்த வரி எழுதப் போறார்களென்றும் கலாபத்திலேயும் பயப்பட்டு ரெண்டு மாசம் மூணு மாசத்துக்கு முன்னே போயி விட்டவர்களும் உண்டு. யிதுகளுக்கெல்லாம் நீங்களும் அறிந்திருப்பீர்கள். யிப்படியாகப் பட்டணத்திலே உள்ள செனங்களிலே முக்கால் பங்கு செனங்கள் போய் விட்டுது. நானும் எங்கள் பெண்டுகள் பிள்ளைகள் மாத்திரம் போகயில்லை. நீங்களும் யிதுகளெல்லாம் அறிஞ்சு முன்னே தானே போய்விட்ட செனங்களை யெல்லாம் வரச்சொல்லி தமுக்குப் போடுவிச்சீர்கள்," யென்று சொன்னதின் பேரிலே, யின்னய தினமும் வெளியே போயிருக்கிற செனங்களையெல்லாம் வரச்சொல்லி தமுக்குப் போட்டார்கள்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 10; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 1; சனிக்கிழமை*

இத்தனாள் கனகராய முதலி தம்பி தானியப்ப முதலியாரை ரெண்டு மூணு நாளாய் அழைச்சனுப்பி விச்சத்திலே அவருக்கு மேகவாதத்தின் பேரிலே கால் கைகளெல்லாம் பிடிச்சுக் கொண்டு வீக்கம் கண்டு யிருக்கிறபடியினாலே வரக்கூடாதென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டுயிருந்தார். அதின் பேரிலே யின்னைய தினம் சேவுகரையனுப்பி பல்லக்கிலே எடுத்துக் கொண்டு பலவந்தமாய் கோட்டையைக் கொண்டு வந்து விட்டார்கள். விட்டவிடத்திலே சின்ன முதலியாரை யிருபதினாயிரம்

ரூபாயும் கேட்டார்கள். அவர் யிருபதினாயிரம் ரூபாயி குடுக்கிறதுக்கு யில்லை, பதினாயிரம் ரூபாயி தாரோம் யென்று சொன்னார். யிருபதினாயிரம் ரூபாயும் சரியாய்க் குடுத்தாலச்சுது. யில்லாவிட்டால் கசோத்திலே போடச் சொல்லி முசே லாலியுடைய உத்தாரமென்றும் கசோத்திலே போடச் சொன்னார்கள். அதின் பேரிலே நாம் சொன்னது : "அவர்கள் மூணுதலை முறையாய் கும்பினி குடுத்தியோராய் பெரிய மனுஷராயிருந்தவர்கள். அவரை அப்படி அவமரியாதை பண்ணப் போகாது. அதல்லாமலும் வியாதியஸ்தராயிருக்குறார். தமிழருடைய ஞாயம் உங்களுக்கு தெரியாது. தமிழருக்குள்ளே யிப்படி கசோத்திலே போடுகுறதும் காவலிலே வைக்கிறதும் மெத்தயீனம். உங்கள் ஞாயத்துக்குள்ளே யெப்படிப்பட்ட பெரிய உத்தியோகம் பண்ணினாலும் அவர்களை கசோத்திலே போடுகிறதும் காவலிலே வைக்கிறதும் உங்களுக்கு நடக்கிறது. தமிழருக்குள்ளே மெத்தயீனம். அதல்லாமல் அவர் பதினாயிரம் ரூபாயி தாரோம் யென்று சொல்லுகுறார். அல்லாமல் யில்லை யென்று சொல்லயில்லை. அவரே தாகிலும் ஒரு நேர்ப் பாரம் பண்ணயில்லை. அப்படி யிருக்கச்சே கசோத்திலே வைக்கப் போகாது," என்று நாம் சொன்னதின் பேரிலே முசே லெறி முசே கொடுத்தேன் முசியே கில்லியார், முசே துபுவா யெல்லாரும் கூடி யோசனை பண்ணிக் கொண்டு கோவர்ணமாம் மெத்தைமேலே வீட்டுக்கும் கீழே நடக்கிற வழியிலே காவலிலே வைச்சார்கள்.[1] முசே மயோர் காம்பிராவிலே அண்டையிலே ஒரு கனாத்து (screen) கட்டியிருந்தார். யித்தனாளும் சிறிது பேர்வழியள் தீந்தது. அதுகளுக்கெல்லாம் சாபித்தா யிருக்குது. பகலைக்கு மேலாய் முசே லாலி அண்டைக்கு முசே லெறி (யிடம்) போகவேணுமென்று (இருந்தவர்). நாளைக்கு ஆகட்டும் மென்று சொன்னார்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 11; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 2; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே லாலி வந்து கோட்டை கோவிலிலே பூசை கேட்டுப் போட்டுப் போயிவிட்டார். முசே லெறி சம்பாக் கோவிலுக்குப் போயி பூசைகேட்டு வந்தார்.[2] பாதிரியள் வந்து கருவைப்பூண்டி உபதேசியை அழைக்க வேண்டியதென்னா யென்று

---

[1] கனகராய முதலியும் பாப்பையப் பிள்ளையும் ரங்கப்பப் பிள்ளைக்கு விரோதிகளாகவே இருந்தவர்கள், இருப்பினும், அவர்களுக்குத் தொந்தரவு வந்தபோது, தயங்காமல் அவர்களுக்கு ஆதரவாக நம் பிள்ளை விளக்கமாகப் பேசிய அவரது பெருங்குணத்தினை உணர்த்துகிறது.

[2] இருவருமே கோட்டைக் கோயிலுக்குச் செல்வதுதான் மரபு. ஆனால் நட்பு முறிந்து போனதால் லெறி சம்பாக் கோவிலுக்குச் சென்றார். சம்பாக் கோவில் பொதுவாகத் தமிழர் கோயில்.

கேட்டதுக்கு, முசே லாலியுடைய லீஸ்துருவிலே முசே லெறியை எழுதியிருந்தபடியினாலே அழைப்பிச்சோம் யென்றார். அதின்பேரிலே நீரேன் அழைப்பிச்சீர்?" யென்று நம்மைக் கேட்டதுக்கு, "துரைகள் உத்தாரத்தின் பேரிலே அழைப்பிச்சோமே யல்லாமல் நாமா அழைப்பிச்சோமா?" யென்று சொன்னதுக்கு, "அவன் யேதாகிலும் கும்பினியிலே லக்ஷக்கணக்காய்த் திருடினவன்தான். குடுக்கவேண்டிய ஞாயம் (உண்டு). யிவன் வந்து ஊரிலே யாசகம் பண்ணி சாப்பிட்டுக் கொண்டு திரியுறவன். யிப்படி யிருக்க யிவன் யெந்த ஞாயத்திலே குடுப்பா" னென்று சொன்னதுக்கு, நாம் சொன்னது, "அப்படி ஞாயப் பிறகாரம் துரைகள் விசாரிச்சு வாங்கினால் யிப்படி யேன் யிந்தப்பட்டணம் போகுதென்று?" சொன்னதுக்கு, யிதுகளெல்லாம் விசாரிக்குறதுக்கு யின்னம் கொஞ்ச நாளையிலே வரப்போறார்கள். அப்போ உமக்கு தெரியுமென்று சொன்னார். அதிலே முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரு மிருந்து கொண்டு, "அவரென்ன ரொம்ப பேசுகுறார். அந்த கருவப்பூண்டி உபதேசி சோலிக்குப் போகவேண்டாம். பிறகு பார்த்துக் கொள்வோ," மென்று சொன்னார்கள். அப்பிறம் தீரவேண்டிய பேர்வழிகளிலே அஞ்சாறு பேரை அழைச்சு கேட்டதுக்கு ஒருத்தரும் சம்மதியாத படியினாலே மறுபடியும் கசோத்திலே வைச்சார்கள்.

இன்றையதினம் முசே லாலியுடைய பவுன்சு சொலுதாதுகளும் போயிகளும் சிறிதுபேர் கூடலூரின் பேரிலே போயி விழுந்து அவ்விடத்திலே வலசை போயிருந்த செட்டியள் கோமுட்டிகள் பெண்டுகள் பிள்ளையள் ஆத்திலே தண்ணியிலே விழுந்து ரொம்ப அவதிப்பட்டார்கள். அவ்விடத்திலே இசுப்பித்தாலிலே நோவாளிகள் வெள்ளைக்காரர் யிருந்தவர்கள் முப்பது நாற்பது பேரையும் நாலஞ்சு பேர் ஒப்பிசியால் மாரும் மங்கல மேஸ்திரி ஒருத்தனும் யிருபது முப்பது பேர் போயிகளும் பிடிச்சுக் கொண்டு ஊரைக் கொள்ளையிட்டுக் கொண்டு வந்து விட்டார்கள். கொள்ளை விஸ்தாரமாய் அகப்பட்டுதென்றும் சொன்னார்கள். அதுகள் சொலுதாதுகள் போயிகள் கையிலே அகப்பட்டதே யல்லாமல் பெரிய மனுஷர் கையிலே அகப்பட்டதில்லை.

***1760 வருசம் மே மாசம் தேதி 12; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 3; சோமவாரம்***

இத்தனாள் நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே தீரவேண்டிய போவழியிலே அஞ்சாறு பேரை அழைச்சு கேட்டவிடத்திலே ரெண்டு பேர் வழி மாத்திரம் தீந்து சீட்டு எழுதி குடுத்தார்கள். மத்த மூணுபேர் பேரையும் மறுபடி கசோத்திலே போட்டார்கள். அப்பிறம் முசே துபுவா நயினாரைப் பார்த்து "வாணிய நயினாத்தை முன்னே ஓடிப்போய் விட்டவன் மறுபடியும் வந்தானென்று சொன்னாய் அவன் உன் வசம்

பத்திர" மென்று முசே லெறி முன்பாக சொன்னார். அதுக்கு நயினார் சொன்னது, "மெய்தான். அவனை யெல்லாம் என்வசம் பண்ணிக் கொண்டாயிருந்தேன். அப்போ போயிருந்தான் யிப்ப வந்தான் என்னமோ" யென்று சொன்னதுக்கு நீய்யெங்கள் வீட்டுக்கு வந்தபோது ராமலிங்கபிள்ளை அய்யண்ணசாஸ்திரி அவர்களிருக்கச்சே வாணிய நயினாத்தை ஓடிப்போனவன் வந்திருக்கிறான் என்று சொன்னாய் ஆனபடியினாலே நீய் உத்திரவாதம் பண்ணுவாயென்று சொன்னதின் பேரிலே முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் "நீய் வந்து ஊருக்குப் பாளையக்காறனான படியினாலே வாணிய நயினாத்தையையும் உத்திரவாதம் பண்ணவாண்டாமா? நீர்தான் மத்தப்பேர் ஓடிப்போனவர்களையும் உத்திரவாதம் பண்ண வேண்டியதும் நீதான்" யென்று நயினார் பேரிலே பாரம் சாட்டி சொன்னார்கள். அதுக்கு நயினார் சொன்னது, "ஓடிப்போனவர்களை யெல்லாம் யென்வசமா பண்ணிக் கொண்டிருந்தேன் நான் ஒப்பிவிக்குறதுக்கு? அவரவர் ஓடிப்போய் விட்டால் நான் செய்யவேண்டியதென்ன?" யென்று சொன்னான்.

***1760 வருசம் மே மாசம் தேதி 13; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 4; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலத்தாலே குமிசேல் கூடினார்கள். மத்தியானம் மட்டுக்கும் ஒருத்தரையும் கேழ்க்கயில்லை. மத்தியானத்துக்கு வீட்டுக்கு வரச்சே ரெண்டு நாளைக்கு யெனக்கு வரக்கூடாது பணத்து நிமித்தியம் வெள்ளைக்காரத் தெருவிலே வரவேண்டியதிருக்குது. ஆனபடியினாலே வரக்கூடாது என்று சொல்லி உத்தரவு வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டோம். பகலைக்கு மேலாக போகயில்லை.

சாயங்காலம் சூனாம்பேட்டு சுப்பன் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் வழி தீந்தது. அதுக்கு சாபிதாயிருக்குது. அது பாத்துக் கொள்ள வேண்டியது.

***1760 வருசம் மே மாசம் தேதி 14; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 5; புதன்கிழமை***

இத்தனாள் நாம் கோட்டைக்குப் போகயில்லை. நயினார் யிருந்து கொண்டு சாவடி மணியம் சின்னத்தம்பி பிள்ளை சவுரிமுத்து முதலி அழகப்ப முதலி வந்தவாசி வெங்கிடாசல பிள்ளையும் பின்னையும் சிறிது பேர்வழி யெல்லாம் தீந்து நாலத்து ரெண்டு பேர்களை கசோத்திலேயும் போட்டார்கள் யென்று சமாச்சாரம் கேட்டோம். யிதுகளுக் கெல்லாம்

பேர்வழி சாபிதாயிருக்குது. யித்தனாளும் நம்முடவர்கள் கூடலூரின் பேரிலே போனவிடத்திலே அஞ்சாறு பேருக்கு காயம்பட்டு மறுபடியும் திருப்பிக் கொண்டு வந்து விட்டார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 15; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 6; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்கிப் போனோம். குமிசேல் ஆனபடியினாலே ஒருத்தரையும் அழைச்சுக் கேழ்க்கயில்லை. ஒரு விசேஷமும் நடக்கயில்லை. பனிரெண்டடிச்சு அரைமணிக்கு குமிசேல் கலைஞ்சார்கள். நாமும் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். குமிசேல் கூடினது யின்னதென்று தெரியவில்லை சாயங்காலமும் போனவிடத்திலே முசே தெபுவா அவர்கள் வர ஆறு ஆறரை மணி அடிச்சபடியினாலே நாளை ஆகட்டுமென்று சொன்னார்கள். நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 16; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 7; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனோம் முசே கொடுத்தேன் சாவடிக்கி ஞாயத்துக்குப் போயிருந்தபடியினாலே முசே தெபுவா முசே கில்லியார் வந்து காத்துக் கொண்டு யிருந்தபடியினாலே அந்த லீஸ்துரு முசே கொடுத்தேன் கையிலே யிருந்தபடியினாலே முசே லெறி ஒரு கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சார். அந்த லீஸ்துரு முசே கொடுத்தேன் (M. Courtin) குடுத்தனுப்பி விச்சான். பதினோரு மணிக்கு பிறகு நாலு பேர்வழி தீந்து சீட்டெழுதி குடுத்தார்கள். பனிரெண்டு அடிச்சு ஒரு மணிக்கி பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டேன். சாயங்காலமும் கோட்டைக்குப் போனவிடத்திலே யேழு மணிக்குள்ளே நாலஞ்சு பேர்வழி மட்டுக்கும் தீந்து சீட்டு எழுதி குடுத்ததாகவும், யிதுக்கு சாபிதா யிருக்குது பாத்துக் கொள்ள வேண்டியது.

இத்தனாள் முசே துபுவா பதிமூணு பேர்வழி ஒரு லீஸ்துரு எழுதி வந்து குடுத்தார். அதிலே முன் எழுதப்பட்டு யிருக்கிற லீஸ்துருலே அஞ்சாறு பேர்வழி மட்டுக்கும் எழுதியிருக்குது. சுத்துக்கோட்டை நயினியப் பிள்ளையும் அவன் தம்பி சோலைய பிள்ளை ரெண்டு பேருக்கும் முசே லங்கர்னேயும் முசே இஞ்சினீர் தெ பச்சாஞ்சு (M. du Passage the Engineir) ரெண்டு பேரும் பேசி தீத்துக் கொண்டார்கள். வரி தேவையில்லை யென்றும் தீத்துக் கொண்டார்கள். மத்த ரெண்டு பேரும் யேழை குடிக்க கஞ்சில்லாதவர்கள் யென்று அழைச்சுக் கேட்ட விடத்திலே சொன்னார்கள். ஆனால் யிந்த மட்டுக்கும் மூணுபேர் வழியும் தேவையில்லை யென்று தீத்துப் போட்டார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 17; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 8; சனிக்கிழமை***

இத்தனாள் நாம் கோட்டைக்குப் போனோம். சின்ன முதலியும் நாலஞ்சு பேர்வழியும் மத்தியானம் வரைக்கும் தீத்துக் கொண்டு சீட்டு எழுதிக் குடுத்துப் போட்டு வீட்டுக்குப் போயிவிட்டார்கள். சாயங்காலம் யேழு மணி வரைக்கும் தீந்த பேர்வழி போக மத்தப் பேர்வழி கசோத்திலே யிருக்கிற நபர் கோட்டை சுப்பய்யர் வெங்கட்டரவணய்யன் டங்காசாலை பாபுராயன் மன்னப்ப முதலி திலார்சு துபாசி குழந்தை கபாலன் காளத்தி செட்டி பாப்பய்ய பிள்ளை மகன் யிந்த யேழு பேரையும் அழைச்சுக் கேட்டவிடத்திலே சம்மதியாமல் போனபடியினாலே மறுபடி கசோத்திலே வைக்கச் சொன்னார்கள். நாளை தீரவேண்டிய பேர்வழி யேதாகிலும் உண்டா யென்று கேட்டார்கள். ஆனால் வெளியே போயி யிருக்கிறவர்கள் வந்தால் தீரவேண்டியது மத்தப் படிக்கியில்லை யென்று சொன்னதின் பேரிலே ஆனால் யின்னம் ரெண்டு மூணு நாளை பொறுத்து புதன்கிழமை யன்று கேழ்ப்போம் அதிலே வெளியே போயிருக்கிறவர்களும் வருவார்கள். பிறகு கேழ்க்கலாமென்று சொன்னார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 18; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 9; ஆதிவாரம்***

இத்தனாள் குமிசெல் கூட குமிசெல்க்காரர் யெல்லாம் வந்திருந்தார்கள். நாகப்பட்டணத்திலே யிருந்து முசே மொர்சேனும் வந்தான். அவனும் சிறிது கடுதாசி கொண்டு வந்தான். அது நிமித்தியமும் முசே லாலி ஒழுகரையிலே முசே பெடுத்தல்மீ தோட்டத்திலே பத்து நாளைக்கிப் போயிருக்கப் போறார் என்கிறதுக்கும் பின்னையும் யென்ன யென்ன காரியத்துக்கு கூடினார்களோ? அப்பால் நாம் போயி ஆசாரம் பண்ணவிடத்திலே யேதாகிலும் தீருகிற பேர்வழி உண்டா? யென்று கேட்டார்கள். நேத்து தானே சொன்னோமே யென்று சொன்னதுக்கு நல்லது யின்னம் ரெண்டு மூணு நாள் பொறுத்து கேழ்ப்போம். அதிலே வெளியே போனவர்களும் வருவார்கள். பிறகு ஆகட்டும் என்று சொன்னார்கள். இங்கிலீசுக்காரன் கப்பல் ஒண்ணு பாயெடுத்து ஓடினது ரெண்டு பீரங்கி போட்டான். அதை வேடிக்கைப் பார்த்துக் கொண்டு யிருந்து பதினோரு மணிக்கி குமிசெல் கூடி பனிரெண்டு அடிச்சு அரை மணிக்கி குமிசேல் கலைஞ்சார்கள். நாமும் வீட்டுக்கு வந்து விட்டோம். காலமே இங்கிலீசுக்காரனுடைய குதிரை அரியாங்குப்பம் கோட்டை சமீபத்திலே யிருந்து பீரங்கியாலே போட்டான். அதிலே இங்கிலீசுக்காரருடைய குதிரைக்குப்பட்டு ஒரு வெள்ளைக்காரனும் அந்தக் குதிரையும் விழுந்து போச்சுது. பீரங்கி சுட்ட மேஸ்திரிக்கு மருந்து பட்டு உடம்பு வெந்து போய் எடுத்துக் கொண்டு வந்தார்கள். அதுகளெல்லாம்

குடுக்குறோம். யிப்பவும் தமிழர் பேரிலே வாங்கின பணம் சிறிது தஸ்து யிருக்குது. அது வேணுமானாலும் குடுத்தனுப்பிவிக்குறோம். மறு உத்திரம் எழுதி யனுப்பி விச்சார்களென்று வெள்ளைக்காரரிலே ஒரு பெரிய மனுஷர் சொல்ல கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் சாயங்காலம் முசே லாலி அன்பது அறுபது குதிரையுடனே பிறப்பட்டு யெட்டு நாளைக்கு யிருக்குறதுக்கு ஒழுகரையிலே கனகராய முதலியார் கட்டின பாதிரி கோவிலிலே போயிறங்கினார். செஞ்சியிலே யிருந்த கொம்மாந்தான் முசே மரியோ ரென்கிறவன் (M. Mariouer) வெளியே பிறப்பட்டு இங்கிலீசுக்காரருடைய பவுன்சுடனே சண்டை பண்ண விடத்திலே மார்பிலே குண்டுபட்டு மரணத்தை அடைஞ்சானென்கிற சமாச்சாரம் வந்ததின் பேரிலே அதுக்கு பவுன்சுக்கு ஒரு எசமான் கும்மாந்தாமை நேமிச்சு எழுதியனுப்பி விச்சார்கள். குமிசெல் கூடினது யென்ன யென்றால் முசே லாலி தமக்கு சாப்பிடுகிறதுக்கு கோழியில்லை வாத்துயில்லை ஆடுயில்லை யிதுகளெல்லாம் குடாமல்ப் போனால் வெளியே பிறப்பட்டுப் போயி இங்கிலீசுக்காரர் கையிலே அகப்பட்டுப் போவானென்று அல்லவோ நீங்கள் நடப்பிக்கிறீர்கள் கோவர்ணதோர் முதலாகிய குமிசெல்க்கார ரெல்லாம் லக்ஷாந்திரம் கும்பினி உடமையை திருடி அவரவர் வீட்டிலே கோழி வாத்து ஆடுகளெல்லாம் கொழுக்க வைச்சு சுகமாய் சாப்பிட்டுக் கொண்டு யிருக்கிறீர்களென்று முசே லெறி பேருக்கு ஒரு கடுதாசி ஒண்ணு எழுதியனுப்பி விட்டு பிறப்பட்டு வெளியே போய் விட்டார். அந்தக் கடுதாசி நிமித்தியம் குமிசெல்க்கூடி மறுஉத்திரம் யெழுதி அனுப்பிவிச்சது யிதுவரைக்கும் சகலமும் உம்முட ஆதினமாய்த் தானே யிருந்தது. "உமக்குக் கேட்டது குடாமல்ப் போனோம். யிப்பவும் உமக்கு என்ன தேவையோ அதுகளெல்லாம் குடுக்குறோம் யிப்பவும் தமிழரிலே வாங்கின பணம் சிறிது தஸ்து யிருக்குது. அது வேணுமானாலும் குடுத்தனுப்பிவிக்குறோம்." மறு உத்திரவு எழுதி அனுப்பிவிச்சார்களென்று வெள்ளைக்காரரிலே ஒருவர் பெரிய மனுஷர் சொல்லக் கேழ்க்கப்பட்டது.

### *1760 வருசம் மே மாசம் தேதி 19; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 10; திங்கட்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே மரிக்கி கொம்பிளாமுடைய (Marquis de Conflams) தட்டுமுட்டு பிடவை பார்க்கிற சாலையிலே யேலம் போட்டார்கள். அதைப் பார்த்துக் கொண்டு யிருந்துப் போட்டு மெத்தை வீட்டின் பேரிலே போனோம். முசே லெறி கதவைச் சாத்திக் கொண்டிருந்து பதினோரு மணிக்கு பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். இன்றைய தினமும் இங்கிலீசுக்காரருடைய குதிரை அரியாங்குப்பம் கோட்டை யண்டை வந்தவிடத்திலே பீரங்கியாலே

போட்டான். ரெண்டு குதிரை விழுந்து போச்சுது. யின்னைய தினமும் ஊரிலே யிருந்த சொலுதாதுகளும் வெளியிலே யிருந்த சொலுதாதுகளும் சிப்பாயிகளும் முசே லாலியும் யேகத்துக்குப் பிறப்பட்டு கூடலூரின் பேரிலே போனார்கள்.

இத்தனாள் சாயங்காலம் நாம் தோட்டத்துக்குச் சுவாரி போனவிடத்திலே முசே லங்கறனை அங்கே வந்திருந்தான். அவனும் நானும் சிறிதுநேரம் முசேலாலி நடப்பிக்கிற சமாச்சாரமும் பின்னையும் சிறிது விசேஷம் பேசிக்கொண்டு யிருந்து அவர் வண்டியேறிக் கொண்டு வந்துவிட்டார். நாமும் பல்லக்கு யேறிக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

யித்தனாள் யிங்கிலீசுக் காரருடைய கப்பலிலே யிருந்து ஒரு வத்தலிலே மூணு வெள்ளைக்காரர் யிறங்கி கரைக்கு வந்து கடுதாசி குடுத்து அவர்கள் மனுஷர் மத்தலோத்து மனோர் நம்முடவர்கள் கையிலே அகப்பட்டவர்களை விடச்சொல்லி மறுபடி யெழுதி பதிலுக்கு மனுஷர் விடுகுறோமென்று கேட்டார்கள். ஒருத்தருக்கு ரெண்டு பேர் விட்டால் விடுகுறோம் யென்று நம்முடவர்கள் சொன்னதின் பேரிலே மறுபடியும் அவர்கள் வத்தலின் பேரிலே யேறி போய்விட்டார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 20; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 11; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே பத்து மணிக்கு முசே லெறி வெளியே வந்தார். முசியே கில்லியார் பின்னையும் வந்திருந்தவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போ நாம் போயி ஆசாரம் பண்ணினோம். அதிலே முசே லெறி யிருந்து கொண்டு, “வெளியே போயிருக்கிறவர்கள் வரவும் யின்னம் இரண்டு மூணு நாள் செல்லும். ஆனால் கசோத்திலே யிருக்கிறவர்களை நாளை அழைச்சுக் கேழ்ப்போம்” என்று சொன்னார். இன்றைக்கும் மறிக்கு தெ கொம்பிளாமுடைய தட்டுமுட்டு பிடவைப் பாக்கிற சாலையிலே யேலம் போட்டார்கள். சந்தாசாயபு மகன் ரசா சாயபும் வந்து யிருந்தான். யிப்படி யிருக்க, கோட்டைக்கு யெதிரே யிருந்த இங்கிலீசுக்காரருடைய கப்பல் அஞ்சாறு யிருந்ததிலே முப்பது நாற்பது பீரங்கி போட்டார்களென்றும், எதுனாலே யென்றால் நேத்து ராத்திரிய தினம் நம்முடையவர்கள் கூடலூரின் பேரிலே போனவர்களை உள்ளே வரட்டுமென்று பகுவுயிருந்து, கிட்ட வந்தவுடனே பீரங்கியினாலே சுட்டவுடனே நம்முடவர்கள் பின்னுக்கு யிடஞ்சார்கள். அதிலே அவர்கள் கப்பலிலேயும் யிருந்து வத்தலிலேயும் சிறிது சொலுதாதுகளை யெறக்கினான். அவர்களும் கரையிலே யிருந்தவர்களுமாய் கூடிக் கொண்டு நம்முடவர்களின் பேரிலே எதிர்த்து

சண்டை பண்ணவிடத்திலே நம்முடவர்களிலே சிறிது பேருக்குச் சேதமாய் யிவ்விடத்திலே யிருந்து போனபவுன்சுக்கு எசமானாய் போன ரிஷமாம் தெ லொறேன்சு (Regement de Lorraine) பவுன்சு வெள்ளை சட்டைக்காரக் கும்மாந்தாம் ஒருத்தன் விழுந்து போயி விட்டான். அதின் பேரிலே நம்முடவர்கள் முறிஞ்சு மறுபடி பிறப்பட்டு வந்து விட்டார்கள். யித்தனாள் பகலைக்கு மேலாய் நாம் அரியாங்குப்பம் ஆத்து மட்டுக்கும் சுவாரிக்குப் போனவிடத்திலே கூடலூருக்குப் போன வெள்ளைக்காரரிலே ஒருத்தரும் ரெண்டு பேருமாய் தனித்தனியே வந்தார்கள். அவர்களும் யிந்த சமாச்சாரம் தான் சொன்னார்கள். அப்பிறம் ஆறரை மணிக்கு யேழு மணிக்குப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 21; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 12; புதன்கிழமை*

இத்தனாள் காலத்தாலே முசே திப்பளாம் வசத்திலே நமக்கு எழுதின பதினாயிரம் ரூபாய்க்காக ரெண்டாயிரம் கொண்டு போயி செலுத்தினோம். நாம் கோட்டைக்கிப் போயி பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்தோம். மறக்கி தெ கொம்பிளாமுடைய தட்டு முட்டு யேலம் போட்டுக் கொண்டு யிருந்தார்கள். ஒன்பது மணிக்கி முசே கொடுத்தேன், முசே துபுவா, முசே துப்பிளாம் யிவர்களெல்லாம் வந்து கோவர்ணமாம் மெத்தை மேலே முசே லெறியண்டைக்கு வந்தார்கள். யிருந்தவர்கள் நம்மை அழைச்சு கசோத்திலே யிருக்கிற பேர்வழி ஏழு பேரிலே தீத்துக் கொள்ளுகுறவர்கள் உண்டாயென்று கேட்டார்கள். அவர்கள் குடுக்கத் தாளாதென்று தானே யிருக்குறார்கள் யென்று சொன்னதின் பேரிலே, நல்லது கோட்டை சுப்பய்யனை அன்னூறு ரூபாய் குடுக்கச் சொல்லியும் கோட்டை றவணய்யனை இறநூறு ரூபாய் குடுக்கச் சொல்லியும் அழைச்சுக் கேட்டார்கள். கோட்டை சுப்பய்யன் குடுக்கிறதுக்கு நிறுவாகம்யில்லை யென்று சொன்னான். மறுபடியும் கசோத்திலே போடச் சொன்னார்கள். வெங்கிட்டறவணய்யன் மாத்திரம் யிறநூறு ரூபாய்க்கி சம்மதிச்சு சீட்டு யெழுதி குடுத்து ரெண்டு மாச தவணைக்கி உடம்படிக்கை பண்ணிக்கொண்டு போயி விட்டான். மத்தப் பேரையும் அழைச்சு தீத்துப் போடுவோ மென்று முசே கொடுத்தே(னும்) முசே துப்பிளாமும் சொன்னதின் பேரிலே முசே லெறி சொன்னது, முசே லாலியுடைய லீஸ்துருவாலே கபாலன் காளத்தி செட்டிக்கு மூவாயிரம் ரூபாயும் சிக்கிறக்கூடம் (armoury) தானப்பனுக்கு இரண்டாயிரம் ரூபாயிக்கும் வெள்ளாழ குமரப்ப முதலி 2000 ரூபாயும் யிப்படி பெருந் துகையாய் எழுதியிருக்கச்சே நாம் யெப்படி சுலுவாய்த் தீர்க்கிறதென்று முசே லெறி சொன்னார். அதுக்கு முசே கொடுத்தேனும் முசே திப்பிளாமும் சொன்னது, யிப்படி முசே லாலியுடைய லீஸ்துருவைப்

பார்த்துக் கொண்டு யிருந்தால் ஒரு பணம் வாரத் தக்கினதில்லை. ஒருத்தரும் குடுக்கத் தக்கினதும்யில்லை. நாம் முன்னே தீத்தபடிக்கி அவரவருக்குச் சுலுவாக ஒரு துகையைத் தீத்தால் அவர்களும் சம்மதிப்பார்கள். பணமும் சத்தேரக் குறைய வந்துபோம். இல்லாவிட்டால் பணம் வாரத் தக்கினதில்லை யென்று சொன்னதின் பேரிலே, முசே லெறி சொன்னது, முசே லாலியானால் மூணு நாளாய் கோபிச்சுக் கொண்டு வெளியே போயிருக்குறார். ஆனபடியினாலே அவருடனே ஒரு விசேஷமும் சொல்லிச் செய்ய வேணும். பெருந் துகையாய் எழுதியிருக்கிறபடியினாலே அவர் கோபிச்சுக் கொள்ளுவாரென்கிறதாய்ச் சொன்னார். யிப்படி பேசிக் கொண்டிருக்கச்சே முசே துபுவா யிருந்து கொண்டு டங்காசாலை பாபுராயன் தம்பி லக்ஷமணய்யனும் டங்காசாலைக்குப் போக்கு வரத்தாய் யிருப்பான். அவனையும் கசோத்திலே போடச் சொல்லி முசியே லாலியுடைய உத்தாரம் என்று சொன்னதின் பேரிலே, முசே லெறி சொன்னது, "அவன் அண்ணன் பாபுராயனைத் தான் கசோத்திலே போட்டிருக்குது. அவன் தம்பியும் போட வேண்டியதென்னா?" யென்று சொன்னதின் பேரிலே, அப்படியல்லவா அவனையும் கசோத்திலே போடவேணும் யென்று நம்மையும் எல்லாரையும் வெளியே போகச் சொல்லி முசே திபுவாவும் முசே லெறியும் ரெண்டு பேரும் ரெண்டு நாழிகை மட்டுக்கும் கற்சிச்சு கற்சிச்சு பேசிக் கொண்டிருந்தார்கள். மறுபடி நம்மை அழைச்சு லக்ஷமணராயனை அழைச்சு வரச்சொல்லி சொன்னார்கள். அவன் கோட்டையிலே தானே யிருந்தான், அழைச்சு வந்துவிட்டார்கள். முசே துபுவா் கசோத்திலே போடச் சொன்னார். அதின் பேரிலே முசே லெறி யிருந்து கொண்டு, "அவன் அண்ணனைத்தான் கசோத்திலே வைச்சிருக்குதே யிவனை வெளிக் காவலிலே வைச்சு பிடவைப் பார்க்குற சாலையிலேயாவது ஆலைக்கிடங்கிலே யாவது வைச்சு, நாளைய தினம் பணம் குடுத்தாலாச்சுது, யில்லாவிட்டால் யிவனைக் கசோத்திலே போடுவோமென்று நயினார் வசம் பண்ணார்கள். நயினார் ஒரு சேவுகன் வசம் பண்ணி அந்தப் படிக்கே வெளிக் காவலாய்த் தானே வச்சான்.

அவர்கள் மனுஷர் போயி முசே புலோவுடனே சொல்லிக் கொண்டார்கள். அதன் பேரிலே முசே புலோ வந்து முசே லெறியுடனேயும் முசே துபாவுடனேயும் பேசினதுக்கு, "பாபுராயனைத் தான் கசோத்திலே வைச்சு யிருக்குதே அவன் தம்பியையும் வைக்க வேண்டியது யென்ன? ஒரு வீட்டிலே யெத்தனை பேரிருந்தால் அத்தனை பேரையும் காவலிலே வைக்கிறது ஞாயமா? யிப்படி அன்னியாயமாய்ப் பண்ணி வரவேணுமென்றால் யெல்லாரையும் அடிச்சு வெளியே துரத்தி விட்டு யேகத்துக்கு வீடுவாசல் களெல்லாம் கொள்ளையிட்டுக் கொண்டு போய்க் கப்பலின் பேரிலே யேறிப் போயி விடுகுறதுதானே? யிதுக்கேன் யிந்த

அன்னியாயம் பண்ணுகுறது?" (என்று கேட்டார்). முசே லெறியைப் பாத்து "நீயா துரைத்தனம் பண்ணுகிறவர். யிதுகளெல்லாம் ஞாயமாம்படியே விசாரிக்க வேண்டியது. (நீர் நீரானால்) வாயை மூடிக் கொண்டு பேசாமலிருக்கிறீர். யிப்பவும் நீங்கள் பண்ணுகுற அன்னியாயத்தினாலே யிந்தப்பட்டணம் முழுகிப்போய் நாமும் கப்பலின் பேரிலே யேறிப்போறது மெய். உங்களுக்கு சரிப்போன படிக்கிப் பண்ணுங்கள். டங்காசாலையிலே யானால் விசாரிக்குறதுக்கு மனுஷரில்லை. அவன் அண்ணனையும் கசோத்திலே வச்சிருக்கிறீர்கள். அவன் தம்பியையும் யின்றைக்குக் காவலிலே வைச்சுப் போட்டீர்கள். ஆனால் கொஞ்சம் நஞ்சம் சில்லரையள் டங்காசாலையிலே வருகுறதை நிறுத்திப் போட்டு வாரும்," யென்று பின்னையும் ரொம்பத் தானே கற்சிச்சுச் சொன்னதின் பேரிலே, முசே லெறியும் முசே துபுவாவும் லக்ஷமணராயனை காவலிலே யிருந்து விட்டு விடச்சொன்னார்கள். காவல் விட்டு விட்டார்கள்.

பின்னையும் முசே துபுவா ஒரு கடுதாசியிலே நாலு அஞ்சு பேர் பரியாரி வெங்கிடாசலம், வெள்ளாழன் கௌடியப்பிள்ளை மகன் முத்தப்பிள்ளை, வடமலைப் பிள்ளை, கட்டுக்கார குட்டிப்பிள்ளை, நாட்டாமை தாண்டவராயப் பிள்ளை, கோமுட்டி சக்கு செட்டி யிந்த ஆறுபேர் வழிகளையும் ஒருத்தருக்கு ரெண்டாயிரமும் ஆயிரத்தன்னூறும் ஆக எழுதி அந்தக் கடுதாசியைக் குடுத்து யிவர்களை யெல்லாம் அழைச்சு வரச்சொல்லி சொன்னார்கள்.

சாயங்காலம் இங்கிலிசுக்காரருடைய குதிரை குண்டு சாலை மட்டுக்கும் வந்து காலாடினதின் பேரிலே நம்முடவர்கள் குண்டுசாலையிலே யிருந்த சிப்பாயிகள் நூறு பேர் மட்டுக்கும் துப்பாக்கி யெடுத்துக் கொண்டு சுட்டதின் பேரிலே அவர்கள் குதிரை அப்பு முதலி சாவடி வழியாய்ப் பிறப்பட்டு வழுதாவூ(ருக்குப்) பிறப்பட்டுப் போயிவிட்டார்கள் யென்று சிப்பாயிகள் வந்து கபுறு சொன்னார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 22; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 13; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி, முசே கொடுத்தேன், முசே துபுவா யிவர்களெல்லாம் யிருந்தார்கள். நாம் போனவிடத்திலே சக்கு செட்டி, கட்டுக்கார குட்டிப் பிளளை, பரியாரி வெங்கிடாசலம் மூணுபேரையும் அழைச்சு வந்து விட்டார்கள். யிதிலே சக்கி(?) செட்டியைப் பாத்து முசே துபுவா யிவனை இருபதினாயிரம் ரூபாயி குடுப்பானென்று கேட்டதின் பேரிலே நாம் சொன்னது : "யிவனுக்கு நாற்பதினாயிரம் முப்பதினாயிரம் ஆஸ்தியிருந்தல்லவா யிருபதினாயிரம் ரூபாய் குடுக்க வேணும்? யிவன்

வந்து குண்டுரோர் கிட்ட டங்காசாலையிலே மாசம் பத்து ரூபாய் சம்பளத்துக்கு சேவிக்கிறவன். யிவனுக்கு யெசமானாய் யிருக்கிறவன் தானே நாலாயிரம் ரூபாய் தீத்துக் கொண்டு யிருக்கச்சே, யிவன் யென்ன குடுக்கப் போறான்?" யென்று சொல்லி, பின்னையும் கட்டுக்கார குட்டிப் பிள்ளை என்கிறவன் தோட்டியள் கணக்கு யெழுதறவன், பரியாரி வெங்கிடாசலம் என்கிறவன் பரியாரம் பார்த்துக் கொண்டு திரியுறவன்," யென்று சொன்னதின் பேரிலே, முசியே துபுவா யிருந்து கொண்டு "யிப்படி சக்கு செட்டி என்கிறவன் பத்து ரூக்கு சேவிக்குறவன், அவன் பேரிலே ரெண்டாயிரத்தி அன்னூறு ரூபாயிக்கும், பரியாரி வெங்கிடாசலம் என்கிறவன் பேரிலே ஆயிரம் ரூபாயும், கட்டுக்கார குட்டிப் பிள்ளை என்கிறவன் பேரிலே ஆயிரத்தன்னூறு ரூபாயும் யெழுதி யிருக்குதே?" யென்று சொன்னதின் பேரிலே, நாம் சொன்னது, "யிவர்கள் பேரிலே யிப்படி துகை யெழுதி வந்து குடுத்தவன் யெவனோ அவனை அழைப்பிச்சு உண்டென்று எண்பிச்சால் யிவர்கள் நேரஸ்தனாய்ப் போய் பணமும் வாங்கிப்போடலாம். ருசு பண்ணாவிட்டால் அவனாகிலும் நேரஸ்தனாய்ப் போய்விடலா," மென்று சொன்னதின் பேரிலே, நல்லது நாளை அவனை அழைச்சு வைக்குறேன் (என) முசியே துபுவா சொன்னான். அப்பால் யிந்த மூணு பேரையும் காவலிலே வைக்கச் சொன்னார்கள். அதுக்கு நாம் சொன்னது: "அவர்கள் ஓடிப்போகத் தக்கினதில்லை. வெளியே விட்டு வைக்கலா," மென்று சொன்னதுக்கு, ஆனால் நயினார் வீட்டிலே காவலில் வைக்க சொன்னார்கள். நயினார் வீட்டிலே காவல் வைச்சார்கள்.

அப்பிறம் நாம் சொன்னது, "வாணிய நயினாத்தை, வெளியே போயிருக்கிறவன், அவன் வருகுறோமென்குறான். அவனுக்கு ஒரு ஓர்சாதித்துப் போட்டால் வருகுறோம் யென்று சொல்லுகுறான்," என்று சொன்னதுக்கு, முசே முசே துபுவா சொன்னது: "அவனுக்கு ஆஸ்தி ரொம்ப யிருக்குது யென்று முசே லாலி எழுதின லீஸ்துருப்படி பணம் ரொம்ப குடுப்பானென்று மூவாயிரம் ரூபாயும் எழுதி யிருக்குது. முசியே துபுவா எழுதின லீஸ்துருவிலே பதினாயிரக் கணக்காய் எழுதியிருக்குது. ஆனால் ரெண்டாயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லுமென்று சொன்னார்கள். "அந்தப்படிக்கி அவனை அழைப்பிச்சுக் கேழ்க்குறேன். அவன் சம்மதிச்சால் நல்லதுதான். யில்லாவிட்டால் அவனை வெளியே அனுப்பி விடு(வோம்) என்று சொன்னதுக்கு, நல்லதென்று சொன்னார்கள். அவனுக்குப் பேசினவன் திருச்செல்வராய முதலி தம்பி நம்முடனே பேசினவன். அவனுடனே நயினாத்தை முதலியை அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னோம். தில்லை மேஸ்திரியும் முத்தப் பிள்ளை மகன் சோணாப் பிள்ளை மூணு பேரையும் கூட்டிக் கொண்டு தில்லை மேஸ்திரிப் பிள்ளை, முத்து யிவர்களுக்குப் போட்ட வரியைக் குடியள் பேரிலே

போட்டு வாங்கலாம். அவர்கள் குடாவிட்டால் அவர்களை கசோத்திலே போடவும் அடிச்சு வாங்கவும் யிப்படி யெல்லாம் யோசனை பண்ணிக்கொண்டு முசே லெறியுடனே சொன்னார்கள். அவர் நம்மை அழைச்சு யென்ன யென்று கேட்டார். நாம் சொன்னது : "முன்னாலே வினாயகப் பிள்ளை யிருக்கச்சே முசே பெடுத்தல்மீயைக் கட்டிக் கொண்டு அகம்படியர் நாட்டாமைக்காரன் யெவனோ அவன் நாட்டு தினம்(?) கட்டிக் கொண்டு, ஒரு ஞாயமே ஒண்ணு உண்டாக்கிக் கொண்டு, குடிகளை யெல்லாம் பிடிக்கிறதும் அடிக்கிறதும் தெண்டம் வாங்குறதும் யிப்படி யெல்லாம் அன்னியாயம் பண்ணிக் கொண்டு யிருந்தார்கள். யிப்பவும் அந்தப்படிக்கி நடப்பி விக்குறதுக்குத் திரியுறார்கள். யிந்த வரிப் பணம் நிமித்தியம் குடிகளை சிப்பாயிகளை விட்டு யிழுக்குறதும் துப்பாக்கிகளைத் தோளிலே வைச்சு சுமக்கச் சொல்லுறதும் வீட்டுக் கதவை அடைச்சு முத்திரை போடுறதும் யிப்படி யெல்லாம் ஊரிலே அன்னியாயம் பண்ணுகுறார்கள். யிவர்கள் யிப்படிப் பண்ணுகுறபடியினாலே முன்னேதானே பட்டணத்திலே யிருந்த செனங்களெல்லாம் வெகு பேர் வெளியே போயிருக்குறார்கள். அவர்களும் வருகிறதுக்கு பயந்து வெளியே தானே யிருக்குறார்கள். யின்னம் யிருக்கிற செனங்களும் பிறப்பட்டுப் போயிவிடுவார்கள். நாளை மத்தாம் நாள் நீயேன் சொல்லாமல் போனாய் யென்று நம்முட பேரிலே சொல்லத் தேவையில்லை யென்று சொன்னதின் பேரிலே முசே லெறி சொன்னது: "அந்தக் குடிகளை அழைச்சுக் கேழ்க்கிறது. அவர்கள் ராசியின் பேரிலே குடுத்தால் வாங்கிக் கொள்ளுகுறது. யில்லாவிட்டால் அவர்களைப் பலவந்தம் பண்ணினால் தில்லை மேஸ்திரி பிள்ளை, முத்துப் பிள்ளையைப் பிடிச்சுக் காவலிலே வச்சுப் போடச் சொல்லி நமக்கு உத்தாரம் குடுத்தார். நல்லதென்று நாம் யிப்பறம் வந்து விட்டோம். மறுபடியும் சோனாசலம், தில்லை மேஸ்திரி பிள்ளை, முத்து யிவர்கள் முசே திப்பிளாமுடனே சொல்லி முசே லெறிக்குச் சொல்லச் சொன்னார்கள் முசே லெறியுடனே சொன்னவிடத்திலே, அவர் சொன்னது : அவர்கள் எழுதின வரியை சாவடி கணக்கப் பிள்ளை கையிலே குடுத்து அவர்கள் அந்தக் குடிகளை அழைப்பிச்சு கேழ்க்குறது. அவர்கள் சம்மதிச்சு தீத்துக் குடுத்தால் வாங்கிக் கொள்ளுகிறது. யில்லாவிட்டால் அவர்களைப் பலவந்தம் பண்ணத் தேவையில்லை," யென்று சொன்னார். அந்த விசேஷத்தை முசே திப்பிளாம் வந்து நம்முடனே யிப்படி அகம் படையர்கள் குடியள் பேரிலே வரி பிறிச்சு யெழுதின டாப்பை சாவடிக் கணக்கப் பிள்ளைகள் கையிலே குடுத்து, ராசியின் பேரிலே வாங்கச் சொல்லி முசே லெறி சொன்னார் என்று சொன்னார். நல்லதென்று சாவடி கணக்கப் பிள்ளைகளை அழைப்பிச்சு அகம்படியள் வரி டாப்பு வாங்கி நீங்கள் கொண்டு போய் அவரவர் குடிகளை அழைப்பிச்சு ராசியின் பேரிலே கேழ்க்கிறது. குடுத்தால் வாங்கிக் கொள்ளுகிறது. யில்லை யென்றால்

அவர்களை வாங்கிக் கொள்ளுகிறது. யில்லை யென்றால் அவர்களை கேழ்க்கத் தேவையில்லை. பலவந்தம் பண்ணத் தேவையில்லை யென்று சொன்னார்.

### *1760 வருசம் மே மாசம் தேதி 23; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 14; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே, யின்னைய தினம் சாவடி ஞாயமாம்படியினாலே முசே கொடுத்தேன். சாவடி ஞாயத்துக்குப் போயிவிசாரிக்கப் போய் விட்டான். ஆனபடியினாலே யின்னைய தினம் ஒரு விசேஷமும் நடக்கயில்லை. நாம் முசே லெறியைக் காண்பிச்சுக் கொண்டு மெத்தை வீட்டின் பேரிலே யிருந்தோம். மறிக்கி தெ கொம்பிளாமுடைய தட்டுமுட்டு யேலம் போட்டார்கள். அப்பிறம் பதினோரு மணிக்கு பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

அயிதர் நாயக்கனும் மூவாயிரம் குதிரையும் அய்யாயிரம் பாறும் பதினோரு பீரங்கியும் பரிக்கி வெங்கட்டராயனும் ஆனந்தகிரிக்கு வந்த(ன) யென்று முசே லாலி யண்டைக்கிக் காகிதம் வந்துது முசே லெறிக்கு வந்த காகிதத்தை முசே லாலி பாத்துக் கொண்டு யின்னைய தினம் முசே லெறியண்டைக்கி அனுப்பி விச்சதாய், அதிலே யிந்த சமாச்சாரம் எழுதியிருந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் மே மாசம் தேதி 24; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 15; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே மறிக்கி தெ கொம்பிளாமுடைய தட்டு முட்டு யேலம் போட்டார்கள். அஞ்சாறு நாளாய் யேலம் போடுகிறவிடத்திலே தமிழர் ஒருத்தரும் வாங்கயில்லை. சந்தாசாயபு மகனும் அல்லி நக்கீயும் ரெண்டாயிரம் ரூபாயிக்குத் தோல் சீட்டு (leather de currency) வைச்சுக் கொண்டு அஞ்சாறு நாளாய் வாங்கினார்கள். வெள்ளைக்காரரும் வாங்கினார்கள். மத்தப்படி தமிழர் ஒருத்தரும் வாங்கயில்லை. நாம் அப்பாலே யிருந்து பார்த்துக் கொண்டு யிருக்கச்சே பத்தரை மணிக்கு முசே கொடுத்தேன், முசே திப்பிளாமும் முசே துபுவாவும் வந்திருக்கிறார்கள் யென்று சேவுகன் வந்து சொன்னான். நாம் போனவிடத்திலே கசோத்திலே யிருக்கிறவர்களிலே தீத்துக் கொள்ளுகுற பேர் உண்டாயென்று கேட்டார். அதிலே கோட்டை சுப்பய்யன் ஒரு பித்திசாம் யெழுதினான். அதிலே யெழுதி யிருக்கிறது, “யெனக்கானால் குடுக்குறதுக்கு நிறுவாகமில்லை. அன்பதுனாயிரம் ரூபாயி மட்டும் ஊரிலே நான் கடன் குடுக்க வேண்டும். வீட்டின் பேரிலேயும் கிறேபு சீட்டு யிருக்குது. யிது பட்டணத்திலே துரைகள் குமிசெல்க்காரர் தமிழர் சகலமான பேரும் அறிவார்கள். யிதல்லாமல்

பதினஞ்சு நாளாய் சாப்பாடுமில்லை. ரெண்டு மூணு நாளாய் பக்கசூலைக் கண்டு ரொம்ப உபத்திரவப் படுகுறேன். மூர்ச்சை வருகுறது யின்னம் ரெண்டு மூணு நாளையிலே செத்துப் போவே," னென்று எழுதி முசே திப்பளாம் கையிலே குடுத்து முசே லெறிக்குக் குடுத்தான். அவர் அதைப் பார்த்துக் கொண்டு, நம்மைப் பாத்து யென்ன சுப்பய்யன் சம்மதி யென்று கேட்டார். "மெய்தான் யிதுகளெல்லாம் முன்னே தானே உங்களுடனே சொல்லி யிருக்கிறேனே," யென்று சொன்னதுக்கு, ஆனால் அவன் தான் என்ன சொல்லுகுறானென்று கேட்டதுக்கு, முன்னே அழைச்சுக் கேட்டதுக்கு முன்னூறு ரூபாய்த் தாரோமென்று சொன்னானென்று சொன்னதின் பேரிலே, நல்லது அந்தப் படிக்கி அவனை அழைச்சு தீத்துப் போடுமென்று சொன்னார். அதின் பேரிலே சுப்பய்யனை அழைச்சு முன்னூறு ரூபாயிக்கு சீட்டு வாங்கிக் கொண்டு காவல் விட்டு விட்டார்கள். யின்னம் யிருக்கிறவர்களையும், அழையும், அவர்களையும் தீத்துப் போடுவோமென்றும் சொன்னார்கள் கசோத்திலே யிருந்த சிகிலக்கூடம் (Armourg) தானப்பன், முசே திலார்சு துபாசி குழந்தை, கபாலன் காளத்திசெட்டி, மன்னப்ப முதலி யிவர்களை அழைச்சுக் கேட்டவிடத்திலே மன்னப்ப முதலிக்கு முசே லாலியுடைய லீஸ்துருவிலே மூவாயிரம் ரூபாயும், பின்னை யொரு லீஸ்துருவிலே ரெண்டாயிரம் ரூபாயும், முசே துபுவா யெழுதின லீஸ்துருவிலே நாலாயிரம் ரூபாயும் யிப்படி யெழுதி யிருக்கிறது. யின்றைய தினம் லகுவாய் தீந்து சீட்டு யெழுதி கையெழுத்துப் போடச் சொன்னால் ஆயிரம் ரூபாயிக்கு சம்மதிக்க சொன்னால் மாட்டோம் யென்றான். அவனுக்கு உடம்பு யெல்லாம் சிரங்கு பிடிச்சு, சங்கம்பழம் போலேக் கைகாலுகளெல்லாம் கொப்புள மாயிருக்கிற படியினாலே, முசே லெறி அதைப்பாத்து ஒரு சுலுவாய்ச் சொன்னார். அப்படி யிருக்கிறதிலே சம்மதியாதபடியினாலே கசோத்திலே போடச் சொன்னார்கள். அப்பிறம் கபாலன் காளத்தி செட்டியைப் பாத்தவுடனே முகம் வெளுத்து, மூஞ்சியெல்லாம் வெளுத்து ரொம்ப துற்பலனாயிருக்கிறதை முசே லெறி பார்த்து அவனுக்கும் சுலுவாய்த் தானே ஒரு துகை தீத்துச் சொன்னார். அவனும் ஆயிரம் ரூபாயி யெனக்கு(த் தாளாது), முன்னாலே முன்னூறு ரூபாயிக்கு அதனமாய் தாளாதென்றும் சொன்னதின் பேரிலே அவனையும் கசோத்திலேயே போடச் சொன்னார்கள். அப்பாலே குழந்தையைக் கேட்டவிடத்திலே அவன் யெனக்குக் குடுக்குறதுக்கு அவகாசமில்லை யென்று சொன்னான். அவனையும் கசோத்திலே போடச் சொன்னார்கள். சிகிலிக்கூடம் தானப்பனை அழைச்சுக் கேட்டவிடத்திலே அவன் சொன்னது, "நான் நித்தம் ரெண்டு பணத்துக்குக் கூலி வேலை செய்யுறவன். யெனக்கு யென்ன யிருக்குது? குடுக்குறதுக்கு ஒண்ணும்யில்லை," யென்று சொன்னதின் பேரிலே, முசே லெறி நம்மைப் பார்த்து "யிவன் யிப்படிச் சொல்லுகுறானே, யிவன் பேரிலே நீர் யெப்படி

எழுதினீரெ,"ன்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது, முன்னே முசே லசேல் பணம் வாங்கின போது யிவர்கள் நாட்டாமைக்காரர் யிவன் கையிலே நக்ஷத்திரம் யிறுநூறு விராகன் வாங்கினார்கள். ஆனபடியினாலே எழுதினோம்," யென்று சொன்னோம். அவனையும் கஜோத்திலே போடச் சொன்னார்கள். அப்பிறம் நயினாரிருந்து கொண்டு, "யிப்ப சமையமாச்சுது நெலுவாய்க் காணுது. பாப்பய்யப்பிள்ளை மகன் பேச்சு சொல்லி விடுதலை பண்ணி விடவேணும்," யென்று சொன்னான். "ஆனால் யின்னைய தினம் சனிப் பாய்ச்சலாயிருக்குது, வாணா," மென்று சொன்னோம். சத்து நெளுவாய்க் காணுதே, சொல்ல வேணுமென்று சொன்னான். நல்லதென்று, "பாப்பய்யப் பிள்ளை மகனை விட்டு விடுகுறோமென்று சொன்னீர்களே, அவனானால் சாப்பாடு யில்லாமல் உடம்பு கை கால் யெல்லாம் சிரங்கு பிடிச்சு ரொம்ப வருத்தப்படுகிறான்," யென்று சொன்னதுக்கு, முசே லெறி யிருந்து கொண்டு யென்னா யிப்படிச் சொல்லுகுறாரே யென்று அவர்களைக் கேட்டதுக்கு, முசே துபுவா யிருந்து கொண்டு "அவனுக்கு அன்பதினாயிரம் ரூபாய் ஆஸ்தியிருக்குது யென்று யெனக்குச் சொல்லி யிருக்குறார்கள். விடப் போகா" தென்று சொன்னான். முசே கொடுத்தேன் சொன்னது, "முசே துப்பிளாமைக் காட்டி யிந்த சீஞ்ஞோரும் யிருக்கச்சே யென்று யென்னுடனே ஒரு பெரிய மனுஷர் வந்து சொன்னார். பாப்பய்யப் பிள்ளைக்கு லக்ஷத் திருபதினாயிரம் விராகன் ரொக்கத்திலே ஆஸ்தி யிருக்குது. ரெங்கப்பிள்ளை யென்னமோ யிவன் கையிலே லஞ்சம் வாங்கிக் கொண்டு அவனுக்கு ஒண்ணுமில்லையென்று அவன் பாடியாய்ப் பேசுகிறாரே," யென்று சொன்னான் என்று முசே கொடுத்தேன் சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, "அவனுக்கு லக்ஷத்தன்பதனாயிரம் ஆஸ்தி யிருந்தால் எனக்குப் பதினாயிரம் யிருபதினாயிரம் குடுத்தல்லவா பேச வேணும். நல்லது அவனுக்கு லக்ஷம் வராகன் ஆஸ்தி யிருக்குது (என்பதை) ஒருத்தன் பாத்து அல்லவா சொல்ல வேணும் அவன் வந்து அதை ருசு பண்ணினால் அந்த விராகனையும் எடுத்துக் கொண்டு அவனையும் அவனுடைய பமீலுகளைக் கூட தூக்கிப் போடுங்கள். சொன்னவன் ருசு பண்ணாவிட்டால் அவனைத் தூக்கிப் போடுங்கள்," யென்று சொன்னதின் பேரிலே, நல்லது "யிருபது நாளைக்கு முன்னே தானே பாப்பய்யப் பிள்ளை செத்துப் போறாப் போலே யிருக்குறானென்று சொன்னீரே. அப்படியானால் செத்துப் போனானேங்கிற சேதி கேழ்க்கப்படாதா?" யென்று சொன்னார்கள். அதுக்கு நாம் சொன்னது, "நீங்கள் வேணுமானால் விசாரிச்சுக் கொள்ளுங்கள் யெல்லாம் அறிவார்கள். யெங்களுக்குள்ளே சீவப் பிராச்சித" மென்று செரிமோனிய் உண்டு. அந்தப் படிக்கி முன்னே செத்துப் போறாரென்கிறதாய் திருவெண்ணை நல்லூரிலே ஒருதரம் செய்தார்கள். பிள்ளையள் பெண்டுகளெல்லாம் யேகத்துக்குப் போனார்கள்.

அந்தத் தடவை தப்பி யிவ்விடத்துக்கு யெடுத்துக் கொண்டு வந்தார்கள். யிவ்விடத்திலே ரெண்டொரு தரம் அந்தப்படிக்கி செரிமோனியள் செய்தார்கள். யெல்லாரும் அது அறிவார்கள்," யென்று சொன்னதுக்கு, அதிலே முசே கொடுத்தேன் சொன்னது, "நானும் முசே திப்பிளாமும் போயிப் பாத்து வாரோ மென்று சொன்னார்கள். அதிலே முசியே துபுவா யிருந்து கொண்டு யிவ்விடத்திலே யெடுத்து வந்தால் பார்க்கலா" மென்று சொன்னதின் பேரிலே, முசே லெறி, "யெடுத்து வந்த விடத்திலே செத்துப் போனால் அபகீர்த்தி வரும்," யென்று சொன்னார். தேவையில்லை, யெடுத்து வந்து பார்த்து அனுப்பி விடலாமென்று சொன்னார். அந்தப் படிக்கி பகலைக்கு மேலாய் எடுத்து வரச் சொன்னார்கள். அப்பிறம் நாம் சொன்னது : நேத்து மூணு பேரைக் காவலிலே வைச்சிருக்குதே அவர்கள் சம்மதி யென்னயென்று கேட்டதுக்கு முசே துபுவா யிருந்து கொண்டு சொன்னது, "கட்டுக்கார குட்டி பிள்ளை என்றல்லவா யெழுதி யிருந்துது. அவனல்லா மாட்டுக்காரக் குட்டிப்பிள்ளையாம் காட்டும். அவனுக்கு ஆயிரம் பொதி மாடுகள் யிருக்குது. கும்பினிலே தண்டுகளுக்குப் பொதி பொட்டிகளை யெடுக்கிறவனாம். பின்னையும் வேணுமென்றுது ரெண்டாயிரம் மூவாயிரம் பொதி மாடுகள் கொண்டு வந்து விடுவானாம். ரொம்ப பணம் சம்பாதிச்சிருக்கிறானாம். அவனை அழைச்சு வரச் சொன்னான். அதிலே நயினார் சொன்னது, "கோழிக்காரக் குப்பன் அண்ணன் தான் குட்டைய னென்கிறவ"னென்று சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, மெய்தான் முன்னே நூறு மாடு மட்டுக்கும் யிருந்தது.

பின்னையும் மாடுகள் கும்பினிக்கி வேணுமென்று கேட்டால் கொண்டு வந்து விடுவான். யெதுனாலே யென்றால் அரும்பாத்தையிருந்து சத்தப் பணம் குடார்கள். ஆனபடியினாலே யிவனை மாட்டுக்காரரெல்லாம் யெசமானாய் வைச்சு பணம் காசு வாங்கச் சொல்லி அவரவர் மாட்டுக்கு ஒரு பணம் அரைப் பணம் குடுப்பார்கள். அறுபது மாடுகளுக்கு யிருக்குது," யென்று சொன்னதன் பேரிலே, நல்லது அவனை அழைப்பிச்சு வாயென்று சொன்னான். ஆனால் கட்டுக்காரக் குட்டைய னென்கிறவனை விட்டு விடலாமா யென்று கேட்டதுக்கு விட்டு விடச் சொன்னான். சொன்ன உடனே நமக்கு நகைப்பு வந்து முசே லெறியும் நகைச்சான். அவ்விடத்திலே யிருந்தவர்களெல்லாம் நகைச்சார்கள். முசே துபுவா முகம் மாத்திரம் செத்து சினமா யிருந்தது.

அப்புறம் செக்கு செட்டியும் பரியாரி வெங்கிடாசலம் பேச்சும் யென்ன யென்று கேட்டதுக்கு, ஒண்ணும் பேசாமல் படிக்கி முசே துபுவா எழுந்து போயிவிட்டான். முசே துப்பிளாம் சொன்னது, "மறிக்கி தெ கொம்பிளாமுடைய தட்டு முட்டு அஞ்சாறு நாளாய் ஏலம் போடுகுறார்களே, சந்தா சாயபு மகனும் வெள்ளைக்காரரும் வாங்குறார்களே யல்லாமல்

தமிழர் ஒருத்தரும் வாங்கயில்லை" யென்று சொன்னதுக்கு கொடுத்தேன் தமிழர் ரொம்ப யெளைச்சுப் போனார்கள். ஆனபடியினாலே ஒருத்தரும் வாங்கயில்லை யென்று சொன்னான். முசே லெறி யிருந்து கொண்டு "வரி யெழுதி யிருக்கிற பேர் வெளியே போயிருக்கிறார்களே அவர்கள் யின்னம் வரயில்லையா?" யென்று கேட்டான். அதுக்கு நாம் சொன்னது, "வெளியே போன பேரெல்லாம் வருகுறதுக்குத் தான் யிருந்தார்கள். யிவ்விடத்திலே பணம் வாங்குறது துருசா யிருக்கு தென்கிற சமாச்சாரம் கேட்டு அவரவர் அங்கங்கே தானே யிருக்குறார்கள். யிந்தப் பணம் வாங்(குவது) சத்து நிண்ணால் வருவார்கள்," யென்று சொல்லிப் போட்டு வீட்டுக்குப் பனிரெண்டு மணிக்கிப் பிறப்பட்டு வந்துவிட்டோம்.

பகலைக்கு மேலாய் நாலு மணிக்கு கோட்டைக்கிப் போனவிடத்திலே ரெண்டு பேர் சொலுதாதுகளை அனுப்பி பாப்பய்யப் பிள்ளையை அழைச்சு வரச்சொன்னார்கள். அவர்கள் போயி வியாதிப்பட்டு படுத்திருக்கிறவனைப் பல்லக்கின் பேரிலே எடுத்துக் கொண்டு கோட்டையை வந்து அரும்பாத்தை கணக்கு கூடத்திலே வைச்சார்கள். அவனும் பல்லக்கின் பேரிலே படுத்த படுக்கையாய்த் தானே யிருந்தான். அந்த சமாச்சாரம் வந்து முசே லெறியுடனே சொன்னார்கள். சொன்னவுடனே முசே துப்பிளாமும் முசே கொடுத்தேனும் நாமும் மூணு பேருமாய் பார்க்கப் போனோம் போன விடத்திலே முசே கொடுத்தேன் சொன்னது : "உன் வீட்டிலே லக்ஷத்திருபதினாயிரம் (1,20,000) விராகன் புதைச்சு யிருக்குதென்று ருசுவாயி யெனக்கும் மனுஷர் வந்து சொல்லி யிருக்குறார்கள். அப்படி யிருக்க நீ யேன் ரொம்ப வருத்தப்படுகுறாயே? சும்மா பணத்தைக் குடுத்து விடு," யென்று சொன்னான். பாப்பய்யப் பிள்ளை சொன்னது, "பணமிருந்தால் ஒரு மாசமாய் யென் மகன் கசோத்திலே கிடந்து சோறுமில்லாமல் சாகச்சே பார்த்துக் கொண்டிருப்பேனா? அப்படி யிருக்கத் தக்கினதில்லை எவன் யென் கையிலே பணமிருக்கிறது யென்று சொன்னானோ அவன் வந்து ருசு பண்ணதே உண்டானால் நான் பொய் சொன்னதுக்கு யென்னையும் யென்னுடைய பமிலையும் தூக்கிப் போடுங்கள் அவன் ருசு பண்ணாவிட்டால் ஒண்ணு அவனைத் தூக்கிப் போடுங்களெ," ன்று சொன்னான். யில்லை உன் கையிலே பணமிருக்குது. நீ பொய் சொல்லுகுறாய். யின்னம் ரொம்ப கஸ்திப்படுவாய் யென்றும், உனக்கென்ன வியாதி ஒண்ணுமில்லை, மங்கல மேஸ்திரியை அழைச்சுப் பார்க்கச் சொல்ல வேணு," மென்று முசே கொடுத்தேன் சொல்லிப் போட்டு மூணு பேருமாய் முசே லெறியண்டைக்கிப் போனோம்.

அங்கே முசே கொடுத்தேன் சொன்னது : "அவனானால் பணத்துக்கு சம்மதியில்லை. அவன் வியாதி யென்று சொல்லுகுறான். மங்கல மேஸ்திரியை அழைச்சு வரச்சொல்லி பார்க்க வேணு," மென்று மங்கல மேஸ்திரியை அழைச்சு வரச் சொன்னான். அவன் ராத்திரி

ஒன்பது மணிக்கி வந்து பாத்து யிவனுக்கு நோவு ஒண்ணுமில்லை யென்று சொன்னான். பாப்பய்யப் பிள்ளை சொன்னது, "யென்னைப் பார்த்தால் உமக்கு யென்னமா தோத்துது? யேழு மாசமாய் காச்சலும் குளுருமாய் எழுந்திருக்க மாட்டாமல் படுத்த படுக்கையாய்க் கிடக்குறேன். ஒண்ணுமில்லை யென்று சொல்லுகுறீரே? யென்னைப் பார்த்தால் தெரியாதா? அதன் பேரிலே மங்கல மேஸ்திரி முசே லெறி யண்டை போயி தப்பும் தாருமாய் அவனுக்கு நோவு ஒண்ணும் யில்லை, மாரீசம் பண்ணிக் கொண்டு யிருக்குறா ரென்று சொல்லிப் போட்டு பிறப்பட்டுப் போயி விட்டான்.

அப்பறம் சாயங்காலம் ஆறரை மணிக்கு முசே லாலி வெளியே போயிருந்தவன் வந்து தான் குடியிருந்த வீட்டிலே வந்திருந்து மறுபடி ஒன்பது மணிக்குப் பிறப்பட்டு வெளியே போயிவிட்டான். நயினாரை அழைச்சு பணத்துக்கு ஒப்பிக் கொண்டவர் கையிலே கெடுவுப் பிறகாரம் ஒரு நிமிஷமாகிலும் யேராமல் படிக்கி பணத்தைத் தண்டி செலுத்தினாலே ஆச்சுது. யில்லாவிட்டால் உன்னைக் கட்டிவைச்சு அடிப்போம், காதை அறுத்துப் போடுவோம், தூக்கிப் போடுவோம் என்றும், நாய் யென்றும் பேய் யென்றும் விசேஷங்களை முசே கொடுத்தேன், முசே துப்பிளாம், லெறி யிவர்க ளெல்லாம் சொன்னார்கள். அதின் பேரிலே நயினாரும் நல்லதென்று பிறப்பட்டுப் போயி விட்டான். அப்பிறம் டங்காசாலை பாபுராயனை அன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கச் சொல்லி ஒரு ரூபாயளவிலே குறைஞ்சால் யென்னுடைய உத்தாரம் யில்லாமல் வாங்கத் தேவையில்லை யென்று முசே லாலி கசோத்திலே வைக்கச் சொல்லி யிருந்தாரே. யிப்ப முசே மாயோர் (Meyer) முகாந்திரமாய் லாலியுடனே தானே பேசி ஒரு கடுதாசி முசே லெறி பேருக்கு வாங்கி வந்தான். யென்னாயென்றால் பாபுராயன் கையிலே பதினாயிரம் ரூபாயி நாளைக் காலமே சாமத்துக்குள்ளே வாங்கிக் கொண்டு காவல் விட்டு விடுகிறது. அவன் குடாவிட்டால் அவன் தம்பி ராமச்சந்திரராயனையும் கூட ரெண்டு பேரையும் தூக்கிப் போடுகிறதென்று யெழுதியிருந்தது. அந்தக் கடுதாசி முசே கொடுத்தேன் அண்டைக்கி வந்தது.

அதை முசே லெறி கையிலே குடுத்தான். அவரந்தக் கடுதாசியைப் பார்த்துக் கொண்டு முசே லாலி யானால் யெழுதியனுப்பி விச்சார். பதினாயிரம் ரூபாய் உனக்கு வரி போட்டு உன் கையிலே வாங்கிக் கொள்ளச் சொல்லி, குடாவிட்டால் உன்னையும் உன் தம்பி ராமச்சந்திரராயனையும் அண்ணனையும் தூக்கிப் போடச் சொல்லியும் எழுதிபனுப்பி யிருக்குறாரென்று சொன்னதுக்கு, ராமச்சந்திர ராயன் சொன்னது, "ரங்கப் பிள்ளையுடனே சொல்லியிருக்குறேன். ஆராயிரம் ரூபாய் தாரோமென்று அதுவே யல்லாமல் யென் கையிலே வேறே அகப்படாது. நீங்கள் யென்ன செய்தாலும் சம்மதி தா" னென்றும் முகம்

தெளிவாய்த் தானே கெட்டியாய்ச் சொன்னான். அதன்பேரிலே, "நல்லது உன் அண்ணனைக் கண்டு பேசி வா" யென்று முசே லெறி சொன்னார். அந்தப்படிக்கி பாபுராயனண்டைக்கு போய்க் கேட்டு வர யென்ன யிருக்கு யென்று சொல்லி ராமச்சந்திரராயன் அண்ணன் பாபுராயனைக் கண்டு பேசிக் கொண்டு, மறுபடி முசே லெறி யண்டை யென்ன கவை யென்று, யெல்லாம் முசே கொடுத்தேன் அண்டைக்கிப் போனான். யித்தனை முகம் தெளிவும் யெதினாலே யென்றால் மயோர் முகாந்திரமாய் முசே லாலி கையெழுத்துக் கடுதாசியிலே பதினாயிரம் ரூபாய் அங்கே தீத்துக் கொண்டு யிவ்விடத்திலே பதினாயிரம் ஆராயிரம் யென்ன குடுக்குறானோ, அது போக மத்தது முசே லாலிக்கு குடுக்குறோமென்று பேசி, கடுதாசி வாங்கிக் கொண்டு வந்தானே என்கிறதாய் சமாச்சாரம் கேட்டோம்.

மத்தப்படி ராத்திரி ஒன்பது மணிக்கி முசே துப்பிளாமும் முசே மோற்சேனும் வந்து முசே லெறியைக் கண்டு பேசிப் போனார்களென்றும், அப்பிறம் பதினோரு மணிக்கி முசே கொடுத்தேன் வந்து கண்டு பேசிப் போனானென்றும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

வாணிய நயினாத்தை முதலி சம்மதிக்கி முசே லெறியைக் கண்டு பேசினவிடத்திலே அவர் சொன்னது, "முசே லாலி எழுதின லீஸ்துருவிலே ஆனால் மூவாயிரம் ரூபாயி எபதி யிருக்குது. நீர் வந்து அவனுக்குக் குடுக்க நிறுவாகமில்லை யென்றல்லவா சொல்லுகுறீர்? அவனை ஆயிரத்தன்னூறு ரூபாய் குடுக்கச் சொல்லு," மென்று சொன்னார். அவனுக்கு அந்தப்படிக்கி சீட்டு வாங்கிக் கொண்டு வாரும் யென்றும், அவனை வந்து ஊரிலே யிருக்கச் சொல்லும் யென்று சொன்னார். அவனுக்குச் சொல்லி யனுப்பிவிச்சதுக்கு யின்னையதினம் காலமே வந்து நம்மைக் கண்டு பேசினான். நாம் ஆயிரத்தன்னூறு ரூபாய் குடுக்கும்படிக்கி முசே லெறி சொன்னான் யென்று சொன்னதின் பேரிலே, முசே துபுவா யிருந்து கொண்டு, "அவனுக்கு ஆஸ்தி ரொம்ப யிருக்குது, ஆனபடியினாலே அவன் மூவாயிரம் ரூபாயும் சரியாய்க் குடுக்கலா," மென்று ரொம்பத்தானே சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, நயினாத்தை முதலி யெங்கிறவன் கும்பினி உத்தியோகம் பண்ணவனல்லா ஊரிலே வாணியருடனே கூடிக் கொண்டு ஒரு எண்ணை வியாபாரம் பண்ணிக் கொண்டு குடியானவனாய்ப் பயிரிட்டுக் கொண்டு தரியுறவன். அவனுக்குக் குடுக்குறதுக்கு யில்லை," யென்று ரொம்பவும் சொன்னதின் பேரிலே, முசே லெறி சொன்னது, "ஆயிரத்தன்னூறு ரூபாயிக்கி சம்மதிச்சு சீட்டு யெழுதிக் குடுத்தால் வாங்கி வாரும். அவனை ஊரை வரச்சொல்லும். யில்லாவிட்டால்

வெளியே தானே போகச் சொல்லும்" யென்று உத்தாரம் குடுத்தார். ஆனபடியினாலே அந்தப்படிக்கி சம்மதிச்சுக் கொள்ளுரோ மென்று சொன்னதுக்கு, அவன் சொன்னது, ஆயிரத் திறநூறு (1200) ரூபாயானால் யெனக்குச் சம்மதி, யில்லாவிட்டால் நிறுவாகம் யில்லை யென்று சொன்னான். யிந்த மட்டுக்கும் சம்மதிச்ச நீய் முன்னூறு ரூபாய்த் தானே அப்பாலே வேண்டாம். அந்தப் படிக்கித் தானே ஒப்புக் கொள்ளுயென்று சொன்னோம். யென்ன சொன்னாலும் அவன் ஆயிரத் திரநூறு ரூபாய்க்குத்தானே பேசினானே யல்லாமல் யேறப் பேசயில்லை. அதுக்கு நாம் சொன்னது : "உங்கள் பாதிரி சேஷ்ட்டரிருக்கிறார். பின்னையும் அவரவர் யிருக்குறார்கள். அவர்கள் (இடம்) போயி யோசனை பண்ணிக் கொண்டு வா," வென்று சொன்னோம். அவன் சொன்னது, "பாதிரியள் அண்டைக்குப் போனால் பின்னையும் ரெட்டிச்சுப்போம். சகலத்துக்கும் தாங்களேயல்லாமல் வேறேயில்லை. ஆயிரத் திரனூறு ரூபாயானால் எனக்குச் சம்மதி. யிங்கே யிருக்கிறேன் யில்லாவிட்டால் நான் வெளியே போயிருக்குறேன்," யென்று சொல்லிப்போட்டுப் போயிவிட்டான்.

***1760 வருசம் மே மாசம் தேதி 25; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 16; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி முசே கில்லியார் பின்னையும் சிறிது வெள்ளைக்காரரும் கோவிலுக்குப் போயி வந்து மேல் வீட்டின் பேரிலே யிருந்தார்கள். அப்போ நாம் போயி ஆசாரம் பண்ணினோம். அவர்கள் பதில் ஆசாரம் பண்ணி சத்து நேரம் பேசிக் கொண்டு யிருந்தோம். அப்போ முசே புலோவும் வந்தார். அதிலே பதினோரு மணி அடிச்சது. முசே லெறி உள்ளே போயிவிட்டார். அவரவர் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போயிவிட்டார்கள். நாமும் பதினோரு மணிக்கி வீட்டுக்குப் பிறப்பட்டு வந்துவிட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் நாலு மணிக்கி யிங்கிலீசுக்காரருடைய குதிரை யிறநூறு முன்னூறு மாத்திரம் பிரம்பை மேட்டிலே வந்து காலாடினதின் பேரிலே நம்முடவர்கள் பீரங்கி வெடியும் துப்பாக்கி வெடியும் சுட்டதின் பேரிலே அந்தக் குதிரைக்காரர் (பின்) வாங்கி தண்டுக்குப் போயி விட்டார்கள் யெங்கிறதாய் நாம் சுவாரி போனவிடத்திலே சாமாச்சாரம் சொன்னார்கள். இங்கிலீசுக்கார தண்டு யித்தனாளும் பயமில்லாமல் நிர்ப் பயமாய் யிருந்தார்கள். யிப்போ ரெண்டு மூணுநாளாய் பிரான்சுக்காரர் வந்து ராவிலே பகலிலே யெந்த வேளையிலே வந்து விழுகுறார்களோ யென்றும் பயப்பட்டுக் கொண்டு யிருக்குறார்களென்றும், யிதல்லாமல் முன்னே இங்கிலீசுக்காரர் வெளிகளிலே கிராமத்திலே

கொள்ளை வல்லடி யிடுகுறதும் செனங்களை உபத்திரவம் பண்ணுகுறதும் வீடுகளைக் கொளுத்துறதும் சூராவரி பண்ணுகுறார்கள். முன்னே இங்கிலீசுக்காரர்கள் கொள்ளை வல்லடி பண்ணாமலிருந்தார்கள். யிப்ப நிர்ப்பயமாய் கொள்ளை வல்லடி பண்ணுகுறார்கள். யிப்படி யெல்லாம் நடப்பிவிக்குறார்கள் என்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் ராத்திரி பனிரெண்டு மணிக்கு அப்பாலே அரை மணி அடிச்ச நேரத்திலே முசே புலிக்கு (M. Pouly II) இரண்டாவதாக யிருக்கிறவனும், முசே லாலி யுடைய தொறகம் (dragoon) யென்கிற குதிரைக்காரர் யிருபது முப்பது பேர்களும் சிறிது சேவுகர்களும் வந்து, பிராமணத் தெருவிலே முன்னே சானோசி நிம்பனக்கர் வைக்கீலாயிருந்தவன், யிப்போ முசியே புசியண்டை வைக்கீலாயிருக்கிற சாமாராயனென்கிறவனை வந்து பிடிச்சுக் கொண்டு அவன் வீட்டிலே நூத்தன்பது விராகன் முடிப்பு யிருந்ததையு மெடுத்துக் கொண்டு அவனையும் கொண்டு போயி முசே லாலி யண்டைக்குக் கொண்டு போயி விட்டவிடத்திலே, வில்லியநெல்லூர் கொத்தளத்தின் மேலே ஒரு கசோத்திலே போடச்சொன்னார். அந்தப்படிக்குக் கொண்டு போயிப் போட்டார்கள். யிருந்த விராகனை மாத்திரம் அவன் கையிலே தானே குடுத்துவிட்டார்களென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

சாமராய னென்கிறவன் யெதினாலே பிடிச்சுக் காவலிலே வைச்சதென்றால், பத்து நாளைக்கு முன்னே முசே லாலி சொல்லிக் கொண்டிருந்தது. ஆரோ யிங்கே யிருந்து யிங்கிலீசுக்காரருக்குப் புதுச்சேரியைப் பிடிச்சுக் குடுக்கிறதாய் காகிதம் பத்திரம் யெழுதுகுறார்கள் அவர்களும் அகப்படுவார்கள் யென்கிறதாய்ச் சொன்னதாய் வெள்ளைக்காரர் சொன்னார்கள். அவரவர் யெச்சரிக்கையா யிருக்க வேணுமென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதுக்குச் சரியாய் முசே புசியும் யிங்கேலீசுக்காரர் அண்டைக்குப் போக்கு வரத்தாய் யிருந்தபடியினாலேயும் முசே புசியுடைய தீவான் நாகோஜி நாயக்கன் வெளியே வேலூரிலே யிருக்கிற படியினாலேயும், சாமாராயன் யிவனுமாய் வைக்கீலாய் யிருக்கிற படியினாலேயும் யென்னமோ உள்ளுக்கு உள்ளாக காகிதப் பத்திரம் நடந்திருக்க வேணும். ஆனபடியினாலே அந்தப் பொகுடி முசே லாலி அறிஞ்சு சாமாராய னென்கிறவனைக் காவலிலே வைக்கச் சொன்னார். விராகனை மாத்திரம் குடுத்துவிட்டு காகிதப் பத்திரங்களை வச்சுக் கொண்டபடியினாலே அந்தக் கடுதாசிகளைப் பார்க்குமிடத்திலே யேதாகிலும் பொகுடி அகப்பட்டால் முசே புசிக்கும் பளுவுதான். சாமாராயன் என்கிறவனுக்கும் பளுவுதான் ஒண்ணு மில்லாவிட்டால் நெளுவாய்ப்போம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 26; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 17; திங்கள்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நமக்கு நாலஞ்சுதரம் பேதியான படியினாலே வெளியே போகயில்லை. கேழ்க்கப்பட்ட சேதி, ஒன்பது மணிக்கி குமிசெல் கூடி பனிரெண்டடிச்சு அரைமணிக்கு மட்டுக்கும் பேசியிருந்து கலைஞ்சு போனார்கள் யென்கிறதாய் சொன்னார்கள். யெது நிமித்தியம் கூடினார்களோ அது தெரிஞ்சு எழுதவேண்டியது.

இத்தனாள் காலத்தாலே ஒடிப்போனவர்கள் வீடுகள் அவர்களுடைய தட்டுமுட்டு களெல்லாம் எடுத்து, யெழுதி யேலம் போடத்தக்கதாக தீந்து முசே புலோ பெண்சாதி மகன் முசே பொர்ஷேரும் (M. Le. Faucheur) முசே கொடுத்தேனுடைய சக்கிரத்தார் ஒரு கணக்கனும் சாவடி கணக்கப் பிள்ளையும் பிறப்பட்டு மரியதாசு வீடும் தரகு வெல்லப்பிள்ளை (Broker Vellapilly) மகன் தெய்வ சகாயம் வீடும் ரெண்டு வீடும் அந்த வீட்டிலே யிருக்கிற தட்டுமுட்டும் எடுத்தெழுதி முத்திரிச்சுப் போட்டுப் போனார்கள். பகலைக்கு மேலாயும் மத்த கிறிஸ்துவர் தமிழர் வீடுகளெல்லாம் சாப்பிதாப்படிக்கி எடுத்தெழுதி யேலம் போடப்போறார்களெங்கிறதாய் சாவடி கணக்கு சியால் பிள்ளை வந்து கபுறு சொல்லிப்போட்டு போனான்.

யித்தனாள் பகலைக்கு மேலாய் சலது வெங்கிடாசல செட்டி வீடு முஞ்சனூர் மாற்கசகாய செட்டி வீடும் சமறக்கு மன்னாரு செட்டி வீடு சின்ன உண்ணாமலை செட்டி பெரிய உண்ணாமலை செட்டி வீடு யிந்த அஞ்சு வீடும் முசே பொர்சேர் (Le Fauchern) என்கிறவனும் முசே கொடுத்தேனும் அவனுடைய கணக்கனும் சாவடி கணக்கப்பிள்ளையளும் போய் தட்டுமுட்டு களெல்லாம் எடுத்தெழுதி ஒரு வீட்டிலே போட்டு சாத்தி முத்திரை போட்டு போகச் சொன்னது அவரவர் வெளியே போயி விட்டால் அவர்கள் லீஸ்துருவிலே எழுதி யிருக்கிற படிக்கி பணம் குடுத்துவிட்டால் தேவையில்லை. அல்லவென்றால் யேலம் போட்டு விடுவோமென்று சொல்லிப் போட்டுப் போயி விட்டார்கள். யித்தனாள் நேத்தே பிடிச்சு ஊரிலே குடிகளெல்லாம் தங்கள் வசத்திலே யிருக்கிற நெல்லுகள் வீட்டுக்கு நானூறு வளவும் முன்னூறு வளவும் யிப்படி யிருக்குதே யல்லாமல் வகுப்பாய் ஒருத்தருக்கும் யில்லை. சந்தாசாயபு வீட்டிலே மாத்திரம் யேழுகரிசை நெல்லு யிருக்கு யிந்தப்படிக்கி யிருபத்து மூணே கால் கரிசை நெல்லு முன்னே சாவடி கணக்கப்பிள்ளையள் எழுதிக்குடுத்தார்கள். ஊர்பட அன்பது அறுபது கரிசை நெல்லு பத்து வெள்ளமும் அஞ்சு வெள்ளமும் யிருக்கிறதெல்லாம் சில்லரைக்கூட எழுதிக் குடுத்திருந்தார்கள். அதுகளெல்லாம் யிப்போ துவக்கி அவரவர் வீட்டிலே யிருக்கிற நெல்லுகளிலே பாதி நெல்லுக்காறருக்கு குடுத்து

பாதி சாவடி கணக்கப்பிள்ளையள் போயி கும்பினீருக்கு எடுத்துக் கொள்ளுகுறார்கள் நேத்தயதினம் அன்பது பேர் சொலுதாதுகளும் ரெண்டு பேர் ஒப்பிசியால்மாரும் கருக்குடிக்குப்பம் குண்டுசாலை வழியிலே யிருந்த அன்பது பேர் சிப்பாயியளும் துப்பாக்கிகளுடனே பிறப்பட்டு யிங்கிலீசுக்காரர் தண்டிலே போயி சேர்ந்து போனார்களெங்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி நேத்து ராத்திரி மீராப்பள்ளி (Mirapalli) சின்னக்கடையண்டை வெள்ளைக்காரன் வீட்டிலே சன்னலைப் பேத்து உள்ளே புகுந்து பெட்டியை உடைச்சு ரெண்டாயிரம் வராகன்களோ ரூபாயோ யெடுத்துக் கொண்டு போயி விட்டார்கள் அந்த உடமைக்காரன் போயி முசே லாலியுடனே சொல்லிக் கொண்டார். அவர் முசே கொடுத்தேனுக்குச் சொல்லி யனுப்பி விசாரிக்கச் சொன்னார். முசே கொடுத்தேன் நயினாரை அழைச்சு ராத்திரிக்கி யிப்படி வெள்ளைக்காரன் வீட்டிலே திருட்டுப் போனது யேன் நம்முடனே சொல்லயில்லை யென்று கேட்டதின் பேரிலே நான் அந்த சமாச்சாரம் அறியெனென்று சொன்னதின் பேரிலே நானா அழைச்சுக் கேட்டும் நீ அறியேன் யென்று சொல்லுவியா யென்று கையிலே யிருந்த தடிப்பிறம்பாலே அஞ்சாறு அடி அடிச்சதாகவும் அதன் பேரிலே பணத்தைப் போக்கடிச்சுக் கொண்டவன் துக்கத்தின் பேரிலே கத்தியை உருவிக் கொண்டு துரத்தினதாகவும் அதன்பேரிலே பிறப்பட்டு முசே திப்பிளாம் அண்டையே போயி யிதுகளெல்லாம் சொல்லி அழுதானென்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. அந்தப்பணம் போக்கடிச்சுக் கொண்ட வெள்ளைக்காரன் அண்டையிருக்கிற வேலைக்காரன் சட்டைக்காரன் ஒருத்தனை திருடினானென்று பிடிச்சுக் கொண்டு முசே பனோ அந்த சட்டைக்காரனைக் கட்டி வைச்சு அடி அறுபது அடிச்சு கேட்டவிடத்திலே நான் அறியேன் யென்று சொன்னான். அவனை மறுபடியும் காலிலே மடிச்சுப்போட்டு சாவடியிலே போடச்சொல்லி சொன்னார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டது.

***1760 வருசம் மே மாசம் தேதி 27; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 18; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் கோவிலுக்குப் போயி பூசை கேட்டுப் போகச்சே அறமி செட்டி செட்டியள், நாட்டாமைக்காரர் செட்டியள் பத்துப்பதினைஞ்சு பேராய் கூடிக் கொண்டு ஆதிமூலம் ஆண்டா செட்டி வியாச்சியம் நிமித்தியமாக முன்னே முசே கொடுத்தேன். பேருக்கு ஒரு பித்திசாமெழுதி குடுத்ததைப் படித்துப் பார்த்துக் கொண்டு நாம் முன்னே தானே யிறநூத்தன்பது வராகனாய் தீத்துப் போட்டோம். யினிமேல் வியாச்சியமில்லை போ வென்று சொன்னதின் பேரிலே யின்னைய தினம் யிந்த ஞாயமெல்லாம் ஒரு

பித்திசாமெழுதி முசே லெறி கையிலே குடுத்தார்கள். அதைப் பாத்துக் கொண்டு நல்லது தீத்துப் போடுகுறேன் போங்களென்று சொல்லிப் போகச் சொல்லி அந்த பித்திசாமை முசே கொடுத்தேன் கையிலே குடுத்து முசே லெறிக்கும் முசே கொடுத்தேனுக்கும் யென்னமோ ஒரு விசேஷம் நடந்ததாக கேழ்விப்பட்டோம். யினிமேல் யென்ன நடக்குமோ தெரியாது. முசே மாயோர் (M. Meyer) என்கிறவன் மறிக்கி கொம்பிளாம் வடக்கே சிக்காகோல் ராசமகேந்தரம் யிதுகளிலே யெண்ணாயிரம் ரூபாயிக்கு ஒரு வச்சிரம் ஒண்ணு வாங்கி யிருந்தான். அதை யிப்போ ஏலம் போடச்சே மாயோர் என்கிறவன் அந்த வச்சிரத்தை யேழாயிரத்தன்னூறு ரூபாயி வில்லேத்து வாங்கினான் (Bitte) அந்த சமாச்சாரம் முசே லாலி அறிஞ்சு முசே மாயேரை அழைச்சு நீர் வாங்கின வச்சிரத்தைக் குடும் அந்த ரூபாயி நான் குடுத்து விடுகுறேன். அந்த வச்சிரம் யீரோப்புக்கு மறக்கி கொம்பிளாம் தமையனிருக்குறார். அவருக்கு அனுப்ப வேணும். அதைக் குடுமென்று கேட்டதுக்கு, முசியே மாயோர் சொன்னது, "நானும் ஆசைப்பட்டு தான் வாங்கினேன். குடுக்கப் போகாது" என்று சொன்னதின் பேரிலே காவலிலே யிருக்கு (வேண்டும்) மென்று முசே லாலி சொன்னதுக்கு மாயோர் சொன்னது, "நீர் தானே ஞாயம் அறியாமல்ப் படிக்கி காவலிலே யிருக்கச் சொன்னால் மெத்த நல்லதென்று" சொன்னான். அந்தப்படிக்கி கோட்டையிலே கொஞ்சனாள் வைச்சார்கள்.

யித்தனாளும் முசே பொர்ஷே ரென்கிறவனும் முசே கொடுத்தேனுடய கணக்கப்பிள்ளையும் சாவடி கணக்கப்பிள்ளையளும் பிறப்பட்டு கோமுட்டி தெருவிலே கண்டால் குருவப்ப செட்டி, கர்ணாவரம் திருப்பள்ளி செட்டி பின்னையும் நாலஞ்சு வீடுகளும் எழுதினார்கள். பின்னையும் சிறிது வீடுகளிலே பெண்டுகள் பிள்ளையள் யிருந்த வீட்டுகளை யெல்லாம் எழுதாமல் தேவையில்லை யென்று விட்டுப்போட்டு பகலைக்கு மேலாக மீரா(ப் ப்ளளி) வெளியிலே போயி கோனகர் வீடும் கிறிஸ்தவர் வீடும் யிருபது முப்பது வீடு மட்டுக்கும் எழுதினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யித்தனாளும் சிறிது வீடுகளிலே பாதி நெல்லு யெடுத்துதும் முச்சூடும் யெடுத்துக் கொண்டதும் யிந்தப்படியாக சாவடி கணக்கப்பிள்ளையள் எடுத்தார்கள்.

***1760 வருசம் மே மாசம் தேதி 28; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 19; புதவாரம்***

இத்தனாள் நாம் வெளியே போகயில்லை கோட்டைச் சேதி யென்ன யென்றால், விசாரித்ததில் முசே கொடுத்தேன் முசே லாலியண்டைக்குப் போனானென்றும் முசே மொற்சேன் (M. Moracin) மாத்திரம் பத்து மணிக்கு வந்து பனிரெண்டு மணி மட்டுக்கும் முசே லெறி யண்டைக்குப் போய் பேசியிருந்து போனானென்றும் பின்னையும்

வரயில்லை யென்றும் மறக்கி கொம்பிளாமுடைய தட்டு முட்டு யேலம் போட்டார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் சேதி கேழ்க்கப்படயில்லை.

***1760 வருசம் மே மாசம் தேதி 29; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 20; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் யெட்டு மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கதவை அடைச்சுக் கொண்டு கடுதாசி யெழுதுராரென்றும் சொன்னார்கள். நாம் மேலே வீட்டின் பேரிலே தானே ஒன்பது மணி மட்டுக்கும் யிருந்தோம். அது வரைக்கும் கதவு திறக்கவுமில்லை. வெள்ளைக்காரர் ஒருத்தரும் மேல்வீட்டின் பேரிலே வந்ததில்லை. பிடவைப்பார்க்கிற சாலையிலே முசே புலோ வந்திருந்து மறக்கி கொம்பிளாமுடைய தட்டு முட்டுயெல்லாம் யேலம் போட்டார்கள். அவ்விடத்திலே மாத்திரம் சிறிது வெள்ளைக்காரரும் கும்பலாயிருந்தார்கள். நாம் அப்பிறம் பிடவைப் பார்க்கிற சாலையை நாம் வந்தோம். வந்தவிடத்திலே ராமச்சந்திரராயன் வந்து, "பாத்தியளா முசே கொடுத்தேன் நம்பி மோசம் போனேன். சனிக்கிழமையன்றைய தினம் பதினாயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லி அவர்கள் கேட்டதுக்க நான் ஆறாயிரம் ரூபாயிக் குடுக்கிறோமென்று சொன்னதுக்கு பதினாயிரம் ரூபாய் சரியாய் குடுத்தால் ஆச்சுது யில்லாவிட்டால் தூக்கிப் போடுவேன் என்று சொன்னார்கள், யிப்போ முசே லெறி அழைச்சு இருபதினாயிரம் ரூபாய்க் காங்காட்டும் ஒரு கெடுவுக்கு பதினாயிரம் ரூபாய் நீய் யிருபதினாயிரம் ரூபாய் சரியாய் குடுக்கவேணும் இல்லாவிட்டால் ரொம்ப கஸ்திப்படுவாய் யென்று சொன்னா" ரென்று சொன்னதுக்கு நாம் சொன்னது, "நீர் என்ன விசேஷம் பேசி யிருந்தீரோ உமக்கல்லவோ தெரியு," மென்று சொன்னோம். அப்படி பேசிக் கொண்டிருக்கச்சே முசே சொல்மியாக்குக்குப் பதிலாய் யிப்போ புதுசாய் கடலோரத்துக்கு வைச்சிருக்கிற வெள்ளைக்காரன் ஒருத்தன் அவன் வந்து ராமச்சந்திரராயனை அழைச்சுக் கொண்டு அப்பாலே போய் யிப்படியானால் முசே லாலி முசே துபுவாவுக்கு ஒரு கடுதாசி ஒண்ணு எழுதியனுப்பி விச்சார். அதுயென்ன வென்றால் டங்காசாலை பாபுராயனைக் காவலிலே வைச்சிருக்குதே அவன் கையிலே ரெண்டு மூணு நாளையிலே பதினாயிரம் ரூபாயும் அப்பிறம் ரெண்டு மூணு நாளையிலே பதினாயிரம் ரூபாயும் யிப்படி இருபது னாயிரம் ரூபாயும் குடுத்தலாச்சுது. யில்லாவிட்டால் யிப்ப காவலிலே வைச்சிருக்கிற பாபுராயனையும் அவன் தம்பி லக்ஷமணராயனையும் ரெண்டு பேரையும் கசோத்திலே பிடிச்சுப் போடச் சொல்லி எழுதி வந்தது. அந்தக்

கடுதாசியை நான் எதிரான் வீட்டான படியினாலே யெனக்கு காண்பிச்சான். நான் அந்தக் கடுதாசியைப் பார்த்தேன் யென்று சொன்னான். அந்த சமாச்சாரம் நம்முடைய வீட்டுக்கு வந்து சொல்லிப் போட்டு அவன் அண்ணன் பாபுராயனைப் போய் கண்டு பேசி மறுபடியும் வந்து முசே புலோ உடனே வந்து யென்னமோ ரெண்டு பேரும் பேசிப் போட்டு வெள்ளைக்காரத் தெருவை போயிவிட்டான். ராமச்சந்திரராயன் முகத்தை பார்த்தால் சனியன் அ(ன்னைக்) கிருந்த உற்சாகத்தைப் போலே யிருக்கயில்லை. யிண்ணைக்கு (?) ரொம்ப கிலேசமாய் யிருந்தான்.

அப்பறம் பதினோரு மணிக்கு முசே துபுவா வந்து பாதிரி விசுப்பும் ரெண்டு பேரும் வந்து முசே லெறியைக் கண்டு பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டுப் போகச்சே, முசே துபுவா பாதிரி பிசுப்பு வண்டி யேறிக்கொண்டு பிறப்பட்டுப் போயிவிட்டான். விசுப்பு கண்டு ராமலிங்கம் பிள்ளை வந்தான். பேசினது ராமச்சந்திரராயன் பேச்சுக்காக நமக்கு யெப்படி யிதோ ஆச்சு, அதோ ஆச்சு யென்று சொன்னானோ அப்படித் தான் அவனுக்கும் ராமலிங்கம்பிள்ளை வந்தவன் பாப்பய்யப் பிள்ளையண்டையே போய் கண்டு பேசிப் போட்டு போயி விட்டான். அப்பிறம் நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

யித்தனாள் கேட்க்கப்பட்ட சேதி யென்ன யென்றால், முந்தானாள் முசே கொடுத்தேன் அண்டையிலிருக்கிற சேவுகன் ஒருத்தன் ஒரு ஒப்பிசியால் அண்டையிலே யிருக்கிற குசினிக்காறப் பறையனுக்கும் யென்னமோ பேச்சு நடந்ததின் பேரிலே, அந்த சேவுகன் முசே கொடுத்தேனுடனே சொல்லி, அந்தக் குசினிக்காறப் பறையனை அஞ்சாறு அடி அடிச்சான். அந்தப் பறையன் போயி அவன் ஒப்பிசாலுடனே சொன்னான். ஒப்பிசால் சொன்னது, அந்த சேவுகன் முசே கொடுத்தேன் வீட்டிலே யிருக்கச்சே பார்த்து வந்து சொல்லென்று சொன்னான். ஒப்பிசால் சொன்னது, அந்த சேவுகன் முசே கொடுத்தேன் வீட்டிலே யிருக்கச்சே பார்த்து வந்து சொல்லென்று சொன்னான். அந்தப் பறையன் போயிப் பார்த்து சேவுகன் கொடுத்தேன் வீட்டிலே யிருக்கச்சே பாத்து வந்து சொன்னான். அந்த ஒப்பிசியால் முசே கொடுத்தேன் வீட்டே போனான். அந்த சேவுகன் வீட்டு வாசற்படி(யில்) யிருந்தான். அவனைப் பிடிச்சுக் கொண்டு அங்கே தான் அன்பதடி அடிச்சான். அவன் அய்யோ அப்பா யென்று கூப்பிட்டான். அங்கே நூறு பேர் மட்டுக்கும் கும்பலாகக் கூடினார்கள். அப்போ முசே கொடுத்தேனும் முசே பொர்சேயும் மதாம் பொர்சேயும் யிருந்தார்கள். வெளியே பிறப்பட்டுப் போகயில்லை. அந்தச் சேவுகனை அந்த ஒப்பிசியால் மறுபடியும் அவன் வீட்டை (வீட்டுக்குப்) பிடிச்சுக் கொண்டு போயி யிறுநூறு அடி மட்டுக்கும் அடிச்சு, கழுத்திலே கவுத்தைப் போட்டு மரத்திலே ஒசரத் தூக்கிப் போடுகுறோமென்று தூக்கிப்

போகச்சே, அந்த சேவுகன் குய்யோ முறோ யென்று கூப்பிட்டான். அதன் பேரிலே சேவுகனை விட்டுத் தொரத்தி விட்டான். அவன் வந்து முசே கொடுத்தேனுடனே சொல்லிக் கொண்டான். முசே கொடுத்தேன் அந்த ஒப்பிசியாலுக்கு ஒரு கடுதாசி யெழுதி ஒரு சேவுகன் கையிலே குடுத்தனுப்பி விச்சான். அந்தக் கடுதாசியை ஒப்பிசால் பார்த்து கிழிச்சு எறிஞ்சு போட்டு சேவுகனையும் அஞ்சாறு அடி அடிச்சுத் தொரத்திவிட்டான். அந்தச் சேவுகனும் வந்து சொன்னான். மறுபடியும் கண்டிதமாய் ஒரு கடுதாசி யெழுதி சேவுகன் கையிலே குடுத்தனுப்பினான். அந்தக் கடுதாசியை பீயைப் பேணு பீயிலே துவைச்சு சேவுகன் கையிலே குடுத்து யிந்தப் படிக்கி கொண்டு போயி குடுத்தாலாச்சுது, யில்லாவிட்டால் உன்னைக் கொன்று போடுவேன் யென்று சொன்னான். அவன் கடுதாசி அந்தப்படிக்கி கொண்டு போயி குடுத்தான். அதன் பேரிலே முசே கொடுத்தேன் முசே லாலி யண்டைக்குப் போயி சொல்லிக் கொண்டான். அதுக்கு முன்னே தானே யிந்த ஒப்பிசியாலும் பின்னையும் அஞ்சாறு பேராய்க் கூடிக்கொண்டு முசே லாலியுடனே சொல்லிக் கொண்டார்கள். அதன் பேரிலே முசே லாலி முசே கொடுத்தேனைத் தானே கோபிச்சுக் கொண்டதாகவும் அதன் பேரிலே நேத்தியதினம் எல்லாம் முசே கொடுத்தேன் ரொம்ப விசாரமாய் வெளியே பிறப்படாமல் வீட்டிலே தானே யிருந்தான். யின்றையதினம் மத்தியானம் வரைக்கும் கோட்டைக்கு வரயில்லை. அந்த ஒப்பிசியால்மார் அவர்கள் முசே கொடுத்தேனுடைய வயித்திலே யெங்களுடைய கத்தி ஒண்ணு வைக்கிறது, ஒண்ணு அவனுடைய கத்தியை யெங்கள் வயித்திலே வைக்கிற தென்றும் சொன்னார்கள் யென்றும், அதன் பேரிலே முசே பொர்ஷே, மதாம் பொர்ஷே யிவர்களெல்லாம் சொல்லிக் கொண்டது, முசே லாலிக்குப் பத்தமில்லையென்று ஒப்பிசியால்மாரை விட்டு குமிசெல்க்காரர் துரைகளைக் கொன்று போடச்சொல்லுகுறா னென்றும் சொல்லிக் கொண்டார்கள் என்கிறதாய் சேதி கேழ்க்கக்கப்பட்டது.

நாம் மத்தியானம் வீட்டுக்கு வரச்சே, முசே கொடுத்தேனுடைய பல்லக்கு முசே மோர்சேன் வீட்டண்டை யிருந்துது. அவன் சேவுகனை யென்ன ரெண்டு நாளாய் உங்கள் துரை(யைக்) காணோம் என்று கேட்டதுக்கு, ரெண்டு நாளாய் ரொம்ப விசாரமா யிருக்குறான் என்று சொன்னான். சாயங்காலம் மூணு மணிக்கு துவக்கிக் கோட்டையிலே முசே லெறியும் முசே னுவாரும் (Le Noir) ரெண்டு பேரும் கதவை அடைச்சுக் கொண்டு ராத்திரி யெட்டு மணி மட்டுக்கும் கடுதாசி யெழுதினார்கள் என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. அது யென்ன என்றால் யிவ்விடத்திலே நடக்கிற சமாச்சாரம் எல்லாம் சீமைக்கு யெழுதுகுறதாய் தோணப்பட்டுது.

யித்துனாள் மத்தியானம் இங்கிலீசுக்காரருடைய பின்னாசி சுலுப்பொன்று கொத்தளத்து ஓரமாய் வந்தது. அதன் பேரிலே நம்முடவர்கள் கப்பலிலே யிருந்து அஞ்சாறு பீரங்கியும் குண்டும் போட்டு சுட்டார்கள்.

யித்தனாள் முசே துப்பிளாம் கையிலே பதினாயிரம் ரூபாயிக்காகப் புதுச்சேரி பிறை அறுநூறு விராகன் செலுத்தினோம். முன்னே நாலாயிரம் ரூபாயி செலுத்தி யிருக்குறோம். அறுநூறு விராகனுக்கும் ரெண்டாயிரத்தி நூத்தித் தொண்ணூறு ஆக ஆராயிரத்தி நூத்து தொண்ணூறு ரூபாயி செலுத்தியிருக்குது. யிந்த ரூபாயிக்கு வீட்டிலே யிருந்த வெள்ளித் தட்டுமுட்டுகளையும், பொன் தட்டுமுட்டுகளை யெல்லாம் டங்காசாலையிலே உருக்கி வித்துக் குடுத்து சீனா லெத்தூர் (China La Tour)[1] கையிலே மூவாயிரம் ரூபாயிக்கி நாலாயிரம் ரூபாயிக்கி (க் கடன்) சீட்டு யெழுதிக் குடுத்தும் அடையயில்லை. யிதல்லாமல், அன்பது பேர் சிப்பாயிகள் சம்பளத்துக்கு வந்து அவர்களும் உபத்திரியம் பண்ணுகுறார்கள். ஆனால் போயிகள் சம்பளம் நிமித்தியம் சின்ன முதலியாரைப் போலெக் கொத்தவரை வெளியே யிழுத்து கட்டிலுடனே போட்டு லச்சை பண்ணச்சே, நம்மை வந்து நல்லதனமாய்க் கேழ்க்குற படியினாலே அதிலே நமக்கு சந்தோஷம். யினிமேல் சுவாமியுடைய தயவு யென்னமாய் நடப்பிவிப்பாரோ அது அறிய வேண்டியது.

இத்தனாள் கைக்குளத் தெரு, செட்டித் தெரு யிங்கே யெல்லாம் வீட்டுகளிலே பூந்து குழிபோட்டிருந்தது. கூட பேத்து பாதி நெல்லு யெடுத்துக் கொண்டு போறதும் முழுக்க எடுத்துக் கொண்டதும் யிப்படி யெல்லாம் சாவடி கணக்கப் பிள்ளையள் பூந்து யெடுத்தார்கள். யித்தனாள் நாம் மீராவெளி அவ்விடங்களிலே விடு எழுதப் போனவிடத்திலே சமுசார மிருந்த வீடுக ளெல்லாம் யெழுத்த தேவையில்லை யென்று தள்ளிப் போட்டார்கள். சுத்தமாய் ஆரும் யில்லாத வீடுகளை மாத்திரம் எழுதிக் கொண்டார்கள். யிது மாத்திரம் ஞாயம்.

***1760 வருசம் மே மாசம் தேதி 30; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 21; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே யேழு மணி துவக்கி பத்துமணி மட்டுக்கும் நம்முடவர்கள் பிரான்சுக்காரர் பிரம்பை மேட்டின்பேரிலே யிருந்தவர்கள் பேரிலே இங்கிலீசுக்காரருடைய பவுன்சு அன்னூறு அறுநூறு குதிரை மட்டுக்கும் பதிவு யிருந்தது. வந்து சண்டை

[1] இவர் சீன வியாபாரத்தில் ஈடுபட்ட ஒரு தனிப்பட்ட வணிகர் போலும்.

பண்ணினவிடத்திலே வெள்ளைக்காரர் பின்னிடைஞ்சு வாங்கி வந்தவிடத்திலே போயிகள் முனைஞ்சு நல்ல சண்டை பண்ணினவிடத்திலே சிப்பாயிகள் கப்பித்தானா யிருந்த செக்கு தூக்கி (Shaik Dukki) க்கும் அவனுக்கு ரெண்டாவதாயிருந்தவன் ரெண்டு பேருக்கும் பின்னையும் யிருபது முப்பது பேர் சிப்பாயிகளுக்கு காயமும் ஆச்சுதென்றும் கூட யிருந்த நாற்பது பேர் வெள்ளைக்கார சிப்பாயிகளுக்கு சாவுயென்றும் நூறுபேர் சிப்பாயிகள் துப்பாக்கியைப் போட்டு விட்டு ஓடிப்போனார்களென்றும் அந்த துப்பாக்கி யெல்லாம் யிங்கிலீசுக்காரர் யெடுத்துக் கொண்டு போனார்கள் யென்றும் அதின் பேரிலே நம்முடவர்கள் முறிஞ்சு வந்து விட்டார்கள் யென்றும் அப்பிறம் இங்கிலேசுக்காரருடைய குதிரை வாங்கி வடக்கே போகச்சே நம்முடவர்கள் ஒரு பீரங்கியாலே போட்டார்கள். ஒரு வெள்ளைக்காரன் குதிரைக்காரனுக்கு பட்டு குதிரை விழுந்து போச்சுது. அந்த வெள்ளைக்காரன் நம்முடைய உசார் குதிரைக்காரர் பிடிச்சுக் கொண்டார்கள் என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

காலமே ஒன்பது மணிக்கு நாம் கோட்டைக்கு போனோம். போன விடத்திலே முசே துப்பிளாம் வராததைத் தொட்டும் முசே கொடுத்தேன் சாவடி ஞாயத்துக்குப் போனபடியினாலேயும் முசே லெறி கதவை சாத்திக் கொண்டு கடுதாசி யெழுதிக் கொண்டிருந்தான். முசே துபுலா வந்து முசே லெறியைக் கண்டு பேசிக் கொண்டிருந்துப் பிறப்பட்டுப் போயிவிட்டான். நாமும் பதினோரு மணிக்கி பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். போனவிடத்திலே ஒரு விசேஷமும் நடக்கயில்லை. யித்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு முசே லெறி அழைச்சு அனுப்பிவிச்சார். நாம் போனவிடத்திலே அவர் சொன்னது லீஸ்துருலே எழுதியிருக்கிற பேர் வழியிலே தீந்த பேர்வழிகள் யெம்மாத்திரம் யென்று கேட்டார். யினிமேல் தீரவேண்டிய பேர் யெம்மாத்திரம் என்றும் எழுதி வரச்சொல்லி நயினாருடனே சொல்லி யிருந்தோம். கொண்டு வந்தீராயென்று கேட்டார். நாம் சொன்னது காலமே தானே கொண்டு வந்தோம். நீங்கள் அலுவலாய் யிருந்த படியினாலே கண்டு பேசுகுறதுக்கு யில்லாமல் போச்சுது யென்று சொன்னோம். நல்லது காலமே கொண்டு வாருமென்று சொல்லி யிது நிமித்தியம் தான் உம்மை அழைச்சு அனுப்பிவிச்சது. போமென்று சொன்னார். அதின் பேரிலே நாம் வெளியே பிறப்பட்டு சுவாரி போகச்சே முசே லாலியும் பாதிரிவிசுபும் லொறேஞ்சியும் ரெண்டு பேரும் வண்டியேறிக் கொண்டு வந்தார்கள். அப்பால் நாம் போகச்சே தண்டு நம்முடவர்கள் யிறங்கி யிருக்கிற விடத்திலே ஒரு பயித்தியக்காரன் பண்டாரம் ஒரு வேவுக்காரனென்று ஒரு அலுமாஞ்சு (German) வெள்ளைக்காரன் ஒருத்தன் கத்தியினாலே வெட்டி தண்டு கரைக்கு

எசமானாயிருக்கிற முசே புலியண்டைக்கி கூட்டி அனுப்பிவிச்சான். நாம் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்து விட்டோம். அவனைக் கதேலாலண்டைக்கு அனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

மத்தியானம் பனிரெண்டு மணிக்கு டங்காசாலை பாபுராயன் கசோத்திலே யிருந்தவன் யிருபதினாயிரம் ரூபாயாய் தீத்துக் கொண்டான். அதுக்கு கெடுவு யெட்டு நாளையிலே பதினாயிரம் ரூபாய் குடுக்கவும், பதினஞ்சு நாளையிலே நாலாயிரம் ரூபாய் குடுக்கவும் அப்பிறம் பதினைஞ்சு நாளையிலே ஆராயிரம் ரூபாய் குடுக்கவும் யிப்படி மூணு கெடுவுகளாய் குடுக்கச் சொன்னதின் பேரிலே ராமச்சந்திரராயனுக்குப் பின்னையும் பத்து நாள் கெடுவு யேறக்குறைய யிருந்தாலும் தீந்தது யிருபதினாயிரம் ரூபாய் சரியாய்க் குடுக்க தீத்துக் கொண்டு காவல் விடுதலை விடுதலையாயி வீட்டுக்கு வந்துவிட்டார். யிந்த ரூபாயி பாபுராயன் லக்ஷமனாராயன் ரெண்டு பேரும் தீந்தது.

***1760 வருசம் மே மாசம் தேதி 31; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 22; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்கி போனவிடத்திலே மறக்கி கொம்பிளாமுடைய தட்டு முட்டு யேலம் போட்டுக் கொண்டு யிருந்தார்கள் பத்து மணி மட்டுக்கும் முசே லெறி காம்பிரா கதவைச் சாத்திக் கொண்டிருந்து அதன் பிறகு கதவை திறந்து உடனே நாம் போயி ஆசாரம் பண்ணினோம். பதினோரு மணிக்கி முசே துபுவா வந்தார். முசே கொடுத்தேனை அழைச்சு வரச்சொன்னார். யேதாகிலும் தீருகற பேர்வழி உண்டாவென்று கேட்டார். நாம் பிரான்சிலே எழுதிக் கொண்டு போன பதினெட்டு பேர்வழியும் மூணுபேர் ஊரிலே யிருந்து கொண்டு முகம் தப்பிச்சுக் கொண்டு யிருக்கிறவர்களும் ஆக 21 பேர்வழிகளும் எழுதிக்கொண்டு போன கடுதாசியை குடுத்தோம். முசே கொடுத்தேனும் வந்தான் வாணிய நயினாத்தை முதலி சம்மதி ஆயிரத்தன்னூறு ரூபாயாய் தீத்துப் போடச்சொல்லி நம்முடனே சொல்லி யிருந்தீர்களே சம்பா கோவில் சேஷட்டர் பாதிரி லவோறே எங்கிறவர் ஆயிரம் ரூபாயாய் தீத்துப் போட்டோமென்று சொல்லி யனுப்பிவிச்சாரென்று சொன்னதின் பேரிலே முசே லெறி மெய்தான் யென்று சொன்னான். முசே கொடுத்தேனும் பாதிரியார் சொல்லி யிருக்கச்சே அப்படிதானே செய்ய வேணும் யென்று சொன்னார். அதிலே முசே துபுவா யிருந்து அவனுக்கு நாற்பதினாயிரம் அன்பதினாயிரம் ரூபாய்க்கு ஆஸ்தியுண்டு பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் குடுக்கலாமென்று சொன்னார். அதன் பேரிலே நாம் சொன்னது அவன் கும்பினீ உத்தியோகம் பண்ணதில்லை முப்பது வருஷமாய்

வாணியருடனே தொழில் பண்ணி யெண்ணை வித்துக் கொண்டு யிதுவரைக்கும் அவன் சம்பாத்தியம் ரெண்டாயிரம் மூவ்வாயிரம் வராகனுக்குண்டு. அதுக்கு அன்னூறு அறுநூறு விராகன் மட்டுக்கும் போட்டு வீட்டைக் கட்டி போட்டான் ரெண்டு பெண்களுக்கு கல்லியாணம் பண்ணினான். அவர்களுக்கு ஆயிரம் ஆயிரத்தன்னூறு விராகன் மட்டுக்கும் தீத்து விட்டான். யிப்போ ரெண்டாயிரம், மூவ்வாயிரம் ரூபாய்க்கு ஆஸ்தியுண்டு யிந்தப்படிக்கி நான் சாதகம் சொல்லுவேனென்று சொன்னதின் பேரிலே முசே லெறி சொன்னது அவரப்படி சொல்லச்சே அந்தப்படிக்கித் தானே சீட்டெழுதிப் போடுமென்று சொன்னார். ஆயிரம் ரூபாயிக்கு சீட்டெழுதி ரெண்டு மாசத் தவணைக்கித் தானே யெழுதி கையெழுத்துப் போட்டு குடுத்தான். சுண்ணாம்பு சூளை மலையப்பனுக்கு யிறுநூறு ரூபாயாய் தீந்து சீட்டெழுதி குடுத்தான். வில்லிசெட்டி தன்னுடைய நஷ்ட்ட நயமெல்லாம் ஒரு பித்திசாம் யெழுதி குடுத்ததின் பேரிலே அவனுக்கு ஆயிரம் ரூபாயாய் தீத்துப் போட்டார்கள். அதின் பேரிலே வில்லியசெட்டி யென்கிறவன் பெண்டுகளை பிள்ளைகளையும் யெல்லாம் கொண்டு போயிவிட்டுப் போட்டு மறுபடி வந்தபடியினாலே யிவன் கையிலே அபராதம் வாங்க வேணுமென்று சொன்னார்கள். நாம் சொன்னது யிவன் ஒருத்தன் மாத்திரம்தானா வெளியே போனவன் யென்னுடைய சமுசாரம் பெண்டுகள் பிள்ளையள் மாத்திரம் வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்தவர்கள். மத்தப்படி பட்டணத்திலே யுள்ள பெண்டுகள் யெல்லாம் ஆண் பிள்ளைகள் சகலமான பேரும் வெளியே போயிவிட்டார்கள். அவரவர் வீடுகளிலே ஒருத்தர் அரைப்பேர் ஆண்பிள்ளைகள் யிருக்குறார்கள். சிறிது பேர் சமுசாரமாம் படியே போயிவிட்டார்கள். யிப்படியாக மூணு பங்கு செனங்கள் வெளியே போயிருக்குறார்கள். போனவர்கள் வர வேணுமென்றால் வழியிலே அடிச்சு பறிக்கிற படியினாலேயும் ஊரிலே யிருக்கிற நெல்லுகளை யெடுத்துக் கொள்ளுகுறபடியினாலேயும் யிருக்கிற நெல்லையா யெடுத்துக் கொண்டு போறார்கள். வெளியிலே யிருந்தால் ஒருபடி நெல்லு வருகுறதுக்கு இல்லை. யென்னமா சோறு திம்போமென்றும் அவரவர் அங்கங்கே தானே யிருக்குறார்கள் யென்று சொன்னதின் பேரிலே முசே துபுவாவுக்கு புடுதிக்கீசு தெரியாதபடியினாலே யென்னயென்று கேட்டார். அதுக்கு முசே கொடுத்தேன் பிரான்சிலே சொன்னார். அப்படியாயென்று சொன்னார். முசே லெறி பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தார். யிந்த விசேஷங்கள் உத்திரப்பிறதி உத்திரம் நடந்தது. இருபது கடுதாசியாகிலும் எழுதி முடியாது. அதன் பேரிலே முசே கொடுத்தேன் சொன்னது நான் நூறு வெள்ளத்துக்கு குறைஞ்சு யிருந்தால் யெடுக்க வாணாமென்று யிந்த கச்சோர் நயினாருக்கும் சொல்லி யிருக்குறேன். சாவடி கணக்கப்

பிள்ளையளுக்கும் சொல்லி யிருக்கிறேன். அப்படி யிருக்க முசே அபேலுடைய வேலைக்காரன். ஒருத்தன் வீட்டிலே அன்பது அன்பத்தாறு வெள்ளம் நெல்லு யிருந்ததை யேகத்துக்கு யிந்த நயினார் மனுஷரும் சாவடி கணக்கனும் யெடுத்துக் கொண்டார்கள் யென்றம் நயினாரையும் நாலு விசேஷம் பேசிக்கொண்டு சாவடிகணக்கனுகளையும் அதில் ஒருத்தன் சாந்து யென்கிறவனைக் காவலிலே வைச்சு யிருக்குறேன். அவனை நாளை நன்னாய் விசாரிச்சுப் போடுறேன் யென்று சொன்னான். அதிலே பனிரெண்டு மணி அடிச்சுது. சாப்பிட்டு சாயங்காலம் வரச்சொல்லி சொன்னார்கள் வீட்டுக்கு பிறப்பட்டு வந்து விட்டோம். சாயங்காலம் ஆறுமணிக்கு போனவிடத்திலே ஆறரை மணிக்கி முசே கொடுத்தேனும் முசே துபுவாவும் வந்தார்கள். அப்பிறம் யெட்டுமணிக்கு அவரவரை கேட்டதுக்கு தீந்த சுண்ணாம்பு சூளை மலையப்பன் காமாட்சி செட்டி நல்லாண்டி தில்லை செட்டி தரகு நல்லதம்பி கோழி ஆறுமுகம் நெல்லு கேசவ முதலி ஆறுபேர் வழி தீந்து தீராமல் கசோத்திலே வைச்சார்கள். குட்டை செட்டி முருகசெட்டி திருவெங்கிடம் நெல்லுக்காற ரங்கனாத முதலி தம்பி வெத்திலை பெரியம்பல செட்டி ஆக நபர் நாலு யிதுகளுக்கு யெல்லாம் நம்முடைய கையிலே சாபிதா யிருக்குது பாத்துக் கொள்ள வேண்டியது அப்பிறம் யின்னம் யிருக்கிற பேர்களையெல்லாம் நாளையதினம் சேரப்பிடிச்சு வையுங்கள் நாளைய நன்றைக்கு யிருக்கிற பேரையும் கசோத்திலே யிருக்கிற பேரையும் தீத்துப் போடுவோமென்று சொன்னார்கள். அப்பிறம் வரச்சே முசே லெறியும் முசே கொடுத்தேனும் நம்மை அழைச்சு யின்னம் யேதாகிலும் வெள்ளைக்காரர் அண்டை யிருக்கிற பேர் பின்னையும் சில்லரை பேர் உண்டாயென்று கேட்டார்கள். நாம் சொன்னது, “சத்து புஷ்ட்டியாய் யிருக்கிற பேர்வழி யெல்லாம் எழுதப்பட்டு யிருக்குது. யினிமேல் எழுத வேண்டியது. பேர் வழியில்லை. ஆனால் யின்னம் வெள்ளைக்காரரண்டை துபாசியள் யிருக்குறார்கள். அவர்களெல்லாம் வகார் குடியளே யல்லாமல் குடுக்கத் தக்கின பேர் ஒருத்தரும் யில்லை,” யென்று சொல்லிப போட்டு யெட்டு மணிக்கு அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். முசே துபுவா கேட்டுக் கொண்டிருந்து அவரும் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டான்.

யித்தனாள் நம்முடவர்கள் ரெண்டு வெங்கல பீரங்கியும் யிழுத்துக் கொண்டு வெள்ளை சட்டைக்காரர் சொலுதாதுகளும் அன்னூறு அறநூறு பேர் மட்டுக்கும் பிரம்பை யண்டை போனவிடத்திலே மேட்டின் பேரிலே இங்கிலீசுக்காரருடைய நாலு குதிரைக் காறர் யிருந்து நாலு வெடி சுட்டுப் போட்டு ஓடிப் போயி விட்டார்கள். அது கேட்டவுடனே சண்டைக்கிப் போன நம்முடவர்கள் திருப்பிக் கொண்டு ஒழுகரையை வந்து விட்டார்கள்.

யித்தனாள் தில்லை மேஸ்திரியும் சோணாசலமும் ரெண்டு பேரும் அவர்கள் உறம்பறையார் பேரிலே வரி ஒண்ணு எழுதி யிது தண்டுகுறதுக்கு உங்களுடைய சோறு வேணும் நாங்கள் சத்து சுறுக்காய் கேழ்க்கப் போனால் ரங்கப்பனுடைய சோறுயில்லாத படியினாலே யெளப்பமாயிருக்குதென்று நீங்கள் தாக்கீது பண்ண வேணுமென்று முசே கொடுத்தேனுக்கும் முசே துபுவாவுக்கும் பித்திசாமெழுதி குடுத்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது. காமாட்சி செட்டியை யிவன் என்ன உத்தியோகம் பண்ணுகுறவனென்று முசே லெறி கேட்டார் யிவன் ரூபாயி பணம் மாத்திரவன் யென்று சொன்னோம். அப்போ யெங்களையும் மாத்திப் போடாதே யென்று முசே லெறி வாயினாலே சொன்னான். அஞ்சு வருஷமாச்சுது. அவரும் வந்து ஒரு நாளையிலே யிப்படி அவர் வாயினாலே பரியாசமாய் விசேஷம் பேசி நாம் கேட்டதில்லை.

## ஜூன் 1760

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 1; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 23; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் வெளியே போகயில்லை. கேழ்க்கப்பட்ட சேதி முசே லெறி கோவிலுக்குப் போயி பூசை கேட்டு வந்தாரென்று குமிசெல்க்காரர் நாலு பேர் ரெண்டு பேர்களும் ஒப்பிசியால் மார் நாலத்து ரெண்டு பேரும் வந்திருந்து சத்து நேரம் பேசியிருந்து போயி விட்டார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. நேத்தய தினம் நெல்லு சம்மதிக்கி சாவடி கணக்கபிள்ளை சாந்து யெங்கிறவனைக் காவலிலே வைச்சு முசே கொடுத்தேன் தாக்கீது பண்ணினபடியினாலே நெல்லு யெடுக்கிறது மொக கூப்பாய் நின்றுது. பின்னையும் யொன்றும் விந்தையான சேதி கேழ்க்கப்படயில்லை.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 2; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 24; திங்கட்கிழமை*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கோவர்ணதோர் கதவை சாத்திக் கொண்டு கடுதாசிகள் யெழுதிக் கொண்டிருந்தார். நாம் பிடவை பார்க்கிற சாலையிலே தானே யிருந்தோம். ஒன்பது மணிக்கு முசே புலோவும் முசே துலாரமும் (M. Dulaurens) வந்து மறக்கி கொம்பிளாமுடைய தட்டு முட்டு யேலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அங்கே மாத்திரம் சத்து வெள்ளைக்காரர் கும்பலா யிருந்தார்கள். அங்கே முசே லங்கற்னை (Ligrenea) வந்தான். மூணு வருஷத்துக்கு முன்னே பிடுதிக்கீசுக்காரன் (Portugueae) வற்தகன் சீஞ்சோர் சாலோமன்சு (Senhor-Salomons) வற்த்தகம் பண்ண வந்து வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்தான் அவன் ரெண்டு வருஷமாச்சுது. சீமைக்குப் போய் அவன் மறுபடி அறுபது பீரங்கி வைச்சு யிருக்கிற ஒரு கப்பலுடனே நாகப்பட்டணம் வந்து சேர்ந்தான். அந்தக் கப்பல் யிவ்விடத்திலே வருகுறதுக்கு இங்கிலீசுக்காரருடைய கப்பல் வழியிலே யிருக்குற படியினாலே வரக்கூடாமல் அந்தப் பிடுதிக்கீசுக்காரன் கரைவழியாய் வருகுறானென்கிறதாய் சொல்லுகுறார்கள். மெய்தானா யென்று முசே லங்கற்னை நம்மைக் கேட்டான் நாமானால் அறியோம் நானும் யிப்படித்தான் நேத்து சாயங்காலம் கேட்டோமென்று சொன்னோம். அவன் சொன்னது கடுதாசி ஒண்ணு மாத்திரம் வந்ததில்லை. மனுஷர் சொல்லுகுறார்கள் யென்று சொன்னான். அதிலே முசே புலோ யென்ன யென்று கேட்டார். யிப்படி சமாச்சாரமென்று

சொன்னதுக்கு மெய்தான் நாமும் அப்படிதான் கேட்டேனென்று சொன்னார். அப்பிறம் முசே மத்தோம் யென்கிறவன் நம்மண்டை வந்து ஞானப்பிரகாசம் சம்மதிக்கி நீர் அன்னூறு அறுநூரென்று பேசி துரைகளாய்த் தானே ஆயிரம் ரூபாயாய் சொன்னால் நீத்தானே சம்மதிச்சுக் கொண்டு தீத்துப் போடவும் யிந்த சம்மதிக்கி நீர் பேச வேணுமென்று சொன்னான். நாமாய்ப் பேசப் போகாது நீர்வந்து கண்டு பேசினால் சுளுவாய்ப் போம்யென்று சொன்னோம் நாம் யிந்த காரியத்துக்கு பேசுகுறதில்லை யென்று சொன்னான். ஆனால் நயினாத்தை முதலிக்கு துகைகளை உசத்தி யெழுதி அவனுக்கு ஆஸ்தி அம்மாத்திரம் உண்டு. யிம்மாத்திரம் உண்டு யென்று முசே துபுவா அவர்களெல்லாம் சொன்னார்கள். அதன் பேரிலே பாதிரி வோலேர் (Father Lavaur) யெங்கிறவன் பேசி ஆயிரம் ரூபாயாய் தீத்துப்போட்டார். யிவனும் கிறிஸ்துவன் தானே. பாதிரியுடனே சொல்லி அப்படி நெளுவாய்த் தானே தீத்துப் போடலாமென்று சொன்னோம். பாதிரியாரும் பேசுறதில்லை நீர்தானே பேசித் தீத்துப்போடவேணும் யென்று சொன்னான். நல்லது பேசுவோமென்று சொன்னோம். அதிலே பதிணெண்ணேகால் மணியாச்சுது யேதாகிலும் தீருகிற பேர்வழி உண்டாயென்று கேட்டார் அதற்கு நயினார் சொன்னது மூணு நாலு பேர் வழி மாத்திரம் தான் வெளியே யிருக்கிறவர்கள் மத்தப்பேர் கசோத்திலே யிருக்கிறார்கள் யென்று சொல்லியனுப்பி விச்சான். அன்னேர மட்டுக்கும் முசே கொடுத்தேனும் வரயில்லை முசே துபுவாவும் வரயில்லை அவர்கள் பின்னை வந்த பிரகாங்காட்டும் யேதாகிலும் தீரவேண்டியது வராதபடியினாலே ஒண்ணும் விசேஷம் நடக்கயில்லை பதினொண்ணேகால் மணிக்கிப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

பதினொண்ணரை மணிக்கு முசே கொடுத்தேனும் முசே துபுவாவும் வந்து முசே லெறி யண்டை கண்டு பேசிப்போட்டு போயிவிட்டார்கள் என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம் ஆறு மணிக்கி நாம் கருக்குடிகுப்பம் குண்டுசாலை வழிக்கி சுவாரி போனவிடத்திலே மேர்க்கே பிரம்பைமேடு அவ்விடங்களிலே இங்கிலேசுக்காறருடைய குதிரை வந்ததின் பேரிலே நம்முடவர்கள் ஒழுகரையிலே யிருந்தவர்கள் யிருபது பீரங்கியும் வெடியும் துப்பாக்கி வெடியும் சுட்டார்கள். காயம் சாவும் கேடு ஒண்ணும் தெரியாது. யினிமேல் அறியவேண்டியது. கருக்கடிகுப்பம் வழியிலே அஞ்சு பேர் போயியள் யிருந்தார்கள். அவர்களுக்கு மருந்து குண்டு யில்லை துப்பாக்கிகளும் விசையள் ஒடிஞ்சு போனதும் யிப்படியாக யிருந்தார்கள். அந்தப் போயிகள் பீரங்கிகள் சத்தம் கேட்டவுடனே உள்ளே பிறப்பட்டு ஓடினார்கள் யேண்டா ஓடிப்போறீர்களென்று நாம் கேட்டதுக்கு அய்யா யெங்களுக்கு ஆனால் சம்பளம் யில்லை முன்னே யிந்த வழியிலே யிருந்த போயியள் அன்பது

பேர் துப்பாக்கியுடனே ஒடிப்போயி விட்டார்கள் யெங்களுக்கானால் மருந்து குண்டுமில்லை துப்பாக்கியளும் ஒடிஞ்சு போயிருக்குது யெப்படி யிருப்போம் யென்று சொன்னார்கள். அதிலே நாம் அந்த சிப்பாயிகளை தாக்கீது பண்ணி வழியிலே யிருக்கச் சொல்லிப் போட்டு யேழு மணிக்கு வீட்டுக்குப் போனோம்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 3; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 25; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் யெட்டு மணிக்குப் போயிப் பத்து மணி மட்டுக்கும் கோட்டையிலே யிருந்த விடத்திலே ஒருத்தரும் வராதபடியினாலே நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம் முசே கொடுத்தேன் சாவடி ஞாயத்துக்கு வியாச்சிய சம்மதிக்கு ஆண்டாசெட்டியை நீயேன் யின்னம் பணம் குடுக்கயில்லை யென்று கேட்டதுக்கு என்னுடைய ஞாயம் யெல்லாம் உமக்கு பெத்திசாமெழுதி குடுத்தோம் யென்று சொன்னதின் பேரிலே முசே லெறிக்கும் பெத்திசாம் யெழுதி குடுத்தோம். கோவர்ணதோரும் பித்திசாம் குடுத்தோம் யென்று சொன்னதின் பேரிலே ஞாயம் விசாரியாமல் படிக்கி ஆண்டா செட்டியைக் கட்டி யிருபது அடி அடிச்சான். பின்னையும் அவரவருடைய வியாச்சியம் ஞாயங்களைக் கேட்டான். அதன் பேரிலே குண்டு கிராமம் குடிகளெல்லாம் கூடிக்கொண்டு தை மாசத்தையிலே நாங்கள் பயிரிட்டு வைத்த நெல்லும் எடுத்துக் கொண்டார்கள். உண்டான தீர்வைப் பணமும் வாங்கிக் கொண்டார்கள். யிப்பவும் பயிரிட்டு நெல்லும் எடுத்துக் கொண்டார்கள். நாங்களெப்படி பிழைப்போம் ஆனால் உத்தாரம் குடுத்தீர்களானால் நாங்கள் வெளியே பிறப்பட்டுப் போயிவிடுகுறோ மென்று சொன்னதின் பேரிலே முசே பனோ (M. Panon) உடனே யென்ன ஞாயம் யிப்படி யென்று கேட்டதின் பேரிலே முசே பனோ நான் விசாரிக்குறே னென்று சொன்னதாக சேதி கேழ்க்கப்பட்டது. அப்பிறம் பதினோரு மணிக்கு முசே கொடுத்தேனும் முசே துபுவாவும் கோட்டைக்கு வந்து நம்மையும் நயினாரையும் அழைச்சு வரச்சொல்லியனுப்பி விச்சது. யின்னேரம் மட்டுக்கும் கோட்டையிலே வந்திருந்தோம். ஆரும் வரயில்லை நமக்கும் பேதிக்கு வந்தது ஆனபடியினாலே வந்து விட்டோமென்று சொல்லியனுப்பி விச்சோம். நயினார் வந்தவிடத்திலே தீர வேண்டி பேரில்லையா வென்று கேட்டார்கள். கசோத்திலே யிருக்கிற பேர் போக நாலஞ்சு பேர் மாத்திரம் யிருக்குறார்கள் என்று சொன்னதின் பேரிலே யேன் அவர்களை அழைச்சு வரயில்லை என்னுடனே யேன் கபுறும் சொல்லயில்லை யென்று ரொம்ப முசே கொடுத்தேனும் முசே லெறியும் கோபிச்சுக் கொண்டதாகவும் பரமய்யன் மகனை நயினார் செருப்பாலே அடிக்கிறேனென்று சொன்னதாகவும் அவன் போயி முசே

கொடுத்தேனுடனே சொல்லிக் கொண்டதின் பேரிலே முசே கொடுத்தேன் நயினாரை நீர் பாப்பய்யனை யெப்படி செருப்பாலே அடிப்பாயென்று பின்னையும் நீய் ஊரிலே ரொம்ப சோராவாரி பண்ணுகுறாயென்று ரொம்ப கோபிச்சுக் கொண்டதாகவும் உன்னைக் கட்டி வைச்சு அடிப்பேனென்றும் கோபிச்சுக் கொண்டதாய் சேதி கேழ்க்கப்பட்து. அதன் பேரிலே யிருக்கிற மனுஷர்களை சேரப்பிடிச்சு நாளையதினம் அழைச்சுக் கொண்டு வந்தால் கேழ்க்குறோமென்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது. முசே லாலியுடைய பாடிதியாயி முசே கெதேவீலும் அறுபது பேர் வெள்ளைக்காரரும் பிறப்பட்டு வீட்டுக்கு வீடு புகுந்து நெல்லு அரிசி தானியம் யிதுகளெல்லாம் யெடுத்துப் போனதாய் அஞ்சாறு நாளையிலே நடக்குமென்கிறதாய் வெள்ளைக்காரர் சொல்லிக் கொள்ளுகிறதாக சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 4; விக்கிரம வருசம் வையாசி மாசம் தேதி 26; புதன்கிழமை***

இத்தனாள் ராசஸ்ரீ பெரிய பிள்ளையவர்கள் காலம் பண்ணிப் போன நாளானபடியினாலே பிச்சைக்காறருக்கு பிராமணாளுக்கு குடுக்கிற நிமித்தியம் வெளியே போகயில்லை. கேழ்விப்பட்ட சேதி முசே கொடுத்தேன் பாளையக்காரனாகிய நயினாரை அழைச்சப் பணங்காசு சீக்கிறமாய் தண்டியாகயில்லையா யென்று முசே ரொம்ப கோபிச்சுக் கொண்டு உன்னை காதை அறுத்துப் போடுவோமென்றும் சொன்னார். நீய் முசே லாலியுடனே வெளையாடாதே சீக்கரமாய் தண்டிப்போடு யென்று சொன்னான். அப்பிறம் முன்னே யெட்டு நாளைக்கி முன்னே பயித்தியக்காரன் பண்டாரம் ஒருத்தனை அலமாங்கி வெள்ளைக்காரன் வேகுக்காறனென்று வெட்டிக்காவலிலே வைச்சிருந்தவனை முசே கொடுத்தேன் யின்னையதினம் சாரிச்சுப் பயித்தியக்காற னென்று விட்டு விட்டதிலே அதன் பேரிலே முசே கெதிவேல் என்கிறவன் போயி முசே லாலியுடனே போய் யிப்படிப்பட்ட காரியம் வேகுகாற பண்டாரம் ஒருத்தனை காவலிலே வைச்சிருந்தவனை விட்டு விட்டார்களென்று சொன்னதின் பேரிலே முசே லாலி முசே புலி யெங்கிறவனுக்கு ஒரு கடுதாசி எழுதியனுப்பி அந்தப் பண்டாரத்தை காவலிலே யிருந்தவனை மறுபடி காவலிலே வைக்கவும் யில்லாவிட்டால் விட்டவனை காவலிலே வைக்கவும் என்று யெழுதி யனுப்பினதின் பேரிலே முசே புலி யெங்கிறவன் முசே கொடுத்தேனுக்கு சொல்லியனுப்பி விச்சதின் பேரிலே அந்த க்ஷணம் நயினாரை அழைச்சு நேத்து விட்ட பைத்தியக்காற பண்டாரத்தை மறுபடி காவலிலே வைக்கச் சொன்னதின் பேரிலே நயினார் மறுபடிக்கி பயித்தியக்காற பண்டாரத்தை காவலிலே வைச்சான். நயினார் வந்து பணத்தை சீக்கிறமாய் கொண்டு வரச்சொல்லி அவர்களைத் தாக்கீது

பண்ணதாகவும் யித்தனாள் ராத்திரி இங்கிலேசுக்காரர் வெளியே அளாவளியைத் தொட்டு முசே லாலி ஒழுகரையிலே யிருந்தவர் நெல்லித்தோப்புலே வந்து படுத்துக் கொண்டாரென்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. ராத்திரி பனிரெண்டடிச்சு ஒரு மணிக்கு கோட்டையிலே ரெண்டு பீரங்கி போட்டு தம்பூறு அடிச்சதின் பேரிலே வெள்ளைக்காறர் யெல்லாரும் வந்து கோட்டையிலேயும் சுத்துக் கோட்டையிலேயும் யெச்சரிக்கையா யிருந்தார்கள் யென்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கயில்லை.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 5; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 27; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் யெட்டு மணிக்கி கோட்டைக்கிப் போனவிடத்திலே யித்தனாள் சேக்கிறணை (Sacrement) பண்டிகையான படியினாலே அவர்கள் சுவாமி பிறப்படச்சே வெள்ளைக்காரர் சொல்தாது ஒப்பிசியால்மார் யெல்லாரும் வரிசை யிருக்கிறது கொவர்ணதோரா யிருக்கிறவன் கோவிலுக்குப் போகச்சே வெள்ளைக்காரரெல்லாரும் வரிசை நின்றும் தம்பூறும் அடிக்கிறது சுவாமி வெளியே பிறப்பட்டு கோவிலுக்குப் போன பிறகு கோவர்ணதோர் பூசை கேட்டு வெளியே வரச்சே வரிசை நின்று தம்பூறு அடிச்சு யீட்டியினாலே ஆசாரம் பண்ணி தொப்பி கழட்டி ஆசாரம் பண்ணி கொடியினாலேயும் ஆசாரம் பண்ணுகுறது முசே லாலி வந்து ரெண்டு வருஷமாய் முசே லெறிக்கு நடக்கயில்லை. போனவருஷம் முசே லாலிக்கு நடந்தது. யிவ்வருஷம் முசே லாலி யிருந்தும் வெளியே யிருந்தபடியினாலே யிந்தப்பண்டிகை நடக்கவேணுமென்று நேத்திய தினம் தானே சின்ன மயோருடனே முசே லெறி முசே லாலிக்கு சொல்லியனுப்பிவிச்சதின் பேரிலே அவர் நமக்கு வரக்கூடாது நீங்கள் தானே நடப்பியுங்களென்று சொல்லியனுப்பி விச்சதின் பேரிலே முசே லெறி கோவர்ணதோர் நேத்தியதினம் தானே குமிசெல்க்காறர் யெல்லாரையும் வரச்சொல்லி கடுதாசி எழுதி அனுப்பிவிச்சதின் பேரிலே குமிசெல்க்காறரெல்லாம் யெட்டு மணிக்கு கோட்டையிலே வந்தார்கள். யிப்படி யிருக்கச்சே முசே லாலி வெளியே யிருந்தவர் தாம் குடியிருக்கிற வீட்டை வந்தவர் சின்ன மயோரை அழைச்சு நீங்கள் எப்போதும் போலே வரிசை மத்தது யெல்லாம் யிருந்து சுவாமி வெளியே பிறப்பட்டு கோவிலிலே போனவுடனே நீங்கள் யெல்லாம் அவரவர் யிருக்கிற விடத்திலே போயிருங்களென்று சொன்னதின் பேரிலே அந்த சமாச்சாரம் முசே லெறி கேட்ட உடனே ரொம்ப மனசு மக்கீனமாயிருந்தார். அப்பிறம் ஒன்பது மணிக்கு சுவாமி வெளியே பிறப்பட்ட பிறகு முசே லெறி கோவிலுக்குப் போனார். யேன் அப்படி போனார்யென்றால் யிவர் போகச்சே வரிசை வைச்சு தம்பூறு அடிச்சு

மரியாதை நடவாது யெங்கிறதைத் தொட்டு பாத்தவர்களுக்கு யெகத்தாளியா யிருக்குமென்றும் சுவாமி பிறப்பட்ட பிறகு குமிசெல்க்காறரும் முசே லெறியுமாக கோவிலுக்குப் போனார்கள். சுவாமி பிறப்பட்ட உடனே முன்னே யென்ன மரியாதை களிருக்குமோ அந்தப்படிக்கி பிறப்படச்சேயும் யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். கோட்டைக்குள்ளே போனவுடனே வரிசை நிண்ணுக்கொண்டு மரியாதையுடனே சொலுதாதுகளும் ஒப்பிசியாலுகளும் அவரவர்களுடைய சாகாவுக்கு போயிவிட்டார்கள். முசே லெறி கோயிலிலே பூசை கேட்டு பத்தரை மணிக்கி கோட்டைக்கு வந்து கொவர்ணமா மெத்தை மேல் வீட்டின் பேரிலே வந்தார்கள். குமிசெலுக்காரரெல்லாம் பிறப்பட்டு மெத்தை வீட்டே போனார்கள். அப்படித்தானே (வரி எழுத்து கிழிந்து தெரியவில்லை). வீட்டுக்குப் போனார்கள் யெதினாலே இப்ப வந்து விட்டதென்றால் யிங்கிலேசுக்காரருடய பவுன்சும் மமுதல்லியும் வந்ததிலே பிரம்பையண்டை யிருந்த பீரங்கிய யெல்லாம் யிழுத்துக் கொண்டு வந்து குண்டு சாலையிலே யிருக்குற கொத்தளத்திலே வைச்சு வெள்ளைக்காறரையும் எல்லப்பிள்ளைச் சாவடி குண்டு கிராமம் யிவ்விடங்களிலே ரெண்டு பீரங்கியிருந்தது (கூடலூர் வழி பிளியஞ்சாலை) அதையும் உள்ளே கொண்டு வைச்சுப் போடச்சொல்லி அவரும் வந்து விட்டாரெங்கிறதாய் சேதி சொன்னார்கள். நேத்து துவக்கி நெல்லு ஊரிலே எடுக்குறார்கள் யெதுனாலே யென்றால் அரும்பாத்தைக்கி பத்து கரிசை நெல்லு எடுத்துக் குடுக்க உத்தாரம் ஆனபடியினாலே நாலு கரிசை நெல்லும் எடுத்துக் கொண்டு போறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 6; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 28; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் யெட்டு மணிக்கு கோட்டைக்குப் போயி பதினோரு மணிக்கு மட்டுக்கும் யிருந்தோம் முசே லெறி காம்பிராவிலே கதவை சாத்திக் கொண்டு யிருக்குறாரென்று சொன்னார்கள். முசே கொடுத்தேன், முசே துபுவா வராத படியினாலே ஒரு விசேஷமும் நடக்கயில்லை. அப்பிறம் பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டோம். அதன்பிறகு நயினாரை அழைச்சு வெளியே போயிருக்கிற பேர்வழியிலே ஆரும் வரயில்லையா யென்று கேட்டார்கள். தீரவேண்டிய பேர் நாலஞ்சு பேரிருக்குறார்கள் யென்று சொன்னியே யிதுகளெல்லாம் நீய் வந்து கபுறு சொல்லுகுறதில்லை யென்று கோபிச்சக் கொண்டு யிதுவரைக்கும் தீந்த பேர்வழி யெம்மாத்திர மென்றும் கசோத்திலே யிருக்கிற பேர் யெம்மாத்திரம் வெளியே போயிருக்கிற பேர் யெம்மாத்திரம் யென்று யெழுதிக் கொண்டு வாயென்று சொன்னதின் பேரிலே நயினார்

நம்மண்டை வந்து யிப்படியானால் முசே லெறி அழைச்சு யென்னைக் கேட்டார். ஆனபடியினாலே யிந்த வயணமாம் படியே ஒரு சாப்பிதா ஒன்று யெழுதி குடுக்கவேணும் யென்று சொன்னதின் பேரிலே எழுதி யிருந்த பேர்வழி யிம்மாத்திரம் வெளியே போயிருக்கிற பேர்வழியாம் மாத்திரம் கசோத்திலே யிருக்கிற பேர்வரி யிம்மாத்திரம் யிப்ப யிவ்விடத்திலே யிருக்கிற பேர் யிம்மாத்திரம் என்று ஒரு கடுதாசியிலே எழுதி முஸ்தீது பண்ணி வைச்சோம். நயினாரை அழைச்சுவரச் சொல்லி முசே கொடுத்தேன் முசே துப்பிளேம் வீட்டிலே நயினாரை அழைச்சுவரச் சொல்லி அனுப்பி வைச்சதின் பேரிலே தில்லை மேஸ்திரியை கசோத்திலே வைக்கச் சொன்னது உன் மனசும் படியே செய்தாயென்றும் கோபிச்சுக் கொண்டார். என்னுடைய உத்தாரம் வாங்கி அதன் படியாகிலும் முசே திப்பிளாமுடைய உத்தாரமாகிலும் வாங்கி காவலில் வைக்க வேணுமே யல்லாமல் உன் மனசும் படிக்கி யாரையாகிலும் காவலில் வைக்கப் போகாது யென்று தாக்கீது பண்ணி யினிமேல் உத்தரவுப்படி நடபிக்கவும் யென்று சொன்னார். தில்லை மேஸ்திரியை காவல் விட்டுவிடச் சொல்லிச் சொன்னார். உங்கள் யினத்தாரிலே ஆர் பணம் குடுக்க மாட்டோமென்குறார்களோ அவர்களைக் காவலில் வைச்சு பணத்தை வாங்கிக் கொள்ளச் சொல்லி சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. டங்காசாலைக்கு மேலண்டையா யிருக்கிற ரெண்டு வீடுகள் தட்டார் வீடுகள் பத்திக் கொண்டு வெந்து போனதாய் சேதி கேழ்க்கப்பட்டது. இது சேதியும் ராமலிங்க பிள்ளை பட்டணத்திலேயுள்ள பேர்வழிகளிலே நூத்தன்பது பேர் மட்டுக்கும் வரி யெழுதி வைச்சிருக்கிற பேர்வழிகளிடம் தண்டச் சொல்லி துகையை நாளைக் காலத்தாலே கோவற்ணதோரண்டைக்கு செலுத்தச் சொல்லி சொன்னதாய் கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 7; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 29; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே திப்பிளாம் மூணாம் கெடுவு பணம் செலுத்த வேணுமென்று கேட்டனுப்பிவிச்சதிலே நம்மைப் போலே கெடுப் பிறகாறம் ஆர் பணம் செலுத்தி யிருக்கிறார்களென்று நாம் அதியமாய் செலுத்தியிருக்குறோமென்று சொல்லியனுப்பி விச்சதின் பேரிலே மறுபடி கேளாமல் படிக்கி ரெண்டு தரம் மூணு தரம் கண்டிப்பாய் கேட்டனுப்பிவிச்சபடியினாலே யித்தனாள் முசே திப்பிளாம் வசம் பொன் விராகன் நானூறும் ரூபாயிலே நாற்பத்தெட்டுக்கு மாா்ப்பு ஆயிரத்தன்னூறு ரூபாயி கொண்டு போயி செலுத்தினோம் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே துபுவா நேத்து.

ராமலிங்கபிள்ளை எழுதிக் குடுத்த நூத்தன்பத்து அஞ்சு பேர்வழி லிஸ்துரு முசே லெறி கையிலே கொண்டு வந்து குடுத்தார். அவரதை யெல்லாம் பாத்துக் கொண்டார் அப்பிறம் முசே லாலி தமக்கு தேவையாய் சிறிது பிடவையள் முசே லெறியைக் கேட்டனுப்பிவிச்சதின் பேரிலே அந்த தினிசு பிடவைகள் யில்லையென்று சொல்லியனுப்பி விச்சதாகவும், முசே கதுவேல் (M. Gadevukki) என்கிறவன் முசே லாலியுடனே சொன்னது ஒரு கிடங்கு நிறைய பிடவை யிருக்குது யென்று சொன்னதின் பேரிலே முசே லாலி முசே லெறிக்கு சொல்லியனுப்பி விச்சது ஒரு கிடங்கு நிறைய பிடவையை வைச்சுக் கொண்டு இல்லையென்று சொல்லியனுப்பிவிச்சாயா யென்று முசே லாலி கேட்டதுக்கு யிந்த மட்டுக்கும் நான் எது கேட்டாலும் குடுக்கிறதில்லை யென்று சொல்லி வருகுறீர். அந்தக் கிடங்குக் காறனுக்கு நாம் யென்ன பாடுபடப் போறீர்கள் யென்று சொல்லி யனுப்பிவிச்சுப் போட்டு அதின் பேரிலே முசே லெறி முசே துபுவா மத்த குமிசெல்க்காரர் யெல்லாம் கூடப் பிறப்பட்டு பிடவைப் பார்க்கிற சாலையே வந்தார்கள்.

கிடங்குக்காரர் முசே கொற்னேத்தை அழைச்சு அனுப்பிவிச்சார்கள். கிடங்கு சாவி முசே லெகு (M. Legou) கையிலே யிருந்த படியினாலே சாவி வரந்தனிலும் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்தார்கள் யிருக்கும் வரையிலும் முசே லெறி நம்முட பல்லக்கைத் தானே பாத்தபடியே யிருந்தார். அப்பிறம் அவருட கண்ணுக்கு யென்னமா தோணிச்சோ தெரியாது கிட்டப்போயி பல்லக்கு பண்ணாங்கை தடவி தொட்டுப் பார்த்து செவ்வையாய் திரும்பிக் கொண்டு வந்து விட்டார். அப்பிறம் பிடவைக் கிடங்கைக்கு வந்து பார்க்குமிடத்திலே முசே லாலியுடைய சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்தது யிருபது யிருபத்தஞ்சு கட்டும் முசே துப்பிளேசு யிருக்கச்சே யேனம் பந்தரிலே யிருந்து அழைப்பிவிச்ச சிகப்பு கறுப்பு பச்சை தினிசு சாயம் தீந்த கட்டு யிருபது யிருபத்தஞ்சும் கோட்டை பிடவை றெட்டு மாதிரி பலதரம் கட்டு ரெண்டு மூணு நாலு கட்டும் கோணிச்சாக்குகள் வற்த்தகர் பேர் போட்டு கட்டுகளாய் கட்டி அதுகள் கும்பலாய் அடுக்கியிருந்தது. இதுகளெல்லாம் எழுதிக் கொண்டு மெத்தை வீட்டின் பேரிலே போயி யிந்த தினிசு வயணமாம் படிக்கு கடுதாசியிலே யெல்லாரும் கையெழுத்துப் போட்டு முசே லாலி அண்டைக்கு அனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

அப்பிறம் நம்மையும் நயினாரையும் அழைச்சு அனுப்பிவிச்சார்கள். போனவிடத்திலே யிந்த லிஸ்துருகளைப் பார்த்தீர்களா யென்று குடுத்தார். அதை நாம் பாத்து வந்து லிஸ்துருவிலே யிருக்கிற பேர்வழியிலே முன் லிஸ்துருலே அகப்பட்டிருக்குறது அதிலே தீந்ததும் கசோத்திலே யிருக்கிற

பேரும் வெளியே போய்விட்ட பேர் சிறிதும் யிருக்குது யென்று சொல்லி அதன் பேரிலே ஆனால் அந்தப்படிக்கி பிறிச்செழுதி அவரவர் பேரையும் சொல்லச் சொல்லி என் கையிலே அந்த லீஸ்துருவை குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து பிறிச்சு எழுதி பிரான்சிலும் யெழுதி நயினாரை ஒவ்வொன்றும் பிறதி யெழுதி விக்கச் சொன்னோம்.

மைசூர் அயிதர் நாயக்கன் குதிரை ரெண்டாயிரம் வந்திருந்து தியாக துற்க்கத்தண்டைக்கு வந்து சேர்ந்ததென்றும் பின்னையும் யின்னம் பிறகே துப்பாக்கிக்காற சிப்பாயிகளும் பீறங்கியும் பிறகே வருகுது யென்று முசே லாலிக்கும் முசே லெறிக்கும் கடுதாசிகள் எழுதி வந்ததாய் சமாச்சாரம் ரெண்டு மூணு பேர் ஒப்பிசியால்மார் சொல்லக் கேழ்க்கப்பட்டது.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 8; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 30; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு நேத்து பிறிச்செழுதின லீஸ்துரும் எடுத்துக் கொண்டு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறியும் பின்னையும் நாலஞ்சு பேர் வெள்ளைக்காரருமாய் காலத்தாலே தானே கப்பூசு கோவிலுக்குப் போயி வந்துவிட்டார் கோட்டை கோவில் கதவு சாத்தினபடியினாலே அந்தப்படிக்கி சாத்தியிருந்தது. முசே லெறியும் முசே திப்பிளாமும் மங்கல மேஸ்திரி ஒப்பிசியால்மாரும் அஞ்சாறு பேருமாய் யிருந்தார்கள். நாம் போயி ஆசாரம் பண்ணினவுடனே சாலையிலே உலாத்திக் கொண்டு யிருந்தவர் காம்பிராவுக்குள்ளே போனார். யிந்த லீஸ்துருவைக் குடுத்தோம். யிதை யெல்லாம் பாத்துக் கொண்டு யிது யென்ன வயணமென்று கேட்டார் நாம் சொன்னது நூத்தன்பத்தஞ்சு (155) பேர்வழி யிப்ப எழுதி குடுத்ததிலே முன் லீஸ்துருவிலே எழுதப்பட்ட பேர்வழி அன்பத்தி ரெண்டு (52) மத்த நூத்தி மூணு பேர்வழி யிப்ப லீஸ்துருவிலே யெழுதப்பட்டது. யிந்த வயணமாம் படியே சொன்னதின் பேரிலே போகச் சொல்லும் வேலையத்தவனை யென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது ஒருதரம் நீர் சுறுக்காய் யிதுகளெல்லாம் சொன்னால் அந்த மட்டிலே நிண்ணு போவானென்று சொன்னதுக்கு ஒண்ணும் பேசாமலிருந்து விட்டார். அதிலே முசியே திப்பிளாமும் மெய்தான் பட்டணம் ரொம்ப பஞ்சையாய் போச்சுது என்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது பட்டணத்திலேயானால் சனங்களெல்லாம் வெளியே போயி விட்டார்கள். கடைகளெல்லாம் அடைச்சுப் போட்டார்கள் நாலஞ்சு கடைகள் மாத்திரம் போட்டிருக்குது. அதுவும் யெதினாலே யென்றால் உங்களுக்குப் பயந்து நயினார் அவரவரைப் பிடிச்சு அந்தக் கடையும் போடுவிச்சான். யிந்த

லீஸ்துருவையும் பிடிச்சுக் கொண்டு செனங்களை பணம் குடுக்கச் சொல்லி யிழுத்தால் கொஞ்ச நஞ்சம் யிருக்கிறவர்களும் ஒடிப்போவார்கள். பட்டணத்திலே செனங்களில்லாமல் பல்லக்கை போட்டுக் கொண்டு சாயங்காலம் வேளையிலே தெருவீதியைப் பார்த்தால் அப்போதான் உங்களுக்குத் தெரியும் யென்று சொன்னோம். இதுகளெல்லாம் யெதுனாலே சொல்லுகுறேனென்று உங்களுக்கு அறிவிக்கிறது யென்னுடைய வேலையான படியினாலே சொல்லுகுறேன் யென்று சொன்னதுக்கு ஒண்ணும் சொல்லாமல் யிருந்து யிந்த லீஸ்துருலே எழுதியிருக்கிற பேர்வழியிலே யேதாகிலும் உண்டாயென்று கேட்டதுக்கு நாம் சொன்னது யிப்போ சொன்னால் உங்களுக்கும் சரிப்படாது எழுதிக் குடுத்தவருக்கும் கோபமாயிருக்கும். யினிமேல் அவரவரை அழைச்சு கேழ்க்கச் சொல்லுகுற பேச்சும் அவரவர் நிறுவாகமும் உங்களுக்குத் தானே தெரியும். யிப்ப நாம் சொன்னால் உங்களுக்குத் தானே அவர் பணம் கும்பலாய் கொண்டு வந்து குடுத்தார். யிவர் ஒண்ணுமில்லை யென்று சொல்லுகுறாரென்று உங்களுக்குத் தானே தோணும் யென்று சொல்லுகுறேனென்று சொன்னதுக்கு பேசாமலிருந்தார்.

அப்படி யிருக்கச்சே முசே துபுவா வந்தார். முசே லெறியும் முசே துபுவாவும் முசே திப்பிளாமும் மூணுபேரும் உள்ளே போய் யிந்த லீஸ்தருவைப் பார்த்துக் கொண்டார்கள். அங்கே முசே லெறி சொன்னார். உடனே தானே முசே துபுவா வெளியே பிறப்பட்டுப் போகச்சே முன்னே வந்த சாயம் போலே யில்லாமல் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போயிவிட்டார். யெதினாலே யென்றால் யென்னமோ முசே லெறி சொன்னதாய் யோசனை பண்ணிக் கொண்டு யிருந்தோம். அப்பிறம் முசே துப்பிளாமும் வெளியே வந்தான். அதிலே யிந்த லீஸ்துரிலே கசோத்திலே யிருக்கிற பேரை நாளைய தினம் அழைச்சுக் கொண்டு வரச்சொல்லும் தீத்துப் போடுவோமென்று சொன்னதுக்கு அவர்கள், "நாற்பது நாளாய் சோறுமில்லாமல் கசோத்திலே கிடந்து சாகிறார்கள். நிறுவாகமில்லை யென்று சொல்லுகுறார்கள். உங்களுடனேயும் அவர்கள் சொன்ன விசேஷங்கள் யெல்லாம் சொன்னோம்," யென்று சொல்லிப் போட்டு சாம்பய்யனையும் சேருவைக்காறனையும் கூட்டி சகோத்திலே யிருக்கிறவர்களை கேட்டனுப்பிவிச்சதுக்கு, "அவர்கள் யெங்களுக்கு நிறுவாகமில்லை. யிருந்தால் நாற்பது நாளாய் நரகத்திலே கிடந்து சோறுமில்லாமல் சாவமா யின்னம் பத்து நாளையிலே யிதிலே தானே செத்துப் போறோ," மென்று சொல்லியனுப்பி விச்சார்கள். கேட்டுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 9; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 31; திங்கள்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி பத்து மணி மட்டுக்கும் தூங்குறாரென்றும் சொன்னார்கள். கோவர்ணமாம் வீட்டின் பேரிலே உளுக்காந்திருந்தோம். வந்த வெள்ளைக்காறரும் வெளியே தானே உளுக்காந்திருந்தார்கள். முசே லெறி யெதுனாலே அன்னோர மட்டுக்கும் நித்திரை போனதென்றால் நேத்து ராத்திரியத்தினம் வழுதாவூரை அடுத்த கடப்பேரி குப்பம் என்கிற கிராமத்துக்கு அண்டை மோர்சா போட்டுக் கொண்டு இங்கிலீசுக்காறருடைய தண்டு அவ்விடம் விட்டு மொர்சாவை கொளுத்திப் போட்டு வழுதாவூர் கோட்டைக்கி மேலண்டையாயி ஆத்தோரமாய் போயி யிறங்கினபடியினாலே முசே லாலியும் பட்டணத்திலே யிருக்கப்பட்ட சொலுதாதுகளும் காபிரி சகலமான பேரும் பிறப்பட்டு அவர்களிறங்கி யிருந்த மோர்சாவைப் பார்க்கப் போனபடியினாலே கோட்டையிலே யிருக்கப்பட்ட குமிசெல்க்காறர் அபித்தாமுகதா யெல்லாரும் ராத்திரி யெல்லாம் காவல் கோட்டையை சுத்தியும் காத்தபடியினாலே முசே லெறியும் ரோந்து வந்த படியினாலே அன்னேர மட்டுக்கும் நித்திரை போனாரென்று சொன்னார்கள்.

அப்பிறம் பத்துமணிக்கி யெழுத்து உடம்பு குளிச்சு பதினோரு மணிக்கி கதவை திறந்தார். முசே லாசும் பாதிரி லவோறும் வந்து பேசிக்கொண்டு யிருந்தார்கள். பதினொண்ணரை மணிக்கி முசே துபுவா வந்து பேசிக் கொண்டிருந்தபடியினாலே அப்பிறம் பனிரெண்டடிக்கிற சமயமாச்சுது. முசே லெறி கோவர்ணதோர் அவர்களுக்கு முசேனுவார் வீட்டிலே விருந்தானபடியினாலே, அவர் பயணம் யெத்தனத்தின் பேரிலே யிருந்தபடியினாலே, சமையமில்லாத படியினாலே நயினாரை அழைச்சுக் கொண்டு வரச்சொல்லிப் போட்டு பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

யித்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கு போகச்சே வாணியருக்கு பாபத்தியம் குடுத்துக் கொண்டு அவர்களுடனே கொள்வனை விற்பனையாயிருந்த நயினாத்தை முதலி யெங்கிறவன் கோவிலுக்குப் போய் நம்முட யெதிரே வந்து கொண்டிருந்தான். அப்பிறம் பனிரெண்டு மணி மட்டுக்கும் வெளியே திரிஞ்சுப் போட்டு சவுரிமுத்து வீட்டே போய் தாகத்துக்குத் தண்ணீர் கொண்டு வரச்சொன்னான். தண்ணீர் கொண்டு வந்தார்கள். சாப்பிடுகிறதுக்கு முன்னே கீழே விழுந்துதும் சீவன் போயிவிட்டுது. அவனை ஆயிரம் ரூபாயி வரி குடுக்கச் சொல்லி துரைகள் கேட்டபடியினாலே யெப்படி பணம் சிலவாய்ப்

போகுதென்று பத்துனாளாய் வயிறு பேதியாயிருந்து திகிலின் பேரிலே இன்றைய தினம் பனிரெண்டு மணிக்கு செத்துப் போனான். சாயங்காலம் கொண்டு போயி புதைச்சுப் போட்டார்கள். சகல செனங்களும் யிவன் பட்ட திகிலினால் செத்துப் போனானென்கிறதாய்ச் சொல்லிக் கொண்டார்கள். முன்னே முசே லசேல் தெண்டம் வாங்கினபோது ஒரு கோமுட்டி செத்துப்போனானெங்கிறதாய் சகலமான பேரும் சொல்லிக் கொண்டார்கள். சாயங்காலம் முசே தெலார்சை அழைச்சு அனுப்பிவிச்சுனான் அவிடத்துக்கு வருகுறேன் ரசாசாயபை அழைச்சுக் கொண்டு வாரும் கண்டு பேச வேணும் யென்று சொல்லியனுப்பி விச்சார். அந்தப்படிக்கித் தானே யேழு மணிக்கி முசே லாலி யிவ்விடத்துக்கு வந்தார் வந்தவுடனே முசே திலார்சு ரசாசாயபை அழைச்சு யனுப்பிவிச்சு முசே லாலியும் முசே தெலார்சும் பாதிரிவிசுப்பு லொராஞ்சாமும் ரசாசாயபும் யென்னமோ பேசிக் கொண்டிருந்தார்கள். பேசின சமாச்சாரம் யின்னதென்று தெரியாது. அப்பால் யெட்டரை மணிக்கி முசே லாலி தாம் யிறங்கியிருக்கிற விடத்தே பிறப்பட்டு வெளியே போயிவிட்டார்.

*ஸ்ரீராமஜெயம்*

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 10; விக்கிறம வருசம் வையாசி மாசம் தேதி 32; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் ஒன்பது மணிக்கி கோட்டைக்கிப் போயி பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே முசே புலோவும் முசே லங்கறனையும் ரெண்டு பேரும் வந்தார்கள். வந்தவர்கள் டங்காசாலை செஞ்சி செட்டி பேரிலே யிருபதினாயிரம் ரூபாயி யிப்போ எழுதியிருக்குதோ சக்கிசெட்டி யென்று குறைபேருக்கு சஞ்செட்டி யென்று பேர் பிசகாய் எழுதிப் போட்டார்களென்று நாலாயிரம் ரூபாயாய் அவர்கள் தீத்துக் கொண்டு போயிருக்கச்சே மறுபடியும் தீந்தபேரெல்லாம் எழுதுகுறது யிது முசே துபுவா பேரிலேயும் நேரமில்லை. ராமலிங்க பிள்ளை பேரிலேயும் நேரமில்லை. யிதுகளெல்லாம் கோவர்ணதோராயிருக்கிற முசே லெறி கேழ்க்க வேண்டியது யென்னடா யிப்படி தீந்த பேரெல்லாம் மறுபடி எழுதிக் கொண்டு வாறீர்கள். உங்களுக்கு யிதெல்லாம் யென்ன கவையென்று கண்டிச்சு கேளாதபடியினாலே அவர் பேரிலே யிந்த நேரம் பட்டணத்திலேயா கொள்ளக் கிடைக்கவில்லை. செனங்களா வெகுபேர் வெளியே போயிவிட்டார்கள். நாமும் கப்பலின் பேரிலே ஏறிப் போற வேளையாயிருக்குது என்று கண்டிச்சு சொல்லவேண்டியது. ஒண்ணும் வாயைதிறந்து பேசாமலிருக்கிறார். யிவர் தொரைத்தனத்துக்கு வந்துதான் பட்டணம் யிப்படி பாழ்த்தும் போச்சுது யென்று யிந்த ராமலிங்கன் ரெண்டு

மூணு வருஷத்துக்கு முன்னே யிருந்த தென்னா தெரியாதா? யிப்போ அவன் வெளிகளிலே ஆடு மாடுகள் சகலமும் கொள்ளையிட்டு கும்பினீக்குப் போட்டு ஒண்ணை நாலாய் கணக்கு யெழுதி வைச்சு முசே லாலியை கட்டிக் கொண்டு யிருக்குறான். சோணாசல மென்கிறவனும் கூட யிருந்தப்படிக்கி கும்பிணி பணத்தை யெல்லாம் லக்ஷாந்திரம் முகத்துமா வாய் திருடி சம்பாதிச்சு யிருக்குறார்கள். யிப்ப பட்டணத்திலே செனங்கள் பேரிலே யெழுதிக்குடுத்து அவரவர் தன்னண்டை வந்தார்கள். யிதினாலே சிறிது சம்பாதிக்கலாமென்று யோசனை ஆனால் குடுக்கப் போறார்கள். அதுவரவில்லை. யிதுகளெல்லாம் குடுக்கப் போறார்கள். அதுவரவில்லை. யிதுகளெல்லாம் கேழ்க்கிறதுக்கு மனுஷர்யில்லை யிதுகளெல்லாம் கேழ்க்கிறதுக்கு வேறே துரைத்தனமும் கப்பலும் வருகுது. யிதுகளெல்லாம் அவர் விசாரிக்கப் போறார் அப்போ யிந்த ராமலிங்க பிள்ளையும் சேணாசலமும் யென்ன பாடு படப்போறார்கள் அதுவும் நீர் அறியப் போறீர்? என்று யிப்படி யிந்த விசேஷம் யெல்லாம் நாலு நாழிகை தேசகாலம் முசே புலோவும் முசே லங்கற்னையும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் கப்பல் சீக்கிறம் வரவேணுமென்றும் யில்லாவிட்டால் கப்பலிலே யேறி சீமைக்குப் போறதாயும் அல்லாமல் வேறேயில்லை யென்று சொன்னார்கள். அப்பிறம் நயினார் வந்து முசே துபுவா எழுதிக் குடுத்த லீஸ்துருலே நாற்பது அன்பது பேர்வழி மட்டுக்கும் யிங்கே யிருக்குறார்கள் பத்து பேர் வழிமட்டுக்கும் பேர் தெரியவும்யில்லை ரெட்டிச்சு எழுதிப் போட்டு யிருக்குது குறை நாற்பது பேர்வழி மட்டுக்கும் வெளியே போயிருக்குறார்களென்று சொன்னான். மறுபடியும் ராமலிங்கபிள்ளை வெங்கிடாசல நாயக்கனையும் பின்னையும் நாலத்து ரெண்டு பேரை சேர்த்துக் கொண்டு நம்மண்டையிலே யிருக்கிற பேர் பேரிலே யெல்லாம் வரியெழுதிக்குறானாம் நாமும் அவனண்டை யிருக்கிற பேரிலே யெல்லாம் ஒரு லீஸ்துரு எழுதி துரை கையிலே குடுப்போமென்று கனகசபை முதலியும் தில்லை மேஸ்திரியும் நயினாரையும் சேர்த்துக் கொண்டு சொன்னார்கள். நாம் சொன்னது கோபத்தின் பேரிலே ஒரு காரியத்தைச் செய்து போட்டால் சந்தோஷம் வந்தால் பிறகு அந்தக் காரியம் வராது அவன்தானே தெரியாமல் ஒரு காரியத்தை செய்து போடுகுறது பிறகு அவர்கள் போயி கேட்டால் மன்னிப்பு பேசப்போயி முகத்திலே கரியை தடவிக் கொண்டு வரான் அப்படி நீங்களும் பதரி செய்யப் போகாதென்றும் சத்துப் பொறுத்துப் பார்க்க வேணும் யென்று சொல்லிப் போட்டோம். பத்தரை மணிக்கி முசே லெறி கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். நாமும் கோவற்ணமாமு மெத்தையின் பேரிலே போனோம் நயினாரும் வந்தான். வந்தவன் முசே லெறியண்டை போயி நம்முடனே சொன்னபடிக்கி லீஸ்துரு எழுதினதிலே நாற்பது அன்பது பேர் மட்டுக்கும்

யிவ்விடத்திலே யிருக்குறார்கள். பத்துபேர் மட்டுக்கும் ரெட்டிச்சு எழுதியிருக்குறதும் பேர் தெரியாமல் யிருக்குறதும் நாற்பது பேர் மட்டுக்கும் வெளியே போயிருக்கிறார்கள் யென்று சொன்னதின் பேரிலே ஆனால் யேதாகிலும் குடுப்பார்களா யென்று நயினாரைக் கேட்டதுக்கு நயினார் சொன்னது யென்னண்டை பத்துப் பணத்துக்கு சேவிக்கிறவன் பேரிலேயும் வழிச்சேரியிலே யிருக்கிற சேவுகன் பேரிலேயும் பிச்சை யெடுக்கிற பாப்பாரின் பேரிலேயும் முச்சியர் பேரிலேயும் ரெண்டாயிரம் ரூபாயும் மூவ்வாயிரம் ரூபாயும் யிப்படி யெழுதினால் ஆர் குடுப்பார்கள்? ஒருத்தரும் குடுக்கமாட்டார்களென்று நயினாத்தை முதலி யென்கிறவனை ஆயிரம் ரூபாய் போயி யிருக்குது யின்னம் கெடுவு மூணு நாளிருக்குது அவன் யிந்த கிலியினாலே நடக்கச் செயலிழந்து செத்துப் போயி விட்டான் யென்று சொன்னதின் பேரிலே அவர் சொன்னது நாமும் பிறஸ்தாபமாய் கேழ்விப் பட்டிருக்குறோமென்று சொல்லி ஆனால் சகோத்திலே யிருக்கிற பேர் ஆறாகிலும் தித்துக் கொள்ளுவார்களா யென்று கேட்டார். நயினார் வந்து யிந்த சமாச்சாரம் எல்லாம் நம்முடனே சொல்லிப் போட்டு கசோத்திலே யிருக்கிற பேர் அண்டைக்கிப் போய் யென்ன தீத்துக் கொள்ளுகிறீர்களா யென்று கேட்டதுக்கு யெங்களுக்கு குடுக்கிறதுக்கு யிருந்தால் நாற்பது நாளாய் யிப்படி அரிகத்தியிலே கிடந்து செத்துப் போவோமா? துரையவர்கள் எங்களைப் பார்த்தால் அவருக்குத் தெரியும் ஒண்ணுமில்லை யென்று சொன்னதின் பேரிலே அந்த சமாச்சாரம் துரையுடனே சொல்ல வேணுமென்று வந்தவிடத்திலே முசே துபுவாவும் முசே கொடுத்தேனும் பதினொண்ணரை மணி மட்டுக்கும் வந்து பேசிக் கொண்டிருந்த படியினாலே சமையமில்லாத படியினாலே பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 11; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 1; புதன்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு நாம் கோட்டைக்கு போனவிடத்திலே குண்டுகளோடுகிற துருசான படியினாலே பல்லாக்கு போயியள் துரைக்கு ஒருவரும் அனுப்பாத படியினாலே முசே லெறி பாதசாரியாய் பிறப்பட்டு மூலக் கொத்தளத்துக்குப் போய் அங்கே பாத்துப் போட்டு அவ்விடம் விட்டு கடலோரம் துவான் அண்டைக்கு வந்து அங்கே சத்து நேரமிருந்துப் போட்டு பத்துப் பத்தரை மணிக்கி கோட்டைக்கு வந்து குமிசெல்க்காரர் ஆறாகட்டும் பல்லக்கு ஏறிக் கொண்டு வந்தால் பல்லக்கையும் போயியண்டாக்களையும் பிடிச்சுக் கொண்டு வரச்சொல்லி சொலுதாதுகளை அனுப்பி ரொம்ப ஆர்பாட்டமாய் பண்ணினார். அப்பிறம் பதினோரு மணிக்கு முசே கொடுத்தேனும் முசே துபுவாவும் வந்தார்கள். வந்தவுடனே முசே லெறி அழைச்சு முசே துபுவா யெழுதிக் குடுத்த

நூத்தன்பத்தஞ்சு பேர் வழியிலே ஆராகிலும் வந்திருக்கிறார்களா யென்று கேட்டார். நாற்ப்பது அன்பது பேர் மட்டுக்கும் யிருக்கிறார்கள் யென்று சொன்னோம். ஆனாலும் நாலு மூணு பேரை அழைச்சு வாயென்று சொன்னார்கள். செவுட்டு றெங்கன் நாட்டாமைக்காற வச்சிக்கன் யிவர்களைக் கொண்டு போயி விட்டுக் கேட்ட உடனே யிவர்கள் யெங்களுக்கு ஒண்ணுமில்லை குடுக்கிறதுக்கு யென்று சொன்னதின் பேரிலே அவர்களை தேவையில்லை யென்று போகச் சொல்லிப் போட்டு முசே துபுவா சொன்னது "ரங்கப்பன் யிவர்களுக்கு யெல்லாம் ஒரு துகை குடுத்து யெடுத்துவிட்டு ஒண்ணுமில்லை யென்று சொல்லச் சொல்லி யிந்த லீஸ்துரை பீயாக வேணுமென்று யோசனை பண்ணியிருக்குறார்." யிதல்லாமல் யிந்த துகையளும் வர வர அறிஞ்சுக் கொண்டார்களென்று சொன்னதின் பேரிலே யென்னா யென்று நம்மை முசே லெறியும் முசே கொடுத்தேனும் கேட்டார்கள். நாம் சொன்னது யிந்த லீஸ்துரு எழுதச் சேதானே ராமலிங்கம் பிள்ளை மனுஷர் தானே போய் அவரவருக்கும் யிம்மாத்திரம் யெழுதியிருக்குதென்று சொல்ல அவர்களெல்லாம் வந்து ராமலிங்கப்பிள்ளை வீட்டு வாசற்படியிலே வந்து விழுந்து கூவ அவரவருக்கு நேர் பண்ணுகுறோமென்று சொல்லி யிப்படி யிருக்க நம்முட கையிலே லீஸ்துரு குடுத்தாப் போலே நாமப்படி சொல்லத் தக்கினதில்லை யென்று நாம் சொன்னதுக்கு முசே லெறி ஒண்ணும் பேசாமலிருந்தார்.

முசே கொடுத்தேன் முசே துபுவா வுடனே யிப்படி உம்முட மனுஷர் ராமலிங்க பிள்ளையைத் தொட்டுத் தானே வெளிக்கி வந்ததென்று நானும் அண்டையிலிருக்கிற மனுஷரும் பிறஸ்தாபமாய் கேட்டிருக்குறோம் யென்று சொன்னதின் பேரிலே முசே துபுவாக்கு முகம் மெத்த சினமாய் போச்சுது. அப்பிறம் யிந்தப் படியாக சமுத்திரன் நீலகண்ட பிள்ளை நாட்டாமை லச்சேகன் செவுட்டு ராமன் றெங்கன் யிந்த நாலு பேரையும் கேட்டு வரி தேவையில்லை யென்று தள்ளிப் போட்டு விட்டார்கள். கருமார குமரப்ப மேஸ்திரி அவன் அண்ணன் பச்சையப்பன் வளியன் மகன் தாண்டவராயன் வாணக்காற பாபிசெட்டி யிந்த நாலு பேரையும் யிவர்கள் கருமார் வாணக்காறர் யென்று தள்ளிப் போட்டார்கள். வரி தேவையில்லை யென்று யிப்படி தள்ளுபடியாயிப் போன உடனே முசே துபுவாவுக்கு முகம் ரொம்ப சின்னமாய் போயி முச்சியர் மூணு பேரையும் அழைச்சு வாயென்று சொன்னார். அழைச்சு வந்தவுடனே நீங்கள் நம்பளுக்கு எழுதியிருக்கிற வரிக்கி வீதமாம் படிக்கி குடுத்தால் போங்கள் யில்லாவிட்டால் கசோத்திலே யிருப்பீர்களென்று சொன்னதுக்கு நாங்கள் வந்து கூலிக்காரர் யெங்களுக்கு குடுக்குறதுக்கு ஒண்ணுமில்லை யென்று சொன்னதின் பேரிலே ஆனால் உங்களுக்கு எழுதின யேழாயிரம் ரூபாயும் குடுப்பீர்கள் யென்று கசோத்திலே போடச் சொன்னார்கள். கசோத்திலே போட்டார்கள். அப்பிறம் நாம் சொன்னது யிப்பதானே

பட்டணத்திலே ஒண்ணும் கொள்ளக் கிடைக்கவில்லை. நீங்களும் தீர்வைக்கவையில்லை தமுக்கும் போடுவிச்சீர்கள் அப்படியிருந்தும் ஒருத்தரும் கொண்டு வருகுறதில்லை எதனாலே யென்றால் யிந்த வரியினாலே வெளியே யிருக்கிற மனுஷரும் வரத்தக்கினதில்லை. யிப்போ யிருக்கிற மனுஷரும் பிறப்பட்டு போயி விடுவார்கள். யின்னம் யிந்தப் படிக்கி பதினஞ்சு நாளைக்கி மாத்திரம் யிப்படி பட்டணத்து செனங்களை பட்டணத்துக்கு யிழுத்தால் பட்டணத்திலேயும் ஒரு தினிசும் கிடைக்காது அப்போ உங்களுக்கு தெரியும் யிப்போ நான் சொன்னபடிக்கி தானென்று அறியப் போறீர்களென்றும் யிப்படியாக உத்திரப்பிறதி யுத்தரமாக நடந்தது எழுத வேணுமென்றால் யிருபது கடுதாசி பிடிக்கும் யிப்படி யெல்லாம் நாம் சொன்னவிடத்திலே முசே லெறி முசே துபுவாவைப் பார்த்து யிந்த லீஸ்துருவைப் பிடிச்சுக் கொண்டு பணம் வாங்க வேணுமென்றால் பட்டணமும் முழுக்க காபராப்பட்டுப்போம். நாமும் பேயாய்ப் போவோமென்று சொன்னதின் பேரிலே முசே துபுவா சொன்னது "ஆனால் முசே யிந்த லீஸ்துருவை தள்ளிப் போட்டு விட்டோமென்று சொன்னான். பின்னையும் முசே லெறி சொன்னது முன்னே எழுதி யிருக்கிற லீஸ்துருக்கும் பணம் வரமாட்டாது யிந்த லீஸ்துருக்கும் பணம் வராது யிப்ப யெழுதின லீஸ்துருவினாலே யென்று" சொன்னார். அப்பிறம் பனிரெண்டு மணி அடிச்ச படியினாலே வீட்டுக்கு வர்ச்சே முசே லெறியுடனே நமக்கேன் யிந்த பழி நாளையதினம் நான் வரயில்லை. ஆரையாகிலும் வச்சுப் பாத்துக் கொள்ளுங்களென்று சொன்னதுக்கு அதுகளெல்லாம் உமக்கு தேவையில்லை ரொம்ப மரியாதையாயி சொல்லி நீர் வாருமென்று சொன்னார். அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 12; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 2; வியாழக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே யெட்டரை மணிக்கி நாம் கோட்டைக்கி போனோம். முசே லெறி கோவர்ணதோரும் கோவிலுக்குப் போயி பூசை கேட்டு மேல் வீட்டின் பேரிலே போனார். புது லீஸ்துரு கேழ்க்கிற நிமித்தியம் முசே துபுவாவும் சீக்கிறமாய்த் தானே வந்து துரையுடனே பேசிக் கொண்டிருந்தான். பத்தரை மணிக்கி முசே கொடுத்தேன் வந்தார். வந்தவுடனே லீஸ்துருவிலே எழுதியிருக்கிற பேர்வழிகளிலே அழையுமென்று சொன்னார்கள். யிருக்கிற பேர்வழியிலே அழைச்சுப் போயிவிட்டவுடனே அவரவரை கேட்டவிடத்திலே அவரவர் நிறுவாகங்களை சொன்னார்கள். அதுகளுக்கெல்லாம் எப்படி நேராய்ப் போகவேணுமோ அந்தப் படிக்கி யிவர்களெல்லாம் சோனாசலத்தை சேந்தவர்கள் ராமலிங்க பிள்ளை அக்கசுத்தின் பேரிலே எழுதினானென்று

நாம் சொன்னதின் பேரிலே மெய்தானா யென்று கேட்டார்கள். நாமென்ன சொல்லுகுறது. அபத்தமா அவர்களைப் பார்த்தால் உங்களுக்கே தெரியும் யென்று சொன்னதின் பேரிலே வெகு பேரை யெல்லாம் போயென்று தள்ளிப் போட்டார்கள் யென்றும் சிறிது பேர் பேர் தெரியவில்லை யென்றும் எழுதிக் குடுத்தோம். அப்பிறம் தேவடியாள் வீட்டு சரவணனை அழைச்சு கேட்டார்கள் அவன் சொன்னது நாங்கள் வந்து கோவிலுக்கு ஆடுகிற தேவடியாள் சாதி நாங்கள் வந்து ஒரு ராத்திரிக்கி ரெண்டு பணத்துக்கும் நாலு பணத்துக்கும் ஒருத்தன் கையிலே சரீரத்தை வித்துப் போட்டு அப்படி சம்பாத்தியம் பண்ணி காலக்ஷேபம் பண்ணுகுறதாங் காட்டும் யெங்கள் கையிலே பணம் வாங்கியாங்காட்டும் யில்லாத கும்பினீக்குப் போட வேணுமென்று யிப்படி நாலு உத்திரவு நன்னாய்த்தானே சொன்னான். நாமும் அந்தப் படிக்கி பின்னையும் நாலு விசேஷம் கூட புஷ்ட்டியாய்த் தானே சொன்னோம். அதின் பேரிலே முசே லெறி யிவன் தேவடியாளுடனே பிறந்த வனானபடியினாலே யிவன் கையிலே ரொம்ப நெகம் யிருக்குது யிந்த சீஞ்ஞேருக்கு உன் கையிலே வாங்கி கும்பினீக்குப் போட வேணுமென்று யிருக்குது. ஆனபடியினாலே உன் பேரிலே ஆயிரம் ரூபாய் யெழுதி யிருக்கிறபடியினாலே அன்னூறு ரூபாயாகிலும் குடுயென்று கேட்டார். ஒண்ணுமில்லை யென்று சொன்னதின் பேரிலே யெவ்வளவாகிலும் குடுயென்று கேட்டார். அதுக்கும் ஒண்ணுமில்லை யென்றும் சொன்னான். இதுகளை யெல்லாம் முசே துபுவாவுடனே சொன்னார்கள். அதுக்கு அவனிருந்து கொண்டு நீங்களிதுகளெல்லாம் ஒண்ணுமில்லாமல் தள்ளிப் போடவேணுமென்றும் அதின் பேரிலே யிப்படி செய்யுகிறீர்கள் யென்று சத்துக் காண்பிச்சுக் கொண்டாப் போலே சொன்னான். அதன் பேரிலே தேவடியாள் வீட்டுச் சரவணனை கசோத்திலே வைக்கச் சொன்னார். பின்னையும் அவரவரைக் கேட்டு போகச் சொன்னார்கள். முசே லெறிக்கும் யிப்ப யெழுதின லீஸ்தை தள்ளிப் போடவேணுமென்கிற மனசுதான் ஆனபடியினாலே முசே துபுவாவைப் பார்த்து யிப்படி ஒண்ணுமில்லாத யேழையள் பேரிலே யெழுதி வந்து குடுத்தவன் உம்மை யெகத்தாளி பண்ணி பொய்யாக்கிற நிமித்தியம் எழுதி வந்து குடுத்தானென்று யிப்படி சாடையாய் யேகத்தாளியாய் சொன்னார். அதன் பேரிலே முசே துபுவாவுக்கு முகம் சின்னமாய்ப் போச்சு முசே லெறியும் முசே குடுத்தேனும் சொன்னது : முசே லாலியுடனே உமக்கு சொல்லுகுறதுக்கு யிது யிருந்தால் நாங்களும் வந்து கூட வேணுமென்று சொன்னால் சொல்லுகுறோம் யென்று சொன்னார்கள். அதன் பேரிலே பணிரெண்டடிச்சு வீட்டுக்குப் போகப் பிறப்பட்டார்கள். அங்கே இந்த வரி யெழுதின பேரிலே சேவுகரும் அவர்களும் ஆககும்பலாயிருந்தார்கள். இவர்களைப் பார்த்து

அறிவார்களென்று கேட்டார்கள். யிவர்கள் தான் வரி எழுதின பேர் யென்று சொன்னதின் பேரிலே போகச் சொல்லு யிவர்களை யெல்லாம் யென்று சொல்லி வெகு பேருக்கு வரி தேவையில்லை யென்று முசே லெறியும் முசே கொடுத்தேனும் தள்ளிப் போட்டார்கள். அதை முசே துபுவா பாத்த உடனே முகம் ரொம்ப சின்னமாய் பிறப்பட்டுப் போயிவிட்டான். அப்பிறம் நம்மை துரை பார்த்து நீர் வராமலிருக்கப் போறீர். நித்தம் வாருமென்று சொன்னார். உங்களுடைய தயவு யிருக்கச்சே வராமலிருக்கத் தக்கினதில்லை யென்று ஆசாரம் பண்ணோம். அங்கே யிருந்த வரியெழுதின செனங்களிருந்தவர்கள் துரையவர்களுக்கு சுவாமியுடய தயவு ரொம்ப யிருக்கவேணுமென்று ஆசாரம் பண்ணுங்களென்று சொன்னோம். அவர்களெல்லாம் அந்தப்படிக்கி ஆசாரம் பண்ணினார்கள். அதுக்கு துரையும் சந்தோஷமாய்த் தானே பாத்துப் போனார். அப்பிறம் வீட்டுக்கு பிறப்பட்டு வந்து விட்டோம். யிந்த வரி தள்ளிப் போட்ட செனங்களுக்கு யெல்லாம் சாப்பித்தா யெழுதி யிருக்கிறதைப் பார்த்துக் கொண்டு வேண்டியது செட்டியளுக்கு அவர்கள் நாட்டாமைக்காரன் வரி எழுதி யிருந்த படியினாலே அந்த வரியும் குடுக்குறதுக்கு நிறுவாகமில்லாமல் பாதி குடுத்தவனும் கால்வாசி குடுத்தவனும் ஆக யிருந்தபடியினாலே அவர்கள் நாட்டாமைக்காரனை அழைச்சு கேட்டவிடத்திலே மெய்தானென்று சொன்னதின் பேரிலே முசே லெறி சொன்னது அவர்கள் சாதி வரியிலே பத்து ரூபாய் போட்டதுக்கு நாலு ரூபாய் குடுத்து ஆறு ரூபாய் குடுக்க வழியில்லாமலிருக்கச்சே நாம் நூறு யிறுநூறு குடுயென்று கேட்டால் யெந்த விதத்திலே குடுப்பார்களென்று சொல்லி தள்ளிப் போட்டார். செஞ்சி செட்டி சம்மதி யென்ன யென்று கேட்டதுக்கு அவன் மகன் நேத்து முன் லீஸ்தூரிலே நாலாயிரம் ரூபாயாய் தீத்துக் கொண்டு போயிருக்கச்சே அவன் தகப்பனையும் யிருபதினாயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லி கேட்டால் யிதுயென்ன ஞாயம் யென்று நாம் சொன்னதுக்கு அவனுக்கு ஆஸ்தியில்லையா யென்று கேட்டார்கள். ஆஸ்தியிருந்தால் வில்லியனூர் சீமைக்கு முன்பணம் யிருபதினாயிரம் ரூபாயி கேட்டீர்களே யிருந்தால் குடுத்து சீமையை வாங்கிக் கொள்ளானா யில்லாத படியினாலே தான் விட்டுவிட்டானென்றும் சொன்னதின் பேரிலே சிஞ்சியசெட்டியை மாப்பாய் விட்டு விட்டார்கள். முசே துபுவா சின்னப்பட்டுப் போனபடியினாலே ராத்திரி கிளம்பி ராமலிங்கத்துடனே மோதிக் கொள்ளுவான். அவன் நாளையென்ன பண்ணுவானோ யோசனை பண்ணிக் கொண்டு யிருக்குறார்கள் அதை அறிய வேண்டியது நேத்தும் யின்றும் நடந்த படிக்கி வரி சம்மதிக்கு நாளைய தினமும் நடந்தால் யிது முதல் கொண்டு பட்டணத்திலே யிருக்கப்பட்ட செனங்களெல்லாம் சுகப்படுவார்கள் நாளுக்கு நாள் விருத்தியாய் சுபாமாயிருக்கும்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 13; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 3; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு நாம் கோட்டைக்குப் போய் பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்தோம். பத்துமணிக்கு முசே லெறி கதவு சாவி போட்டிருந்ததை திறந்து கொண்டு வெளியே வந்தார். அதிலே கடலோரத்திலே யிருக்கிற கணக்கரும் இஸ்பித்தாலிலே யிருக்கிறவர்களும் யிப்படி பிறப்பட்டு அஞ்சாறு பேர் வெள்ளைக்காரர் கஞ்சாங்குத்தியளாய் வந்தார்கள். அவர்களுடனே நாமும் கூடப்போய் ஆசாரம் பண்ணி யிப்பாலே வந்து மெத்தை வீட்டின் பேரிலே உளுக்கார்ந்திருந்தோம். யிதுக்கு முன்னே கேழ்க்கப்பட்ட சேதி நேத்தியதினம் கோபிச்சுக் கொண்டு போன முசே துபுவா ராமலிங்கனை கோபிச்சுக் கொண்டு யிப்படி யேழையள் பேரிலே யெல்லாம் யெழுதிக் கொடுத்து யென்னை ஏகத்தாளி பண்ணுகிற நிமித்தியம் யிப்படி யெல்லாம் செய்தானென்றும் கோபிச்சுக் கொண்டு ராமலிங்கனை அழைக்கச் சொன்னான். ராமலிங்கனும், தட்டார சிதம்பரம், பொட்டிபத்தன், வெங்கிடேசன், வெங்கிடாசல நாயக்கன் யிப்படி வரி யெழுதினவர்கள் வகையிரா கூடப் போனார்கள். போனவிடத்திலே முசே துபுவா யென்ன (கேட்டானோ), அதுக்கு அவர்கள் யென்ன உத்தாரம் சொன்னார்களோ அதின் பேரிலே பரியாரி வெங்கிடாசலம் பேரும் பின்னையும் ரெண்டு மூணு பேர்வழி மாத்திரம் வேறே ஒரு கடுதாசியிலே எழுதிக் கொண்டு பதினோரு மணிக்கு வந்தான். வந்தவுடனே நம்மை யழைச்சு வரி யெழுதி யிருக்கிற பேர்வழியிலே ஆராகிலும் வந்திருந்தால் அழையுமென்று சொன்னார்கள். அதன் பேரிலே கட்டுக்கார லக்ஷ்மண மேஸ்திரி தம்பியை அழைச்சுப் போயிவிட்டோம். யென்னா யிவன் பேச்சுயென்று கேட்டார்கள். அவன் சொன்னது, "எனக்கானால் கும்பினியிலே சம்பளம் வந்து யிருபது மாசமாச்சுது வீணுக்கு உழைச்சுப் போட்டது மல்லாமல்படிக்கி யென்னை தெண்டமும் குடுக்கச் சொன்னால் யெங்கே யிருந்து குடுப்பேன்? யெனக்கு யென்ன யிருக்குது யென் உத்தியோகம் கட்டுக்காரனென்று சொன்னான். அந்தப்படிக்கி துரையுடனே சொன்னோம் அவர் முசே துபுவாவுடனே யிவனைக் கட்டுக்காரன் யிருபது மாசமாய் கும்பினியிலே சம்பளம் குடுக்கயில்லை ஒண்ணுமில்லை, யென்கிறே" னென்று சொன்னதின் பேரிலே அவன் சொன்னது யிப்படி பஞ்சையாயிருக்கிற பேரை அழைச்சு வந்து விடுகிறதென்னா கந்தப்ப முதலி, துபாசி யெல்லப்பிள்ளை, யிஞ்ஞாசி முத்தப்பிள்ளை யிவர்களை அழைச்சு வரப்போகாதாயென்று கேட்டான். அதுக்கு முசே லெறி தானே சொன்னது யெல்லா பிள்ளை யிப்பதான் சாப்பிடப் போனான். யிஞ்ஞாசி முத்தப்பிள்ளை முசியே புலியண்டை யிருந்து அவனும் வீட்டுக்குப் போனான். அழைச்சு வரச்சொன்னால் அழைச்சனுப்புவோ மென்று

சொன்னார். அதிலே நாம் ஆகட்டும் யென்று சொல்லி நாம் கட்டுக்கார லக்ஷ்மண மேஸ்திரியை யென்ன விட்டுவிடுவோமாயென்று கேட்டோம் போகச் சொல்லுயென்று சொன்னார்கள். ஓடிப்போடா யென்றோம். அந்த மட்டிலே அவன் ஓடிப்போயி விட்டான். அப்பிறம் முசே துபுவா தானே பரியாரி வெங்கிடாசலத்தை அழையுமென்றான். அவனை அழைச்சுக் கொண்டு வந்து விட்டோம் யென்ன உனக்கு ஆயிரம் ரூபாயி எழுதி யிருக்குதே யென்ன யென்று கேட்டார். அவன் சொன்னது யெனக்கானால் ஆஸ்தியில்லை. ஆயிரம் ரூபாயி யெப்படி யிருக்குமோ அது நான் அறியேன். யென் வீடானால் யெங்கும் பொத்தலாயிருக்குது. அதுக்கு செத்தை மூடுகுறதுக்கு யில்லை யென்ற மூணு நாலு தினிசு மாத்திரைகளை கொண்டு வந்து காண்பிச்சு யிதினாலே யாங்காட்டும் நான் காலக்ஷேபம் பண்ணுகிறது. யெனக்கானால் ஆஸ்தியில்லை. ஆர் உங்களுக்குச் சொன்னார்களோ அவர்களை வந்து ரூசுவு பண்ணச் சொல்லும் உண்டா யிருந்தால் ஒண்ணு நாலாய் குடுத்து நீங்கள் யிட்ட ஆஞ்கைக்கி ஆளாய்ப் போறேன் யில்லாவிட்டால் அவனையாகிலும் ஒண்ணு ஆக்கினை பண்ணுங்களென்றும் சொன்னான். அதின்பேரிலே முசே லெறி கோவர்ணதோர் அந்த மாத்திரையளை கொண்டு வரச்சொல்லி நேத்து தேவடியாள் வீட்டு சரவணனை யெப்படி பரியாசம் பண்ணினாரோ அப்படி யிந்த மாத்திரை செத்துப் போறவனை பிழைக்கப் பண்ணுமா யெத்தனை பேரை பிழைக்கப் பண்ணாய் யென்று யிப்படி அரை நாழிகை மட்டுக்கும் பரியாசம் பண்ணி அப்பிறம் முசே துபுவாவுடனே பரியாரி வெங்கிடாசலம் சொன்னதெல்லாம் சொல்லி யிவனை யென்ன செய்வோமென்று சொன்னதின் பேரிலே முசே துபுவா யிருந்து கொண்டு யிப்படி உமக்கு மனசிலே யில்லாமல்ப் போனால் சொல்லும் யிந்த லீஸ்துருயெல்லாம் கிழிச்சு யெறிஞ்சு போடுகுறேன் யென்று சொல்லி காண்பிச்சுக் கொண்டு யிருந்தான். அதன் பேரிலே முசே லெறி கோவர்ணதோர் யிப்படி யில்லாதவனை கசோத்திலே போட்டு கொல்ல வேணுமென்று சொன்னால் உம்முட மனசு யென்று யிவனைக் கசோத்திலே போடுயென்றும் நம்முடனே சொன்னார். நாம் அப்பாலே அழைச்சுக் கொண்டு போயி வைச்சு யிருக்கச் சொன்னோம். அதிலே சர்வடி ஞாயத்துக்குப் போயிருந்த முசியே கொடுத்தேனும் வந்தான்.

அப்பிறம் உப்பாத்து தம்பாச்சியை அழைச்சு வந்து விட்டோம். அவனை யென்னயென்று கேட்டார்கள். அவன் சொன்னது, நாம் அரும்பாத்தை யண்டையிலே யிருபது பணத்துக்கு சேவிக்கிறது. அந்த சம்பளமும் வரயில்லை. முன்னே யென் தம்பி பிடவைக் கட்டுக்காரனா யிருந்தவன் யென் வீடு குடிசை. அதுக்கு செத்தை போடுகுறதுக்கு யில்லாமல் யெங்கும் ஒட்டையாய் கிடக்குது நீங்கள் அதைப் பார்த்து வந்தால் தெரியும் அந்த குடிசை பத்துப்பணம் பொறாது யென்று

சொன்னான். யிதுகளெல்லாம் துரையுடனே சொன்னோம். அவர் யிதுகளையெல்லாம் கேட்டு முசே கொடுத்தேனை எடுத்துவிட்டு பேசாமல் கீழ்க்கண்ணாலே பாத்துக் கொண்டிருந்தார். முசே கொடுத்தேன் சொன்னது, அப்படிப்பட்ட யேழையளை பிடிச்சுக் கொண்டு கேழ்க்கிற படியினாலே பட்டணம் காபிராப்பட்டுப் போறதேயல்லாமல் காரியமில்லை. சேவுகனையும் கூலிக்காரனையுமா பணம் கேட்டு வாங்குறது? செட்டி வர்த்தகர்களை யிவர்களைப் பிடிச்சுக் கேட்டால் யேதாகிலும் கிடைக்கும். யிதுகளெல்லாம் காபிராப்பட்டுப் போறதேயல்லாமல் வேறே ஒண்ணுமில்லை" யென்று சொன்னதின் பேரிலே முசே சொன்னது, நாளை யிந்த வரி யெழுதின கடுதாசி நாம் யில்லை. ஆனபடியினாலே தான் யிப்படி யெல்லாம் சொல்லுகுறீர்கள், சம்மதியில்லாவிட்டால் தள்ளிப் போடுகுறதுதானே யென்று சொன்னான். அதின் பேரிலே முசே துபுவாவும் முசே கொடுத்தேனும் ஒரு நாழிகை மட்டுக்கும் தனிச்சு பேசிக் கொண்டு யிருந்தார்கள். அப்பிறம் வந்தார்கள். நாம் தம்பாச்சி யெங்கிறவனை விட்டு விடுவோமாயென்று கேட்டோம் போகச் சொல்லு யென்றார்கள். ஓடிப்போடா யென்று சொன்னோம். அவன் அந்த மட்டிலே ஓடிப் போயிவிட்டான். அப்பிறம் யிவர்கள் மூணு பேரும் கிட்ட நெருங்கி வந்து ரகசியம் பேசுகுறதாய்க் கண்டுது. அந்த மட்டிலே நாம் யிப்பாலே வந்தோம். ஒரு நாழிகை மட்டுக்கும் யென்னமோ பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டுப் போயி விட்டார்கள். அதிலே பணிரெண்டடிச்சு அரை மணியாச்சுது போகச்சே நாளை யிந்த வரிக்காறரை அழைச்சு வாங்களென்றும் சொல்லயில்லை. வாணாமென்றும் சொல்லயில்லை.

அப்பிறம் பாப்பய்யப்பிள்ளையை நேத்து கேழ்க்கச் சொன்னோமே கேட்டீரா யென்றும் கேட்டோம். அவன் சொன்னது யெனக்கானால் குடுக்கிறதுக்கு யில்லை. முசே லாலி யண்டை எடுத்து அனுப்பினாலும் சரிதான். பின்னை யெங்கே எடுத்து அனுப்பினாலும் சரிதான் யெனக்கு செத்துப் போறகாலம் வந்தது யென்று சொன்னானென்று சொன்னதின் பேரிலே அவன் மகனையும் காவலிலே வச்சிருக்குதா யென்று கேட்டார். வச்சிருக்கு யென்றும் அவன் கை சிறங்கு பிடிச்சு ரொம்ப உபத்திரவம் படுகுறார். அதனாலே என்ன செய்வோமென்று கேட்டோம். யெத்தனை நாளாச்சுது யென்று கேட்டார். நாற்பது நாளாச்சு தென்றும் பாப்பய்யபிள்ளை தான் யிருக்குறான். அவன் மகனையாகிலும் விட்டு விடுவோமா யென்றும் கேட்டோம். அதிலே மகனை அழைச்சுப் பிடிச்சு அரைமணியான படியினாலே அப்பிறம் ஒன்றும் நடக்குறதுக்கு நேரமில்லை நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். யிந்த வரி சம்மதி கேட்டபடியினாலே அப்ப சாத்திப்போட்டு பாப்பய்ய பிள்ளை சம்மதி கேட்டபடியினாலே யிந்த வரி நிறுத்திப் போட்டாப் போலே காணுது.

யித்தனாள் கேழ்க்கப்பட்டது மைசூர் அயிதர் நாயக்கன் குதிரை தியாக துற்க்கத்திற்கு வந்ததுக்கு அவனுடைய வைக்கிலும் வெங்காசி பண்டிதனும் யிங்கே யிருந்து போன வெள்ளைக்கார ரெண்டு பேரும் சிறிது உடம்படிக்கையள் பேசி தீத்து கடுதாசி வாங்கிக் கொண்டு யின்னைய தினம் பிறப்பட்டுப் போனதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. பரியாரி வெங்கிடாசலத்தை நாமாய்த் தானே காவலிலே வைச்சுக் வைக்கச் சொன்னோம்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 14; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 4; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் யெட்டு மணிக்கி கோட்டைக்குப் போனோம். முசே லெறி வெளியே குண்டுகள் யெடுக்கிற விடத்தைப் பார்க்கப் போயிருந்தார். நேத்து மத்தியானம் தானே புதுசாய் எழுதின லீஸ்துரு மனுஷரை அழைச்சு கேழ்க்கச்சே நிறுத்திப் போட்டு பாப்பய்யபிள்ளை பிறஸ்தாபம் நடந்த படியினாலே புது லீஸ்துரு தேவையில்லை. ஆரையும் அழைக்கத் தேவையில்லை யென்று நின்று போனபடியினாலே ஒன்பது மணிக்கு வெளியே போயிருந்த முசே லெறி கோவர்ணதோர் கோட்டைக்கு வந்தார். நாம் யெதிரே போயி ஆசாரம் ப்ண்ணிக்கூட கொவற்ணமாம் வீட்டின் பேரிலே போனோம் அவர் வெளியே நில்லாமல் படிக்கி காம்பிராவுக்குள்ளே போயிவிட்டார் யின்னையதினம் பிறகு யெழுதின லீஸ்துரு பிறஸ்தாபம் யில்லை நாம் கோவற்ணமாம் வீட்டு மெத்தையின் பேரிலே யிருந்தோம். பத்தரை மணிக்கு முசே துப்பிளாம் வந்தான். பணம் வரயில்லை யென்று நயினாரை அழைச்சனுப்பிச்சார். நயினார் சொன்னது யிப்போ புது லீஸ்துரு எழுதின மனுஷரை கேழ்க்கிற நிமித்தம் யிந்த அலுவலிலே யிருந்தோம். ஆனபடியினாலே பணம் சத்து மெதுவாய் நிண்ணுதென்று சொன்னான். போய்ப் பேர் யெழுதின லீஸ்துருவை யில்லை ஒருத்தரையும் அழைக்கத் தேவையில்லை. பணத்தைச் சீக்கிறமாய் தண்டச் சொல்லி விட்டுப்போட்டு அவனும் வீட்டுக்குப் பிறப்பட்டுப் போயி விட்டான். பதினோரு மணிக்கி முசே கொடுத்தேன் வந்து முசே லெறியைக் கண்டு பேசிப் போனானென்கிறதாய்ச் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையாய் கேழ்க்கப்படயில்லை.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 15; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 5; நாயத்துக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே சந்தடி வராததுக்கு முன்னே தானே யேழு மணிக்கு கோவிலுக்குப் போய் வந்து காம்பிராவுக்குள்ளே பூந்து கதவை சாத்திக் கொண்டார். நாம் யெட்டரை மணிக்கு கோட்டைக்குப்

போயிருந்தோம். பத்தரை மணிக்கி முசே துபுவா (Mr. Duboin) டொமினிக்கும் ரெண்டு பேரும் வந்தார்கள். இவர்கள் யெங்கே போறாங்களென்று பிறகே மனுஷரை விட்டோம். முசே லெறியுடைய காம்பிராவைத் திறந்து கொண்டு உள்ளே போயி ரெண்டு மூணு கடுதாசியை காண்பிச்சுக் கொண்டு யென்னமோ சொன்னதாகவும் அதுக்கு முசே லெறி என்னமோ உத்திரவு சொன்னதாகவும் மறுபடிக்கி முசே துபாவும் கடினமாக சொன்னதாகவும் யிதிலே முசே கில்லியாரும் முசே கொடுத்தேனும் வந்து முசியே லெறியுடனே யிவர்களெல்லாம் பேசிக் கொண்டு யிருக்கச்சே முசே லெறி சொன்னது சீமையிலே பிரான்சுக்காரரும் இங்கிலீசுக்காரரும் சமாதானமாய்ப் போச்சுதெங்கிற சமாச்சாரம் நமக்கு வந்தது. யின்னவிடத்திலே யிருந்து இந்தச் சமாச்சாரம் அனுப்பிவிச்சார்களென்று சொல்லயில்லை சமாதானமாய்ப் போச்சுதென்று சொன்னார். நமக்கு முன்னே வருகிற கப்பலிலே சமாதானமான சமாச்சாரம் வரும் ஆனால் யிங்கிலீசுக்காரருக்கும் சமாதான கடுதாசி வந்திருக்கும் போலே காணு தென்று சொன்னதாகவும் அதன் பேரிலே முசே கில்லியார், முசே கொடுத்தேன், முசே துபுவா யிவர்களெல்லாம் வெளியே வந்து யிந்த சமாதான சமாச்சாரம் பேசிக் கொண்டிருந்தார்கள் யென்கிற சேதி கேட்டோம். இத்தனாள் சாயங்காலம் நாம் வெளியே சுவாரி போகச்சே முசே லாலி நாலு குதிரை கட்டின வண்டியின் பேரிலே யேறிக் கொண்டு ரெண்டு குவாடுது குதிரையுடனே கிழக்கே போடுகிற மோர்சா பார்க்க வந்தார். நம்முட பல்லக்குக்கும் அவருடைய வண்டிக்கும் சத்து தூரமாயிருந்த படியினாலே நம்முட பல்லக்கு முன்னே போச்சுது அவர் வண்டி பிறகே நிண்ணுது. அவர் போற சாடை பார்த்தால் உச்சாகமில்லை யெதுனாலே யென்றால் சமாதானமான சமாச்சாரம் அவரும் கேட்டிருப்பாரே. ஆனபடியினாலே யினிமேல் கிழக்கே நாம் நோக்கிறதே யல்லாமல் மேற்கே நோக்கினதுமில்லை. யிவ்விடத்திலே யிருக்கத் தக்கினதுமில்லையே யென்று அந்த சமாசாரம் விசாரத்தினாலே அசதியாய்ப் போன சாடையாய்க் கண்டுது.

யித்தனாள் சாயங்காலம் முசே லெறி பிறப்பட்டு மீர் குலாமுசேன் தோட்டம் முசே சொல்மினியாக்கு, முசே தெலார்ஷு தோட்டம் யிந்த மூணு தோட்டம் பார்த்ததென்றால் தாம் கோட்டையை விட்டுவிட்டு குடிபோயிருக்கிற நிமித்தியம் முசே சொல்மினியாக்கு தோட்டத்திலே யிருக்கிறதாய் யோசனை பண்ணி தீந்துது.

இத்தனாள் ராத்திரி வெளியே முசே லாலி யிறங்கி யிருக்கிற பாளையத்திலே நெல்லித்தோப்பண்டையிலே முசே லாலியுடைய குதிரை முசே புலியுடைய குதிரை பின்னை ஒருத்தன் குதிரை மூணு குதிரையைக் கள்ளர் திருடிக் கொண்டு போயிவிட்டார்கள். இத்தனாள் சூளை

ஞானப்பிரகாச முதலி வரி சம்மதிக்கு இஞ்சினீர் முசே துப்பாஷாக்கு (M. du Passage) போய் முசே கொடுத்தேனுடனே கண்டு பேசி தீத்துக் கொண்டு போனதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. துகை தெரியவில்லை யிம்மாத்திர மென்று அறியவேண்டியது.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 16; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 6; திங்கட்கிழமை*

இத்தனாள் காலத்தாலே முசே தெ அந்திரேசும் பின்னையொரு வெள்ளைக்காரனும் ரெண்டு பேரும் வந்து துராயும் சீரொப்பாசும் கொண்டு வந்து வாங்கிக் கொள்ளுகிறீராயென்று கேட்டார்கள். யிப்போ ஆர் வாங்குறாரென்று சொன்னோம். ஆனால் விலையாகிலும் பார்த்துச் சொல்லும் யென்று சொன்னார்கள். நல்லதென்று நாலு துராயும் ஒரு சிறப்பேசும் (Serpech) வாங்கி வைச்சோம். அப்பிறம் சீனாலத்தூர் (Sina La Tour) வந்து யெனக்கானால் சிலவுக்கில்லை யிருபது விராகன் குடுக்க வேணுமென்று கேட்டான். யிப்போ அகப்படாதென்று சொன்னோம். யெப்படியாகிலும் குடுக்க வேணுமென்று சொல்லி போயிவிட்டான். அப்பிறம் ஒன்பது மணிக்கிக் கோட்டைக்கிப் போனோம். பிடவை பார்க்கிற சாலையிலே யேலம் போட்டுக் கொண்டிருந்ததாகவும், அங்கே பார்த்துக் கொண்டிருந்தோம். முசே லெறி முதலாகிய குமிசெல்க்காரர் யெல்லாரும் குமிசெல்க்கூடி யிருந்தார்கள். பதினோரு மணி மட்டுக்கும் குமிசெல்க் கலயயில்லை. நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். யென்ன நடந்துதோ குமிசேலிலே அது யினிமேல் தெரிஞ்சு யெழுத வேண்டியது.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 17; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 7; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கதவை சாத்திக் கொண்டு யிருந்தான். நாம் மெத்தை வீட்டை விசாரிச்சுப் போட்டு பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்தோம். வெள்ளைக்காரர் ஒருத்தரும் வரயில்லை. நிர்மானஷயமாய் செத்தெடுத்தாப் போலே கோட்டை யிருந்தது. முசே லங்கறனை வந்து முசே லெறியைக் கண்டு பேசி நாளையத்தினம் குமிசெலென்று சொல்லிப் போட்டு போயிவிட்டான். சாவடி ஞாயத்திலே அகம்படியர் சாதி வரி நிமித்தியம் நாட்டாமைக்காரர் தில்லை மேஸ்திரிக்கும் முசே கொற்னேத்து துபாசிக்கும் வரி சம்மதியாய் விசேஷம் நடந்தது. கும்பினி சிப்பாயியை முசே கொற்னேத்து துபாசி அடிச்சபடியினாலே கும்பினீருக்கு அபராதம் நூறு ரூபாய் குடுக்கச் சொல்லியும் தீந்ததாயும் முசே கொற்னேத்துடைய பில்லேத்து (ஆண்ப்ப்ங்ற்) காணாதே போனபடியினாலே அதுக்கு இறநூறு

ரூபாயி குடுக்கச் சொல்லியும் தீந்தபடியினாலே அந்தச் சேதி கேட்டோம். தில்லை மேஸ்திரியை முசே கோற்னேத்துக்கு இறநூறு ரூபாய் குடுக்கச் சொல்லியும் தீந்த சேதிகேட்டோம். தியாக துறுக்கத்திலே வந்திரங்கி யிருக்கிற மைசூர் அயிதர் நாயக்கனை அழைச்சு வர மயிலாப்பூர் பாதிரி விசுபும் அலமாஞ்சி குதிரைக்காரர் 200 இறநூறு பேரும் ராமலிங்கம்பிள்ளை மனுஷன் சோகி பண்டிதனும் போனார்கள் என்கிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. குமிசெல்க் கூடுகிறார்கள் யென்று வந்து சொன்ன வெள்ளைக்காரனை யென்ன நிமித்தியம் குமிசெல்க் கூடப்போறார்களென்றும் கேட்டால் நேத்திய தினம் முசே லாலி யண்டைக்கு ரெண்டு மூணு பேர் குமிசெல்க்காரர் போனவிடத்திலே சிலவுக்கானால் ஒரு காசுயில்லை ஒப்பிசியால்மார் செத்துப் போறார்கள். பணம் குடுத்தனுப்பி விச்சால் ஆச்சுது யில்லாவிட்டால் ஒப்பிசியால்மார் வந்து உங்களை குத்திப் போடுவார்களென்று ரொம்ப கோபிச்சுக் கொண்டான். முசே லாலியானால் பத்துப் பதினஞ்சு லக்ஷம் ரூபா சுத்தி சூத்தின் கீழே போட்டுக் கொண்டு லெஸ்ததாயிருந்துக் கொண்டு ஒரு காசாகிலும் ஒப்பிசியால் மாருக்கு குடுக்கயில்லை முசே லெறி கையிலே பணம் வாங்கி கொடுவென்று கேட்டான் என்கிறது சொலுதாதுகளுக்கு மாத்திரம் வெளிகளிலே குடியான பேர் ஆடு மாடுகளை கொள்ளையிட்டு வந்து அடிச்சுப் போடுகுறார்கள் ஒப்பிசியால்மார்களுக்கு ஒருகாசு குடுக்கயில்லை. சோறு யில்லாமல் செத்துப் போறார்கள். அவரவர் போட்டிருக்கிற துணிமணிகளை வித்துப்போட்டு சோறு தின்னுக் கொண்டு வருகிறார்கள். ஆனபடியினாலே யினிமேல் தமிழர் ஆரும் பணம் குடுக்குறதுக்கில்லை யென்று அவனவனுக்கு தோணினபடியினாலே யினிமேல் வெள்ளைக்காரர் கையிலே வாங்கிற யோசனையாய்க் காணுது. அது நிமித்தியத்திலே தான் குமிசேல் கூடப் போறார்களென்று சொன்னான்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 18; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 8; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே சிப்பாயிகள் வந்து மாசச் சம்பளம் கேட்டார்கள். நாமானால் குடுக்கிறதில்லை. முசே கில்லியார் ரெண்டு மாசத்தைக்கு குடுக்கச் சொன்னார். அந்தப்படிக்கி ரெண்டு மாசச் சம்பளம் குடுத்து விட்டோம். நம்மை பதினாயிரம் ரூபாயித் தெண்டம் குடுக்கச் சொன்னார்கள். அது குடுக்குறதுக்கு யில்லாமல் அந்தப் பணத்துக்கும் மனுஷரை அனுப்பி கேட்டு வரச் சொன்னார்கள். அவர் வந்து நடக்குறார்கள் யென்று சொன்னதுக்கு அதன் பேரிலே அவருடனே சொன்னது நாங்கள் உங்கள் கும்பினியான படியினாலே குடுக்க வேணும் யிந்தப்படிக்கி பதினோரு பேர்வழி சம்பளம் குடுக்கச் சொல்லி

யாங்காட்டும் நேமிச்சது. அந்தப்படிக்கிப் பெரியண்ண முதலி, கந்தப்ப முதலி, சவுரிராய பிள்ளை, குண்டூரார் சின்ன முதலி, அப்பு முதலி யிவர்கள் யெல்லாம் குடுக்கிறதில்லை யென்று சொன்னார்கள். அதின் பேரிலே யிவர்களையெல்லாம் முசே லெறி அழைச்சு குடுக்கச் சொன்னார். ஆனபடியினாலே யிவர்களெல்லாம் குடுக்குறார்கள். நீங்களும் குடுக்க வேணுமென்று கேட்டார்கள்.

நாமானால் குடுக்கிறதில்லை யென்று சொன்னோம். அவர்கள் அதின் பேரிலே யிருபது முப்பது பேராய் வந்து குதிச்சு கூப்பிட்டுக் கொண்டு சத்துநேரம் யிருந்து பிறப்பட்டுப் போயி முசே துபுவா வுடனே சொன்னார்கள். அவன் நாளை முசே லெறியைக் கேட்டு அவர் பேச்சுக்கு யெம்மாத்திரம் சொல்லுகுறேன் என்று சொன்னதாய் கேழ்க்கப்பட்டுது.

பகலைக்கு மேலாய் முசே லெறி ஒண்டியாய் பாதசாரியாயி ஈசானிய மூலையிலே யிருக்கிற கொத்தளத்தைப் பார்த்துப் போட்டு அங்கே தானே எட்டு மணி மட்டுக்கும் உளுக்கார்ந்திருந்தார். அப்பிறமும் முசியே துப்பிளேயிக்குசு யிருந்த பழய கொவற்ணமாவிலேயே யிருந்து கொண்டு அங்கே தானே சாப்பிட்டுப் போட்டு பத்துமணிக்கு கோட்டைக்கு திரும்பி வந்து சேர்ந்தான். பின்னையொரு விசேஷமான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 19; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 9; வியாழக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நயினாரும் முசே திப்பிளாமுடய கணக்கப்பிள்ளை ஆனந்தன் ரெண்டு பேரும் வீட்டுக்கு வந்தார்கள். வந்து வரி தண்டல் பணம் கபுறு காரியம் சொல்லிப் போட்டு நேத்தயதினம் முசே கொடுத்தேன் முசே திப்பிளாம் வீட்டுக்கு வந்தான் வந்தவிடத்திலே யென்னா ரெங்கப்பிள்ளையைக் காணோமென்று கேட்டான். யிருக்குராரென்றும் சொன்னோம். நாளை கோட்டைக்கு வருவாராயென்று கேட்டான். வருவாரென்று சொன்னோமென்று சொன்னார்கள். யென்னத்துக்கு கேட்டானென்று சொன்னார்கள். யென்னத்துக்கு கேட்டானென்று கேட்டதுக்கு யின்னையதினம் வரிக்காரரை யெல்லாம் அழைச்சு கேழ்க்கப் போறாப் போலே காணுதென்று சொன்னார்கள். அதனால் வந்து உம்மைக் கேட்டால் சரீரம் சொஸ்தமில்லை யென்று சொல்லுமென்று சொல்லியனுப்பி விச்சோம்.

அப்பிறம் ஒன்பது மணிக்கி முசே கொடுத்தேன் முசே லெறியண்டை கோட்டையிலே வந்திருந்து கொண்டு நம்மை அழைச்சு வரச்சொல்லி சேவுகனை அனுப்பிவிச்சான். நாம் வயற்றுக்கு பேதிக்கு சாப்பிட்டோம். யின்னைக்கி வரக்கூடாதென்று சொல்லியனுப்பிவிச்சோம்

யினிமேல் யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது கேழ்க்கப்பட்ட சேதி யென்னாவென்றால் ஞானப்பிறகாச முதலி சம்மதி இஞ்சினீர் முசே பொஷாக்கு முகாந்திரமாய் முன்னே அன்னூறு ரூபாயாய் தீந்ததாயும் ஆனால் சீட்டெழுதி கையெழுத்துப் போடயில்லை. இன்றைக்கு முசே கொடுத்தேன் அழைச்சு அன்னூறு ரூபாயிக்கு சீட்டெழுதி கையெழுத்துப் போடச் சொல்லிச் சொன்னார்கள். அதிலே முசே துபுவா யிருந்துக் கொண்டு யின்னம் ஆயிரம் ரூபாயி குடுக்கலாம் குடுத்தாலாச்சுது. குடாவிட்டால் யிவனை வெள்ளைக்காறரிருக்கிற கசோத்திலே கூடப் போடச் சொன்னார்கள். அதன் பேரிலே ஆயிரம் ரூபாயிக்கி சீட்டெழுதி கையெழுத்துப்போட்டு குடுத்தவுடனே முன்னே தீந்த சம்மதிக்கி மறுபடி ரெபண்டு பேசுறது துரையாயிருக்கிறவன் கேழ்க்கிறதும் முசே லெறிக் கோவர்ணதோர் ஒன்றும் கேளாமல் வாயை மூடிக்கொண்டு யிருந்தான். வேறு ஒன்றும் விசாரிக்கயில்லை.

அப்பிறம் முச்சியர் சாதி மனுஷர்களை அழைச்சு வரச்சொல்லி பணம் கேட்டதின் பேரிலே அவர்கள் ஒன்றும் குடுக்குறதுக்கு யில்லை யென்று சொன்னதின் பேரிலே அவர்களையும் கசோத்திலே வெள்ளைககாறர்களோடே கூட கசோத்திலே போட்டார்கள். அப்பிறம் மன்னப்ப முதலியை அழைச்சு ஆயிரம் ரூபாயிக்கு சீட்டெழுதி கையெழுத்துப் போடச் சொன்னார்கள் யெனக்கு ஆயிரம் ரூபாயிருந்தால் நான் கசோத்திலே யேன் யிருக்குறேனென்று சொன்னான். ஆனால் நீய்தான் யென்ன சொல்லுகுறாயென்று கேட்டார்கள். முன்னூறு ரூபாயானால் சம்மதி யென்று சொன்னான். பின்னை யெம்மாத்திரம ஆகிலும் உசத்தினால் குடுப்பாயாவென்று கேட்டார்கள். அதின் பேரிலே குடுக்குறதுக்கில்லை யென்றும் சொன்னான். ஆனால் பின்னையும் வெள்ளைக்காரருடனே கசோத்திலே போடச் சொன்னார்கள். அப்பிறம் சோணாசலம் அம்மான் வடமலை பிள்ளையை வரச் சொன்னார்கள். அவனுக்கு முன்னே தானே தீந்து போச்சுதென்று சொன்னதுக்கு அது தேவையில்லை யென்றும் அழையுமென்று சொன்னார்கள். அதிலே பனிரெண்டு மணி அடிச்சுது. வீட்டுக்கு பிறப்பட்டுப் போயிவிட்டார்கள். போகச்சே வடமலை பிள்ளையை சாயங்காலம் அழைச்சு வந்து வச்சிருக்கச் சொல்லிப் போயிவிட்டதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் பகலைக்கு மேலாய் ஒருத்தரையுமழைச்சு கேழ்க்கக் கொள்ளயில்லை. முசே லெறி பிறப்பட்டு முசே னுவார் வீட்டுக்குப் போயிவிட்டாரெங்கிறதாய் கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம் கேழ்க்கப்பட்ட சேதி யென்ன வென்றால் தியாகதுற்கத்துக்கு விசுபு–பாதிரி பிறகே போன அலுமாங்கி குதிரைக்காரரும் செஞ்சி கொம்மாந்தானும் கூடிக் கொண்டு திருக்கோவிலூரிலே யிருந்த இங்கிலீசுக்காரர் பவுன்சு வெள்ளைக்காரர் முப்பது பேரும் நானூறு குதிரையும் அன்னூறு பாறும் யிருந்தவர்களை

அடிச்சு முப்பது பேர் வெள்ளைக்காரரையும் சிறிது குதிரையையும் சிறிது துப்பாக்கிகளையும் அகப்பட்டதாகவும் மத்தப் பேரெல்லாம் ஓடிப் போனார்களென்று முசே லாலி அவர்களுக்கு யெழுதி வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டது.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 20; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 10; சுக்கிரவாரம்*

இத்தனாள் யெம்பெருமாள் பிள்ளைக்கு உடம்பிறந்தான் குமாரன் முத்துவிரராகுவப் பிள்ளை குமாரன் வீராம பெருமாள் பிள்ளை யெங்கிறவன் லங்கணம் பண்ணி பத்தியம் நேத்து குடுத்தவிடத்திலே சாயங்காலம் சிலேஷமம் கண்டு தென்று வந்து கபுறு சொன்னார்கள். ரொம்பனாளாய் யிருந்த பட்டிணியினாலே யின்னைய தினம் காலமே யேழரை மணிக்குப் பார்த்துப் போனவிடத்திலே ஊரத்த சுவாசம் கண்டுது ஆனபடியினாலே யினிகாரியமில்லை யென்று கோட்டைக்கி போக வேணுமென்று கோட்டைக்குள்ளே பிடவைப் பார்க்கிற சாலையிலே போயி பல்லக்கின் பேரிலே போகச்சே செத்துப் போனானெங்கிற சமாச்சாரம் வந்து சொன்னார்கள் அந்த மட்டிலே வீட்டே வந்தோம். அவனைத் தகனம் பண்ணிவிச்சுப் போட்டு ஸ்னானம் பண்ணி வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்தோம்.

சுபகிறுது வருசத்திலே நாமும் குருவப்ப பிள்ளையும் சீமையிலே யிருந்து வந்து பரங்கிமலைக்கி மரத்திருநாளுக்குப் போய் சென்னப்பட்டணத்துக்குப் போனபோது வீராப் பெருமாளுக்கு மார் ஒசந்து கோழிமார் பட்டிருக்கும். அதுக்கு அஞ்சிவிடத்திலே மார்பிலே சுட்டிகைப் போட்டிருக்கும் அவனுக்குப் பிராத்தனை பண்ணிக் கொண்டேனென்று அவன் தாயார் பிரார்த்தனைப் பண்ணிக் கொண்டேனென்று மலைக்கு யெடுத்துக் கொண்டு வந்தான். அப்போ யிவனுக்கு இரண்டு வயிசு உண்டு ஆனபடியினாலே யின்னைய வரைக்கும் வீராப் பெருமாள் பிள்ளைக்கு நாற்பத்தோரு வயது ஆச்சுது. யின்னையதினம் மரணத்தை அடைஞ்சான். யிந்த சமாச்சாரம் முசே லெறிக்கி சொல்லி அனுப்பி விச்சோம் யின்னைக்கும் நாளைக்கும் நம்மைத் தேடாமல் சாவடி ஞாயத்துக்கு வந்திருந்த முசே கொடுத்தேன், முசே துப்பிளாம் வீட்டுக்குப் போயி பதினொண்ணரை மணிக்கி கோட்டைக்கு வந்தான். முசே துபுவாவும் வந்திருந்தான் வந்தவர்கள் நயினாரை அழைச்சனுப்பிவிச்சு பணம் காசு வரயில்லை யிந்த வாயிதாவுக்கு யிருபதினாயிரம் ரூபாயி வர வேணுமென்றும் வரயில்லை யென்று சுறுக்குப் பண்ணி மன்னப்ப முதலி தம்பி குமரப்ப முதலியைக் கசோத்திலே வச்சிருக்குதே, மன்னப்ப முதலி யென்கிறவன் வெளியே திரியுறானாம் அவனை நாலு மணிக்கி முசே கொடுத்தேன் தன் வீட்டைக் கொண்டு வரச்சொல்லியும் சோணாசலம் அம்மான் வடமலை பிள்ளை யெங்கிறவனையும் அழைச்சு

வரச்சொல்லி முசே துபாவும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் முசே லெறி முன்பாக சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் யிங்கிலீசுக்காரருடைய வெள்ளைக்காரருடைய குதிரைக்காரரும் நூறு நூத்தன்பது பேர் பாறுக்காறரும் இருபது முப்பது குதிரையும் நூறு நூத்தன்பது துலுக்கர் குதிரைக் காறரும் பிறப்பட்டு ஆலங்குப்பம் தலையாரியை பிடிச்சுக் கொண்டு வழிகாட்டச் சொல்லி நம்முடைய சத்திரத்திலே வந்து யிறங்கி கொண்டு யிவ்விடத்துக்கு நெய்சட்டியும் வாழக்காயும் கொண்டு போகிறவர்களை மடக்கிக் கொண்டு நன்றாய் அடிச்சு யினிமேல் யிவ்வழி கொண்டு வந்தால் உங்களை அப்படி செய்வேன் யிப்படி செய்வேன் யென்று சொல்லி அவ்விடத்திலே தானே யிறங்கி யிருக்குறார்கள் யென்று சொன்னார்கள். பின்னையும் ஆயிரம் குதிரை மட்டுக்கும் குண்டுசாலை மட்டுக்கும் வந்து கலாட்டா பண்ணார்களென்றும் சொன்னார்கள். சென்னப்பட்டணம் பிக்கட்டு (Mr. Pigot) முசே லாலி பேருக்கு ஒரு கடுதாசி யெழுதி யனுப்பிவிச்சதாகவும் குமிசெல்க்காறரையும் கணக்கர் ஒப்பிசியால்மார்களையும் அழைத்து கையெழுத்துப் போட்டிருக்குறார்களே அவர்களையெல்லாம் வரச்சொல்லி எழுதினதாயும் அதன் பேரிலே முசே லாலி வங்காளத்திலே அகப்பட்டவர்கள், மச்சிலிபந்தரிலே அகப்பட்டவர்கள், யிந்தச் சண்டையிலே அகப்பட்ட குமிசெல்க்காரர்களை யெல்லாம் ஒப்பிசியால் மார்களையெல்லாம் கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சுப் போட்டதாயும் அவர்களெல்லாம் யின்னம் ரெண்டு மூணு நாளையிலே போகிறதுக்குப் பயணமாயிருக்குறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது (என்று) சொன்னார்கள்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 21; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 11;. சனிவாரம்***

இத்தனாள் நாம் வெளியே போகயில்லையேனென்றால் வீராப்பெருமாள் செத்துப் போனபடியினாலே அன்று தலைக்கட்டான படியினாலேயும் வெளியே நாம் போகயில்லை. நேத்து ராத்திரி துவக்கி மந்தாரமும் சிறிது மழையுமாயிருந்தது. கோட்டை சமாச்சாரம் யிதுக்கு மேல் தெரிஞ்சு யெழுத வேண்டியது.

ஏழுவரி கிழிந்து யிருக்கிறது.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 22; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 12; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே யெட்டரை மணிக்கு நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி யேழு மணிக்குத் தானே கப்பூசுக் கோவிலுக்குப் போயிப் பூசை கேட்டு வந்து காம்பிராவுக்குள்ளே பூந்துக்

கொண்டு கதவை சாத்திக் கொண்டு யிருந்தார். கோட்டை கோவில் சாத்தியாய் விட்டது அப்படித்தானே சாத்தியிருந்தது. இரண்டு மூணு நாயத்துக்கிழமை யாயி கோட்டை கோவிலிலே பூசை சொல்லுகிறதில்லை. சாத்தினபடிக்கித் தானே யிருக்குது. முசே லெறி கப்பூசுக் கோவிலுக்குப் போய்விட்டு வந்து விடுகிறாரென்று அங்கே யிருந்தவர்கள் சொன்னார்கள். அப்பிறம் நாம் கோவற்ணமா வீட்டின் பேரிலே யிருக்கச்சே ரெண்டு பேர் வெள்ளைக்காரர் பெரிய மனுஷர் வந்தார்கள். அவர்கள் சொன்னது முசே லெறி யினிமேல் தம்மாலே நிறுவாகமில்லை யென்று தம்முட தட்டுமுட்டுகளை யெல்லாம் முஸ்தீத்தாய் பண்ணிக் கொண்டு யிங்கிலீசுக்காரர் கையிலே பசப்போடுது (Passport) வாங்கிக் கொண்டு கப்பலின் பேரிலே யேறிப் போறதாய் யோசனை பண்ணி யிருக்குறார். முசே லெறி பேருக்கு காகிதம் வந்தால், யிவர் அந்தக் காகிதத்தை பார்க்கப் போகாது அது முசே லாலி யண்டைக்கு அனுப்பிவிட வேணுமென்றும் அந்தப்படிக்கி அவருடைய உத்திரவு அந்த மனத்தாக்ஷி யினாலேயும் முசே லெறிக்கு ரொம்ப மனக்கவலை வேசாராய் கப்பலின் பேரிலே யேறிப்போறதாய் சமாச்சாரம் சொன்னாரக்ள். அப்பிறம் யிதுக்கடுத்தாப் போலே சேந்து எழுதுகுறது அவர்கள் முசே லெறியண்டை பேசியிருந்து போனார்கள். முசே துபுவா வந்து அரை நாழிகை மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்தான். அப்பால் போயிவிட்டான் பதினோரு மணிக்கி முசே கொடுத்தேனும் பேசிக் கொண்டு யிருந்து போயிவிட்டான்.

ஏழு வரிகள் கிழிந்து போய்விட்டது. சிப்பாயிகள் கந்தப்ப முதலி முசியே லெறி என்கிற பேர்கள் மட்டும் எழுத்து தெரிகிறது.

சிலவுக்கம் வேணும் சாப்பாட்டுக்கும் வேணும் யென்று கேட்டதின் பேரிலே கும்பினி தாலூக்குடனே சேர்ந்த பேருக்கெல்லாம் முசே லெறி யாங்காட்டும் குடுக்கிறது முசே லெறியைப் போய் கேளுங்களென்று சொன்னதின் பேரிலே ஒப்பிசியால்மார் சொன்னது முசே லெறி கையிலே யென்ன யிருக்குது வருகிற பணத்தை யெல்லாம் நீர் வாங்கிக் கொள்ளுகிறீர் நீர்தான் குடுக்கவேணுமென்று கேட்டதுக்கு அவர்களை ரொம்ப உதாசீனமாய் பேசி நீங்களெல்லாம் இருபத்து நாலு மணி நேரமாகிறதுக்குள்ளே நாளையத்தினம் போனாலாச்சுது யில்லாவிட்டால் உங்களைத் தூக்கிப் போடுவேனென்று போங்களென்று சொன்னானெங்கிறதாய் சொன்னார்கள். அவர்களை பிரிசை நேராய் (Prisoners) யிருக்கிறவர்கள் யெத்தனை பேருண்டு யென்று கேட்டதுக்கு ஒருத்தன் சொன்னது வங்காளத்திலேயும், மச்சிலிபந்தரிலேயும் காரைக்காலிலேயும், வந்தவாசியிலேயும், சென்னப்பட்டணம் சண்டையிலேயும் பிரிசினேரானவர்கள் ஒப்பிசியால்மார்கள் குமிசேலியோர்கள் கணக்கர்கள் யேகத்துக்கு நானூறு பேருண்டு யென்றும் சொன்னான்.

ஒருத்தன் யிறுநூறு பேருண்டு யென்று சொன்னான். ஆனால் வங்காளத்திலே முசே கொடுத்தேன் மாத்திரம் அப்பாலே யிருந்த படியினாலே அவனுக்கு கவையில்லை முசே கதிவேலுக்கு (M. Gadeville) மாத்திக் கொண்ட படியினாலே அவனுக்கும் கவையில்லை. மத்தப் பேரெல்லாம் போகவேணுமென்று சொன்னார்கள். யித்தனாள் வழுதாவூர் கோட்டையிலே இங்கிலீசுக்காரருடைய தண்டிலே பீறங்கி ரொம்ப போட்டார்கள். பண்டிகையேதாகிலும் உண்டோ யென்னமோ தெரியப்போகாது. முசே கில்லியார் (M. Guillard]) வந்து பேசிக்கொண்டிருந்தவர் யெனக்கானால் முன்னையப் போலே கடுதாசி நன்னாப் பார்க்கப் போகயில்லை. சீமையிலே யானால் அதுக்கு யேத்தக் கண்ணாடியுண்டு யிவ்விடத்திலே அந்தக்கண்ணாடி யில்லை வைத்தியர் கெட்டிக்காரருண்டானால் அழைப்பிக்க வேணுமென்று சொன்னார். அவர்களெல்லாரும் வெளியே போயிருக்குறார்கள் வரட்டும் அப்படியே அழைச்சனுப்பிவிக்குறோம் யென்று சொன்னோம்.

முன்னாலே முசே லாலி முசே லெறியை அடிச்சும் ஒதைச்சும் திட்டினதுக்கும் சாந்தமாயிருந்துக் கொண்டிருந்தார் யெதுனாலே யென்றால் கோவற்ணதோர் என்கிற மகிமை யிருந்தபடியினாலே யிதுகளையெல்லாம் சீமைக்கு எழுதி அங்கே விவரிப்பாய் சொல்லுவோமென்று யிருந்தார். யிப்போ அந்த மரியாதை (வரி கிழிந்து யிருக்கிறது). யில்லை அவருக்கு வருகிற காகிதம் கூட அவர் பார்க்கப் போகாதென்றும் முசே லாலி தானே பார்த்துக் கொள்ளுகிறபடியினாலே யித்தனை அவமரியாதை நடப்பிக்கிற படியினாலே ரொம்ப மனசு வேசாராவாய் சீமைக்குப் போகப் பயண முஸ்தீப்பாயிருக்குறாரென்று ரெண்டொருத்தர் வெள்ளைக்காரர் பெரிய மனுஷர் சொன்னார்கள்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 23; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 13; திங்கள்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போகவேணுமென்று போகச்சே முசே லெறியும் ரெண்டு மூணு சேவுக்கும் ஒரு சோபுதாரரும் தச்சக்கூடத்தண்டை பழசு பூரா பல்லக்கு ஒண்ணு ஒண்டியாயி ஒரு வெள்ளைக்காரன் காளை மாடு விசாரிக்கிறவனுடனே பேசிக் கொண்டு யிருந்தார். நாம் போய் பூச்செண்டு ஒண்ணு குடுத்து ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணினார். பார்த்தால் ரொம்ப விசனமாய்க் கண்டு அப்பிறம் கோட்டைக்குப் போனார். நாமும் பிறகே நடந்து போனோம் அவர் முசே கொற்னேத்துக் கோந்துக்குப் போயி கணக்கு சீக்கிறமாய் தீர்க்கச் சொல்லி முசே பெதிவால் (M. Petivel's) கோந்து வாரிலேயும் போயி கணக்கு சீக்கிறமாய் தீர்க்கச் சொல்லிப் போட்டு கொவற்ணமாமுக்கு போனார். நாம் பிடவைப் பாரக்கிற

சாலையிலே தானே யிருந்தோம் பிறகு முசே கில்லியார் வந்து முசே லெறியைக் கண்டு பேசிப் போட்டு நம்மளன்டைக்கு வந்தார். நாம் யிந்த போயியள் உபத்திரவம் பொருக்கப் போகயில்லை. அதனாலே இரண்டு மாசத்தைக்கு குடுக்கச் சொன்னீர். அந்தப்படிக்கித் தானே ரெண்டு மாசமும் குடுத்தோம். யினிமேல் குடுக்குறதுக்கு யில்லை.

யென்று சொன்னதின் பேரிலே முசே கில்லியார் சொன்னது இரண்டு மாசத்தைக்கு குடுக்கச் சொன்னது குமிசேலிலேயும் அப்படித்தானே சொன்னது யிப்பவும் நீங்கள் குமிசேலுக்கு எழுதிக் கேளுங்கள் நானும் சொல்லுகுறேனென்றும் சொன்னான். சவுரிராய பிள்ளை பெரியண்ண முதலி, அப்பு முதலி யெல்லாரும் யிருந்தார்கள்.

அப்பு முதலியுடனே போயியள் (Sepoyo) சம்மதிக்கி பித்திசாம் யெழுதி குடுக்கச் சொல்லி பதினோரு மணிக்குப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். சாயங்காலம் முசே துபுவா வண்டை யிருக்கிற பஞ்சு என்கிற சட்டைக்காரன் துலுக்க வேஷம் போட்டுக் கொண்டு யிருக்குறவன் வந்து முசே துபுவா கேழ்க்கச் சொன்னாரென்று போயியள் சம்பள நிமித்தியம் ஆக வந்து கேட்டான். அதுக்கு நம்முடைய ஞாயமெல்லாம் சொன்னோம். அதின் பேரிலே குடுக்கிறீரா யில்லையா யென்று கேழ்க்கச் சொன்னாரென்று கேட்டான். அதுக்கு நீய் நம்முடைய பாடுதியாய் யிருந்துக் கொண்டு பேசுயென்று சொல்லி யனுப்பிவிச்சோம். யித்தனாள் காலத்தாலே இங்கிலிசுக்காறருடைய குதிரைகள் காட்டு மேடு குண்டு சாலை யிந்த மட்டுக்கும் வந்து காலாடின படியினாலே நம்முடவர்கள் யெல்லப் பிள்ளைசாவடியிலே யிருந்தவர்கள் பீரங்கியினாலே போட்டார்கள். அவர்களிடத்திலே ஒரு குதிரையும், பேரிலே யிருந்த சிப்பாயும் அடிச்சுக் கொண்டு போச்சுது. அந்த மட்டிலே குதிரைக்காரர் வாங்கிப் போனார்கள்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 24; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 14; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே நேத்தியதினம் சஞ்சுவார் பண்டிகை (St John) யானபடியினாலே கோட்டைக்கு தென்னண்டை பனமரம் ஒண்ணு நட்டு சுத்து வெறகுகட்டும் போட்டு அப்பிறம் கோவற்ணதோரா யிருக்கும் பாதிரியாரும் குமிசெல்க்காரர் சொலுதாதுகள் சகலமான பேரும் வரிசை வைச்சுக் கொண்டு வந்து தம்பூறுகள் அடிச்சு பாதிரியள் வேதம் படிச்சான உடனே கோவர்ணதோரும் பாதிரியாரும் நடக்கச்சே விறகு கொளுத்தி விடுகுறது. அப்பிறம் வரிசை நின்று சொலுதாதுகள் மூணு தரம் துப்பாக்கி தீருகுறது கோட்டையிலேயும் யிருபத்தோரு பீரங்கி மூணுதரம் போடுகுறது.

கப்பலிலே கப்பலிருந்தால் அதிலேயும் பீரங்கி போடுகுறது. அப்பிறம் வாணம் சுடுகுறது வரிசை கலைஞ்சு போகச்சே ஒவ்வொரு துப்பாக்கிகளாய் சுட்டுக் கொண்டு போவார்கள். மத்தனாள் கோட்டையிலே அந்தப்படி வரிசையள் வைச்சு தம்பூறுகளடிச்சு கோவர்ணதோர் குமிசெல்க்காரர் சகலமான பேரும் வந்து பூசை கேட்டு விவ்ளுவா (Viril le Roi) யென்று ராசா சிறஞ்சீவி யாயிருக்க வேணுமென்று கூப்பிட்டு மூணுதரம் துப்பாக்கியள் தீந்து மூணு தரம் யிருபத்தோரு பீரங்கி போட்டு அப்பறம் அவரவர் வீட்டுக்குப் போயி சாப்பிட்டு பண்டிகை கொண்டாடி வருகிறது யெப்போதும் நடக்கிறது.

இவ்வருஷம் யிதிலே ஒண்ணுதானும் நடக்கயில்லை முசே லெறி காலத்தாலே யேழு மணிக்குத்தானே கப்போசு கோவிலுக்குப் போயி பூசை கேட்டு வந்து காம்பிராவுக்குள்ளே பூந்து கதவை சாத்திக் கொண்டார். வெள்ளைக்காரர் ஒருத்தரும் வரயில்லை யித்தனாளும் நாலு பேர் மூணு பேர் ஆகலும் வருவார்கள். யின்னையதினம் ஒருத்தராகிலும் வரயில்லை. நிறுமானுஷ்ய மாயிருந்தது வாசற்படியிலே யிருந்த சொலுதாதுகள் மாத்திரம் யிருந்தார்களெயல்லாமல் பின்னை யொருத்தருமில்லை. கோட்டைக் கோவில் கதவை சாத்தின படிக்கி யிருந்தது. நேத்தயதினம் வந்த சிப்பாயிகள் மனுஷன் வந்து சம்பளம் குடுத்தாலாச்சுது யில்லாவிட்டால் சிப்பாயியள் போயி உம்முடைய வீட்டு வாசற்படியிலே உளுக்கார்ந்திருக்கச் சொன்னானென்றும் பதினைஞ்சு நாளையச் சம்பளம் குடுக்கச் சொன்னானென்று சொன்னான். அப்பிறம் நாம் பார்த்த முகமெல்லாம் வெளுத்துப்போய் வாய் காஞ்சு யிருக்குது யென்று யோசனை பண்ணிக் கொண்டு நல்லது பீங்கான் இருக்குது. யெதுவாகிலும் பார்ப்போமென்று சாயங்காலம் வரச்சொன்னோம். போயிகள் சம்மதிக்கி எழுதின பித்திசாமை அப்பு முதலி கொண்டு வந்து காண்பிச்சு சொன்னவயணம் அதுக்கு வயணமாயிருக்கயிலலை. அதுக்கு வயணம் சொல்லிப் போட்டு பத்துமணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். இத்தனாள் சாயங்காலம் மைசூரார் பவுன்சு அயிதர் நாயக்கன் மச்சானும் ரெண்டாயிரம் குதிரையும் மைசூர் வெங்கிட்ட நாரணப்பய்யனும் வந்து வில்லியனூர் வந்து சேர்ந்தார்கள். ராத்திரி பதினோரு மணிக்கி பிறம்பை மேட்டிலே நம்முடவர்கள் பவுன்சு போயியிறங்கி யிருந்தவர்கள் இங்கிலீசுக்காறர்கள் வந்தார்களென்றும் சும்மா தானே காபிராப்பட்டு யிவர்கள் தானே பீரங்கி வெடியும் துப்பாக்கியள் வெடியும் சுட்டார்கள். பிறகு நம்முடவர்கள் தானே யென்று சும்மாயிருந்தார்கள். ஆனால் ஒருத்தருக்கும் காயங்கள் பட்டதில்லை. வாணப்பட்டையிலே யிருந்த முசே லாலி சாயங்காலம் பிறப்பட்டு தான் யிறங்கிற முசே வீட்டுக்கு வந்து பதினோரு மணிக்கு மட்டும் யிருந்துப் போட்டு மறுபடியும் வாணப்பட்டைக்கிப் போயிவிட்டார்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 25; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 15; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே லாலியும் காடுது குதிரைக்காரர் நூறு அல்லது இறுநூறு பேர்களுமாய் பிறப்பட்டு வில்லியநல்லூருக்கு அயிதர் நாயக்கனை காணப்போனார். போனவுடனே அவனும் முன்னேதானே ரெண்டு பேருக்கும் பேட்டியாகச்சே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பிறம் சிறிது நேரம் ரெண்டு பேரும் யென்னமோ விசேஷம் பேசிக் கொண்டுயிருந்து முசே லாலி வந்த குதிரையெல்லாம் பார்த்தார். ரெண்டாயிரம் குதிரையும் நல்லகுதிரையாயிப் பொறுக்கி அதின்படியாய் தானே யிருந்தது. அப்பிறம் மயிசூரார் பவுன்சு வரச்சே திருவேதி பண்ணுருட்டி, தூக்குணாம் பாக்கம் இதுகளெல்லாம் கொள்ளை வல்லடி யிட்டு மாடுகளையெல்லாம் யெடுத்துக் கொண்டது மல்லாமல் பெண்டுகள் சீலைகள் பிடவைகளையும் சிறையும் பிடிச்சுக் கொண்டு நிப்பாத்தம் பண்ணிக் கொண்டு வந்தார்கள். மாடுகள் அவர்கள் கன்றும் பசுவும் ரெண்டு ரூபா விழுக்காடு விக்குறார்களென்று சமாச்சாரம் சொன்னார்கள். பகலைக்கி மேலாக இங்கிலேசுக்காரருக்கு றஸ்து வருகுதென்கிறதாய் சேதி கேட்டு மயிசூரார் குதிரைகள் பகலைக்கு மேலாய் பிறப்பட்டு காசிப்பாளையம் கறுப்பிள்ளை சாவடியண்டை போனவிடத்திலே அங்கே யிங்கிலேசுக்காரருடைய போயிகள் அன்பது பேர் தயினாத்துயிருந்தார்கள். அவர்களை பத்துப்பதினஞ்சு பேரை தலைகளை வெட்டினார்கள். மத்தப்பேர் ஓடிப்போயிவிட்டார்கள். போனவர்கள் துப்பாக்கியளைப் போட்டுப் போட்டு ஓடிப்போயிவிட்டார்கள். அந்த துப்பாக்கியளை யெடுத்துக் கொண்டு வரவேணுமென்று யிருக்கச்சே இங்கிலீசுக்காரருடைய பவுன்சும் குதிரைக்காரரும் வந்து யெதுத்தார்கள்.

அவர்களுக்கும் மயிசூரார் குதிரைக்காறருக்கும் சத்து சண்டையாயி யிங்கிலேசுக்காரருடைய குதிரை நாற்பத்து மூணு (43) குதிரையும் பதினேழு துப்பாக்கியும் கருப்பிள்ளை சாவடியிலே கட்டி யிருந்தபடிக்கி யிவர்கள் கையிலே அகப்பட்டுது. மயிசூரார் பவுன்சுலே ஒரு சுவார் கைஅறுதியாயி விழுந்து போயி விட்டான். ஒருத்தனுக்கு குண்டுபட்டு வகுத்திலே தானே குண்டு நிண்ணு போச்சுது. ஒருத்தனுக்கு துடையிலே குண்டு பட்டுது ஒருத்தனுக்கு முதுகிலே காயம்பட்டுது யிந்த மூணு பேரையும் காயம் கட்டி சீக்கிறமாய் அனுப்பச் சொல்லி யிசுப்பித்தாலிலே கொண்டு போயி போட்டார்கள். யிவர்கள் சண்டை குடுக்கச்சே நம்முடவர்கள் உசார்காடுது குதிரைக்காரர் முன்னுறுபேர் போனவர்கள் யிவர்கள் சண்டை குடுக்கச்சே, மயிசூராருக்கம் நாம் மத்தத்து பண்ணினால் அவர்களுக்கு அவமரியாதை யென்று யோசனை பண்ணி அங்கே யிருந்து குதிரைகளை ஓட்டம் போட்டு திரும்பி பாராமல்

படிக்கி யெல்லப்பிள்ளை சாவடிக்கு ஓடிவந்து விட்டார்கள். அப்பிறம் மயிசூரார் குதிரைக்காரர் பார்த்தார்கள். வந்த குதிரைக்காரர்களானால் நமக்கு மத்தத்து பண்ணாமல் படிக்கி திருப்பிக் கொண்டு போயிவிட்டார்கள் யென்று அவர்களும் மெள்ள திருப்பிக் கொண்டார்கள். இங்கிலீசுக்காரரும் யிவர்கள் திரும்பி போகச்சே நாமேன் பின் துடருகுறோமென்று அங்கே தானே நிண்ணு அப்பிறம் போயிவிட்டார்கள். மயிசூராரும் அவர்களிறங்கியிருந்த பாளையத்தைப் போயிச் சேர்ந்தார்கள். மயிசூரிலேயிருந்து வந்த யெசமான் துலக்கன் மகத்மல்லி நாயக்கன் (Mahatmalli Nayakhan) யென்று முன்னே பேர் யிப்போ மகத்மல்லிகானென்று பேரிட்டுக் கொண்டு யிவனுக்கு யெசமான் பேர் அயிதர் நாயக்கன் முன்னே பேரிருந்ததை யிப்போ அயிதர் அல்லிக்கானென்று பேரிட்டுக் கொண்டுயிருந்தான். அவனுடைய பக்ஷி வெங்கிட்டராயன் அவன் வெங்காசி பண்டிதன் தீவான் வைக்கீல் வெங்கட்டராயன் அப்பிறம் முசே லாலியுடனேயும் முசே தெலார்சும் மயிலாப்பூர் பிசுப்பு பாதிரி நொரொன்னாவும் சாயங்காலம் மயிசூரிலேயிருந்து வந்த மகத்துமல்லிக்கானும் பக்ஷி வெங்கிட்டராயனும் வைக்கீல் வெங்கட்டநாறணப் பய்யனும் யிவர்களெல்லாம் முசே பெடுத்தல்மீயுட தோட்டத்திலே போயி சாயங்காலம் கலாபத்திலே யிருந்தார்கள். யெங்கிறதாய் சேதி கேட்டோம். சாயங்காலம் நாம் சுவாரி பிறப்பட்டு முத்திரைப் பாளையத்து மட்டுக்கும் போயி திரும்பி சாலை வழியாயி வந்து யேழு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் காலத்தாலே ஊரிலே மாடுகள், ஆடுகள் பிடிச்சார்கள். தண்டுக்கு மருந்து குண்டும், றஸ்துக்களும் அனுப்பிவிக்கிற நிமித்தியம் காடி, மாடுகள், யெருதுகள் பிடிச்சார்கள். ஊரிலேயும் குடிகள் வசத்திலே யிருக்கிற நெல்லு எடுக்குறார்கள் யெங்கிறதாய் சேதி கேட்டோம்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 26; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 16; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கதவை சாத்திக் கொண்டு காம்பிராவுக்குள்ளே யிருந்தான். அங்கே முசே புலோவும் முசே கில்லியாரும் வந்தான் வந்தவர்கள் அயிதர் அல்லி நாயக்கனுட மச்சினன் வந்தானென்று அவன் பேட்டிக்கி முசே லாலி போனாரா யென்று கேட்டார்கள். நேத்தியதினம் அவன் மெய்யாகப் போகயில்லை. அவனண்டையிருக்கிற பக்ஷி பேட்டி பண்ணிப் போனானேயல்லாமல் முசே லாலி யின்றைய தினம் அவன் பேட்டிக்குப் போகுறதாய் சொன்னார்கள். பின்னையென்னா உடன்படிக்கை பண்ணார்களென்று கேட்டார்கள். யெனக்கெப்படித் தெரியும் ஆனால் கேட்டது போகட்டும். யிப்போ சீமை கட்டுகிற சீமையிலே பாதி குடுக்கவும்

தியாகதுற்க்கம் வகையிரா சீமை குடுக்கவும் பின்னையும் யின்னம் சிறிது உடம்படிக்கை பேச வேண்டியிருக்குதென்று சொன்னாரென்று சொன்னோம். அதன் பேரிலே பாத்திரா முசே லாலியுடைய புத்தியை தாம் கோட்டைக்குள்ளே வந்திருந்து கொண்டு அவனை யிவ்விடத்துக்கு அழைப்பிச்சுப் பேச வேண்டிய சம்மதியள் பேசிக்கொண்டு போகவேணும் அதைவிட்டுப் போட்டு யிவனாய்ப் போனது நன்னாயிருந்த தென்று யிப்படியாக பரியாசமாய் நகைச்சுக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பிறப்பட்டு வீட்டுக்குப் போயி விட்டார்கள். மயிலாப்பூர் விசுபு பாதிரி நொரொஞ்னா (Biohop Padre Father Noronha of Mylapore) வண்டியேறிக் கொண்டு வந்து முசே லெறியண்டை பேசிக் கொண்டிருந்து அப்பிறம் பிறப்பட்டுப் போயிவிட்டான்.

அப்பிறம் நயினாரும் முசே துப்பிளாமுடைய கணக்குப்பிள்ளை ஆனந்தனும் வந்து வரி சம்மதி நிலுவை யெல்லாம் முசே கொடுத்தேனண்டையிலே யெழுதி வைக்கச் சொன்னான் யென்று வந்து சொன்னார்கள். ஆனால் உங்கள் பேரிலே ரெண்டாயிரத்து முன்னூத்துச் சில்லரை ரூபாயும் முத்தப்பிள்ளை யிது அன்பதி (50) ரூபாயும் யிருக்குதென்று சொன்னார்கள். நாம் சொன்னது "நம்முடைய ரூபாயும் முத்தபிள்ளை ரூபாயும் நிறுத்திவச்சு மத்த நிலுவை யெல்லாம் யெழுதி வாருங்கள் நாம் நூறும் இறுநூறுமாய் செலுத்திப் போடுகுறோமென்று" சொன்னோம். நல்லதென்று போயிவிட்டார்கள். அப்பிறம் பதினோரு மணியாச்சுது மைசூர் வைக்கீல் வெங்கிட்ட நாராணப்பய்யனுடைய போயியண்டன் ஒருத்தனை வேகுக்காரனென்று பிடிச்சு கும்பினி சிறையாக்கிப் போட்டார்கள். அவனை விட்டுவிடச் சொல்லிப் பாதிரி விசுப்பு நொரோஞ்னா நயினாரை அழைச்சு முசே லாலியுடைய உத்தாரம் சிறையாயிருக்கிற போயியண்டனை விட்டுவிடச் சொல்லி மூணு நாளாச்சுது. முசே கதிவேலும் (M. Gadeville) அறிவான் யென்று சொன்னான். அதன்பேரிலே அந்த போயிவண்டனை நயினார் விட்டுவிட்டான். அந்த சமாச்சாரம் நயினார் போயி முசே கொடுத்தேனுடனே சொன்னான். அதன் பேரிலே யென்னுடைய உத்தாரமில்லாமல் நீயெப்படி விடுவாயென்றும் யிந்த க்ஷணம் அவனைக் கொண்டு வரச்சொல்லி சேர்ப்பிச்சாலாச்சுது யில்லாவிட்டால் உன்னை தூக்கிலே போடுவேனென்று சொன்னான். அந்தச் சமாச்சாரம் நயினார் வந்து சொன்னான். பாதிரி வந்து முசே லெறியண்டை கண்டு பேசிக்கொண்டு யிருக்கிறான். போய் சொல்ல வேணுமென்று சொன்னேன். நயினார் போய் வீசுப்புடனே சொன்னான் அவன் முசே லெறியுடனே சொன்னான் முசே லெறியும் நல்லது போயென்று சொன்னார். மறுபடியும் முசே கொடுத்தேனும் நயினாரை அழைச்சனுப்பி விச்சான். அதுக்கு யிவன் ரெண்டு நாழிகை பொறுத்து வாறேனென்று சொல்லி அனுப்பிவிச்சதின் பேரிலே அவன் கோபிச்சுக் கொண்டு

கசோத்திலே போடுகுறேனென்று பல்லக்குயேறிக் கொண்டு கோட்டை வாசற்படி கீழண்டை வாசற்படியை வந்து நிண்ணு கொண்டு கார்ப்போரலை அழைச்சான்.

கொர்ப்பரால்யில்லை ஒரு நாழிகை மட்டுக்கும் நிண்ணுக்கொண்டு யிருந்தான். யிந்த சமாச்சாரம் நயினார் கேட்டு முசே லெறியுடனே போயி யிப்படி யென்னை முசே கொடுத்தேன் கசோத்திலே போடுகுறோமென்று கோபிச்சுக் கொண்டு யிருக்குறானென்று சொன்னதின் பேரிலே அவர் முசே கொடுத்தேனுக்கு ஒரு கடுதாசி யெழுதி குடுத்தான். அதிலே முசே கொடுத்தேனும் நயினாரை அழைச்சு அனுப்பிவிச்சான். இந்தக் கடுதாசியை கொண்டு போயி குடுத்தான் அதைப் பார்த்துக் கொண்டு முசே லெறியண்டைக்குப் போய் முசே லெறிக்கும் முசே கொடுத்தேனுக்கும் சத்து விசேஷம் உரத்து நடந்துதெங்கிறதாய் சொன்னார்கள்.

அப்பறம் சாவடிக் கணக்குப் பிள்ளையளை அழைப்பிச்சு அனுப்பி விச்சார் முசே கொடுத்தேன். சீயாலப்பிள்ளை மணியக்காறன் போனான். யேன் யிந்த போயியண்டனை விட்டுவிட்டக் கபுறு யேன் .சொல்லாமல் போனீயே காவலிலே வைக்கச் சொன்னான். காவலிலே வைக்க அழைச்சுக் கொண்டு போனார்கள். மறுபடி அழைச்சனுப்பி சாவடிக்கு வருகுறேன் அப்போ யெல்லாம் விட்டுவிட்டுப் போகச் சொல்லிச் சொன்னான். அப்பிறம் கோட்டைக்கு பின்னையாரும் வெள்ளைக்காறர் ஒருத்தரும் வரயில்லை. முசே புலோவும், முசே கில்லியாரும், முசே துலாரெனசும் யிந்த மூணு பேரையும் மாத்திரம் கோட்டையிலே கண்டோம். பாதிரி வீசுப்பு வண்டியிலேறிக் கொண்டு வந்து முசே லெறியைக் கண்டு பேசிப் போயிவிட்டான். அப்பிறம் பதினோரு மணிக்கி நாம் வீட்டுக்கு வந்து விட்டோம். சாயங்காலம் முசே லாலி வில்லியநெல்லூருக்கும் போயி மயிசூரிலே யிருந்து வந்த அயிதர் நாயக்கன் மைச்சினனுக்கும் அவருக்கும் பேசவேண்டிய உடம்படிக்கை யெல்லாம் பேசிக்கொண்டு பிடவை சீலை வெகுமானமும் குடுத்து, குடுக்கச்சே யிருபத்தோரு பீரங்கியும் அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டையை விட்டுப் போகச்சே யிருபத்தோரு பீரங்கியும் போட்டார்கள். அப்பிறம் முசே லாலி பிறப்பட்டு முசே பெடுத்தல்மீ தோட்டத்தை வந்து விட்டானென்கிறதாய் சேதி சொன்னார்கள். உடம்படிக்கையான சமாச்சாரம் யெல்லாம் விசாரிச்சு யிதின் கீழே தெரிஞ்சு எழுதவேண்டியது.

நயினாரை அழைச்சு தண்டுக்கு கடைகள் கொண்டு போகச் சொல்லியும் உத்தாரம் பண்ணார்கள். அதன் பேரிலே கடைக்காறரை அழைச்சு தண்டிலே கடைகொண்டு போயி போடச்சொல்லி கடைக்காரரை அழைச்சுத் தாக்கீது பண்ணினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. முசே கில்லியார் நம்மைக் கண்டு கோட்டையிலே பேசினவிடத்திலே

கண்ணுக்கு மருந்து போடுகுற வையித்தியனைக் கேட்டேனே யென்று சொன்னான். அதுக்குப் பறங்கிப்பேட்டையிலே ஒருத்தன் கெட்டிக்காறனிருக்கிறானென்றும், அவன் கலாபத்தினால் யெங்கே போயிருக்குறானோ அவனண்டைக்கு மனுஷரை அனுப்பிவிச்சேன். அவன் வந்தவுடனே அனுப்பிவிக்கிறே னென்று சொன்னானாம். முன்னே மயிசூர் அயிதர் நாயக்கன் மச்சான் மகதமல்லிக்கானு (Mahadam Alli Khan)க்கும் முசே லாலிக்கும் உடம்படிக்கை விசேஷம் நடந்ததாயல்லவா சேதி கேட்டு யெழுதினோம். முசே லாலி போனவிடத்திலே மகதல்லிக்கானுக்கு சரீரம் சொஸ்தமில்லாதபடியினாலே பேட்டியாகயில்லை. இவர் கோட்டைக்குப் போனவிடத்திலே போட உடனே 21 பீரங்கியும் மறுபடியும் யிவர் வரச்சே இருபத்தோரு பீரங்கியும் போடச் சொன்னதின் பேரிலே அந்தப்படிக்கி தானே போட்டார்கள். முசே லாலி அதையும் கோட்டையையும் சத்து நேரம் பார்த்துவிட்டு திரும்பி வந்து விட்டார் என்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. நாமும் வீட்டுக்குப் பிறப்பட்டு வந்துவிட்டோம்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 27; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 17; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே கில்லியார் வந்தான். அவரும் நாமும் பேசிக் கொண்டிருந்து நாம் சொன்னது நாம் முசே லெறியண்டைப் பட்டணத்திலே வரிவாங்கிற சம்மதியளைத் தொட்டும், அவரவர் சாப்பாட்டுக்கு வச்சிருக்கிற நெல்லுகளை பூந்து எடுத்துக் கொள்ளுகிற படியினாலேயும், செனங்கள் காபராப்பட்டுப் போகிறதைத் தொட்டும், முன்னேயே செனங்களெல்லாம் வெளியே போயிருக்கிறதைத் தொட்டும், யினிமேல் பட்டணம் பாழ்த்துப் போமெங்கிறதாய் முன்னேதானே பத்து தரம் யெட்டு தரம் முசே லெறியுடனே சொன்னேன். அவரும் மெய்தானென்று ஒத்துக் கொண்டார். முசே கொடுத்தேனும் கேட்டுக் கொண்டிருந்தார். நீரும் யிருக்கச்சே ரெண்டுதரம் மூணுதரம் சொன்னேன். நீரும் மெய்தானென்று சொன்னீர். யிதுகளெல்லாம் நாம் யெதுனாலே சொன்னேனென்றால் முசேனுவார் நாளையிலே முதல் கொண்டு துரைத்தனங்களுக்கெல்லாம் கும்பினீர் குடுத்தேராய் யிருக்கிறவர் (Courtier) யிந்த ஒபகரிசாம் பண்ணுகுறது அவர்களுடைய திட்டமானபடியினாலே நாமும் ஒபகரிசாம் பண்ணினோம் யென்பேரிலே நேரமில்லாமல்படிக்கி சொன்னேன். ஆனால் யென் பேரிலேதானே யென்னமோ நேரம் பண்ணி பட்டணம் யிப்படி பாழ்த்துப் போனால் நீங்களெல்லாம் கப்பலேறி சீமைக்கிப் போகவேணும். ஆனபடியினாலே சொன்னோம். யிப்போ கண்டவனெல்லாம் குதிரையேறிக் கொண்டு குடைபிடிச்சுக் கொண்டும் கோட்டைக்குள்ளே

வருகுறார்கள். முன்னே முசேனுவார் முசே துலாரென்சு துரைத்தனத்திலே அவர்கள் வந்தவருஷம் சுமார்ஷாம் ஒரு மண் குதிரையேறிக் கொண்டு வந்தான். அதை பிடவைப் பார்க்கிற சாலையிலே முசே துலாரான்சு யிருந்தார் அவன் குதிரை யேறிக்கொண்டு போகுறதைப் பார்த்து அவனைக்கிட்ட அழைச்சுக் கையிலே யிருந்த பிரம்பினாலே அடி அடியென்று அடிச்சு கொ்ப்பரால் குவாடுதுவை அழைச்சு அவனை கசோத்திலே போடச் சொன்னான்.

அப்பிறம் முசே னுவார் கடுதாசி ஒண்ணு யெழுதி குமிசெல்க்காறனாகட்டும் சுமர்ஷானாகட்டும் ஆரானாலும் குதிரை மேலேறி கோட்டைக்குள்ளே வரப்போகாதென்று சொல்லி தாக்கீது பண்ணிப்போட்டான். கும்பினிலே குதிரை ஒருத்தருக்கும் நம்முடைய உத்தாரம் யில்லாமல் படிக்கி குடுக்கத் தேவையில்லை யென்று கடுதாசி யெழுதி கட்டினார்கள். குமிசெலிலேயும் யிருக்கிறவர்கள் பல்லக்கேறிக் கொண்டு வந்தால் பல்லக்கு பிடவைப் பார்க்குற சாலையிலே யிறங்கி யிருக்கிறதே யல்லாமல் கோவற்ணமா வீட்டினண்டை யிறங்கப் போகாது. கோவர்ணதோராயிருக்கிறவருக்கு மாத்திரம் கொவற்ணமாகிட்ட பல்லக்கு நிறுத்திவைக்கிறது யென்று யிப்படி சொல்லிக் கொண்டிருக்கச்சே தோட்டி ஒருத்தனும் பறப்பய்யன் ஒருத்தனும் ரெண்டு குதிரையின் பேரிலே யேறிக்கொண்டு தோட்டி பீச்சட்டியை தலையிலே கவுத்துக் கொண்டு கோவற்ணமா வீட்டுக்குள்ளே கிட்ட விட்டு யிறங்கியுள்ளே போனார்கள். பாத்தீராயிதை யேனென்று கேழ்க்கிறதுயில்லை யென்று சொன்னதின் பேரிலே அவரதைப் பார்த்து நகைச்சு மெய்தானென்று சொன்னார். அதிலே முசே புலோவும் வந்தார். அவரும் கூட யிந்த விசேஷம் பெல்லாம் பேசிக் கொண்டிருந்தார். யிப்பவும் நீங்களேதாகிலும் யிந்த பட்டணத்தை சத்து விசாரிச்சால் சத்து லகுவாயிருக்கும். யில்லாவிட்டால் யிந்தப்பட்டணமும் முழுகிப்போம் நீங்களும் கப்பலேறிப் போகவேணும், மத்தப்படி வேறேயில்லை. முன்னே முசேனுவார் நாளையிலே யிந்தப்பட்டணத்துக்கு தானியமில்லாமல் படிக்கி நீர் யேனத்திலே முசே கொடுத்தாம் கீழே கணக்கனாயிருக்கச்சே அவ்விடத்துக்கு யெழுதி அனுப்பிவைச்சு தானியங்களழைப்பிச்சு செனங்களைக் காப்பாத்தயில்லையா? அப்படி யெல்லாம் முன்னே யிருந்த துரைகள் பட்டணத்தை உண்டாக்கினார்கள் யஎன்று கீற்த்தி பெத்தார்கள். யிப்போ பட்டணத்தை பாழாக்க வந்தாரென்று அபகீர்த்தி பெத்தாரென்று யிப்படி யிந்த சமாச்சாரங்களாய் நாலு நாழிகை தேசகாலம் பேசிக் கொண்டிருந்துப் போட்டோம். அதிலே ஆதிமூலம் வழக்கு சம்மதியாய் ஆண்டாசெட்டி என்கிறவனை ஞாயமில்லாமல் படிக்கி சாவடியிலே கட்டி வைச்சு முசே கொடுத்தேன் அடிச்சத்துக்கு செட்டியள் பித்திசாமெழுதி முசே லெறிக்கு குடுத்தார்கள். அவர் அதைப் பார்த்துக் கொண்டு யிந்த ஞாயம் நான் விசாரிக்குறேனென்று சொன்னார். சாவடி ஞாயத்துக்குப்

போன முசே கொடுத்தேன் வராத படியினாலே பனிரெண்டு மணி அடிச்சுப்போச்சு முசே கொடுத்தேன் வரட்டும் போங்களென்று செட்டிகளுக்குச் சொல்லிப் போகச் சொன்னான்.

அப்பிறம் நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். முசே லாலிக்கும் மயிசூர் மகத்து மல்லிக்கானும் உடம்படிக்கையாச்சென்றும் சொன்னார்கள். யிது நிமித்தியம் நாளை குமிசேல் கூடப்போறார்க ளெங்கிறதாய் சொன்னார்கள். யிதல்லாமல் சீமைகட்டுகிற நிமித்தியம் மயிசூரார் குதிரையிலே அன்னூறு குதிரையும், அன்னூறு பாறும், ரெண்டு பீரங்கியும், பீரங்கி மேஸ்திரியும் ராமலிங்கபிள்ளை மனுஷன் அழகப்ப முதலி என்கிறவனும் போறானெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. மயிசூராருக்கு உடம்படிக்கையான சமாச்சாரம் தெரிஞ்சு யெழுத வேண்டியது.

ஆண்டாசெட்டி வழக்கு நிமித்தியம் முசே னுவாருடனே (M. Lenoir) தமிழருடைய ஞாயம் அவரவர் சாதியிலே யெந்த வழக்கிருந்தாலும் சாதி வழக்கு சாதியிலே தீருகிறது. யெந்த துரைகள் நாளையிலேயும் யிப்போ முசே கொடுத்தேன் சாவடியிலேயும் யிப்போ முசே கொடுத்தேன் சாவடியிலே போட்டு ஞாயஞாயத்துக்கும் கட்டி வைச்சு அடிக்குறானாம் அவனேதாகிலும் திருடயில்லை யெந்த ஞாயத்தலே யிப்படி செய்வார்கள். அன்னீதமெல்லாம் ஞாயமில்லாமல் நடப்பிவிக்கிறாரெயென்று சொன்னோம். நல்லது நானும் முசே லெறியுடனே சொல்லுகுறேனென்று சொன்னார்.

***1760 வருசம் சூன் மாசம் தேதி 28; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 18; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே சிப்பாயியள் சம்மதிக்கி யெழுதின பித்திசாம் அப்பு முதலியும் கந்தப்ப முதலியும் கொண்டு வந்து காண்பிச்சு யிந்த வரி சம்மதிக்கி முசே திப்பளாம் யெங்களைக் கேழ்க்கயில்லையே ஆனபடியினாலே அதை வாங்கிப் போட வேணுமென்று சொன்னார்கள். நல்லதென்று அதுக்கு வேறே வயணமாய் யெழுதச் சொல்லி அதை வாங்கிப்போகச் சொன்னோம். பின்னை வெள்ளைக்காரர் ஒருத்தரும் வரயில்லை. பத்தரை மணிக்கி ஆதிமூல செட்டி, ஆண்டாசெட்டி வியாச்சிய நிமித்தியமாய் சோழியசெட்டியள் முசே லெறிக்கி எழுதிக் குடுத்த பித்திசாம் நிமித்தம் முசே கொடுத்தேனை அழைச்சு அனுப்பிவிச்சார். முசே கொடுத்தேன் வந்து அவன் கையிலே அந்த பித்திசாமை முசே லெறி குடுத்து அதை படிக்கச் சொன்னான். அந்தப்படிக்கி படித்துக் கொண்டிருந்தான். அதிலே பதினோரு மணியடிச்சது. நம்மை அழைக்கக் கொள்ளயில்லை ஆனபடியினாலே நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

பிறகு கேழ்க்கப்பட்ட சேதி அந்த பித்திசாம்மை முசே கொடுத்தேன் பார்த்துப் போட்டு பனிரெண்டு மணிக்கி வீட்டுக்குப் போகச்சே பித்திசாம் குடுத்த செட்டியள் யெங்கே யென்று கேட்டதாகவும் அவர்கள் போயிவிட்டார்களென்றும் சொன்னதின் பேரிலே முகத்தை தொங்கப்போட்டுக் கொண்டு போயிவிட்டதாகவும், அப்பிறம் ரெண்டு மணி மட்டுக்கும் செட்டியள் அங்கே யிருந்து முசே லெறி சாப்பிட போகச்சே காண்பிச்சுக் கொண்டதாகவும் அதை அவர் பார்க்கயில்லை. அதன் பேரிலே செட்டியள் பிறப்பட்டு வந்துவிட்டார்கள். யிந்த சமாச்சாரமெல்லாம் செட்டியள் வந்து நம்முடனே சொன்னார்கள். நாளைக்காலமே செட்டியள் போயிக் காண்பிச்சுக் கொண்டால் யென்ன நடக்குமோ தெரியாது. மைசூரிலே யிருந்து வந்து வில்லியநெல்லூரிலே யிறங்கி யிருந்த குதிரைக்காரர் நேத்து ராத்திரி பனிரெண்டு மணிக்கி அவர்கள் வைக்கீல் வெங்கட்ட நாரணப்பய்யனையும் வெங்காசி பண்டிதனையும் வைச்சுப்போட்டு யெசமானாய் வந்தவனும் குதிரைக்காரரும் போயிவிட்டார்கள். யெதுனாலே யென்றால் அவர்களுக்கு சொன்னபடிக்கி உடம்படிக்கை நடப்பிவிக்காதபடியினாலே யென்று சொன்னார்கள். சாயங்காலம் யிருபத்தோரு பீரங்கி விழுக்காடு ரெண்டு தரம் வில்லியநெல்லூர் கோட்டையிலே போட்டார்கள். யெதுனாலே யென்றால் மைசூர் பவுன்சு வந்தது. சமாதானமில்லாமல் போயிவிட்டார்களென்று இங்கிலேசுக்காரர் கேட்டு ராத்திரியிலே வந்து விழப்போறார்களென்று யோசனையின் பேரிலே முசே லாலி போடச் சொன்னான். முசே லாலி மைசூராருக்கு நடப்பிவிக்குற உடம்படிக்கை முசே லெறிக்கி சம்மதியில்லாதபடியினாலேயும் முசே லெறியைக் கேட்டனுப்பிவிச்சதுக்கு முசே லெறி சொன்னது, "உமக்கு யெப்படி சம்மதியோ அப்படி நடப்பிவிச்சுக் கொள்ளும் யென்று முசே லெறி சொன்னதின் பேரிலே" முசே லாலி யெனக்கு யெப்படி சம்மதியோ அப்படி தான் நடப்பிப்பேன் யென்று சொன்னதாகவும் அதன்பேரிலே ஒருத்தருக்கொருத்தர் சத்து மனசு போதாமலிருக்குறார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

நயினார் கடைக்காரரை அழைச்சு புனுகு சவ்வாது கெந்தப்பொடி விக்கிறவர்களையும் காசுக்கடைக்காரர்களையும் கடைகொண்டு போய் மைசூரார் தண்டிலே கொண்டு போய் போடச்சொல்லி இன்னையதினம் யிதுவேலையாய் நயினார் யிருந்தான் எங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. மத்தியானம் பனிரெண்டு மணிக்கி மைசூரார் வக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யனையும் வெங்காசி பண்டிதனையும் அழைச்சு வரச்சொல்லி முசே லாலி ரெண்டு பேர் அலுமாஞ்சி குதிரைக்காரரை அனுப்பிவிச்சார். அவர்கள் முசே லாலியண்டை முசே பெடுத்தல்மீ தோட்டத்திலே அழைச்சு வந்து விட்டார்கள்.

அங்கே முசே திலார்ஷும், விசுபு பாதிரி நொரோனா, ரசாசாயபும், ராமலிங்கப்பிள்ளையும், அய்யனு சாஸ்திரியும் யிருந்தார்கள். மைசூர் வைக்கீல் வந்தவர்களை முசே திலார்ஷும் விசுபு பாதிரியும் யேன் போயிவிட்டார்கள். குதிரைக்காரரென்று கேட்டார்கள். நாங்களறியோம் போயிவிட்டது யெங்களுடனேயும் சொல்லயில்லை யென்றும் சொன்னார்கள். உங்களையறியாமல் அவர்கள் போகத்தக்கினதில்லை. யென்ன நிமித்தியமாய் போனார்கள் யென்று கேட்டதின் பேரிலே மைசூரார் வைக்கீலுகள் சொன்னது நாங்களாய் நாலுநாளாய் அவ்விடத்திலே காத்திருந்த விடத்திலே ஒரு உடம்படிக்கைக்காகிலும் எழுதிக்குடாமல்ப் போனீர்கள். குமிசெல் கடுதாசிக் கேட்டார்கள் அதுவும் குடாமல் போனீர்கள் யென்று சொன்னதின் பேரிலே அவர் வைக்கீலுகளைக் கோபிச்சுக் கொண்டு யிவர்களை கசோத்திலே போடவேணுமென்றும், ரொம்பத் தானே கோபம் பண்ணி விசேஷங்களையும் பேசி மறுபடியும் தியாக துற்க்கத்தையும் அவர்களுக்கு விட்டு விடச்சொல்லி அவ்விடத்து கொம்மாந்தானுக்குக் கடுதாசி எழுதிக் குடுத்து முசே லாலி முசே லெறிக்கி யிப்படி மயிசூராருக்குப் பேசின உடம்படிக்கைக்கு குமிசேல் கடுதாசி எழுதியனுப்பிவிக்கச் சொல்லி சொல்லியனுப்பிவிச்சார். அதன் பேரிலே ராத்திரி யேழுமணிக்கு குமிசேல்க் கூடி ஒன்பது மணிக்கி கலைஞ்சார்கள் யென்னமாய் தீந்துதோ அது தெரியாது யிதுகளெல்லாம் மயிசூராருக்கு உள்க்கையாயிருந்து விசப்பு பாதிரி நோரொன்னாவும் நடப்பிச்சானென்றும் சொன்னார்கள். யிந்த உடம்படிக்கையெல்லாம் மைசூர் வைக்கீல் வெங்கட்ட நாறணப்பய்யன் வெங்காசி பண்டிதன் ரெண்டு பேர் கையிலேயும் கடுதாசி யெழுதி கையெழுத்திட்டு வாங்கி முசே லாலி வாங்கிக் கொண்டான் யென்றும் சேதி கேட்டோம்.

### *1760 வருசம் சூன் மாசம் தேதி 29; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 19; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கதவைச் சாத்திக் கொண்டு காம்பிராவுக்குள்ளே யிருந்தார். முசே துபுவாவும் வந்து முசே லெறியைக் கண்டு பேசி போயிவிட்டான். பிறகு முசே கொடுத்தேன் வந்து கண்டு பேசிப்போயிவிட்டான். பின்னை ஒருத்தரும் வரயில்லை. வேறே விசேஷம் நடக்கயில்லை. நாம் பிறப்பட்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம். பொழுது விடிய காலத்தாலே அஞ்சு மணிக்கி போடுகிற பீரங்கியிலே குண்டு யிருந்து பிறப்பட்டு உப்பாத்துத் தெருவிலே ஒரு வீட்டின் பேரிலே விழுந்து தட்டோடுகளை மாத்திரம் சேதம் பண்ணிப்போட்டுது. மனுஷர் ஒருத்தரும் சேதமில்லை. முசே பெடுத்தல்மீ தோட்டத்திலே யிருந்த முசே லாலி

காலமே தான் தாம் குடியிருக்கிற முசே கொறனை வீட்டே வந்துவிட்டான். அவருடய தட்டுமுட்டு சாமானுகளும் வந்துவிடுது. பிறம்பையிலே யிருந்த வெள்ளைக்காரரெல்லாரும் ஒழுகரை யெல்லப்பிள்ளைச்சாவடி குண்டுசாலைக்குள்ளேயும் வந்துவிட்டார்கள்.

முன் பதினேழாந்தேதி மயிசூராருக்கும் முசே லாலிக்கும் உடம்படிக்கை தீந்தது. யென்ன யென்றால் அவர்கள் பவுன்சு யிவர்களுக்கு மத்தத்தாயிருந்து யிவர்களுடைய காரியமெல்லாம் செயம் பண்ணிக் குடுத்து, ஆற்காடும் கட்டிக்குடுத்து யிங்கிலீசுக்காரரையும் செயம் பண்ணி குடுக்கிறது யிவர்கள் மயிசூராருக்கு தியாகதுர்க்கமும், திருவண்ணாமலையும், இறைவாசநல்லூர் சீமை, சங்கராபுரம் சீமையும், வாலி கொண்டாபுரமும் யெனாமாய் சாகீராய் விடுகுறது. மாசம் அவர்களுக்கு சம்பளம் இரண்டு லக்ஷம் ரூபாய் குடுக்கிறது யிந்த ரூபாயி ரெண்டு மாசம் பொறுத்து குடுக்கிறது. யினிமேல் கட்டப்போற சீமையிலே வழுதாவூர் சீமை, வில்லியநெல்லூர் சீமை, பாகூர் சீமை தவிர மத்த சீமையிலே பாதி குடுக்கிறது.

அப்பிறம் மதுரை சீமையும் தென்னவல்லி சீமையும் (Madura & Tinnelvelly) யிவர்கள் கூட மத்தத்தாயிருந்து மைசூராருக்கு கட்டிக்குடுக்கிறது. பிறகு யிவ்விடத்திலே மைசூராருக்கு விட்ட பாதி சீமையும் யிவர்களுக்கு விட்டுவிடுகுறது. பிறகு மைசூரார் யிவர்களுக்கு மத்தத்துப் பண்ணி திருச்சிராப்பள்ளி கோட்டை வாங்கிக் குடுக்கிறது. அந்தப்படிக்கி உடம்படிக்கை தீந்து யிப்போ யிவர்களுக்கு நாலாயிரம் பசுமாடு குடுக்க யிந்தப்படி யிருவருக்கும் உடம்படிக்கை தீந்தது. முன்னே தியாக துற்க்கம் விடச்சொல்லி கேட்டார்கள். நாலாயிரம் மாடுகள் முன்னே குடுங்கள் பிறகு விடுகுறோமென்று முசே லாலி சொன்னதின் பேரிலே யித்தனை அவநம்பிக்கையானால் யினிமேல் யெந்தக் காரியம் நடக்கப் போகுது யென்று ராத்திரி பனிரெண்டு மணிக்கி பிறப்பட்டு போயிவிட்டார்கள்.

மத்தப்படி காசுக்காரரை நயினாரை அழைச்சு தண்டிலே கடைபோடச் சொன்னதுக்கு அவர்கள் முசே லெறியண்டை போயி சொன்னது யெங்களுக்கு கடை போடுகுறதுக்கு ஒன்றும் வயணமில்லை. முன்னே துப்பிளேக்கிசு நாளையிலே தண்டிலே கடைபோட வேணுமென்றால் பிள்ளையவர்களுடனே சொல்லிக் கொள்ளுவோம் அவர் துரையுடனே சொல்லி கும்பினியிலே ஆயிரம் ரூபாயி முதல்க் கடனாய் வாங்கி குடுப்பார். அத்தை வைச்சுக் கொண்டு தண்டிலே கடை போட்டுக் கொண்டு கொள்ளல் விக்கல் ஆக யிருப்போம். யிப்பவும் துரைகள் தயவு பண்ணி பணத்தியம் குடுத்தால் அந்தப்படிக்கி கடைகள் போடுகுறோமென்று சொன்னதுக்கு “அல்லாம் கேட்டு முசே துபுவா

அண்டைக்கிப் போயி சொல்லிப் பாருங்களென்று நயினாரையும் கூட அனுப்பி வைச்சுப் போட்டதாய்" சேதி சொன்னார்கள். ராமச்சந்திரராயன் உடம்பிறந்தாள் மகனை அவன் அண்ணன் பட்ட கடன் நிமித்தியம் முசே கொடுத்தேன் காவலிலே வைச்சிருந்தான். அவன் அண்ணனுக்கும் அவனுக்கும் முசே பெடுத்தல்மீ நாளையிலே பாகம் தேவையில்லை யென்று தீந்து போன சம்மதிக்கி முசே கொடுத்தேன் காவலிலே வைச்சு யிருந்தான்.

யின்றையதினம் அவன் தகப்பனுக்கு திதியானபடியினாலே பாபுராயனுக்கு மூத்தாள் மகனானபடியினாலே யிப்ப திதி காரியமாயிருந்தது. அவனை யின்னைக்கி காவல் விட்டால் நாளையத்தினம் கொண்டு வந்து ஒப்பு விச்சுப் போடுகுறேனென்று கேட்டான். விடப்போகாதென்று சொன்னான். ராமச்சந்திரராயன் போய்க் கேட்டான். அதுக்கும் விடப்போகாதென்று சொன்னான். பிராமண காரியம் மினக்கீடாய்ப் போகுதென்று முசே லெறியுடனே போய்ச் சொல்லிக் கொண்டார்கள். அவர் முசே கொடுத்தேனுக்கு ஒரு கடுதாசி எழுதி விட்டுவிடச்சொல்லி அனுப்பிவிச்சார். அந்தக் கடுதாசியை கொண்டு போயி குடுத்ததுக்கு அவன் பதிலுக்கு விடப்போகாதென்று எழுதியனுப்பிவிச்சதாகவும் அந்தக் கடுதாசியை முசே லெறி பார்த்துக் கொண்டு மறுபடிக்கி யிந்தப்படிக்கி முன்னாலே முசே பெடுத்தல்மீ முசே கில்லியார் நாளையிலே தீந்துப் போனது. அஞ்சாறு சம்மதியளெல்லாம் ஞாயமில்லாமல்ப் படிக்கி காவலிலே வைச்சு நடப்பிவிக்கிறாய். அதுகளெல்லாம் அவரவர் வந்து என்னுடனே சொல்லியிருக்கிறார்கள். பிறகு நான் அதுகளெல்லாம் விசாரிக்கிறேன். அவனை யிப்போ விட்டு விட்டாலாச்சுது, யில்லாவிட்டால் அவன் வெளியே பிறப்பட்டுப் போயிவிடுவான் யென்றும் எழுதி அனுப்பிவிச்சான். அந்தக் கடுதாசி கொண்டு போய் குடுத்த ராமச்சந்திரராயனை முசே கொடுத்தேன் கையிலே யிருந்த பிறம்பினாலே மூணு நாலு அடி அடிச்சு விடுகுறதில்லை யென்று சொல்லி நான் வந்து முசே லாலி வச்ச மனுஷனேயல்லாமல் முசே லெறி வச்ச மனுஷன் அல்லா யென்னைப் போலே முசே லெறி அவரைப் போலே நான் யென்று விசேஷங்களையும் சொல்லி உதாசீனமாய் பேசினான். அதன்பேரிலே அவ்விடத்திலே யிருந்த முசே பொற்ஷேயும் அவன் பெண்சாதியும் சமாதானமாய்ச் சொல்லி மனுவின் பேரிலே அஞ்சு மணிக்கி மறுபடிக்கி கொண்டு ஒப்புவிக்கச் சொல்லி காவல் விட்டான். அதை வந்து முசே லெறிக்கு அடியும் காண்பிச்சு உதாசீனமாய்ச் சொன்ன விசேஷம் யெல்லாம் சொன்னார்கள். அது வந்து உங்களை அடிச்சதல்ல யென்னையாங்காட்டும் அடிச்சது. அதுகளெல்லாம் நான் கேட்டுக் கொள்ளுகுறேன் நீங்கள் போங்களென்று சொல்லி அனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

*1760 வருசம் ஜூன் மாசம் தேதி 30; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 20; திங்கள்கிழமை*

இத்தனாள் காலத்தாலே மயிசூரார் குதிரை வந்தது வாங்கிப் போயி விட்டபடியினாலேயும் நம்முடவர்கள் பிறம்பை மேட்டிலே யிருந்தவர்கள் குண்டுக்குள்ளே வந்து விட்டபடியினாலேயும் வழுதாவூரிலே யிருந்த இங்கிலேசுக்காறருடைய குதிரைகள் பிறப்பட்டு வில்லியநெல்லூர் அருமாத்த பிள்ளைசாவடி குண்டுசாலை நம்முடைய வெளித்தோட்டம் யிந்தமட்டுக்கும் காலாடினதின் பேரிலே வில்லியநெல்லூர் கொத்தளத்தின் பேரிலேயும் பீரங்கிப் போட்டார்கள். நம்முடவர்கள் ஒழுகறை வெளியிலே தப்பித் தவறி ஓடிக் கொண்டிருந்தவர்களெல்லாம் குண்டுக்குள்ளே ஓடி வந்துவிட்டார்கள். எல்லப்பிள்ளை சாவடியிலே யிருந்து யேழெட்டு பீரங்கி மட்டுக்கும் போட்டார்கள். நம்முடவர்கள் யிப்படி மகத்தாகிய கீற்த்தியெல்லாம் உதவிக்கிறார்கள்.

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே புலோவும், முசேனுவாரும், முசே லங்கற்னேயும் வந்தார்கள். வந்தவர்கள் பேசிக் கொண்டிருந்துது மைசூரார் குதிரை வந்தது அவர்களுக்கும் யிவர்களுக்கும் சந்தி சமாதானமும் நடந்ததும் அவர்களுடைய குதிரையும் பிறப்பட்டுப் போயிவிட்டதும் நம்முடவர்கள் பிரம்பையிலே யிருந்தவர்கள் குண்டுக்குள்ளே ஓடிவந்துவிட்டதும் பட்டணத்திலே நடக்கிற ஞாயங்களும் பட்டணம் பலவீனமாய்ப் போனதும் யிப்படியாக யிந்த சமாசாரம் யெல்லாம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அதுக்கு நாம் சொன்னது, "பட்டணமானால் ரொம்ப பலயீனமாய் போய்விட்டது. குடியானவர்களும் சாப்பாட்டுக்கு வைச்சிருந்த நெல்லுகளை கும்பினியிலே யெடுத்துக் கொள்ளுகிறபடியினாலேயும், தெண்டம் வாங்குறபடியினாலேயும் பட்டணம் முழுகிப் போமென்று" நாம் சொன்னோம். அதன் பேரிலே அவர்கள் சொன்னது, "யிப்போ நாங்கள் ஒன்றும் விசாரிக்கப் போகாது. நீங்கள் பத்துப்பேராய்பிராது பண்ணிக் கொண்டு வந்தால் நாம் கேட்கலாம். துரைத்தனம் பண்ணுகுறவர்கள் ஒண்ணும் கேளாமல்ப்படி சுவராயப்போனான். தமிழர் தானே ஒருத்தன் சூத்திலே பூந்து கொண்டு யிவர்கள் தானே அவன் வீட்டிலே நெல்லு யிருக்குறதென்று காட்டிக் குடுக்கிறதுமாயி ருக்குறார்கள். நாய்கள் வீட்டில் பூந்து கொண்டு யிருந்தால் நாங்களெப்படி கேழ்ப்போம் இருபது முப்பது பேர் கும்பலாய்க் கூடிக்கொண்டு வந்து பிராது பண்ணால் அப்போ நாங்கள் பேசுவோம்" யென்று முசே புலோவும் முசே னுவாரும் சொன்னார்கள். முன்னே முசே னுவார் துரைத்தனத்திலே யிந்தப்பட்டணத்திலே தானியம் கிடைக்காமல் செனங்கள்

தாபந்தப்பட்டார்கள். அப்போ முசே னுவார் வர்த்தகரை அழைச்சு பணங்காசுகள் குடுத்து வடக்கே யேனம் மச்சிலிபந்தர் கஞ்சம் பீமிலிப்பட்டணம் அவ்விடங்களிலே யிருந்து ஆயிரம் கரிசை ரெண்டாயிரம் கரிசை தானியங்கள் அழைப்பிச்சு வர்த்தகருக்கு உடம்படிக்கை நஷ்ட்டம் வந்தால் கும்பினியிலே தீத்துக் குடுக்கிறது. ஆதாயம் வந்தால் அவர்கள் யெடுத்துக் கொள்ளுகுறது. தீர்வை தேவையில்லையென்றும் யிந்தப்படிக்கி தானியம் அழைப்பிச்சு செனங்களையெல்லாம் காப்பாத்தினார்கள். யிந்தப்பட்டணமும் ரொம்பி அப்பாலே ஆற்காடு கடப்பை அவ்விடங்களிலே யிருந்து நபாபுகள் ஆயிரம் பொதி ரெண்டாயிரம் பொதி அரிசியள் அழைப்பிச்சார்கள். அதல்லாமல் முசே பொவால்லியோர் (M. Beavoileors) நாளையிலே சுத்துக்கோட்டை கட்டுகிற நிமித்தியம் வருஷத்திலே நாலாயிரம் விராகன் தூக்கசு போட்டு வாங்கிக் கொண்டு வந்தார்கள். ஒருநாள் முசே னுவார் சுவாரிப்போகச்சே பெண்டுகள் கும்பலாய் கூடிக்கொண்டு கோவென்று அழுதுக்கொண்டு சுவாரிபோயி வரப்போகாமல் திருப்பிக் கொண்டு வந்து கனகராய முதலியை அழைச்சனுப்பிவிச்சு யென்ன பெண்டுகள் கூடிக்கொண்டு யிப்படி அழுது கொண்டு வந்தார்களென்று கேட்டார். "யிப்படி சுத்துக் கோட்டை கட்டுகிற நிமித்தியம் முசே பொவால்லியோர் (M. Beauvoileor) வருஷத்திலே நாலாயிரம் விராகன் குடிகள் பேரிலே வரிபோட்டு யிருக்கிறார். அந்த வரி குடுத்துக் கொண்டு வந்தால் அவர்கள் யேழை பிறசைகள் அவர்கள் யெப்படி சுபிக்ஷமாய் நடக்குமென்று சொல்லி அந்த கூட்டம் அதற்காக பிராது பண்ணிக் கொண்டார்கள்" யென்று சொன்னார்கள். முசே னுவார் சொன்னது நாளையதினம் வாருங்கள் நான் அதை தீத்துப் போடுகுறேனென்று சொன்னார். நாளை காலத்தாலே குமிசேல் கூடினார்கள். சுத்துக்கோட்டை வரியும் காசுக்கடை குத்தகை வருஷத்திலே ஆயிரம் தள்ளிப்போட்டுவிச்சார்.

ஆயிரத்தி எழுநூத்திருபத்தஞ்சாம் ஆண்டிலே (1725) குமிசேலிலே தீர்ந்ததைப் பார்த்தால் யெல்லாருடைய கையெழுத்தும் போட்டிருக்கும் அந்தப்படி யிந்தப்பட்டணம் யெப்படி சுபிக்ஷமாக வேணுமோ அந்தப்படிக்கி யெல்லாம் நடப்பிச்சார். யிப்போவும் நீங்கள் சத்து மனுசு வைச்சு யிந்தப்பட்டணத்தை ஞாயமாம் படியாய் விசாரிச்சால் சத்து நிறுவாகமாயிருக்கும் இல்லாவிட்டால் பட்டணமும் யெடுபட்டுப்போம். நீங்களும் சீமைக்குப் போயிவிடுவீர்கள். இந்த ஞாயங்களெல்லாம் சுலபமாய் தெரியும் முசே புலோவுக்கும் நன்னாய் தெரியுமென்றும் யிந்தப்பட்டணம் பேச்சு களெல்லாம் இன்னும் மத்த விசேஷங்களையும் பேசிக்கொண்டிருந்தோம். அப்பால் பதினேரு மணி அடிச்சுது நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். பின்னை யொரு விந்தையும் சமாசாரம் கேழ்க்கப்படயில்லை.

இத்தனாள் ஒரு அறுக்காறு முசே லாலி அண்டைக்கு ஒரு கடுதாசி முசே மாரியோர் (M. Mariaur) என்கிறவன் தியாகதுற்க்கத் தண்டை போயிறங்கி யிருக்கிற விடத்திலே கிருஷ்ணராயனைத் தாக்கியும், அவனையும் பிடிச்சு கைதிபண்ணிக் கொண்டு வந்ததாய் எழுதியனுப்பி விச்சான். முசே லாலி அந்த அறுக்காறுக்கு இரண்டு ரூபாய் இனாம் குடுத்ததாய்ச் சொன்னார்கள். காலமே பதினாயிரம் ரூபாயி வரிசம்மதிக்காக முசே துப்பிளாம் வசம் புதுச்சேரி பிறைவிராகன் யிறநூறு செலுத்தினோம். மாரப்பு ரூபாய் எழுநூத்திருபத்தஞ்சு யிதுக்கு ரசீது வாங்கிக் கொண்டு வந்தோம்.

மைசூர் வைக்கீல் வெங்கட்டநாரணப்பய்யனும் வெங்காசி பண்டிதன் ரெண்டு பேரும் வில்லியநெல்லூரிலே யிறங்கி யிருந்தவர்களை முசே லாலியுடைய குவாடுது வெள்ளைக்காரர் போயி அழைச்சு வந்து அவர்கள் பிராமணத்தெருவிலே யெறங்கி யிருக்குறார்கள். காலமே பத்துமணிக்கு முசே லெறி பிறப்பட்டு நேத்திய தினம் சாயங்காலம் வந்த முசே லாலியை காண்பிச்சுக் கொண்டு போகப்போன விடத்திலே முசே லாலி யிறங்கி யிருக்கிற வீட்டு மெத்தையின் பேரிலே ஒப்பிசியால்மார்களும் பின்னையும் வெள்ளைக்காரர் நூறு பேருடனே யிருந்தான்.

முசே லெறி படியெல்லாம் யேறி மெத்தையண்டை போகச்சே முசே லாலி யெதித்து வந்து நீர் நம்முடய வீட்டுக்கு வரத்தேவையில்லை. உம்முட குமிசெல்க்காறரும் நம்மண்டை வரத்தேவையில்லை. நீங்களாரும் நம்முடய வீட்டு வாசற்படிக் கால்வைக்கத் தேவையில்லை. உங்களைத் தொட்டு ஒரு காரியமும் நமக்கு ஆகவேண்டியதில்லை நம்மைத் தொட்டு உமக்கும் உங்கள் குமிசெல்க்காரருக்கும் என்னால் ஆகவேண்டிய தொன்றுமில்லை யென்று முசே லாலி பின்னை வெள்ளைக்காரர் முன்னிலையாயி சொன்னார். அவ்விடத்திலே முசே லெறி முகத்தை தொங்கப்போட்டுக் கொண்டு திரும்பி பாராமல் படிக்கி அந்தக்ஷணம் பல்லக்கேறிக் கொண்டு கோட்டையே வந்து விட்டான். அப்பிறம் நாம் சொன்னது அவர்களுக்குள்ளே ரொம்ப அபகீற்த்தியா யிருந்தபடியினாலேயும் குமிசேல்க்காறர்களும் கோவர்ணதோரும் கூடதுரத்தித் துரத்தி அடிச்சும், கசோத்திலே போட்டுவிச்சும் அபகீர்த்தியும் வழக்கமும் பட்டு பின்னை ஒரு மானக்கேடு உண்டாகும்படி நடப்பிச்சதாகவும், யிதைப் பார்க்கிலும் அபகீர்த்தி யினிமேல் வேறேயில்லை.

# ஜூலை 1760

*1760 வருசம் சூலை மாசம் தேதி 1; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 21; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே சாலையிலே முசே புலோவும் முசே லங்கற்னையும் பேசிக் கொண்டிரந்தார்கள். முசே லெறி அண்டையிலே முசே மொற்சேன் பேசிக் கொண்டிருந்தான். முசியே கில்லியார் போய் கண்டு பேசி வந்தவர் நாமும் முசே புலோவும் லங்கற்னையும் யிருந்து கொண்டிருக்கச்சே வந்து சொன்னது, "நேத்திய தினம் முசே லெறி முசே லாலியண்டைக்கிப் போனவிடத்திலே அவர் யிருக்கிற மெத்தையின் பேரிலே ஒப்பிசியால்மார் வெள்ளைக்காறர் நூறு பேருடனே யிருந்தார். முசே லெறி படியெல்லாம் யேறி போகச்சே முசே லாலி யெதிராக வந்து முசே நீரும் உம்முட குமிசெல்லியேரும் நம்மண்டைக்கு வரத்தேவையில்லை. நம்முட வீட்டு வாசற்படியிலே கால் வைக்கத் தேவையில்லை நம்மைத் தொட்டு உங்களுக்கு ஒரு காரியமும் அக்கறை தேவையில்லை. உங்களைத் தொட்டு நமக்கு ஒரு காரியமும் அக்கறை தேவையில்லை போவென்று" கோபிச்சுக் கொண்டு சொன்னதாய் முசே கில்லியார் சொன்னார். ரெண்டொருத்தர் குமிசேலியேர் முசே லாலி வந்தாப்போலேயும் அதன் பேரிலே பிறப்பட்டு வந்து விட்டேனென்று சொன்னாரென்கிறதாய் முசே கில்லியார் சொன்னார். ரெண்டொருத்தர் குமிசெலியேர் முசே லாலி வந்தாப்போலே யேன் போகாமலீந்தீரே என்று முசே லெறியைக் கேட்டதுக்கு வந்தவுடனே முசே லாலி குடிச்சுக் கொண்ட மயக்கத்தின் பேரிலே தப்பும் தாறுமாய் கத்திக் கொண்டிருந்தானென்று சொன்னார்கள். யிந்த வேளையிலே நாம் போனோமானால் யென்னமாகிலும் விசேஷத்தை யேறக்குறைய பேசப் போறானென்று யோசனை பண்ணிக் கொண்டு போகயில்லை யென்று சொன்னானென்று சொன்னார்கள். முசே புலோவும் முசே லங்கற்னையும் சொன்னது முசே லெறி சொல்லாமல் போனால் அங்கே நூறு பேரிருக்கச்சே நடந்த சம்மதியான படியினாலே நாங்களும் கேட்டோம். அந்த சமாச்சாரம் யென்று சொன்னார்கள். பின்னையும் இதுகள் சொன்னது முசே லாலி அந்த விசேஷம் சொன்னவுடனே கோவற்ணதோராயிருக்கிறவர் யெல்லாரையும் அழைச்சு குமிசேல் கூடி தீத்து கையெழுத்துப் போட்டு யினிமேல் யெங்களை பணங்காசு என்கிறதும் கேழ்க்கத் தேவையில்லை யெங்களுக்கு ஒரு கவை காரியம் தேவையில்லை யெல்லாம் நீர் தானே பார்த்துக் கொள்ளுங்களென்றும் யெங்கள் மட்டிலே யிருக்குறோமென்று யெல்லாரும் கையெழுத்துப் போட்டு எழுதியனுப்பிவிக்க வேணும் முசே லாலி யண்டைக்கி யென்றும்

சொன்னார்கள். இதுகளை கோவர்ணதோரா யிருக்கிறவன் நடப்பிக்க வேண்டியது.

மடையனான படியினாலே சும்மாயிருந்தான். முசே லெறி செனங்களுக்கு யென்ன மரியாதை நடப்பிக்கிறானோ அப்படி லக்ஷம் பங்கு அதனமாய்த் தானே அவமரியாதை சுவாமி நடப்பிக்கிறார். முன்னாலே யிருந்த துரைகளெல்லாம் யெங்களைப் போலே கொத்தவர்களுக்கு நடப்பிச்ச மரியாதைத் தொட்டு செனங்களும் நடப்பிச்ச மரியாதையளைத் தொட்டும் பட்டணமென்றும் பேராயிருந்தது. யிப்போ முசே லெறி நடப்பிவிக்க அவர்களும் மகிமை பெத்து கீற்த்தி யடைஞ்சு யிருந்தது. யிப்போ அபகீர்த்தியைத் தொட்டு பட்டணமும் பீடாய் போச்சுது. செனங்களும் ரொம்ப மெலிஞ்சு பணங்காசுகளும் போயி கப்பரையை கையிலே தூக்கிக் கொண்டார்களென்றும் சொன்னதின் பேரிலே முசே கில்லியாரும் முசே லங்கற்னையும் மெய்தான் நீர் சொல்லுகுறதெல்லாம் யென்று ஒத்துக் கொண்டார்கள். முசே புலோ மாத்திரம் ஒண்ணும் சொல்லாமல் சம்மதியும் சம்மதியில்லாது போலேயும் யிருந்தான். அப்பிறம் யிவர்கள் மூணுபேரும் லங்கரனையுட வீட்டுக்காம்பிராவுக்குள்ளே போயி பேசிக் கொண்டிருந்தார்கள். யென்ன பேசினார்களோ அது தெரியாது. நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

நேத்தயதினம் மீனங்ரான படியினாலேயும் புதன் நீச்சனானபடியினாலேயும் சனிபாச்சலிலே விழுந்தது. சுக்கிறன் உச்சத்தை விட்டு நீச்சத்தை போசிச்சான். புதன் நீச்சத்தை விட்டு உச்சத்தை போசிச்சான். அதுக்கு சுக்கிறனான் வெள்ளைக்காரர்கள் கும்பினீர் தாலூக்கு யெல்லாம் கோவர்ணதோராயிருக்கிறவன் முசே லெறிக்கு முசே லாலியைத் தொட்டு மகத்தான பங்கம் குமிசெல்லியோரா யிருக்கிறவர்களுக்கும் கோவற்ணதோராயிருக்குற வருக்கும் பங்கம் கண்டுது. முந்தாம் நாள் முசே கொடுத்தேனைத் தொட்டு ராமச்சந்திர ராயனை விசேஷத்தை தொட்டும், முசே லெறிக்கு பங்கம் கண்டுது. ஸ்தோத்திரநாதன் பிராமணராசி யிலிருக்கிற ராமச்சந்திர ராயனை முசே கொடுத்தேன் அடிச்சு போட வந்தது. நம்முட சுயராசிக்கி அய்யாசாமி மேலே கோபம் பண்ணினோம். விறயராசியான படியினாலே சுயராசிக்கி விறய முண்டாச்சுது. நீச்ச புதன் உச்சம் போசிக்க வேணுமே. அதுக்கு ராமலிங்க பிள்ளை முசே லாலி யிந்த சீமையெல்லாம் கட்டினார். அந்த சீமை யெல்லாம் தன் வசம் பண்ணிக் கொள்ளச்சொல்லி முசே லாலி பற்வானா யெழுதிக் கொடுத்தான் யென்றும் சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்தான். விநாயகப்பிள்ளை அண்ணன் மகன் சோணாசலம் பிள்ளைக்கு நமக்கு தம்பூறு அனுப்பிவிச்சுத் தனக்கு தம்பூறு

கிடைச்சுதென்று சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்தான். ரெண்டு மாசமாய் அவனுக்கு சிலவுக்கு குடாமலிருந்து முசேனுவார் தோல் சீட்டு குடுக்குறோமென்றார் என்கிற சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்தான் யிப்படி நீச்ச புதாளாய் யிருக்குறவர்களுக்கு யிந்த விதத்திலே நடந்தது.

இந்தப்படிக்கி நீச்ச புதாளுக்கு உச்சாளுக்கும் ராசினாதனுக்கு அதிலே கூடக்கிடந்த சூரியனுக்கு கூறுபடிக்கி பலாபலன் சரியாய் கண்டபடியினாலே யின்னையதினம் முதல்க் கொண்டு மேலுக் கூரானபடியினாலே சூரியனுக்கு உச்சனாதன் ஆனபடியினாலே யென்ன நடக்குதோ அது அறிய வேண்டியது. ஆதிமூலம் வழக்கு நிமித்தியம் ஆண்டாசெட்டியைக் காவலிலே வைச்சிருந்தவனை காலத்தாலே பிடிச்சுக் கட்டி வைச்சிருந்து தை மாசத்தைக்குள்ளே மூணு கெடுவாய் யிறுநூத்தன்பது விராகனும் குடுக்கச்சொல்லி அந்தப்படிக்கி அவன் கையிலே சீட்டு வாங்கிக் கொண்டு ஒருத்தரை பிணைக்கச் சொல்லி விச்சுப் போகச்சொல்லி மறுபடி காவலிலே வைச்சான். அவன் சம்மதியும் யின்னையதினம் நேராய்த் தானே போச்சுது. பட்டணத்துக்குள்ளே வந்திருந்த முசே லாலி சாயங்காலம் பிறப்பட்டு ஒழுகறையிலே கனகராய முதலி கட்டி வைச்ச கோவிலிலே போயி இரக்கத் தக்கதாகப் போனானெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 2; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 22; புதன்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே கில்லியாரும் முசே புலோவும் வந்தார்கள். வந்தவர்கள் முசேலெறியண்டைக்கிப் போனார்கள். போனவர்கள் ஒன்பது மணி முதல்க் கொண்டு பதினேரரு மணி மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்தார்கள். யென்ன பேசிக் கொண்டிருந்தார்களென்று நாம் கேட்டதுக்கு அவர்கள் சொன்னது "நேத்தய தினம் நடந்த முட்டம் மூலம் முறப்பாடு முசே லெறி பேசிக் கொண்டிருந்து பின்னையும் யிந்த சம்மதிக்கி யென்னமோ சிறிது சம்மதியள் பேசிக் கொண்டிருந்தோம். இந்த சம்மதிக்கி நாளையதினம் குமிசேல் கூடப் போறார்கள். யென்னமாய் தீருமோ தெரியாது," முசே லெறி யிருக்கிறதுக்கு வில்லியநெல்லூர் வாசற்படியண்டை சாரத்தோடே உள்ள தோட்டம் பீப்பாய்க்காரன் வெள்ளைக்காரன் வாங்கியிருக்குறான். அவனை அழைச்சு கேட்டு அங்கே பந்தல் மத்ததும் போடச்சொல்லி முஸ்தீது பண்ணி வைக்கச் சொன்னான். நாளைக்காகிலும் நாளை நண்ணைக்காகிலும் பீப்பாய்க்காரன் தோட்டத்துக்கு குடி போவான். முசே லெறியென்று யிந்த சமாச்சாரம் யெல்லாம் முசே கில்லியாரும் முசே புலோவும் நம்முடனே சொன்னார்கள்.

அப்பிறம் முசே துபுவா வந்து பேசிக் கொண்டிருந்தான். அவனுடனேயும் முண்ம் முறைப்பாடுதான் பேசிக்கொண்டிருந்தான். பின்னையாரும் கோட்டையை வராமல்ப் போனார்கள். நிற்மானுஷயமாயிருந்தது. பதினோரு மணிக்கு நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம். அன்பது பேர் சிப்பாயிகளுக்கு சம்பளம் குடுக்கச் சொல்லி துரைகள் சொன்ன சம்மதிக்கி பந்தராவாடை சம்பளம் நிமித்தியம் சிப்பாயிகள் வந்து வாசற்படியிலே உளுக்காந்து கொண்டு கூப்பிட்டு போற பேரை வார பேரை போகவொட்டாமலும், வாற வொட்டாமலும் யிருந்தார்கள். அவர்களுக்கு சமாதானம் பண்ணிப் போகச் சொல்லிச் சொன்னோம். அப்பிறம் அறியாங்குப்பம் சிங்கற் கோவில் முருங்கப்பாக்கம் யிவ்விடங்களிலே நம்முடவர்கள் குதிரைக்காறர் போய் குடியானவர்கள் மாடுகளை யெல்லாம் ஓட்டிக் கொண்டு வந்தார்கள். பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. இத்தனாள் ஒட்டி வந்தபசுமாடுகளை யெல்லாம் எருதுமாடுகளெல்லாம் தொன்னூறும் யெருமை மாடும் 213 இறநூத்திப் பதிமூன்றும் முசே பனோ ஒப்பிவிச்சுக் கொண்டானெங்கிறதாய் சேதி கேட்டோம்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 3; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 23; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே அங்கே முசே கில்லியாரும், முசே புலோ, முசே லங்கறனே மூன்று பேரும் முசே லெறியண்டை ஒன்பது மணிக்கிப் போயி பதினோரு மணி மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டு போயி விட்டார்கள். பின்னை வேறு ஒருத்தரும் கோட்டைக்கி வரயில்லை. நாமும் பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். மத்தியானம் முசே லாலி மயிலாப்பூர் விசுப்பு பாதிரி நொரோன்னா வீட்டிலே விருந்து சாப்பிட்டு வீட்டுக்குப் போக பல்லக்கு யில்லாமல் ராமலிங்கம் பிள்ளை பல்லக்கின் பேரிலே ஏறிக்கொண்டு போனார். முசே துபுவாவும் வந்திருந்தான். முன்னே மைசூராருக்கும் நம்முடவர்களுக்கும் நாலாயிரம் மாடுகளை குடுக்கும்படி சம்மதி நிமித்தியம் உடம்படிக்கையாயிருந்தது. இன்றையதினம் ராமலிங்கம்பிள்ளை அந்த மாடுகளை நான் தாறேனென்கிறதாய் கையெபத்துப் போட்டுக் குடுத்து மயிசூராருக்கு தியாக துற்க்கம் விட்டுவிடச் சொல்லி அந்த கொம்மாந்தாமுக்கு விசுப்பு பாதிரி முகாந்திரமாய் முசே லாலி கையிலே கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் குண்டு கிராமம், வில்லியநெல்லூர் சீமை, வழுதாவூர் சீமை, பாகூர் சீமை ஊர்களிலே சாராயம் குத்தகை புகையிலை கிடங்கு முத்திரைச் சாவடி யிதுகளெல்லாம் முன்னாலே ஒருதரம் பேசியிருந்தான். ராமலிங்கம் பிள்ளை முசே லாலியுடனே பேசி யிருந்தான். யிப்போ ராமலிங்கம் பிள்ளையும் முசே துபுவாவும் யோசனை

பண்ணிக் கொண்டு யின்னைய தினம் கண்டு பேசினதாய் யிதுகளையெல்லாம் நேத்தயதினம் முசே லாலி உத்தாரம் பண்ணதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

நேத்தயதினம் அரியாங்குப்பம் முருங்கப்பாக்கம் அவ்விடங்களிலே யிருந்து ஓட்டிவந்த மாடுகளெல்லாம் யின்னையதினம் சாயங்காலம் முசே பனோவும் ராமலிங்கம் பிள்ளையும் சாவடி மணியம் சவுரிமுத்தும் போயிருந்து கணக்கு யெழுதிக் கொண்டு விட்டுவிட்டார்கள். தலங்கம்பாடிக்கி அவர்கள் கப்பல் சீமைக்கப்பல் காப்பிதேபோன் எஸ்ப்பிரான்சு "Cap de Bonne Esperance" அண்டை ஒரு கப்பல் தலங்கம்பாடிக்கி வந்து தண்ணியேத்திக் கொண்டு பயணம் பிறப்படச்சே கோவர்ணதோரை யேத்திக் கொண்டு வந்தது. அந்தக் கப்பல் அவ்விடத்திலே யெறங்கி தண்ணி தீனி தட்டுமுட்டு யேத்திக் கொண்டு பிறகே வாறோம். யிந்தக் கப்பலிலே பிரான்சுக்காறருடைய கடுதாசியள் வந்திருக்குதென்றும் சொன்னதாய் முன்னே வந்த கப்பல்க்காரன் தலங்கம்பாடி கோவர்ணதோருக்கு சொன்னதாய் அவன் யிவ்விடத்துக்கு முசே லாலிக்கும் முசே லெறிக்கும் எழுதியனுப்பி விச்சதாய் வந்த சமாச்சாரம் "முசே கில்லியார் முசே புலோவுடனேயும் முசேலெறி சொன்னானென்று நம்முடனே முசே கில்லியாரும் முசே புலோவும் தலங்கம்பாடிக்கி சீமைக்கப்பல் ஒன்று வந்தது. அதிலே சேதி பிறகே காப்பிதே போன் எஸ்பிரான்சு (Cap de Bonne Esderance) கப்பலின் பிறகே ஒரு கப்பல் தலங்கம்பாடிக்கி கொவற்ணதோரை ஏத்திக் கொண்டு வருகுது அதிலே பிரான்சுக்காறருக்கு சீமை கடுதாசியள் வருகுதென்று" சொன்னதாய் சொன்னார்கள். பிரான்சுக்காறருக்கு சண்டை யென்னமாயிருக்குதென்று கேட்டதுக்கு, "அது யெனக்குத் தெரியாது யிந்தச் சமாச்சாரம் மாத்திரம் எழுதி வந்ததென்று முசே லெறி சொன்னார்" யென்று சொன்னார்கள். இந்த ராத்திரி யேழு மணிக்கு கேழ்க்கப்பட்ட சேதி யென்னவென்றால் "நேத்தியதினம் நம்முடையவர்கள் பிரான்சுக்காறருடைய யிசுக்காதுருகளிலே யிருந்து ஒரு கப்பல் கூடலூர் துறைக்கி நேராய் வந்ததாய் அந்தக் கப்பலை யிவ்விடத்திலே யிருக்கிற இங்கிலேசுக்காறருடைய கப்பல் தெரத்தினதாய் அந்தக் கப்பல்க்காரன் ஓடிப்போனானென்று" அந்த சமாச்சாரம் கையெழுத்துப் போட்டு குடுத்த பிரிசினேர் ஒப்பிசியால்மார் யிருபத்தினாலு பேர் பரோலிலே (Parole) பாலாசூர் (Balassore) சுலுப்பிலே யேறிப் போனவிடத்திலே இங்கிலேசுக்காரர் பிடிச்சு நாங்கள் நாலு பேரை மாத்திரம் அனுப்பச் சொன்னால் யித்தனை பேரை யேன் அனுப்பினீர்கள்? விடுகுறதில்லை யென்று மறுபடியும் ஒரு ஒப்பிசியால் கூட்டி அனுப்பிவிச்சார்கள். அவன் முசே லாலியுடனே யிப்படி பிரான்சுக்காறருடைய யிசுக்காதுருலே யிருந்து ஒரு கப்பல் வந்தது. அதை யிங்கிலேசுக்காரர் கப்பல்க்காறர் துரத்தினதாய்

அவன் ஓடிப்போனதாயும் சொன்னார்கள் யென்று சொன்னார்கள். அந்த யிசுக்காதுரு யின்ன யேழு யெட்டு நாளைக்குள்ளே வரும் சாஸ்திரம் ஆனி மாசம் 28 தேதிக்கு மேல் கப்பல் வருமென்று சொன்னபடிக்கி சரியாயிருக்குது.

கேழ்க்கப்பட்ட சேதியினாலே தென்னண்டை அழிசப்பாக்கத்துக்கு கிட்ட தவளைகுப்பத்துச் சாவடியண்டை நம்முடவர்கள் மோர்சா போடுகிறபடியினாலேயும் இங்கிலேசுக்காரருடைய பவுன்சு தியாக துற்க்கத்தின் பேரிலே போயிருக்கிற படியினாலேயும் இங்கிலேசுக்காறருடைய குதிரையள் தென்னண்டை நாலஞ்சு நாளாய் போக்கு வரத்துயில்லை ஆனபடியினாலே திருவதி, பண்ணுருட்டி, பாகூர் யிவ்விடங்களிலே யிருந்து கைக்களவர் (Weavers) செனங்கள் நாலஞ்சு நாளாய் பயமில்லாமல் போக்குவரத்தா யிருக்குறார்கள். யிந்த சமாச்சாரம் அவ்விடத்திலே யிருந்து வந்த கைக்ளவர் வேலன் என்கிறவன் யிந்த சமாச்சாரம் நம்முடனே சொன்னான். யின்னையவரைக்கும் கையெழுத்துப் போட்டுக் குடுத்த ஒப்பிசியால்மார் கரை வழியாய் சென்னப்பட்டணத்துக்குப் போனபேர் அறுபதும் கடலின் பேரிலே போனபேர் யிருபத்து நாலும் ஆக எண்பத்தினாலு பேர் ஒப்பிசியால் போனார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது. இங்கிலேசுக்காரர் வழுதாவூரிலே யிருக்கிற தண்டிலே யிருந்த பதினோரு பெரிய பீரங்கி பெருமுக்கலுக்கு யிழுத்துக் கொண்டு போனார்கள் என்று சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் சாயங்காலம் மைசூர் வைக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யன் பதினோரு விராகனும் வெங்காசி பண்டிதன் அஞ்சு ரூபாயும் கிஷ்ணப்பாவும் அஞ்சு ரூபாயும் கொண்டு கொண்டு மயிலாப்பூர் விசுப்பு பாதிரி நொரொன்னா அழைச்சுக் கொண்டு முசே லெறியண்டைக்குப் போய் நசர் வைச்சு மயிசூராருக்கும் நம்முடவர்களுக்கும் உடம்படிக்கையானதுக்கு குமிசேல் கையெழுத்துப் போட்டு குடுக்கச் சொல்லி கேட்டார்கள். நல்லது யென்று முசே லெறி சொன்னான். யேழு மணி மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்து போயி விட்டார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 4; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 24; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே வெள்ளைக்காரர் பூண்டெங்கிறது ஒருத்தரும் வரயில்லை. முசே லெறி யென்ன செய்யுராரென்று விசாரிச்சால் கதவைச் சாத்திக்கொண்டு யிருக்குறாரென்று சொன்னார்கள். அப்பிறம் பத்து

மணிக்கி மட்டுக்கும் ஒருத்தரும் வராதபடியினாலே வீட்டுக்குப் போகவேணுமென்று பயணமாயிருக்கச்சே முசே கில்லியார் பத்தரை மணிக்கி வந்து முசே லெறியண்டை பேசினதென்னமோ திரும்பி வந்து விட்டான். ஒரு பேச்சுப் பேசினானோ பேசவில்லையோ தெரியப்போகாது. மத்தப்படி யித்தனாளுமாகிலும் குமிசெல்க்காறரிலேயும் கோந்தவாரிலேயும் முசே கொற்னேத்து கோந்து வாரிலேயும் ரெண்டு ஒருத்தர் வந்திருப்பார்கள். யின்னையதினம் ஒருத்தராகிலும் வரயில்லை. பதினோரு மணிக்கி பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். பதினோரு மணிக்கி இங்கிலேசுக்காறருட கப்பல் கரையிலே யிருக்கிறத்திலே யிருந்து வத்தலை விட்டுக்கொண்டு வந்தார்கள். நம்முடவர்கள் கப்பல் கரையிலே ஒண்ணு மொட்டை பண்ணி கொத்தளமாயிப்போட்டு யிருந்ததிலே யிருந்து ரெண்டு மூணு பீரங்கி குண்டு போட்டு சுட்டார்கள். அதன் பேரிலே வத்தல்க்காறன் மேலாக ஓடிப் போயிவிட்டான். பின்னை யொன்றும் வேறே விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 5; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 25; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்குப் போனோம் முசே லெறியைக் கண்டு பேசக் கொள்ளயில்லை. முசே மொர்சேனும் அல்லி கான் சிப்பாயும் சம்பளத்து நிமித்தியம் முசே லெறியண்டைக்கு வந்து பதினோரு மணி மட்டுக்கும் கண்டு பேசியிருந்து போயிவிட்டார்கள் முசே கில்லியார் வந்து முசே லெறியண்டை கண்டு பேசியிருந்து நம்மண்டைக்கு வந்தார். யென்ன சமாச்சாரமென்று கேட்டதுக்கு பப்பாதாய் யிருக்கமாய் யிருக்குதென்று முசே லெறி பகல் மட்டுக்கும் கோட்டையிலே யிருக்கவும் பகலைக்கு மேலாக வில்லியநெல்லூர் தெத்துவாசற் படியண்டை பீப்பாய் வெள்ளைக்காறன் தோட்டம் முஸ்தீதுப் பண்ணி யிருக்குறார். அங்கே பகலைக்கு மேலாய்ப் போனார். யின்னையதினம் யென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது யிவர் வந்து அஞ்சாறு வருஷமாய் யில்லாத பப்பாது யிப்போ வந்ததாயென்று கேட்டதுக்கு நாம் கேட்டதுக்கு அவரப்படி சொன்னார். என்னத்தை நினைச்சுக் கொண்டு சொன்னாரோ தெரியப்போகாது. அப்பிறம் லோகாப்பிறமமாய் பேசிக் கொண்டு யிருந்து பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

இத்தனாள் காலத்தாலே ஒன்பது பேர் வழியிலே பேர்வழிக்கு அன்பது பேர் சிப்பாயிகள் சம்பள நிமித்தியம் முசே துபுவாவை சின்ன முதலியார் சவுரிராயபிள்ளை கந்தப்ப முதலி தம்பி நயினாத்தை குண்டூர் றெங்கப்பசெட்டி அப்பு முதலி பெரியண்ண முதலி வகையிராக்கள் நாம்

தவிர யெட்டு பேர் போயி பித்திசாம் குடுத்துக் கண்டு பேசினவிடத்திலே மெய்தான் நீங்களும் தெண்டம் குடுத்திருக்கிறீர்கள். ஆனால் கப்பல் வரந்தனிலும் அவர்களுக்கு சம்பளம் குடுக்க வேணுமே அதுக்கு பின்னையார் பேரிலேயாகிலும் "சொல்லுங்களென்று கேட்டான். யெங்களுக்கு யெப்படி தெரியும் உங்கள் கையிலே லீஸ்துரு யிருக்குதென்று சொன்னார்கள். நல்லது முசே லெறியையும் முசே கொடுத்தேனையும் கண்டு பேசி சொல்லுகுறேனென்று" சொன்னான். அந்த சமாச்சாரம் வந்து நம்முடனே சொன்னார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 6; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 26; ஞாயிற்றுக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போகயில்லை கேழ்க்கப்பட்ட சேதி யென்ன யென்றால் பதினோரு மணிக்கு முசே துபுவா வந்து முசே கொடுத்தேனையும் அழைச்சுக் கொண்டு வரச்சொன்னான். அவனும் வந்தான். மன்னப்ப முதலி சம்மதிக்கி ராமலிங்கம்பிள்ளை நானூறு ரூபாயாய் தீத்துப் போடுகுறேனென்று சொன்னானென்று நேத்து கேழ்க்கப்பட்டுது. இந்தச் சேதி பிரகாரம் நம்மை வந்திருக்குறாயென்று விசாரிச்சார்கள். வரயில்லை யென்று சொன்னதின் பேரிலே நயினாரை அழைக்கச் சொன்னார்கள். நயினார் விரயத்துக்கு சாப்பிட்டேன் இன்றைய தினம் வரக்கூடாதென்று சொல்லியனுப்பி விச்சதின் பேரிலே அங்கே யிருந்த துபாசி எல்லப்பிள்ளை பரசுராம பிள்ளை மகன் சோணாசலம் இரண்டு பேரையும் வச்சுக்கொண்டு மன்னப்ப முதலி வீட்டுப்பிள்ளையாண்டானை அழைச்சுக் கேட்டு அறுநூறு ரூபாயாய் தீந்தது. முச்சியர் மூணு பேருக்கும் ஒருத்தனுக்கு அன்னூறு ரூபாய் விழுக்காடு ஆயிரத்தன்னூறு ரூபாயும் செட்டியள் கோவில் தேவடியாள் வீட்டு சரவணனுக்கு நூறு ரூபாயும் முசே திலார்சு துபாசி குழந்தைக்கு நானூறு ரூபாயும் யிந்தப்படியாக தீந்தது. பரியாரி வெங்கிடாசலத்தை அழைச்சுக் கேட்டதின் பேரிலே யெனக்கு ஒண்ணும் அவகாசமில்லை யென்று சொன்னதின் பேரிலே வெள்ளைக்காரருடனே கசோத்திலே போடச் சொன்னார்கள். கசோத்துக்கிட்ட போனவுடனே அன்பது ரூபாய் குடுக்குறேனென்று சொன்னான். முன்னே யில்லையென்றும் யிப்போ அன்பது ரூபாய் குடுக்குறோமென்று சொல்லுகுறாய் தேவையில்லை கசோத்திலே தானே யிருக்கட்டுமென்றும் நூறு ரூபாய் குடுத்தாலாச்சுது யில்லாவிட்டால் கசோத்திலேயே போட்டு வையுங்களென்று சொன்னார்கள். யிப்போ பனிரெண்டு மணி அடிச்சுது. அவர்கள் வீட்டுக்கு போயிவிட்டார்கள் போகச்சே சோணாசலத்தை அஞ்சுமணிக்கு அழைச்சு வைக்கும்படியாய்ச் சொல்லிப் போனதாய் கேழ்க்கப்பட்டுது.

பெரியம்பலசெட்டியை நூறுரூபாயும் பரியாரி வெங்கிடாசலத்தை இறுநூறு ரூபாயும் இந்தப்படிக்கு தீந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது. பிடவைக் கடை சின்னக்கச்சியப்ப செட்டி முத்துசெட்டியையும் ஒண்ணுமில்லாவிட்டால் அவர்களுடைய நாட்டாமைக்காறரைக் கேட்டு விட்டு விடலாமென்று சொன்னார்கள். மன்னப்ப முதலி, குமரப்ப முதலி, முத்தய்ய முதலி மூணு பேரும் அண்ணன் தம்பியாமவர்கள். அவர்களுக்கு அறுநூறு ரூபாயும் தீருகுறதேது மூணு பேருக்கும் மூவ்வாயிரம் ரூபாயாய் வாங்க வேண்டியதென்றும் அவர்களை மறுபடி அழைச்சு வரச்சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. இன்றையதினம் இப்படி நடந்தது. நாளையதினம் யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 7; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 27; திங்கள்கிழமை*

இத்தனாள் நாம் கோட்டைக்குப் போகயில்லை. கோட்டையிலேயும் வெள்ளைக்காறர் ஒருவரும் வரயில்லை. வற்த்தகரை ஒருத்தரையும் அழைப்பிச்சு கேழ்க்கயில்லை. பின்னையும் வேறே ஒரு விந்தையான சேதியும் கேழ்க்கப்படயில்லை. வரிக்காறர் வந்து வரி நிமித்தியம் வந்து வெகுநேரம் காத்திருந்து பார்த்துப் போட்டு பிறப்பட்டுப் போயிவிட்டார்கள். (அஞ்சுவரி எழுத்து கிழிந்து யிருக்கிறது) பின்னே காகித சமாச்சாரம் ஒன்றும் வெளியாகயில்லை. ஆனால் அந்த சேதி தெரிஞ்சு எழுதவேண்டியது. யென்னயென்றால் ஒண்ணு இங்கிலேசுக்காரர் பிலனாயி வழிமறிச்சுக் கொண்டு யிருக்கிறபடியினாலே யிவர்களுக்கு பிலனில்லாததைத் தொட்டு வராமலிருக்க வேணும். யோசனை பார்த்தால் குதிரைக்காரர் காகிதம் கொண்டு வந்தவர்களைப் பார்த்தால் அவர்கள் வருகிற சாடையாய் காணயில்லை யென்று யோசனை பண்ணிக்கொண்டோம்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 8; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 28; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கு போனவிடத்திலே வெள்ளைக்காறர் ஒருத்தரும் வரயில்லை. நாம் துவானத்தையண்டைக்கிப் போனோம். முசே லெபோம் பேரிலே முசே மெலாம் சம்மதி பணம் வரவேண்டியதுக்கு முசே லெபோமுக்கு சரீரம் சுவஸ்தமில்லாததைத் தொட்டு கண்டு பேசுவோம் யென்று போனோம். அவன் கடலோரத்திலேயும் யில்லை வீட்டிலேயுமில்லை ராமச்சந்திரராயனிருந்தான் நாமும் அவனும் லோகா பிரமமாய் பேசிக் கொண்டிருந்தோம் ( ) செட்டி வந்தான். முசே துபுவாவும் ராமலிங்கம் பிள்ளையும் முசே லாலி வீட்டுக்குப் போனார்கள் என்கிறதாய் சொன்னார்கள். சிப்பாயியள் சம்மதியாயி

சம்பளம் ஒன்பது பேர்வழியிலே அல்லவா சம்பளம் குடுத்து வந்தது. ராமலிங்கம் பிள்ளையை யிப்போ முசே பனோ வீட்டைப்போய்க் கண்டு பேசினேன். நல்லது நானும் முசே துபுவாவுக்குச் சொல்லி ஒன்பது பேர்வழியிலே யிருக்கிறதை முப்பது பேர்வழியிலே ரூபா பாபத் தக்கதாக சொல்லி திட்டம் பண்ணிப் போடுகுறேனென்று சொன்னான் என்று சொன்னான். நாம் சொன்னது நல்லது தான் ஒன்பது பேர்வழியிலே நானூத்தன்பது பேர் சிப்பாயியளுக்கு மாதம் ஒன்றுக்கு தொலாயிரம் விராகன் குடுக்கிறது முப்பது பேர் வழியிலே போட்டால் பேர்வழிக்கு முப்பது விராகனாச்சுதே சுலுவல்லவாயென்று உத்தரவு சொன்னோம்.

அப்பிறம் ராமச்சந்திரராயன் சொன்னது கடற்கரை யோரத்து தீர்வை சம்மதி நிலுவை யெல்லாம் யெழுதிக் குடுக்கச் சொன்னார்கள். அதன்பேரிலே எழுதிக் குடுத்தோம். உங்கள் பேரிலேயும் தீர்வை சம்மதிக்குப் பணம் வரவேணுமென்று சொன்னான். எது நிமித்தியம் நாமேதாகிலும் தீர்வை குடுக்க வேணுமா அப்போதைக்கப்போது குடுத்து விட்டோமென்று சொன்னதுக்கு மெய்தான் காரைக்கால் நெல்லு சம்மதிக்கும் செம்மரத்து சம்மதிக்கும் தீர்வை குடுக்க வேணுமேயென்று சொன்னான். "அதுக்கு அதேது நீர் தீர்வை கேட்டீர். அதன்பேரிலே முசே துப்பிளேயிக்குசுடனே ஊரிலே நெல்லு கிடையாத படியினாலே காரைக்காலிலே யிருந்து நெல்லு அழைப்பிக்கச் சொன்னீர்." ஆனபடியினாலே அழைப்பிச்சோம். யிப்போ குண்டு கிராமம் நெல்லுக்கு தீர்வையேதாகிலும் முண்டா? அப்படிப்போலே அதுகுண்டு கிராமத்து நெல்லு யென்று செம்மரம் சம்மதிக்கும் நெல்லு சம்மதிக்கும் சொல்லிக் கொண்டதின் பேரிலே முசே துப்பிளேயிக்கிச் (M. Dupleik) உம்மை அழைச்சு செம்மரத்துக்கும் நெல்லுக்கும் தீர்வை தேவையில்லை யென்று தள்ளிப்போடச் சொல்லி யிருக்கச்சே நீரெப்படி யெழுதி குடுப்பீரென்று நாம் சொன்னதுக்கு மெய்தான் சொன்னது அப்போதானே தள்ளிப் போடாதே போனோம். மறந்து போனபடியினாலே கணக்கிலே யெழுதியிருந்த வரி முசே லபோம் கையிலே எழுதி விச்சுப் போட்டேன். அதன் பேரிலே முசே லபோம் உடனே சொல்லி கணக்கிலே தள்ளி எழுதிவிச்சுப் போடுகுறேனென்று சொன்னான்.

அப்பிறம் பதினொன்றரை மணிக்கி முசே கொடுத்தேனும் முசே பனோவும் முசே நுவாலும் மூணுபேரும் சாவடி ஞாயத்திற்கு வந்திருந்தபடியினாலே அந்தப்படிக்கி முசே லாலி யண்டைக்கிப் போனார்கள். இவர்கள் மூணுபேரும் பேசியிருந்த படிக்கி முசே லாலியண்டைக்கி போறதேதென்று பிறகே போறவனை அழைச்சுக் கேட்டதுக்கு ஆண்டா செட்டி வியாச்சிய நிமித்தியமாய் விசுப்பு பாதிரி நொரோன்னு (Bishop Padre Noronhai) முகாந்திரமாய் குப்பி செட்டி கண்டு பேசி முசே லாலிக்கு சொல்லிவிச்சதின் பேரிலே முசே லாலி

முசே கொடுத்தேனுக்கு ஒரு சீட்டெழுதி நீய் வந்து ஞாயம் நன்றாய் விசாரிக்கிறாய் யிப்போ யெனக்கு தெரிய வந்தது. நீய் நல்ல புத்திக்காரன் தான். உன்னுடய ஞாயமெல்லாம் தெரியவந்தது. ஆண்டா செட்டி வியாச்சியம் நீய் விசாரிக்கத் தேவையில்லை. நான் விசாரிச்சுக் கொள்ளுகுறேனென்று நேத்து எழுதி அனுப்பிவிச்சாரென்று நாம் கேட்டிருந்த படிக்கி "யின்னைய தினம் சாவடிக்கி வந்து ஆண்டா செட்டி யென்கிறவனை அழைச்சு உனக்கு தகப்பன் தாய் யிருக்கிறார்களா. அண்ணன் தம்பி யெத்தனை பேரென்று கேட்டார்கள். தகப்பன் தாயிருக்குறார்கள். நாங்கள் அண்ணன் தம்பி மூணுபேர் யென்று" சொன்னான். அந்தப்படிக்கி கடுதாசியிலே யெழுதிக் கொண்டு உங்கள் ஆஸ்தியெல்லாம் எம்மாத்திரமென்று கேட்டார்கள். நானூத்தன்பது விராகனென்று சொன்னான். அதுவுமெழுதிக் கொண்டு முசே லாலியண்டைக்குப் போறார்களென்று சொன்னார்கள். பின்னை யொன்றும் ஆண்டாசெட்டியை கேழ்க்கயில்லை.

யித்தனாள் சாயங்காலம் இங்கிலேசுக்காரருடய குதிரை நூறு நூத்தன்பது குதிரை மட்டுக்கும் காட்டு மேட்டின் பேரிலே வந்து ஒட்டம் விட்டுக் கொண்டு இந்ததின் பேரிலே ஒழுகரையிலே யிருந்த பிரான்சுக்காறருடய சொலுதாதுகள் யிருந்தவர்கள் யேழு யெட்டு பீரங்கி மட்டுக்கும் குண்டு போட்டு சுட்டார்கள். அதன்பேரிலே அந்தக் குதிரைக்காரரெல்லாம் வாங்கிப் போயிவிட்டார்கள். நாம் சுவாரி போனவிடத்திலே நம்முட வெளி தோட்டத்தினண்டையிலே யிருந்து யிந்த வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தோம். நம்முடய தோட்டக்காரர் சொன்னது யிங்கிலேசு குதிரைக்காரர் பாப்பய்யபிள்ளை தோட்டம், குமரப்பிள்ளை தோட்டம் அந்த வழியாய் வந்து நம்முட தோட்டத்து ஓரமாய் போனார்களென்று சொன்னார்கள். பின்னையொன்றும் விந்தையாயி சமாச்சாரம் கேழ்க்கப்படவில்லை. இத்தனாள் ஊரிலே அரிசி முதலிய தானிய வகை விலை விபரம்

அரிசி பணம் 1க்கு படி 1 1/4 அல்லது 1 3/8
துவரம்பருப்பு மேற்படி 1 1/8
காராமணி பணம் 1க்கு படி 1 3/4
பச்சைபயரு மேற்படி 1 1/8
உளுந்து மேற்படி 1 1/4
கேழ்வரகு மேற்படி 1 3/4
நல்லெண்ணை சேர் ஒன்றுக்கு பணம் 3
விளக்கெண்ணை சேர் ஒண்ணுக்கு பணம் 2 3/4
நெய் தூக்கு ஒன்றுக்கு ரூபாய் 2 பணம் 5

புளி மேற்படி பணம் 2
மிளகு தூக்கு 1க்கு ரூபாய் 1 பணம் 2 1/2
மிளகாய் மேற்படி 1க்கு பணம் 3
மஞ்சள் மேற்படி 1க்கு பணம் 1 1/4
கடுகு மேற்படி 1க்கு பணம் 2 1/2
சீரகம் மேற்படி 1க்கு ரூபாய் 1 பணம் 6
மெந்தியம் மேற்படி 1க்கு பணம் 2 1/2

யிந்தப்படியாக விலை விக்குதெங்கிறதாய் சொல்லி யிதிலே நெய் காயி தானியங்கள் யெண்ணை அகப்படாது. மத்த தினிசுகள் கொஞ்சம் நஞ்சம் அகப்படும் பின்னை யின்னம் யெட்டு நாளைக்கி மாத்திரம் வெளியிலே யிருந்து ஒண்ணும் வராமல் யிருந்தால் ஒரு தினிசாகிலும் சுத்தியாய்க் கொள்ள கிடைக்காது. கொஞ்சம் நஞ்சம் ராவிலேயும் பகலிலேயும் திருட்டுத் தனமாய் வருகுறபடியினாலே கொஞ்சம் நஞ்சமாகிலும் கிடைக்கிறது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 9; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 29; புதன்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கடற்கரை யோரத்துக்குப் போனோம். அங்கே வெள்ளக்காரர் அவர்களும் யிவர்களுமிருந்தார்கள். ராமச்சந்திரராயன் யிருந்தான். அவன் சொன்னது போயிகள் சம்மதிக்கி முசே துபுவா வானால் ஒண்ணும் சொல்லுகுறதில்லை. சட்டைக்கார லூயிசு யென்கிறவனைக் கேட்டால் உங்கள் சோலிக்கு "சிப்பாயிகள் வரார்களென்று நம்முடனே சொல்லுகுறான். அவர்களை யெடுத்துவிட்டு வீட்டை அடைக்கிறதும் மறிக்கிறதும் விசேஷவார்த்தைகளை பேசுகுறதும் யிப்படி யெல்லாம் நடப்பிக்குறார்கள்" யென்று சொன்னான். நாம் சொன்னது யிப்படி யெல்லாமிருக்க நாம் குமிசேலுக்கு எழுதியிருக்கிற பித்திசாமை நாளைக்கு குடுத்தால் தேவையில்லை யென்று ஒண்ணு பொறுத்து அல்லவென்று குடுக்கச் சொன்னால் யின்னம் ரெண்டு மாசம் மூணு மாசம் குடுக்கச் சொன்னாலும் குடுக்க வேண்டியிருக்குது. குடுத்தும் யிந்த சின்ன மனுஷர் கையிலே விசேஷம் கேழ்ப்பானேன். நாளையதினம் யெப்படியும் அந்த பித்திசாமை குமிசேலுக்கு குடுக்க வேணுமென்று சொன்னோம். முசே துபுவாவைப் பார்த்துக் கொண்டிருந்து சின்ன மனுஷர் லச்சை பண்ணுகுறார்கள் யென்று சொல்லிப் போட்டு பதினோரு மணிக்கு கோட்டைக்கு வந்தோம். பின்னை யொருத்தரும் வரயில்லை. முசே கில்லியாரும் முசே புலோவும் வந்து முசே லெறியைக் கண்டு பேசிப்போயிவிட்டார்கள்.

பதினொண்ணரை மணிக்கி முசே கொடுத்தேன் வந்து கண்டு பேசிப்போயி விட்டான். பின்னை யொருத்தரும் வரயில்லை நிற்மானுஷிய

மாயிருந்தது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்பட்டதுயில்லை. முன்னே தஞ்சாவூரிலே யிருந்து எடுத்து வந்த விக்கிரகங்கள் பதினோராயிரம்ராத்தல் யிருந்ததை யிப்போ ராமலிங்கனுக்கும், சோணாசலத்துக்கும் ஆகாததைத் தொட்டு பாதிரி விசுப்பு முகாந்திரமாயி ராமலிங்கம் முசே லாலிக்குச் சொல்லி அந்த விக்கிரகங்களை சோணா சலத்தை யெடுத்துக் கொண்டு பதினாராயிரம் ரூ.16000 ரூபாயி குடுக்கச் சொல்லி முசே லாலி கேட்டதின் பேரிலே "அவன் பணமில்லை யென்று பதினாயிரம் ரூபாயி சீமை உண்டிச்சீட்டு குடுத்து அந்த விங்கிறகங்களை சோணாசலம் யெடுத்துக் கொண்டானென்று" சேதி கேழ்க்கப்பட்டுது. சிப்பாயியள் சம்பளம் பணத்துக்கு யிருபதினாயிரம் ரூபாயி பில் லேத்து குடுத்து அதை முறிச்சு மூவாயிரத்து முன்னூறு ரூபாயி குடுத்து யிருபதினாயிரம் ரூபாயிக்கும் சிப்பாயியள் கையிலே கையெழுத்து வாங்கிக் கொண்டான் முசே துபுவா யென்று சேதி கேழ்க்கப்பட்டது. சாயங்காலம் கருக்குடிகுப்பம் சாலையோரமாயி யிங்கிலேசுக்காரருடைய குதிரை அன்பதறுபது மட்டுக்கும் பிறப்பட்டு காட்டு மேட்டு ஓரமாய் வந்ததின் பேரிலே நம்முடவர்கள் பத்துபனிரெண்டு குதிரைக்காரர் பாரா யிருந்தவர்கள் வந்து கபுறு சொன்னார்கள். எல்லப்பிள்ளைச் சாவடியிலே யிருந்த சொலுதாதுகள் நாலஞ்சு பீரங்கி சுட்டார்கள். அதன் பேரிலே யிங்கிலேசுக்காரர்கள் வாங்கிப்போனார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 10; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 30; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே வரிசம் மதி குடுத்து போக மத்த நிலுவைப் பணத்து நிமித்தியம் முசே திப்பிளாமுடைய சேவுகன் வந்து அழைச்சான். நாம் போனவிடத்திலே நிலுவைக் காரலெல்லாம் வந்திருந்தார்கள். முசே துபுவாவும் வந்திருந்தான். யெல்லாரையும் அழைச்சு நிலுவைப் பணம் மூணு நாளைக்குள்ளே குடுக்க வேணுமென்று முசே லாலியானால் ரொம்ப கோபிச்சுக் கொள்ளுகுறாரென்று சொன்னார்கள். அதனாலே யிவர்கள் யெல்லாமிருந்து கொண்டு மூணு நாளைக்குள்ளே யெப்படி குடுக்குறது. யெங்கேயாகிலும் வாங்கியல்லவோ குடுக்கவேணும் யென்று சொன்னார்கள். "அதுக்கு நாமிருந்து கொண்டு நிலுவை மூணு நாளையிலே யெம்மாத்திரம் ஆகிலும் குடுத்தால் அப்பிறம் நாலு நாள் யேறக்குறைய செலுத்திப் போடலாமென்று சமுதாயிச்சு சொன்னோம்." அவர்களை யெல்லாம் போகச் சொல்லி சொன்னார்கள். நிலுவைக்காறரிலே பத்துப் பனிரெண்டு பேர் வராமலிருந்தார்கள். அவர்களையும் அழைச்சு வரச்சொல்லி தாக்கீது பண்ணச் சொன்னார்கள். அப்பிறம் மதாம் திப்பிளாம் அண்டைக்கு போய் உளுக்காந்தோம். அவள் சொன்ன சேதி நேத்து சாயங்காலம் முசே லாலியும் முசே கொடுத்தேனும்

முசே துபுவாவும் மூணு பேரும் வந்தார்கள். முசே லாலி சொன்னது தலங்கம்பாடிக்கி முன்னே ஒரு சீமைக்கப்பல் வந்து யிப்போ ஒரு சீமைக்கப்பல் வந்தது. அதிலே தலங்கம்பாடிக்கி கோவர்ணதோர் வந்தான். அந்தக் கப்பலிலே முசே போற்ஷே (M. Porcher) மருமகன் தம்பியும் வந்தான். நமக்கும் சீமையிலே யிருந்து கடுதாசி வந்திருக்குது சந்தோஷமான சமாச்சாரமாய்த் தானே வந்திருக்குது. அவன் யிவ்விடத்துக்கு வந்தால் சேதிகளெல்லாம் நன்றாய் தெரியும் ஆனால் சந்தோஷமான சமாச்சாரமாய்த்தானே வந்திருக்குதென்று சொன்னான். அப்பிறம் சத்துநேரம் பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டு பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யித்தனாள் காலமேயும் இங்கிலேசுக்காரருடைய குதிரைக்காரர் அன்பது அறுபது மட்டுக்கும் காட்டு மேட்டிலே வந்து சவாரி பண்ணிப்போட்டு பிறப்பட்டுப் போயிவிட்டார்கள்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 11; விக்கிறம வருசம் ஆனி மாசம் தேதி 31; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கி போகச்சே துபாசி கந்தப்ப முதலி மெத்தை வீட்டின் பேரிலே யிருந்து யிறங்கி யெதிராக வந்து "முசே லெறி சொல்லச் சொன்னார். முசே கொடுத்தேனையும் பதினோரு மணிக்கி வரச்சொல்லிச் சொன்னாரென்றும் சொன்னான். யென்ன காரிய நிமித்தியம் என்று" கேட்டோம். யென்னமோ தெரியாதென்று சொன்னான். ஆனால் வரி சம்மதி நிமித்தியம் தானென்று யோசனைப் பண்ணிக் கொண்டோம். அதிலே பொன்னப்ப செட்டி (Ponnappa Chetty) வந்து யெங்கள் சம்மதிக்கி ராமலிங்கம்பிள்ளை முகாந்திரமாய் முசே துபுவாவுடனே கண்டுபேசி நானூறு ரூபாயாய் தீத்துக் கொண்டோம். நீங்களும் சகாயமாய்த் தெரியப்படச் சொல்லி மாற்கமாய்த் தீத்துப்போட வேணும் யென்று சொன்னான். யிது நிமித்தியம்தான் நாலஞ்சு நாளாய் தங்களண்டைக்கும் வரயில்லையென்று சொன்னான். குட்டி செட்டி முருகன் பேச்சுக்கும் ராமலிங்கம்பிள்ளை முகாந்திரமாய்க் கண்டு பேசி யிருக்குது. அவன் வரயில்லை யென்று ராமலிங்கம் பிள்ளை சொல்லிக் கொண்டிருந்தானென்று சொன்னான். யெங்கள் நிமித்தியம் தானே நேத்து மத்தியானமும் உங்களை அழைக்கச் சொன்னது. நீங்கள் யில்லாததைத் தொட்டு நாளைய தினம் ஆகட்டுமென்று சொன்னார்களென்று சொன்னான். பதினோரு மணிக்கி முசே துபுவா வந்தான். நாமும் மெத்தை வீட்டின் பேரிலே போனோம். பதினொண்ணரை மணிக்கி முசே கொடுத்தேனும் வந்தான். முசே துபுவா கபாலன் காளஸ்தி செட்டி, குட்டி செட்டி முருகன், சாராயக்கார திருவெங்கிடம் யிவர்கள் மூணுபேரு பேரையும் ஒரு கடுதாசியிலே எழுதிக் கொண்டு வந்து

யிவர்களை அழைக்கச் சொன்னார்கள். யிந்த மூணு பேரையும் அழைச்சு வரச் சொல்லி யெதிரே விட்டோம். முசே துபுவா யிருந்து கொண்டு கபாலன் காளாஸ்தி செட்டியைப் பார்த்து யென்ன சொல்லுகுறாயென்று கேட்டான்.

யென்னை ஆயிரம் ரூபாயி குடுக்கச் சொல்லி சொன்னீர்கள். யெனக்கு குடுக்கிறதுக்குயில்லை முன்னூறு ரூபாயி குடுக்குறோமென்று சொன்னதின் பேரிலே கசோத்திலே போடச்சொல்லிச் சொன்னீர்கள். யிப்போ நானூறு ரூபாயி தங்களுடனே பேசி தீத்துக் கொண்டேன். அந்தப்படிக்கி சம்மதியென்று சொன்னான். யில்லை யென்னுடனே ஆயிரம் ரூபாயாய் பேசித் தீத்துக் கொண்டது அப்படி யிருக்க யிப்போ நீய் நானூறு ரூபாயி யென்று சொல்லுகுறியா? பேசினவனை அழையுமென்று சொன்னான். பொன்னப்ப செட்டி காம்பிரா வாசற்படிக்கப்பாலே யிருந்தான். அவனை அழைச்சு வந்துவிட்டோம். அவனை நீ யென்னுடனே ஆயிரம் ரூபாயாய்ப் பேசயில்லையா யென்று கேட்டான். பொன்னப்ப செட்டி சொன்னது “ராமலிங்க பிள்ளை முகாந்திரமாய் நானூறு ரூபாயாய் பேசினது. ஆயிரம் ரூபாய் பேசயில்லை யென்று சொன்னான். அதன் பேரிலே யிவன் யென்னுடனே ஆயிரம் ரூபாயா பேசி தீத்துக் கொண்டவன் யிப்போ நானூறு ரூபா யென்று” சொல்லுகுறான். ஆனபடியினாலே யிவர்கள் ரெண்டு பேரையும் கசோத்திலே போடச் சொல்லி முசே துபுவா சொன்னான். அதிலே முசே லெறி ஒரு நாளும் சிரியாதவன் ரெண்டு நாழிகை மட்டுக்கும் குலுக்கு குலுக்கென்று சிரிச்சு யிவன் கையிலே ஆயிரம் ரூபாயா வாங்கிறது பணம் ரொம்ப யிருக்குது. ரெண்டாயிரம் ரூபாய் வாங்க வேணும் யென்று சொல்லி சீக்கிறமாய் கசோத்திலே போடச் சொன்னான். கபாலன் காளத்தி செட்டியும், பொன்னப்ப செட்டியும் ரெண்டு பேரையும் கசோத்திலே போட்டார்கள்.

அப்பிறம் குட்டி செட்டி முருகனை அழைச்சுக் கேட்டார்கள். அவர்கள் சொன்னது முன்னே என்னை முன்னூறு குடுக்கச் சொல்லி சொன்னீர்கள் யெனக்கு குடுக்கிறதுக்கில்லை. நூறு ரூபாய் குடுக்குறேன் யென்று சொன்னதின் பேரிலே கசோத்திலே போடச் சொன்னார்களென்று சொன்னான். அதுக்கு முசே துபுவாயிருந்து கொண்டு சொன்னது யென்னுடனே யெண்ணூறு ரூபாயாய்ப் பேசினாரென்று சொன்னான். அதுக்கு முசே லெறி சொன்னது முன்னூத்தறுபது ரூபாய்க்கி சம்மதிச்சுக் கொண்டால் யிவனை விட்டு விடுகுறதென்று அந்த லீஸ்துரு யெடுத்து வந்து காண்பிச்சார். முசே லெறி சொன்னான். நாமும் மெய்தானென்று யிவன் அதிகமாய் குடுக்கமாட்டானென்று சொன்னோம். முசே துபுவா சொன்னது முசே லாலியுடைய லீஸ்துருவிலே அன்னூரு ரூபாயாய் எழுதி யிருக்கிறபடியினாலே அந்தப்படிக்கி வாங்கவேணுமென்று சொன்னான்.

தேவையில்லை முன்னூறு ரூபாய்க்கு சீட்டு எழுதிப்போடு ரெங்கப்பிள்ளை யென்று சொன்னான். அந்தப்படிக்கி யிருபது நாளையத் தவணைக்கி முன்னூறு ரூபாய் சீட்டு யெழுதி கையெழுத்துப் போட்டுக்குடுத்தான். அவனைக் காவல் விட்டு விட்டார்கள்.

அப்பிறம் திருவெங்கிடத்தை அழைச்சுக் கேட்டார்கள். அவனும் நூறு யிறநூறு யென்று தான் சொன்னான். அவன் சம்மதியும் கபாலன் காளத்தி செட்டிக்கி யெப்படி நடந்ததோ அந்தப்படிக்கி நடந்து அவனையும் கசோத்திலே போடச் சொன்னார்கள். அப்பிறம் பனிரெண்டு மணி அடிச்சுப் போனபடியினாலே முசே துபுவா ஒரு கடுதாசி யொன்று எழுதிக் கொண்டு வந்தான். அதலே பஞ்சாங்கம் சுப்பய்யன், நானக்குட்டி அய்யன், அனந்தய்யன் யிந்த மூணு பேர் பேரும் எழுதியிருந்தது. அவர்களை நாளை அழைச்சு வரச்சொன்னான். தில்லை மேஸ்திரி முசே சொபினே துபாசி முத்து யெங்கிறவன் பேரிலே யிருபது ரூபாய் வரி எழுதினான். அவன் குடாதபடி யினாலே சாவடியிலே காவல் வைச்சிருக்குது. அவன் ராமலிங்கம் பிள்ளை முகாந்திரமாய் முசே துபுவா உடனே சொல்லிக் கொண்டதின் பேரிலே முசே கொடுத்தேனை நீரா காவலிலே வைக்கச் சொன்னீரென்று முசே துபுவா கேட்டதுக்கு நான் வைக்கச் சொல்லயில்லை யென்று சொன்னான். முசே துபுவா சொன்னது தில்லை மேஸ்திரி பேரிலே போட்ட வரி அவன் ஊரின் பேரிலே போட்டு வாங்கினானென்றும் அதுவே அல்லாமல் அவன் ஒரு காசு குடுக்கயில்லை கனகசபை முதலி யென்கிறவனும் அந்தப்படிக்கித் தானே செய்யுறான் யிவர்கள் ரெண்டு பேரையும் அழைச்சு தாக்கீது பண்ணி வைக்கச் சொன்னார்கள்.

அப்புறம் முசே துபுவா சொன்னது முசே கற்ஷேன் (M. Kerzean) துபாசி கந்தப்ப முதலி முன்னூத்தறுபது ரூபாயிக்கி கையெழுத்துப் போட்டுக் குடுத்து பணம் குடாமல் நாகப்பட்டணத்துக்குப் போயிவிட்டானாம் யென்று சொன்னான். யெதுனாலே சொன்னான் என்றால் ராமலிங்கம் பிள்ளை கந்தப்பன் சீட்டு சம்மதி பணத்துக்கு அதை தள்ளிப்போட்டு விக்க வேணுமென்றதின் பேரிலே நயினாரும் கேட்டுக் கொண்டபடியினாலே அதிலே முசே கொடுத்தேன் சொன்னது ஆர் சம்மதிச்சு சீட்டெழுதிக் குடுத்தார்களோ அவர்கள் பணமெல்லாம் நயினார் சம்மதி பண்ண வேணுமென்று சொன்னான். முசே லெறியும் மெய்தான் நயினார் தான் சம்மதி பண்ண வேண்டியதென்று சொன்னான். அப்பிறம் வீட்டுக்கு வந்து விட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் முசே லாலி நாலு குதிரை கட்டின வண்டியின் பேரிலே யேறிக் கொண்டு நாற்பது அன்பது உசார் குதிரை வெள்ளைக்காரரும் முசே கதிவேலும் அழிசப்பாக்கம் கிராமத்

தண்டையிலே போடுகிற மோர்சா பார்க்கப் போனார்கள். முசே கிற்ஷாம் (M. Kerzean) துபாசி கந்தப்பனை கசோத்திலே வைச்சார்களென்று சேதி சொன்னார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 12; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 1; தெக்ஷணாயனம் சனிக்கிழமை அமாவாசை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போயிருந்தோம். பதினோரு மணிக்கி முசே கொடுத்தேன் வந்தான் பதினொண்ணரை மணிக்கி முசே துபுவா வந்தான். நம்மை அழைச்சனுப்பி விச்சார்கள். நாமும் மெத்தையின் 'பேரிலே போனோம். ஆராகிலும் வந்திருக்கிறார்களா? யென்று கேட்டார்கள். நீங்கள் ஆரையும் அழைக்கச் சொல்லிச் சொல்லயில்லையே ஆனபடியினாலே அழைக்கயில்லை யிப்பவும் ஆரை அழைக்கச் சொல்லுகிறீர்களோ அவர்களை அழைக்குறோமென்று சொன்னோம். அதிலே முசியே துபுவா யிருந்து கொண்டு "நேத்து சொன்னேனே பிராமணரை அழைக்கச் சொல்லி யென்று சொன்னான். அவர்கள் மூணு பேரிலே ஒருத்தர் வெளியே போயிருக்கிறாராம் மத்த ரெண்டு பேர் யிங்கே யிருக்குறார்கள். ஒருத்தர் சத்துக்கவையாய்ப் போயிருக்கிறார். அவரும் வருவாரென்று" சொன்னோம். அதுக்கு முசே துபுவா சொன்னது யிந்த பிராமணர் நிமித்தம் நம்மை வந்து மனு கேட்டார்கள். நாம் சொன்னது அது ரங்கப்பன் மனு குடுப்பார் என்று நான் சொன்னேனென்றும் அவரைக் கேளுங்களென்றும் சொன்னான். அது யென்ன யென்று முசே கொடுத்தேன் கேட்டான். நாம் சொன்னது யெனக்கு மாத்திரம் அல்லா யிந்த மன்னாப்பு தமிழர் யெல்லாரும் தங்களை கேழ்ப்பார்கள். தாங்களும் தயவு பண்ண வேண்டியிருக்கும்.

யெதுனாலே யென்றால் தமிழருக்குள்ளே யாராகிலும் செத்துப்போனால் கருமாந்திரம் சாவு கல்லியாணம் யிதுகளுக்கெல்லாம் செரிமோனிய (ceremony) சாந்தி செய்யுறதுண்டு அதுகள் அந்த பிராமணர் செய்வார்கள். அவர்களுக்கு அரிசி காசு யேதாகிலும் குடுக்கிறதுண்டு. அதை வாங்கி அவர்கள் கொண்டு யோக காலக்ஷேபம் பண்ணிக் கொள்ளுவார்கள். ஆனபடியினாலே தமிழரெல்லாம் தங்களை மன்னிப்பு கேழ்ப்பாரென்று சொன்னோம். நல்லது யெல்லாம் பனிரெண்டு மணி அடிச்சுப் போச்சுது. திங்களன்றைய தினம் ஆகட்டு மென்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போயி விட்டார்கள். நாமும் பனிரெண்டு மணி அடிச்சு பிறகு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

முசே துபுவா அண்டைக்கு அவர்களை அழைக்கச் சொல்லி எழுதிக் குடுத்த வயணம். இன்னாசி முத்தப்பிள்ளை முசே புலி

(M. Pouly) துபாசி முசே லெறி கோவர்ணதோர் துபாசி எல்லப்பிள்ளை வாடி நாராயணபிள்ளை, சாவடிகணக்கப்பிள்ளை சாந்து அவன் மறுபடி கவையில்லை யென்று தள்ளுபடி பண்ணப்பட்டுது.

கூனிமேட்டு அழகப்ப முதலி உண்டி ராயப்பன் யிதுவும் கவையில்லை யென்று தள்ளப்பட்டுது போயியள் கும்மாந்தாம் துக்கியுடைய பக்குஷி கிருஷ்ணராயன் வழிச்சாரி முத்துக்கிருஷ்ணபிள்ளை வீராப்பிள்ளை தில்லையம்பலம் முத்துசெட்டி எழுத்துக்கார சிங்கன் எல்லாரி தெய்வனாயகன் துபாசி நல்லு அய்யர் மூட்டைக்காற அமராபதி இரிசப்ப செட்டி முத்துசெட்டி உப்பாத்தித் தெரு தம்பாச்சி அன்னபப்பிள்ளை மலையாழி முத்துக் குமரப்ப முதலி தம்பி ஆகபேர் வழி 19க்கு தள்ளுபடி சாவடி கணக்கு சாந்து உண்டிராயப்பன் நபர் 2 நீக்கி பேர் வழி 17 யிந்தப்படிக்கி முசே துபுவா எழுதிக் குடுத்த கடுதாசியை நயினார் கையிலே குடுத்து திங்களன்னைக்கு அழைச்சு வரச்சொல்லி திட்டம் பண்ணார்கள். யிப்போ யெழுதியிருக்கிற பதினேழு பேர்வழியும் ஒரு கடுதாசியிலே எழுதி துகையையும் எழுதி முசே லெறி கையிலே முசே துபுவா குடுத்தான். அதைப்பார்த்து யென்ன முசே யென்னுடைய துபாசியள் ரெண்டு பேர் பேரிலேயும் எழுதியிருக்குது யென்று முசே லெறி கேட்டான். ஆம் யெழுதியிருக்குதென்று சொன்னான். சொன்னவுடனே ஒசரப்பார்த்து மறுபடியும் தாழப்பார்த்து அந்தக் கடுதாசியை தாழவிட்டு எறிஞ்சு போட்டான். யென்னா யெறிஞ்சு போட்டாய் முசே யென்று முசே துபுவா கேட்டான். அதுக்கு நீர் நாளைய நண்ணைக்கி வரச்சே கொண்டு வாருமென்று சொன்னான். அந்தக் கடுதாசியை மறுபடிக்கி முசே துபுவா யெடுத்து முசே லெறி கையிலே குடுத்து உம் அண்டையிலே தானே யிருக்கட்டுமென்று சொன்னான். கடிக்கப் போகாத பாக்கானபடியினாலே அந்தக் கடுதாசியை வாங்கி கீழே வைச்சு விட்டான். அப்போ முசே லெறியுடைய முகத்தைப் பார்த்தால் ரொம்ப விசனமாய் வெகு கோபமாயிருந்தான். அவனை ஒன்றும் சொல்லக் கூடாதபடியினாலே சும்மாயிருந்தான். பின்னையும் ரெண்டு நாழிகை மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்து நயினாரை அழைச்சு கபாலன் காளத்தி செட்டியைப் போய்க் கேளும் ஆயிரம் ரூபாயிக்கி சம்மதியாயென்று சொல்லியனுப்பிவிச்சார்கள். நயினார் போயி கேட்டவிடத்திலே அவன் சொன்னது ராமலிங்க பிள்ளையுடனே பேசினது நானூறு ரூபாயி அல்லாமல் ஆயிரம் ரூபாயி பேசயில்லை. ஆனால் அன்னூறு 500 ரூபாய்க்கு நாம் சம்மதி யென்று சொல்லி அனுப்பிவிச்சான். அந்த சமாச்சாரம் வந்து நயினார் சொன்னான். அதிலே நேரஞ்செண்ணுது. மணி ஆய்விட்டது திங்களன்னைக்கி யெல்லாம் ஆகட்டுமென்று சொல்லி அவரவர் வீட்டுக்குப் போயிவிட்டார்கள்.

அந்த வேளையிலே யிங்கிலேசுக்காரருடைய வத்தலொன்று

கிட்டவந்துது. அதைப் பார்த்து நம்முட கப்பலிலே யிருந்து மூணு பீரங்கி குண்டு போட்டு சுட்டார்கள். அந்த குண்டு நாலு பாகத்துக்கு யிப்பாலே விழுந்து போச்சுது. அப்பிறம் வத்தல்க்காரன் ஓடிப்போயி விட்டான். சாயங்காலமும் சிங்கோவிலிலே யிறங்கியிருந்த நம்முடவர்கள் சேலம் போயியள் குதிரைக்காரர் மயிலாப்பூர் விசுப்பு பாதிரியும் போயி திருவீதியிலே யிறங்கியிருந்து மயிசூர் அயிதர் நாயக்கன் வருகிறவனை யெதிர்கொண்டு அழைச்சு வரப்போனார்கள். முசே லாலியும் விசுப்பு பாதிரியை வழிவிட்டு சிங்க கோவில் மட்டுக்கும் போனான்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 13; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 2; நாயத்துக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனோம். முசே லெறியும் பூரா பல்லக்கின் பேரிலே யேறிக்கொண்டு நாலு பேர் சேவுகரும் ஒரு சோபுதாரனும் ஒரு சேர்வைக்காரனுமாய் வேறே ஒண்ணுமில்லாமல் சம்பால் கோவிலுக்குப் போயி பூசை கேட்டுக் கோட்டைக்கி வந்தார். நாம் கண்டு ஆசாரம் பண்ணினோம். அவர் மெத்தை வீட்டின் பேரிலே போயிவிட்டான். நாம் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்தோம். ராமலிங்க பிள்ளையும் சோணாசலமும் முசேபுலியும் வந்து பதினோராயிரம் ராத்தல் விக்கிறகம் சோணாசலம் வாங்கியிருந்தது. அந்த விக்கிறகமெல்லாம் அவன் எடுத்துக் கொண்டு போனான். அந்த வேடிக்கைப் பார்த்துக் கொண்டு யிருந்தோம். அப்பிறம் கந்தப்ப முதலியும், அப்பு முதலியும் வந்து சிப்பாயியள் லச்சையினாலே ஒண்ணும் பொறுக்கப் போகயில்லை. அதுக்கு ராமலிங்கப்பிள்ளையைக் கண்டு பேசி யிருக்குறோம். அவனும் முசே துபுவாவுடனே சொல்லி யிருக்குறானாம் அவனும் நல்லதென்று சொல்லி யிருக்குறான். யிந்த சிப்பாயியள் சம்மதி கப்பல் வரந்தன்னிலும் குடுக்க வேண்டியிருக்குது. ஆனபடியினாலே ஒன்பது பேர்வழியிலே யிருக்குது. பின்னையும் அதிகப்பேர் வழியிலே போட்டால் சுலுவல்லவா. ஆனபடியினாலே ராமலிங்க பிள்ளையை பிடிச்சுக்கிட்டான் யென்று அப்பு முதலி சொன்னான். ராமலிங்கம் பிள்ளையும் அந்தப்படிக்கி கெட்டியாய் செய்து தாறேனென்று சொல்லி யிருக்குறானேயென்று சொன்னான். கந்தப்ப முதலியும் ராமலிங்க பிள்ளையுடனே நானும் சொல்லி யிருக்கிறேன் யென்று சொன்னான். யெனக்கும் நல்லது முசே துபுவா உடனே சொல்லி அந்தப்படிக்கி செய்து தாறேனென்று சொன்னானென்று சொன்னான். நாமும் யெப்படியாகிலும் மாற்க்கமாய் தீந்தால் நல்லது தானென்று பதில் உத்திரவு சொன்னோம்.

அப்புறம் முசே புலோ வந்து முசே லெறியைக் கண்டு பேசியிருந்து போயிவிட்டான். பின்னை யொருத்தரும் வரயில்லை. அப்பிறம் பதினொண்ணரை மணிக்கி நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

விசுப்பு நேத்து சாயங்காலம் அயிதர் நாயக்கனை யெதிர் கொண்டு அழைச்சு வரப்போனவன் சரீரம் சொஸ்தமில்லாத படியினாலே அதன் பேரிலே ராத்திரி பத்து மணிக்குத் தானே மறுபடி வந்துவிட்டான். இன்னைய தினம் சரீரம் சொஸ்தமில்லை யென்று வீட்டிலே தானே யிருக்குறான். பின்னை யொன்றும் விந்தையாயி சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. இத்தனாள் சாயங்காலம் நேத்து தண்டுக்கு போயி மறுபடி வந்துவிட்ட மயிலாப்பூர் விசுப்பு பாதிரி நொறோன்னாவை முசே லாலி தண்டுக்குப் போகச் சொன்னதின் பேரிலே அவன் பயணமாயிருந்தான். வழியனுப்பிவிக்க ராமலிங்கபிள்ளை அங்கி போடாமல் பாகை போட்டுக் கொண்டு மேலே துப்பட்டா ஒண்ணு போத்துக் கொண்டு அய்யணண் சாஸ்திரி பின்னையும் போனவிடத்திலே மகற்க்கோ என்கிற ஒரு ஒப்பிசியால் ஒருத்தன் அங்கே யிருந்தவன் ராமலிங்க பிள்ளையை ஆபாரன்சோம். "நீய் யெனக்கு ஆற்காட்டிலே ஆயிரம் ரூபாய் குடுக்குறேனென்று சொன்னாய் குடாமல் படிக்கிப் போனாய் யென்று சொன்னதுக்கு," ராமலிங்கப்பிள்ளை சொன்னது நீய் யின்னையதினம் முசே லாலியுடனே சொல்லி நீதிட்டினதையும் சொல்லி நாளைய தினம் உன்னை கசோத்திலே போடுவிக்குறேனென்று சொன்னான். ஆ. நீயா யென்னை கசோத்திலே போடுகுறேன் யென்று சொல்லுகுறவன் என்று ராமலிங்கப்பிள்ளையுட கழுத்தைப் பிடிச்சு கீழே தள்ளி காலிலே போத்துப் போட்டிருந்தான். அந்தக் காலாலே மாரின்பேரிலே யிருபது உதை நன்னாய் உதைச்சான். அந்த போத்துலே குதிரையைக் குத்துகிற யிருப்பு முள்ளுயிருந்து மாரிலே கிழிச்சு ரெத்தமாய் யெடுத்துக் கொண்டுது. அதன்பேரிலே அய்யோ அய்யோ குய்யோ முரோ கொண்ணு போடுகுறான். ஆருமில்லையா யென்று கூப்பிட்டுக் கொண்டிருக்கச்சே வீசுப்பு பாதிரியும் பின்னையும் யிருந்தவர்களெல்லாம் பார்த்துக் கொண்டு ஒண்ணும் பேசாமலிருந்தார்கள்.

மறுபடியும் ராமலிங்க பிள்ளை கீழே கிடந்தவன் யெழுந்திருந்தான். யெழுந்திருந்தவனை மறுபடி கழுத்தைப் பிடித்து செவருடனே யிடிச்சு குதிரைச் சவுக்காலே யிருபது அடியும் அடிச்சு போகச் சொல்லி யெங்கே போய்ச் சொல்ல வேணுமோ அங்கே போய்ச் சொல்லுயென்று சொன்னான். அதிலே வீசுப்பு பாதிரி ஓடிப்போவென்று சொன்னான். ராமலிங்க பிள்ளை பிறப்பட்டு வீட்டே வந்து அங்கி போட்டுக் கொண்டு ரத்தமெல்லாம் அங்கியிலே படத்தக்கதாக பல்லக்கின் பேரிலேயேறிக் கொண்டு முசே லாலியுடனே சொல்லுகிறோமென்று போனானெங்கிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. அப்புறம் வீசுப்பு பின்னையும் வெள்ளைக்காரர் குதிரையேறிக் கொண்டு தண்டுக்குப் போயி விட்டார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் பதினாயிரம் ரூபாய் வரி சம்மதிக்காக முசே திப்பளாம்

வசம் சோலையப்பன் கொண்டு போயி செலுத்தினது புதுச்சேரி விராகன் 100க்கு ரூபாய் (வரிகிழியப்பட்டு யிருக்குது). வாத்தியார் மலையப்பனுக்கு ஆனி மாசக் கடைசியிலே யெண்ணூறு (800) ரூபாய்த் தீந்ததென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. இத்தனாள் ராத்திரி முசே லாலியுடைய உத்தாரப்படிக்கி முசே தொலாரான்சுடைய மருமகன் முசே பெடுத்தலேன் தோட்டம் அரியாங்குப்பத்திலே யிருக்கிறதிலே முப்பது பேர் வெள்ளைச்சட்டைக்கார வெள்ளைக்காரர் போயி பூந்து தெருக்கதவை ஒடைச்சு உள்ளே பூந்து அதிலே விசாரிப்பாயிருந்த கட்டுக்காரன் ஒருத்தனைப் பிடிச்சு பின்கட்டு மாறையாயி கட்டிக் கொண்டு கோழிவாத்துகள் யிருந்த வீட்டிலே அதிலே கம்பு பானையிலே கலொனல் போட்டு (Colonel Pot) உடைய கையெழுத்துப் பசுப்போடுது. இங்கிலீசுக்காரருடைய கடுதாசி ஒண்ணு யிருந்தது. அதை யெடுத்துக் கொண்டு அதிலே யெழுதி யிருக்கிறது. "இங்கிலேசுக்காறரர் வந்தால் அந்த வீட்டு வழியே போகத் தேவையில்லை யென்று எழுதியிருந்தது." அந்தக் கடுதாசியையும் அந்த மனுஷனையும் முசே லாலி அண்டை கொண்டு போயி விட்டார்கள். அந்தக் கடுதாசியை முசே லாலி வாங்கிக் கொண்டு அரியாங்குப்பத்திலே யிருந்து வரச்சே முசே பெடுத்தனாம் (M. Berthelin) மனுஷனையும் கூடகொண்டு வந்து கசோத்திலே போட்டார்கள். அதன் பேரிலே முசே லாலியுடனே சீமையிலே யிருந்து வந்த வெள்ளை சட்டைக்கார பாதிரி யொருத்தன் அவன் முகாந்திரமாய் முசே பெடுத்தலேன் பேசுகிறானெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. யிந்தக்கடுதாசியினாலே யென்ன நேரம் சுமத்த வேணுமோ அந்த நேரம் சுமத்தலாம் வெள்ளைக்காரனான படியினாலே யென்னமாய்த் தீருமோ தெரியாது தமிழரானால் யின்னேரம் பாத்தியா இங்கிலேசுக்காறருடைய கையெழுத்து யிருந்தது. இவ்விடத்து சமாச்சாரமெல்லாம் யெழுதியனுப்பி விச்சபடியினாலே யிங்கிலேசுக்காரருடைய கடுதாசியிருந்தது யென்று யின்னேரம் தூக்கிப் போடுவார்கள். வெள்ளைக்காரரானபடியினாலே பாரிசிலே யிருக்குது. முசே லாலியுடனே சொல்ல வேணுமென்று முசே துபுவாவையும் அழைச்சுக் கொண்டு ராமலிங்கன் அழிசப் பாக்கத்துக்கு போனவிடத்திலே தண்டுபாளையம் பிறப்படுகிற சமையமானபடியினாலே சமயமில்லாமல் போச்சுது. யிப்பவும் முசே லாலி வரட்டும் யெல்லாம் சொல்லுவோம். வெள்ளைக்காரனும் தண்டுக்குப் போன சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. அதனாலே ராமலிங்கம் திரும்பி வந்துவிட்டான். அந்தப்படிக்கி ராமலிங்கன் வரச்சே தெத்துக் கதவு சாத்திப் போட்டார்கள். வெளியே படுத்திருந்து காலமே வீட்டுக்கு வந்து விட்டதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 14; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 3; திங்கள்கிழமை***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கிப் போயி பனிரெண்டு

மணிக்கு மட்டுக்கும் யிருந்தோம். பதினோரு மணிக்கி முசே மொர்சேன் மாத்திரம் வந்து முசே லெறியண்டை பனிரெண்டு மணி மட்டுக்கும் பேசிக்கொண்டிருந்து போயிவிட்டான். பின்னையாரும் வெள்ளைக்காரர் ஒருத்தரும் வரயில்லை பனிரெண்டு மணிக்கி நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம். காலத்தாலே சீனாலத்தூர் (Semhor la Tour) நம்முடைய வீட்டுக்கு வந்து பேசிக் கொண்டிருந்து சிலவுக்கில்லை யெம்மாத்திரமாகிலும் பணம் குடுக்க வேணுமென்று கேட்டான் ரெண்டொருவிடத்திலே பணம் கேட்டிருக்குறோம் வரட்டுமென்று சொன்னோம். அதன்பேரிலே பதக்கம் ஒண்ணு நம்முட கையிலே குடுத்து யிது பாப்பய்யப்பிள்ளை குடுத்து யிதை விலை மதிச்சு அனுப்பிவிக்கச் சொன்னான். இதல்லாமல் முன்னே முசே லாலி கொலான் தோராய் யிருக்கிறவனையும் குமிசேல்க்காரரையும் நம்முட வீட்டு வாசற்படியிலே கால் வைக்கத் தேவையில்லை. உங்களைத் தொட்டு யெனக்கொருகவையும் ஆகத் தேவையில்லை யென்னைத் தொட்டு உங்களுக்கு ஒரு கவையும் ஆகத்தேவையில்லை யென்று சொல்லி யிருந்தானே. அதுக்கு முசே லெறி குமிசேலியோர் யெல்லாரும் கூடி முசே லாலிக்கு சுறுக்காய்த் தானே ஒரு கடுதாசி எழுதியனுப்பிவிச்சுப் போட்டார்கள். அந்தக் கடுதாசி மத்தலப்பு யின்னொரு வேளை வந்தப்போ சொல்லுகுறேனென்று சொன்னான். தலங்கம்பாடிக்கி சீமைக்கப்பல் வந்ததிலே சேதி யென்னயென்றால் முசே லாலியையும் முசே லெறியையும் வரச்சொல்லியும் சீமையிலே யிருந்து ராசாவுடய நாலுகப்பலும் ஆயிரத்தெண்ணூறு (1800) பேர் சொலுதாதுகளும் சீமையை விட்டுப் பிறப்பட்டார்களென்று சேதியும் யெழுதி வந்தது யென்று முசே லத்தூரு வந்து சொன்னான்.

இத்தனாள் மோரிசு வந்த சேதி தெரியாது என்றும் சொன்னான். பின்னையும் கோவர்ணதோரும் அஞ்சு குமிசேல்க்காறரும் வந்து கொண்டிருக்குறார்களென்றும் ஒன்றும் கேழ்க்கப்படயில்லை யென்று சொன்னான். முசே தொலாராம் மருமகன் முசே பெடுத்தலேனைக் கொண்டு வந்து கோட்டை மேலண்டை வாசற்படி மேலே யிருக்கிற மெத்தை வீட்டின் பேரிலே காவல் வைச்சு கசோத்திலே போட்டிருந்த கட்டுக்காறனை விட்டு விட்டார்கள். இத்தனாள் சாயங்காலம் பார்த்தவர்களுக்கு எகத்தாளியா யிருக்கப் போகுதென்கிற வெழ்க்கத்தினாலே குதிரை வண்டியின் பேரிலே ராமலிங்க பிள்ளையும் சோணாசலமும் சுவாரி போனார்கள். அடிச்சதுக்கு கேழ்வியில்லாத படியினாலே வெழ்க்கத்தினாலே மானிக்கை (Manik) முசே துபுவாவண்டைக்கு அனுப்பி நீர் வந்து விசாரிக்கிறாப்போலே அவனும் நல்லது வருகுறேன் யென்று சொல்லியனுப்பிவிச்சான். அதன் பேரிலே

ராமலிங்கன் வீட்டிலே சீரொப்பா மத்தது முஸ்தீப்பு பண்ணிவிச்சுக் கொண்டிருக்குறானென்று கேழ்க்கப்பட்டுது. ஆதி வீராசெட்டி குமாரன் அழிய மணவாள செட்டியுட தங்கள் தாயார் சீயாழி அவ்விடத்திலே போயிருக்கிற விடத்திலே சரீரம் சொஸ்தமில்லாமல் யிருக்குது யென்கிற சமாச்சாரம் வந்ததின் பேரிலே முசே துப்பிளாமை (M. Duplant) அழைச்சுக் கொண்டு முசே லெறி கோவர்ணதோரண்டைக்கிப் போய் யெனக்கு போயி வரி ரெண்டாயிரம் ரூபாய் செலுத்திப் போட்டேன். அதுக்கு ரெசீதும் யென் கையிலே யிருக்குது எங்கள் தாயார் வெளியே போனவிடத்திலே சரீரம் சொஸ்தமில்லை யென்று சேதி வந்தது நான் போக வேணும் யென்று கேட்டதின் பேரிலே நல்லது யென்றும் போ யென்றும் உத்தரவு குடுத்தார். அந்த சமாச்சாரம் நம்மண்டைக்கி வந்து சொல்லி நம்முட கையிலேயும் அனுப்பிவிச்சுக் கொண்டு ஊருக்குப் போனான்.

வீசுப்பு பாதிரியும் உசார்க்குதிரைக்காரர் அலுமாஞ்ஞு (Gemens) ஒம்மோ குதிரைக்காரரும் யேகத்துக்கு (300–400) முன்னூறு நானூறு குதிரைக்காரரும் சொலுதாது போயியளும் பயணமாய்ப் போனார்கள். போனசொலுதாதுகள் அன்னூறு பேர்களும் சிப்பாயிகள் ஆயிரத்து அன்னூறு பேரும் திருவதி அந்த வட்டங்களிலே யிருக்கவும் குதிரைக்காறரும் வீசுப்பும் தியாக துற்க்கத்துக்குப் போய் மயிசூர் பவுன்சை அழைச்சு வரப்போனார்கள். எதுனாலே போனார்களென்றால் தியாக துற்கத்திலே யிருக்கிற யிமாம் சாயபு மகன் அவ்விடத்திலே யிருக்கிற கும்மாந்தாமுடனே யிந்த அயிதர் நாயக்கனை நம்பப்போமா எசமான் துரோகம் பண்ணினவன் இவன் முன்னே மைசூர் ராசா வண்டை ஒரு காஸ்த்தாரிக்கி சமத்துக்காறனாயி யிருந்தவன் வஞ்சனைப் பண்ணி நந்திராசாவைப் பிடிச்சு துற்க்கத்திலே போட்டு ராசாவுடனே கூடிக்கொண்டு யில்லாத காரியமெல்லாம் நடத்திக் கொண்டு யிருந்தான். மறுபடி ராசாவையும் பிடிச்சு ஒரு கிடங்கிலே போட்டு அடைச்சுப் போட்டு தானே தானே சகலமும் நடத்திக் கொண்டிருந்தான். அதின் பேரிலே பரிக்கி வெங்கட்டராயன் யென்கிறவன் யிவனை அடிச்சுத் துரத்தி அடிச்சதின் பேரிலே யிவன் ஒரு சமாதானத்துக்கு வந்தான்.

அப்படிப்பட்ட கனத்ததுறோகி யிவனை நம்பி துற்க்கம் யிவனுக்கு விடப்போகாதென்றும் இங்கிலேசுக்காறருக்கும் உளக்கையாயிருக்குறான் யென்றும் அந்த கும்மாந்தாமுடனே யிப்படி மித்திர பேதமாய் சொல்லி முசே லாலிக்கு கொம்மாந்தாமைக் கொண்டு ஒரு கடுதாசி யிப்படி யெல்லாம் எழுதியனுப்பிவிச்சான். மைசூராருக்குச் சொன்னது யிந்த பிரான்சுக்காரரை நம்பி நீங்கள் பட்டணத்தையும், பணத்தையும் சிலவழிச்சுக் கொண்டு வந்தீர்கள். நாலாயிரம் மாட்டு நிமித்தியம் உடன்படிக்கை பண்ணினது உங்களுக்கு தெரியுமே. முன்னே நந்திராசா

வெகு பணத்தைக் கொண்டு மூணு கோடி ரூபாய் மட்டுக்கும் வந்து சிலவழிச்சு கடசியிலே ஒண்ணுமில்லாமல்ப் போயிவிட்டான். முராரிராயன் குதிரைக்காரர்களை அழைச்சனுப்பிவிச்சு பனிரெண்டு பதிமூணு லக்ஷம் ரூபாய் குடுக்குறோமென்று ரூபாயை எடுத்துக் கொண்டு போனார்கள். அவர்கள் வாயிலே விரலை வைச்சுக் கொண்டு போயிவிட்டார்கள். மாபூசுக்கான் மனுஷர்கள் பின்னையும் அவர்களுக்கு நடப்பிச்சத்திலே அவர்கள் சொல்லாமல்ப் போயிவிட்டார்கள். சூல் வக்கீர் சங்கு (Zulfiqar Jang) யென்கிறவனையும் அவன் பவுன்சும் ஆயிரம் குதிரையும் ஆயிரத்தன்னூறு பேர் மொகுலர் துப்பாக்கிக் காரர்களும் காபிரியர்களும் முசே புசி சிறிது உடம்படிக்கை சொல்லி அழைச்சு வந்தான். அதிலே ஒண்ணாகிலும் நடப்பியாமல்ப் போனார்கள். அவனும் கடசியிலே ஒரு காரியமும் யில்லாமல் போயிவிட்டான். இந்தப்படிக்கி யெத்தனை பேரை யிப்படி மோசம் பண்ணார்கள். பிரான்சுக்காரரை நம்பிக் கொள்ளப் போகாது யென்று அவர்களுக்கு சொன்னதின் பேரிலே அவர்களும் மலைச்சுக் கொண்டு வராமலிருந்தார்கள். யெதுனாலே இமாம் சாயு (Imam Sahib) மகன் வண்ணானுக்கும் போனானெங்கிறதும் வண்ணாத்திக்கி வந்தானெங்கிற மித்திரபேதம் பண்ணதென்றால் தியாக துற்க்கமும் அதைச் சேர்ந்த சீமையும் அவனுக்கு சாகீரான படியினாலே அதை விடப் போகாதென்று யிப்படி யெல்லாம் நடப்பிச்சான். யிந்த சமாச்சாரம் யெல்லாம் மைசூர் வக்கில் வெங்கிட்ட நாராணப்பய்யனுக்கும் வெங்காசி பண்டிதனுக்கும் அவர்கள் மனுஷர் எழுதி அனுப்பிவிச்சார்கள்.

யிந்தக் கடுதாசியும் முசே லாலிக்கு வந்த கடுதாசியும் ரெண்டும் பார்க்குமிடத்திலே யிவனுக்கு அவனை நம்பிக் கொள்ளப் போகாதென்றும் அவனுக்கு யிவனை நம்பப் போகாதென்றும் யித்தனை மித்திர பேதமெல்லாம் யிமாம் சாயபு மகனல்லவாப் பண்ணிவிச்சான். தியாக துற்கத்திலே யிருக்கிற கொம்மாந்தானும் யிதுவரைக்கும் முன்னே மைசூராருக்கு துற்க்கம் விட்டுவிடச்சொல்லி முசே லாலி எழுதி அனுப்பிவிச்சதுக்கு விடாதபடியினாலே கொம்மாந்தானுக்கு துற்க்கம் விட்டுவிடச் சொல்லி தாக்கீதும் மைசூர் பவுன்சை சமாதானம் பண்ணி அழைச்சு வரச் சொல்லியும் யிமாம் சாயபு மகனைப் பிடிச்சு வந்து யிவ்விடத்திலே கசோத்திலே போடவும் யிதுகள் நிமித்தியம் மயிலாப்பூர் விசுப்பு பாதிரியும், உசார்க்குதிரைக் காறரும் ஒம்மு குதிரைக்காரரும் அனுப்பிவிச்சது மைசூர் பவுன்சு யிங்கிலேசுக்காரருக்குப் பயந்து வராமலிருக்கயில்லை யிந்த மித்திர பேதத்தினாலே வராமலிருந்தார்கள். யிந்த தடவை நேசமாய் வருவார்கள் யென்று கோட்டையிலே முசே கில்லியார் நம்முடனே சொன்னார்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 15; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 4; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலமே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே அங்கே தாது பிராது ஒண்ணுமில்லை. வரிக்காரர் பத்துப் பதினஞ்சு பேர் வந்திருந்தார்கள். பதினொண்ணே முக்கால் மணிக்கி நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வரச்சே முசே கொடுத்தேன் சாவடி ஞாயத்துக்குப் போயி வந்து கோட்டைக்கி முசே லெறியண்டைக்கிப் போயி கபுறு சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போயிவிட்டான். பின்னையொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. பணம் ஒண்ணுக்கு ஒண்ணே அரைக்கால் படி அரிசி விக்கச் சொல்லி தமுக்குப் போட்டார்கள்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 16; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 5; புதன்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போயிருந்தோம். வரிக்காறரையும் அழைச்சு வைச்சுக் கொண்டு யிருந்தோம். தாது பிராது ஒண்ணுமில்லை. அப்பிறம் பதினொண்ணே கால் மணிக்கி முசே துபுவா வந்து முசே லெறியைக் கண்டு பேசிப்போயி விட்டான். பதினொண்ணரை மணிக்கி நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம். பிறகு முசே லெறி நயினாரை அழைச்சு நாலுமணிக்கி வரிக்காரரை அழைக்கச் சொல்லி சாப்பித்தா எழுதி குடுத்திருக்குதே அந்தப்படிக்கு செனங்களை அழைச்சு வரச்சொல்லி ரங்கப்பிள்ளையும் வரச் சொல்லியனுப்பி வியென்று சொன்னதின் பேரிலே ஒரு மணிக்கி நயினார் நமக்கு சொல்லியனுப்பிவிச்சான். அஞ்சு மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம் வரிக்காறரும் வந்திருந்தார்கள். ஆறரை மணிக்கி முசே கொடுத்தேனும் முசே மொற்சேனும் வந்தார்கள். முசே துபுவா வரயில்லை. யேழு மணிமட்டுக்கும் நாம் யிருந்து வீட்டுக்கு வந்துவிட்டோம். நாளை யென்ன நடக்குமோ தெரியாது. இங்கிலேசுக்காரர் கூடலூரிலே யிருந்தவர்கள் நேத்தியதினம் பெண்ணையாத்தங்கரையிலே வந்திருந்தவர்களுக்கும், நம்முடவர்களுக்கும், பாகூரிலே யிறங்கி யிருந்தவர்களுக்கும் யின்னையதினம் சண்டையாயி நம்முடவர்களிலே சிறிது பேர் சிப்பாயிகள் நாலத்து ரெண்டு பேர் சொலுதாதுகளுக்கும் காயம்பட்டுது யென்றும் யிங்கிலேசுக்காறருக்குள்ளேயும் சிறிது பேருக்கு காயமாச்சுதென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

முசே பெடுத்தலெனைக் காவல் வைச்சிருந்தவனை நேத்திய தினம் லக்ஷம் ரூபாய் குடுத்தால் விட்டு விடுகுறோமென்றும் முசே புலியும் முசே துபுவாவும் போயி கண்டு பேசினார்கள். யின்னையதினம்

மயோர் பனிரெண்டு பேர் சொலுதாதுகளை துப்பாக்கியிலே பயினேத்துப் போட்டிருக்கிற படிக்கி காவல் வச்சு அதிலே மெத்தை ஒண்ணும் போட்டுக் கொள்ளப் போகாதென்று எடுத்துப் போடச்சொல்லி ஒரு ஈச்சம் பாயி ஒண்ணு குடுத்து படுத்துக் கொள்ளச் சொல்லி ஒரு காம்பிராவிலே போட்டுக் கதவைச் சாத்தி சாவியை முசேலெறி அண்டை கொண்டு போயி குடுத்து விடுகுறது பீ முத்திரம் யெல்லாம் அந்த கிடங்குக்குள்ளே தானே சாப்பாடு மாத்திரம் குடுக்குறது சாப்பாடு வருகிற வேளைக்கி கதவை திறந்து சாப்பாட்டை சோதிச்சு விடுகுறது. சாப்பிட்டு ஆனவுடனே மறுபடி கதவைச் சாத்தி சாவியை முசே லெறி கையிலே கொண்டு போயி குடுத்து விடுகுறதென்று சேதி கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 17; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 6; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே யிங்கிலீசுக்காரர் வழுதாவூரிலே யிருந்த குதிரைக்காரர் வில்லியநெல்லூர் பிறம்பை மேடு யிந்தவிடங்களிலே வந்தார்கள். அதின்பேரிலே வில்லியநெல்லூர் கொத்தளத்தின் பேரிலே நாலஞ்சு பீரங்கி சுட்டான். பிறம்பை மேடுலே நம்முடவர்கள் கொஞ்சநஞ்சமிருந்தவர்கள் பிறப்பட்டு உள்ளே வந்து விட்டார்கள். ஒழுகரை யெல்லப்பிள்ளை சாவடியிலே யிருந்தவர்கள் பத்துப் பதினஞ்சு பீறங்கி மட்டுக்கும் சுட்டார்கள். பத்துமணி மட்டுக்கும் யிங்கிலேசுக்காரர் காட்டுமேடு யெல்லாமிருந்தவர்கள் பிறப்பட்டு போயிவிட்டார்கள். காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம் முசே துபுவா வந்தான். யின்னையதினம் குமிசேலானபடியினாலே பிறப்பட்டு போயிவிட்டான். பத்துமணிக்கி குமிசேல்க் கூடினார்கள். சாயங்காலம் யென்ன நடக்குமோ தெரியாது. பதினோரு மணிக்கி நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி மைசூரார் பவுன்சு வில்லியநெல்லூரிலே வந்திறங்கியிருந்து யிவர்களுக்கும் அவர்களுக்கும் சமாதானமில்லாமல் தியாகதூற்க்கத்துக்குப் பிறப்பட்டுப் போகச்சே திருச்சிராப்பள்ளியிலிருந்து மமுதல்லிக்கானுக்கு அறுபதினாயிரம் விராகனையும் பதினாயிரம் இருபதினாயிரம் பசுமாடும் சிறிது ரஸ்த்தும் வந்ததை மைசூரார் அந்த அறுபதினாயிரம் விராகனும் பின்னையும் அந்த விடங்களிலே யிருந்த மாடுகளும் அன்பது அறுபதினாயிரம் மாடும் ஓட்டிக்கொண்டும் தியாக துற்க்கம் சேர்ந்தார்களென்று அவ்விடத்திலே யிருந்து வந்த மனுஷர் உத்தசேதியாய் சொன்னார்கள். மைசூரார் வந்து போயிவிட்டவர்களுக்கு அவர்கள் அதிருஷ்ட்டம் அறபதினாயிரம் விராகனும் அன்பதினாயிரம் அறுபதினாயிரம் மாடும் அகப்பட்டுதென்று செனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.

இத்தனாள் செனங்கள் சொல்லிக் கொண்ட சேதி மைசூரார் அயிதர் நாயக்கனுக்கு தியாக துற்க்கம் கைவசமாய் அவன் பவுன்கம் ரெண்டு நாழிகையிலே யிப்பாலே வந்திறங்கினதுக்கு யிவ்விடத்துக்கு சமாச்சாரம் வந்ததாய்க் கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் சூரிய உதயம் முதல்க் கொண்டு ராத்திரி முப்பது நாழிகை வரைக்கும் நம்முடவர்கள் பிறம்பை மேட்டும் ஒழுகரை தோட்டம் அவ்விடங்களிலே யிருந்தவர்களெல்லாம் ரெட்டிப்பாளையம் முதலியார்க்கோவில் எல்லைப்பிள்ளைச்சாவடி யிவ்விடங்களிலே வந்திருந்துக் கொண்டு கோவிலண்டை பீரங்கி சுட்டுக்கொண்டே யிருந்தார்கள். யிங்கிலேசுக்காரர் வழுதாவூரிலே யிருந்து கொண்டிருந்தவர்கள் லக்ஷ்மணனாயக்கன் மண்டபம் மேட்டின் பேரிலே வந்து பாளையம் யிறங்கி முசே பெடுத்தல்மீ தோட்டம் ஒழுகரை கும்பினி தோட்டம் அந்த மட்டுக்கும் அவர்களும் பீரங்கி கொண்டு வந்து நெருங்கிக் கொண்டு யிறங்கி யிருந்தார்கள். வில்லியநெல்லூர் கோவிலிலேயும் அத்துப்பிடிச்சுக் கொண்டு சிறிது பேர் யிங்கிலீசுக்காரர் போயி யிறங்கி யிருந்தார்கள். வில்லியநெல்லூர் கொத்தளத்திலே நம்முடவர்கள் கிட்டவராமல் படிக்கி கொத்தளத்தின் பேரிலே யிருந்து பீறங்கி போட்டுக் கொண்டே யிருந்தார்கள். யித்தனாள் எல்லப்பிள்ளை துபாசி தம்பி முத்தையன் செத்துப்போனவனை வெளியே கொண்டு போயி தகனம் பண்ணுகுறதுக்கில்லாமல் இஞ்சினீர் குளத்திலே தகனம் பண்ணினார்கள். பகலைக்கு மேலாய் தெத்து வாசற்படியிலே யெல்லாம் பட்டணத்துக்குள்ளே யிருந்து ஒருத்தரையும் வெளியே விடாமல் உத்தரவிட்டார்கள். வெளியே யிருந்து வருகிற பேரை மாத்திரம் உள்ளே விட்டார்கள். யிந்தப்படியாக கட்டு பிறந்து துயித்தனாள் குமிசேல்க்காரர்கள் அபித்தாமாயிருக்கிற பேர்களெல்லாம் கொத்தளங்கள் சுத்துக்கோட்டை உள்கோட்டை யெல்லாம் காத்துக்கொண்டிருந்தார்கள். யின்னையதினம் பட்டணம் வெகு காபிராவாக யிருந்தது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 18; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 7; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் ஊரிலே போயிண்டா பிடிக்கிறபடியினாலே நாம் கோட்டைக்கிப் போகயில்லை. மத்தியானம் கேழ்க்கப்பட்ட சேதி கோட்டையிலே முசே லெறி மாத்திரம் யிருந்தான். பின்னை யொருத்தரும் வெள்ளைக்காரர் வரயில்லை. நயினார் மாத்திரம் வந்து போயி விட்டானென்று சொன்னார்கள். நேத்திய தினம் முசே லாலி முசே கொடுத்தேனை அழைச்சு செட்டியள் வியாச்சியம் அவர்கள் உறம்பரையிலே தீத்துக் கொள்ளுகுற ஞாயத்தை நீய் காவலிலே வைக்கவும் அடிக்கவும் என்ன ஞாயம் யிருக்குதென்றும் கோபிச்சுக்

கொண்டு செட்டியை விட்டுவிடச் சொல்லி சொன்னதாகவும் அதன் பேரிலே நாளை ஞாயத்துக்கு சாவடிக்குப் போறேன். அப்போ விட்டு விடுகுறேனென்று மன்னாப்பாய் சொல்லிக் கொண்டானென்று சொன்னார்கள். ஒரு சார்சந்து (sergeant) ஒருத்தன் என்னமோ நேரம் பண்ணினவனை மேலண்டை வாசற்படியிலே யிருட்டுக் கசோத்திலே போட்டார்கள். அவன் நிமித்தியம் தூக்குமரம் முஸ்தீப்பு பண்ணினார்கள் யென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. யித்தனாளும் வெளியே ஒருத்தரையும் போகவொட்டாமல் தெத்து வாசற்படியிலே கட்டாயிருந்தது. யேழு மணிக்கு முசே லாலி வெளியே யிருந்து உள்ளே வரச்சே செனங்களெல்லாம் வாசற்படியிலே யிருந்து ஒருத்தரையும் விடயில்லை யென்று கூப்பிட்டார்கள். அதன்பேரிலே போற பேர் போகட்டும் வாறபேர் வரட்டும் யென்று சொன்னார். அதன்பிறகு செனங்கள் போக்கு வரத்தாய் யிருக்குது. வெடிஞ்சு சாமத்துக்கு மட்டுக்கும் பீரங்கி சத்தம் கேட்டுக் கொண்டே யிருந்தது. இங்கிலீசுக்காறருடைய குதிரைசத்து மறைவாயிருக்கிற படியினாலே பீரங்கி சத்தம் கேழ்க்கயில்லை யென்று தோணப்பட்டுது வேறே விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

இன்னைய தினம் இங்கிலீசுக்காறருடைய குதிரைக்காறர் கிளிஞ்சுகுப்பத்துக்கு மட்டுக்கும் வடவண்டை குண்டுசாலை கடற்கரையோரமட்டுக்கும் ஒட்டமும் பாட்டமும் செய்து கொண்டிருந்தார்கள். வில்லியநெல்லூர் கோவிலின் பேரிலேயும் இங்கிலேசுக்காரர் போம்பு வைச்சு வில்லியநெல்லூர் கோட்டையின் பேரிலேயும் சுடுகுறார்கள். சிறிது கோட்டையிலே விழுகிறது. சிறிது வெளியிலேயும் விழுகுறது. கோட்டையிலே விழுகுறதும் உள்ளே யிருக்கிற கிணத்திலே விழுகுதென்கிறதாய்ச் சேதி சொன்னார்கள். கோட்டையிலே மருந்து குண்டு யிருக்குது. சாப்பாடுக்கு ரஸ்துயில்லை யென்கிறதாய் சொன்னார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 19; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 8; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போகயில்லை. காலத்தாலே சென்றால் தம்பூறு அடிச்சு குமிசேல்க்காரர் கணக்கர் யெல்லாரையும் வரச்சொன்னதின் பேரிலே குமிசேல்க்காரர் கணக்கர் சகலமானபேரும் கோட்டையிலே வந்து நிறைஞ்சிருக்குறார்கள். பத்துமணிக்கி முசே லாலியும் ஒப்பிசியால்மாரும் யெல்லாரும் ஆக குதிரையேறிக் கொண்டு சண்டைக்கிப் போனார்கள். இங்கிலேசுக்காறரும் அரியாங்குப்பத்தின் பேரிலே சண்டை குடுக்குறார்கள். வில்லியனூரிலேயும் சண்டை குடுக்குறார்கள். ஒழுகரை யிந்த வட்டங்களிலேயும் சண்டை குடுக்குறார்கள். யிப்படி நாலு மூலையிலேயும்

சண்டை குடுக்குறார்கள். யின்னைய தினமும் வில்லியனூர் கோட்டையிலே சாப்பிடுகிற ரஸ்துயில்லை யென்று சொல்லியனுப்பி விச்சதின் பேரிலே யிவ்விடத்திலே யிருந்து ரஸ்து அரியாங்குப்பம் கோட்டைக்கி அனுப்பி யிருக்குறார்கள். அதுபோய் வில்லியனூர் கோட்டைக்கிப் போய்ச்சேர வொட்டாமல் அரியாங்குப்பத்திலே தானே யிருக்குது. இங்கிலேசுக்காரர் கோட்டையை சுத்திக் கொண்டிருக்குறார்கள். அதனால் போகக்கூடாமலிருக்குது. முந்தானாள் மைசூராருடைய குதிரைக்காரர் சின்னமனாயக்கன்பாளையம் அவ்விடங்களிலே கொள்ளை வல்லடி அடிச்சு ரொம்ப ரூட்டி பண்ணிக்கொண்டு இன்னையதினம் வில்லியனூர் ஆத்துக்கு அந்தணன் டயாயி வந்துயிறங்கினார்கள் யென்று சொன்னார்கள். சென்னமனாயக்கன் பாளையத்திலே கொள்ளை வல்லடி குடுத்தவர்கள் வந்து சொன்னபடியினாலே நிசமாயிருக்குமேயல்லாமல் அபத்தமாயில்லை.

இத்தனாள் பதினாயிரம் ரூபாய் வரிசம்மதிக்காக முசே திப்பளாம் வசம் தண்டவந்ததிலே செலுத்திப் போட்டு அதுக்கு ரெசீது குடுத்ததாய் கேழ்க்கப்பட்டுது. முசே திப்பளாம் வசம் செலுத்தின ரூபா யின்னம் செலுத்த வேண்டியது போயி யண்டரைப் பிடிக்கிற படியினாலேயும், குதிரை யில்லாதபடியினாலேயும் வெளியே சுவாரி போகயில்லை. இத்தனாள் காலத்தாலே வில்லியநல்லூர் கோவிலை அத்துப்பிடிச்சுக் கொண்டு வில்லியநெல்லூர் கோட்டையின் பேரிலே நம்முடவர்கள் இருந்தவர்களுடன் இங்கிலீசுக்காரர் சண்டை குடுத்து நம்முடவர்களும் நன்னாய் சண்டை குடுத்து அதன்பேரிலே அவர்களும் யெதித்துக் சண்டை பண்ணினார்கள். நம்முடவர்கள் பின்னுக்கு யிடையிராப் போலேயிடைஞ்சு ஒதியம்பட்டு அரியாங்குப்பம் ஆத்தோரத்தை அண்டை வந்து சேர்ந்தார்கள். நம்முடவர்களில் சிறிதுபேரும் ரெண்டு பீறங்கியும் வாசுதேவ பண்டிதன் சாவடியிலே யிருந்தவர்கள் பீரங்கியினாலே அடிச்சார்கள். நம்முடவர்களும் யெதித்து துப்பாக்கியினாலே சுட்டார்கள். அதன் பேரிலே இங்கிலேசுக்காறருக்கு நாற்பது அன்பது பேர் மட்டுக்கும் காயமும் சேதமும் ஆச்சுது. அந்த மட்டுக்கும் இங்கிலீசுக்காறர்கள் பின்னுக்கு வாங்கி வில்லியநல்லூர் கோவிலண்டையிலேயும், பிரம்பை மேட்டின் பேரிலேயும் போயிக் கொண்டு யிருக்குறார்கள். சிறிது பேரும் பிறப்பட்டு கருக்குடிகுப்பம் வழியிலே குண்டு சாலை வழியாய் உள்ளே நுழைந்து வண்ணாந்துரையண்டையிலே யிருக்கிற சடலையண்டை வந்து பிடவைகளை பிடிங்கிக் கொண்டு போனார்கள். பின்னையும் அவ்விடங்களிலே மேய்ந்து கொண்டிருந்த மாட்டுகளிலே நாலுமாடும் ஓட்டிக் கொண்டு ரெண்டு பேரை செனங்களையும் காயப்படுத்திப் போட்டு மறுபடியும் காட்டுமேட்டுக்கப் போயி விட்டார்கள். அதன்பேரிலே முத்தாலுப்பேட்டை வெளிகளிலே யிருந்த செனங்களெல்லாம் உள்ளே

வந்துவிட்டார்கள். சுத்துக்கோட்டை தெத்துவாசற்படி கதவுகளெல்லாம் சாத்திப் போட்டு வில்லியநல்லூர் வாசற்படிக் கதவு மாத்திரம் திறந்து செனங்கள் போக்கு வரத்து யிருக்குறது.

அயிதர் நாயக்கன் பவுன்சு பட்டணத்துக்கு கட்டாயிருக்கிற வேளையிலே வந்தபடியினாலேயும் அவன் வரச்சே திருவதியண்டையிலே இங்கிலீசுக்காரர் யிறங்கியிருந்தவர்களுடனே சண்டை பண்ணி நூறுபேர் வெள்ளைக்காரரையும் பிடிச்சுக் கொண்டு யிறநூறு முன்னூறு பேர் மட்டுக்கும் சாவும் காயமும் படுத்தி ரெண்டு சின்ன ரேக்கலா பீரங்கியும் பிடிச்சுக் கொண்டு நானூறு அன்னூறு துப்பாக்கியும் பிடிங்கிக் கொண்டு அவ்விடத்திலே யிருந்தவர்களை முறியடிச்சு வந்தபடியினாலேயும் யிந்த சந்தோஷத்தினாலே சாயங்காலம் கோட்டையிலே அன்பது பீரங்கி போட்டார்கள் வந்தவர்கள். அரியாங்குப்பம் கோட்டையண்டை வந்து யிறங்கி யிருக்குறார்கள். யிதிலே ஆயிரம் குதிரை மட்டுக்கும் திருவெண்ணை நல்லூர் வழியாய் பிறப்பட்டு யிங்கிலீசுக்காரருடைய ட்டணா எங்கே யிருக்குதோ அதுகளையெல்லாம் அடச்சுப்போட்டு சிறிதுமாடுகளும் ஓட்டிக்கொண்டு அப்படி வருகுறார்களென்று சேதி சொன்னார்கள்.

இப்போ அரியாங்குப்பம் அண்டையிலே வந்து யிறங்கினது ஆயிரத்தன்னூறு குதிரையென்று சேதி கேழ்க்கப்பட்டுது. வில்லியநல்லூர் கோட்டையின்பேரிலேயும் மோர்சா போட்டு குண்டுகள் சாயங்காலம் மட்டுக்கும் போம்பு போட்டுக் கொண்டு யிருக்குறான். இங்கிலீசுக்காரன் மைசூராருடைய குதிரை வந்தபடியினாலே ராத்திரிக்கி இங்கிலேசுக்காரர் வழுதாவூரை வந்து வாங்கிப் போவார்களென்று தோணுது. நேத்தியதினம் யிங்கிலேசுக்காரர் யெந்தெந்த யிடங்களிலே யிருந்து சண்டை பண்ணினார்களோ அந்தந்த யிடங்களிலே தானே யிருக்குறார்கள் வாங்கி அப்பாலே போகயில்லை.

முன் மீனக்கூறு வந்தாப்போலே புதன் நீச்சத்துவ மானபடியினாலே பட்டணத்துக்கு பலயீனத்தை குடுத்துப் போட்டுப் போயிவிட்டார்கள். கன்னிக்கூறு வந்தாப்போலே புதனுக்கு கன்னியிலே உச்சத்துவமான படியினாலே பட்டணத்துக்கு ஒரு சுபம் குடுத்தது. யிங்கிலீசுக்காரருக்கும் அபசெயமாச்சுது. மைசூரார் வந்தார்கள். யினிமேல் கூறுக்கு கூறுக்கும் பலனையும் அறியவேண்டியது. நேத்திய தினம் மைசூரார் பவுன்சு வரச்சே திருவதி யண்டையிலே இங்கிலீசுக்காரர் பவுன்சும் யிறங்கி யிருந்தவர்களுக்கும் சண்டையாயி இங்கிலீசுக்காரருக்குள்ளே நூறு யிறநூறு பேர் மட்டுக்கும் சாவு யென்றும் நூறு யிறநூறு பேர் மட்டுக்கும் காயமென்றும் அன்பது பேர் மட்டுக்கும் கைப்பிடியாய்

அகப்பட்டார்களென்றும் அதின்பேரிலே அவர்கள் முறிஞ்சு சிதறி திருவதிக் கோட்டையிலே சிறிதுபேர் யிறுநூறு முன்னூறு பேர் மட்டுக்கும் பூந்து கொண்டார்களென்றும் மைசூரார் பவுன்சுலேயும் நூறுபேர் மட்டுக்கும் காயமும் சாவுயென்றும் அதன் பேரிலே மைசூராருடைய பவுன்சு பிறப்பட்டு அரியாங்குப்பம் வந்து சேர்ந்ததென்று சேதி கேழ்க்கப்பட்டது.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 20; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 9; ஞாயிற்றுக்கிழமை***

இத்தனாளும் போயிண்டா பிடிக்கிறபடியினாலே நாம் வெளியே போகயில்லை. செனரால் தம்பூறு அடிச்சுக் கோட்டையிலே யெல்லாம் சேருகுறார்கள். அந்தக் காரியத்திலே யிருக்கிறார்கள். யிவ்விடத்திலே யிருக்கிறவர்கள் வில்லியநல்லூர் கோட்டையின் பேரிலே இங்கிலீசுக்காரர் யிறங்கி சண்டை பண்ணினவர்கள் இன்னையதினம் காலமே பத்து மணிக்கு கோட்டை பிடிச்சக் கொண்டு இங்கிலீசுக் கொடி போட்டுக் கொண்டார்களென்று அவர்கள் தண்டிலே யிருபத்தோரு பீரங்கியும் போட்டார்கள் யென்றும் சேதி சொன்னார்கள். மைசூர் அயிதர் நாயக்கன் பவுன்சும் குதிரையும் வந்து சேர்ந்தது யென்று யேகத்துக்கு அயிதர் நாயக்கன் பவுன்சு மூவ்வாயிரம் குதிரையும் அய்யாயிரம் காலாள்ப்படையும் முன்னூறு நானூறு பேர் சட்டைக்காரர் மிஸ்த்தீசுக்காறரும் வந்தார்கள் யென்று சொல்லிக் கொண்டார்கள். இதுகளெல்லாம் யினிமேல் விஸ்தாரமாய் தெரிஞ்சு எழுதவேண்டியது முசே லெறி குமிசேல்க்காரர் வெள்ளைக்காரர் முகத்திலே கத்தியினாலே வெட்டினாலும் துளி ரெத்தம் பிறப்படாது யிதுவரைக்கும் சத்து அவரவருக்கு பட்டணத்து ஆசையாயிருந்தது. யின்னையதினம் வெள்ளைக்காரர் தமிழர் பட்டணத்திலே யுள்ள சகலசெனங்களுக்கு யினிமேல் பட்டணத்தை நம்பத்தேவையில்லை யென்று ரொம்ப விசாரத்தை அடைஞ்சு கிலேசப்படுகுறார்கள். செனங்கள் படுகுறதாபந்தியத்தை யிந்த மட்டும் யென்று சொல்லி முடியாது. அவரவர் முகத்திலே ரத்தமெங்கிறதுயில்லை. ஆனால் சுப்பா சோசியர் சொன்ன சாஸ்திரியப்படிக்கி மேற்கே செஞ்சி கோட்டையும் புதுச்சேரி கோட்டையும் அரியாங்குப்பம் குண்டுசாலை யிந்த மட்டுக்குள்ளே பிரான்சுக்காரர் யிருப்பார்கள். மத்ததெல்லாம் இங்கிலீசுக்காரர் வசமாகுமென்று சொன்னபடிக்கி யிவர்களுக்கு தியாக துற்க்கமும் அத்துடனே சேர்த்த சீமையும் யிவர்கள் வசமாயிருந்தது. மைசூராருக்கு விட்டு விட்டார்கள். அவர்கள் வசம் பண்ணிக்கொண்டு அவர்கள் டாணா வைச்சுக் கொண்டார்கள். இன்னைய தினம் வில்லியநெல்லூர் கோட்டையும் இங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டார்கள்.

ஆனபடியினாலே சுப்பா சோசியர் சொன்ன சாஸ்திரப்படிக்கி யிண்ணைய வரைக்கும் சரி யினிமேல் நாளை முதல்க்கொண்டு நம்முடவர்களுக்குக் கப்பல் வந்து சுபம் குடுக்க வேண்டியது. அதுவும் யினிமேல் அறிய வேண்டியது. மைசூரார் பவுன்சு அரியாங்குப்பத்திலே யிறங்கி யிருந்தவர்கள் வில்லியநல்லூர் வாசற்படியண்டையிலே வெளியிலே வந்து யித்தனாள் ராத்திரி யிறங்கினார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 21; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 10; திங்கள்கிழமை*

இத்தனாள் காலமே துவக்கி சாயங்காலம் மட்டுக்கும் இங்கிலீசுக்காரர் ஒழுகறை கும்பினி தோட்டம் திருவாண்டார் குளத்தண்டை யிருக்கிறவர்கள் கும்பல் காண்பிச்சத்தைத் தொட்டு ரெட்டியார் பாளையம் முதலியார் கோவில் இவ்விடத்திலே நம்முடவர்கள் யிறங்கி யிருக்கிறவர்கள் பீறங்கியினாலேயும் துப்பாக்கியள் ணாலேயும் சுட்டுக் கொண்டுயிருந்தார்கள். அவர்களும் சுட்டுக் கொண்டு யிருந்தார்கள். நம்முடவர்களுக்குள்ளே அஞ்சாறு பேருக்கு காயம் பட்டுது. யிங்கிலேசுக்காரருக்குள்ளே காயம் சாவு யென்னமோ தெரியாது. யிந்தப்படிக்கி சாயங்காலம் மட்டுக்கும் சண்டை குடுத்தார்கள். பத்து மணிநேரம் வேளையிலே முசே லாலியுடைய உத்தாரம் யென்று மனிக்கும் (Manik) ஒரு சேருவைக்காறனும் வந்து நம்முடனே சொன்னது “மைசூரார் அயிதர் நாயக்கன் மச்சான் மகத்துமனாயக்கன் வந்திருக்குறானே அவனை அழைச்சு வருகுறதுக்கு நயினாருடனே சொல்லியனுப்பி தேவடியாக்கள் மேளக்காரர் யீட்டிக்கழி வகையராக்கள் முன்பின் வாடிக்கையென்னமோ அந்தப்படிக்கி யெல்லாருக்கும் சொல்லி அவர்களையும் அழைச்சுக் கொண்டு நீரும் கூடப்போய் வீசுப்பு பாதிரி நொரோன்னா வீட்டுக்குப்போய் அவரையும் அழைச்சுக் கொண்டு பின்னையும் அஞ்சாறு பேர் குதிரைக்காரர் வெள்ளைக்காரர் கொங்கிலியாம் யென்கிறவனும் வருகுறான் அவர்களையும் அழைச்சுக் கொண்டு போயி மகத்துமனாயக்கனை அழைச்சு வரச்சொல்லி முசே லாலி சொன்னாரென்று” சொன்னான்.

அந்தப்படிக்கித் தானே பாதிரி வீசுப்பு வீட்டுக்குப் போனோம். பதினோரு மணிக்கி அழைச்சுக் கொண்டு வருகுறோமென்று முசே லாலியுடனே பாதிரி வீசுப்பு சொல்லிவந்த படியினாலே முசே லாலி முதலாகிய பேரெல்லாரும் கோட்டையிலே காத்துக் கொண்டிருந்தார்கள். மகத்துமனாயக்கனை அழைக்கப் போவோம் யென்று பாதிரி வீசப்பு சொன்னதுக்கு நாம் சொன்னது, “அவனானால் சவரம் பண்ணிக் கொள்ளுகுறேன் ரெண்டு மணிநேரம் மட்டுக்கும் செல்லும் நான் பிறப்படுகுறதுக்கு யென்று” சொல்லியனுப்பி விச்சானென்று சொன்னோம்.

அப்படியல்லா பதினோரு மணிக்கி அழைச்சு வருகுறேனென்று சொல்லி வந்தேன். ஆனபடியினாலே பிறப்படுங்களென்று சொன்னான். போனவிடத்திலே அவன் செரச்சுக் கொண்டு ஸ்தானம் பண்ணுகுறேன் சாப்பிட்டு ஆகட்டும் யென்று சொன்னான். அந்த மட்டிலே முன்னே பறக்கி வெங்கட்டராய னண்டையிலே ஒரு சேவுகனாயிருந்தவன் யிப்போ யிவன் தண்டுக்கெல்லாம் பக்கிஷயாய் காரியக்காறனாயி மகத்துமனாயக் கனண்டை யிருக்குறான் வெங்கிட்டராயன் என்கிறவன் அவன் கூடாரத்திலே யெல்லாரும் யிருந்தோம். அவ்விடத்திலே நேரம் செல்லுகுறபடியினாலே வீசுப்பு பாதிரி முலே லாலிக்கு சொல்லியனுப்பி விச்சான் அவன் வரமூணு மணி செல்லும். நீங்களேன் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். அவரவர் வீட்டுக்குப் போயி சாப்பிட்டு ரெண்டு மணிக்கி வந்திருந்தார்கள். மூணு மணிக்கி அழைச்சுக் கொண்டு போனோம். கோட்டையிலே நுழையச்சே பதினஞ்சு பீரங்கி போட்டான். கோட்டை கோவர்ணமா வீட்டின் பேரிலே முன் சாலையிலே முசே லெறி கோவர்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர் யெல்லாரும் உளுக்கார்ந்து கொண்டிருந்தார்கள். சந்தாசாயபு மகன் ரசாசாயபும் வந்திருந்தான். உள்க் காம்பிராவிலே முசே லாலி மாத்திரம் உளுக்காந்திருந்தான். மகத்துமனாயக்கன் போனவன் முசே லாலி யண்டை போயி பேட்டிப் பண்ணிக்கொண்டான்.

அப்பிறம் முசே லாலி முசே லெறி கோவற்ணதோர் குமிசேல்க்காறரை அழைக்கயில்லை ரசாவுடைய மனுஷர்கள் ஆரோ அவர்களை அழையும் யென்று சொன்னான். ராசாவுடைய மனுஷர் அங்கே யிருந்தவர்கள் போனார்கள். அவர்களையும் வைச்சுக் கொண்டு பேச வேண்டிய சம்மதியள் ரெண்டு நாழிகை மட்டுக்கும் பேசினார்கள் விசுப்பு பாதிரி நொரோன்னாவும் கூட யிருந்து பேசினார்கள். அப்பிறம் அஞ்சு மணி வேளைக்கி மகத்துமநாயக்கன் என்கிறவனுக்கு முசே லாலி குடுத்தது. பாப்பய்யபிள்ளை ஒரு ஆனையும் சோணாசலம் குதிரை ஒரு குதிரையும் ரெண்டு சிப்பம் சிகப்பு சகலாத்தும், ரெண்டு சிப்பம் பச்சை சகலாத்தும், ஒரு சிப்பம் பச்சை முகமல்லும், ரெண்டு துப்பாக்கியும், ஆறு பிஸ்தோலும் ரெண்டு அத்தர்பெட்டியும் பின்னையும் சிறிது கத்திக்கோலும் சூரிக்கத்தியும் நூறு பன்னீர் பெருவையும் குடுத்தார்கள். ஆனை குதிரை தவிர யிந்த தினிசுகள் குடுத்த கிறயம் ஆயிரத்தன்னூறு ரூபாய்க் கிரயம் இதை வாங்கிக்கொண்டு மகத்துமனாயக்கன் போகச்சே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அவன் பிறப்பட்டு அவனிருக்கிற விடத்துக்கு போயிவிட்டான். பாதிரி வீசுப்பு பிறப்பட்டு அவனொரு வழியே போயிவிட்டான். அவனவன் சம்மதியான படிக்கி பிறப்பட்டு அவரவர் போயிவிட்டார்கள். நடந்த சம்மதியளைப் பார்க்கப் போனால் பேய்க்கூத்தும் ஆமணக்கு மாயிருந்தது. அதுவேயல்லாமல் பின்னை யொன்றும் காரியமில்லை. முசே லெறி குமிசெல்க்காறரை ஒரு காரியத்திலேயும்

வையாமல் ஒரு பேச்சிலேயும் யிவர்களை வைச்சுக் கொண்டு பேசாமல் கட்டோடே தள்ளிப் போட்டு முசே லாலி பண்ணின படியினாலே மனஸ்தாபப்பட்டுக் கொண்டிருந்தார்கள். உள்க்காம்பிராவைவிட்டு யிப்பாலே சாலையிலே வந்தபிறகு முசே லெறி மாத்திரம் முசே லாலியண்டை போய் உளுக்காந்திருந்தான். மத்த குமிசெல்க்காரர் களெல்லாம் சாலையிலே அவனவன் பிச்சையாய் ஒலாத்தியிருந்துப் போட்டு ஒருத்தனுடனே ஒருத்தன் சொல்லாமல் படிக்கி பிறப்பட்டுப் போயிவிட்டார்கள்.

அப்பிறம் முசே லாலிக்கும் முசே லெறிக்கும் ஆசாரம் பண்ணிப் போட்டு வீட்டுக்கு வந்து ஸ்னானம் பண்ணி சாயங்காலம் ஆறுமணிக்கி சாப்பிட்டு வீட்டிலே யிருந்தோம். வங்காளத்திலே திறெக்குத்தோர் (Director of Bengal) முசே அற்னோ (M. Renault) யெங்கிறவருக்கு ஒரு சிப்பாயியுடைய கத்திமுனை சந்தடியிலே யிடிச்சுக் கொண்டு போகச்சே கண்புருவத்திலே பட்டுது. அவர் ரொம்ப தாபந்தப்பட்டு அவர் மாத்திரம் முன்னே போயி விட்டார். ஒப்பிசியால் ஒருத்தனை சந்தடியிலே யிடிச்சுக்கொண்டு போனான். ஒரு சிப்பாயி இந்த ஒப்பிசியாலை கத்தியை உருவிக் கொண்டு போனான். அந்த சிப்பாயும் கத்தியை உருவிக்கொண்டான். அப்படி சிறிது காபிராவாச்சுது மெத்தை வீடுயெல்லாம் தண்டு பறையரும் தோட்டியும் சக்கிலியும் ஆக நிறைஞ்சு வெள்ளைக்காறரை யெல்லாம் சந்தடியிலே யிடிக்கிறதும் தள்ளுகுறதும் ஆகயிருந்தது. நாளையதினம் மகத்துமனாயக்கனுக்கு விருந்தும் வெள்ளைக்காரர் வெள்ளைக்காரச்சியள் கூத்துயென்று சொன்னார்கள்.

பாப்பய்யப்பிள்ளையுது ஒரு யானை மகத்துமநாயக்கனுக்கு குடுத்தார்களே யிண்ணு ஒரு யானை யிருக்குறதும் கும்பினியிலே யெடுத்துக் கொண்டு நாளைய தினம் காவல் விட்டு விடுகுறதாய் ராமலிங்கபிள்ளை விசுப்பு பாதிரி முகாந்திரமாய் பேசியிருக்குதெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 22; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 11; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலமே நாம் கோட்டைக்கி போகயில்லை சாயங்காலம் முசே லாலியும் மைலாப்பூர் வீசுப்பு பாதிரி நொரோனானும் மைசூர் மகத்துமனாயக்கனும் பக்குஷி வெங்கட்டராயனும் ரெண்டு குதிரை கட்டின வண்டியின் பேரிலே ஒழுகறையிலே நம்முடவர்கள் யிறங்கி யிருக்கிற பாளையத்துக்கு சுவாரி போனார்கள். ரெண்டு மூணு நாளைக்கி முன்னே வைக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யனைக் கூட வைச்சுக் கொண்டு வண்டியின் பேரிலே முசே லாலி சுவாரி போனான். அனால் அதுக்கிது சத்து சிலாக்கியம் யித்தனாளும் சூரிய உதயம் முதல்க்

கொண்டு சாயங்காலம் வரைக்கும் ஒழுகரையண்டை யிங்கிலீசுக் காரருக்கும் நம்முடவர்களுக்கும் சண்டை நடந்தது. துப்பாக்கி வெடியும் பீரங்கி வெடியும் விஸ்தாரமாய்த் தானே சுட்டார்கள். பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

இத்தனாள் ராத்திரி கோட்டையிலே மைசூர் மகத்துமனாயக்கனுக்கு விருந்தும் வெள்ளைக்காரர் கூத்தும் பாட்டும் என்று சமாச்சாரம் சொன்னார்கள். ராத்திரி யெட்டரை மணிக்கி வரைக்கும் கோட்டையிலே முசே கொடுத்தேனும் முசே புலோவும் முசே லெறியண்டை வந்திருந்தார்கள். பின்னையும் வெள்ளைக்காறர் வெள்ளைக்காறச்சியள் வந்து கூத்தாடிக் கொண்டு யிருந்தார்கள். யெப்போதும் கூத்தாட்டானால் வருகிற கும்பலிலே கால்வரிசை வந்திருந்தார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டுது. அன்னேர வரைக்கும் சுவாரி போன முசே லாலியும் மகத்துமனாயக்கனும் வரயில்லை ஒன்பது பத்து மணிக்கி முசே லாலியும் மகத்தும நாயக்கனும் வந்து கோட்டையிலே சாப்பிட்டு கூத்துப் பார்த்தார்கள் யென்று சேதி சொன்னார்கள்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 23; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 12; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி தூங்கிக் கொண்டிருந்தபடியினாலே குமிசெல்க்காரர் ஒருத்தரும் வரத்துப் போக்குயில்லாத படியினாலேயும் நேத்து ராத்திரி கூத்தான படியினாலேயும் ஒருத்தரும் வரயில்லை. அதனாலே பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டேன்.

பனிரெண்டு மணிக்கி நயினார் சொல்லியனுப்பிவிச்சது. யென்னயென்றால், "கபாலன் காளத்தி செட்டி கட்டுக்காற திருவெங்கிடம் தம்பி–பாப்பய்யபிள்ளை வைத்தினாத செட்டி முத்து செட்டி சின்னக் கச்சியப்ப செட்டி யிவர்கள் சம்மதி தீத்து விடுதலை பண்ணிப் போடு வென்றும் முசே துபுவா யெழுதிக் கொடுத்த பதினேழு பேர் வழிகள் பேரிலே யிருக்கிற வரி சம்மதி சீட்டும் கொண்டு வரச்சொல்லி அழைச்சு வந்து அவர்களுடைய சம்மதியையும் தீத்துப்போடச் சொன்னதாக" முசேலெறி சொல்லி அனுப்பிவிச்சான் என்று நயினார் வந்து நம்மிடம் சொன்னான், யிந்தப்படிக்கு உங்களையும் ஒன்பது மணிக்கு காலத்தாலே யிந்த சம்மதியெல்லாம் கேழ்க்கிறதுக்கு வரச்சொல்லி சொன்னாரென்று நயினார் சொல்லி அனுப்பிவிச்சார். அந்தப்படிக்கி பதிலுத்திரவு காலத்தாலே ஒன்பது மணிக்கி வருகுறேன். யிந்த மனுஷரை யெல்லாம் அழைச்சுக் கொண்டு வந்து வைச்சு யிருமென்று சொல்லி அனுப்பிவிச்சோம்.

யித்தனாள் மைசூர் லஷ்க்கர் கோட்டைக்கி தென்புரம் அரியாங்குப்பம் போற புளியந்தோப்பு சாலையிலே யிறங்கி யிருந்தவர்கள் கோட்டைக்குள்ளே யிருக்கிற குண்டுசாலைக்குள்ளே யிருக்குர வீடுகளெல்லாம் ஒரு வீடு வாசல் வையாமல் பிடிங்கி போட்டார்கள். அதுகள் என்னவென்று விசாரிக்கவுமில்லை. அது ஏனென்றால் பட்டணத்திலே நாளுக்கு நாள் பீடாயி நடக்குது. ஆனபடியினாலே காலத்தினுடைய சுபாவம் நடக்க வேண்டிய கதிகளெல்லாம் நடக்குது என்று சகலமான செனங்களும் சொல்லிக் கொண்டார்கள். மயிசூரார் தங்களுக்கு இருபதினாயிரம் ரூபாய் குடுக்கச் சொல்லி முசே லாலியைக் கேட்டதாயும் சோமவாரத்தண்ணைய தினம் குடுக்குறோம் யென்று சொன்னதாயும் சொல்லிக் கொண்டார்கள். ஊரிலேயும் நெல்லுதானியம் ரொம்ப கொள்ளக் கிடைச்சது யிவர்கள் வந்து போயி அறுத்துக் கொண்டால் ஆயிப்போச்சுது. ஆனால் நெல்லு ரூபாய் ஒண்ணுக்கு சின்னபடி எட்டு விழுக்காடு கிறைய விற்க்கிறது. அதுவும் ரொம்ப கஷ்ட்டப்பட்டால் தான் கொள்ளக் கிடைக்கிறது. மைசூரார் வந்தது முதல்க் கொண்டு ஊரிலே அரிசி நெல் கிடையாது. அவர்கள் வந்தபடியினாலே ஊரிலே சண்டை நடக்க யில்லையானாலும் அரிசி தானியம் கட்டோடே கிடைக்கயில்லை. ஊரிலே வெகு மனுஷர் ஏழைகளும் பட்டாணியளும் யிருக்குறார்கள். இங்கிலீசுக்காரர் இரண்டு துப்பாக்கி குண்டு சுட்டார்கள். குண்டுசாலைக்கு சமீபமாய் நம்முடவர்களும் இரண்டு துப்பாக்கி சுட்டார்கள். இதுகளெல்லாம் இவ்விடத்திலே நடந்துது.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 24; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 13; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு நாம் போனவிடத்திலே பத்தரை மணிக்கி முசே துபுவாவும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் வந்தார்கள். பத்தரை மணிக்கு முசே லெறி என்னை அழைச்சு கபாலன் காளத்தி செட்டி, கட்டுக்கார திருவெங்கிடம் தம்பி – பெருமாள் முதலி மகன், கந்தப்ப முதலி, வைத்தினாத செட்டி, சின்ன கச்சியப்ப செட்டி ஆக அஞ்சு பேரும் அழைச்சு வரச் சொல்லி சொன்னார்கள். அதன் பேரிலே நயினாரை போயி அழைச்சு வரச் சொன்னேன். அந்தப்படிக்கி அவர்களைக் கொண்டு வந்துவிட்டார். அதன்பேரிலே கபாலன் காளத்தி செட்டி முன்னே அன்னூறு ரூபாயிக்கு மேல் அதனமாய் தாளாது என்று முசே துபுவாவிடம் சொன்னான். அதுக்கு முசே துபுவா சொன்னது முன்னே ஆயிரம் ரூபாயிக்கு பேசினியே யென்றும் அவன் தம்பியை கசோத்திலே போட்டதும் பேரிலே அந்தப்படிக்கு சம்மதிச்சு குடுத்தாலாச்சுது யில்லாவிட்டால் கசோத்திலே போட்டு தெருவுத் தெருவு கட்டி வைச்சு அடிப்போமென்று சொன்னதின் பேரிலே எண்ணூறு ரூபாயாய் தீந்து கையெழுத்தும் போட்டார்கள். கட்டுக்காற திருவெங்கிடம்

தம்பியும் முசே துபுவாவிடம் முன்னே எண்ணூறு ரூபாய்க்கு சம்மதிச்சு பேசியிருக்குறானென்றும் அந்தப்படி குடுத்தாலாச்சுது. யில்லாவிட்டால் கசோத்திலே போட்டு கட்டி வைச்சு அடிப்போமென்று சொன்னதின் பேரிலே யிவர்களும் (800) ரூபாயிக்கு எண்ணூறு ரூபாயிக்கு கையெழுத்துப் போட்டார்கள். யிவர்கள் ரெண்டு பேரும் சம்மதிச்சுக் கையெழுத்துப் போட்டபடியினாலே யிவர்களுக்கு விடுதலையாச்சுது. அப்பால் பெருமாள் முதலி மகன் கந்தப்ப முதலியை முன்னே (300 ரூபாயிக்கு) முன்னூறு ரூபாயிக்கு சம்மதிச்சதை ஏன் குடுக்கயில்லை யென்று யிவனையும் கட்டிவைச்சு அடிச்சுக் கசோத்திலே போடச் சொன்னார்கள். அதன் பேரிலே அந்தப்படிக்கிப் பணம் குடுக்குறோமென்று சம்மதிச்சுக் கொண்டு வந்தான். அப்பால் வைத்தியனாத முத்து செட்டியையும் சின்னக் கச்சியப்ப செட்டியையும் அவர்களை வரிப்போட்டதுண்டா வென்று நாட்டாமைக்காறன் அராமி செட்டியைக் கேட்டு விட்டுவிட்டார்கள். வெள்ளாழ மன்னப்ப முதலி குமரப்ப முதலி அவர்கள் ரெண்டு பேரையும் கொண்டு வந்துவிட்டதிலே முசே துபுவா யிருந்து கொண்டு இவர்களை முசே கொடுத்தேன் ரெண்டு மாசமாக நயினாரை அழைச்சுவரச் சொல்லியும் வரி சம்மதிப் பணம் குடுக்கும்படிக்கிச் சொல்லி அவர்களுக்கு பதினாயிரம் ரூபாயிக்கு ஆஸ்தி உண்டென்று கேழ்விப்பட்டதாகச் சொன்னான்.

அதன் பேரிலே நீங்கள் அய்யாயிரம் ரூபாய் குடுத்தாலாச்சு யில்லாவிட்டால் கசோத்திலே கட்டிப்போட்டு வைப்போம் யென்று சொன்னார்கள். அதுக்கு அவர்கள் சொன்னது வெள்ளைக்காரரிடம் பரபத்தியம் பண்ணிக்கொண்டு நாங்கள் காலக்ஷேபம் பண்ணிக்கொண்டு யிருக்கிறோம். எங்களுக்கு ஒண்ணும் குடுக்கிறதுக்கில்லை. வழியில்லை யென்று சொன்னார்கள். யிந்தப்படிக்கிச் சொல்லி தாங்கள் எழுதிக் கொடுத்தவர்களை எங்கள் முன்பாக அழைப்பிச்சு ருசுவும் படுத்தினால் அந்த ரூபாயை கும்பினிக்கு குடுக்குறோம். தாங்கள் செய்யுற ஆஞ்ஞைக்கும் கட்டுப்படுகுறோமென்று சொன்னதின் பேரிலே முசே துபுவா சொன்னது யிப்போ இந்த பேச்செல்லாம் நடக்காது நீ பணத்தைச் செலுத்திப் போடவேணுமென்று சொன்னான். அதன் பேரிலே அவர்கள் ரெண்டு பேரையும் கட்டிவிச்சு கசோத்திலே போட்டார்கள். இருசப்ப செட்டி முத்துசெட்டியையும் பின்னையும் ரெண்டு பேரையும் கசோத்திலே போட்டார்கள். அப்பிறம் (பெயர் விடுபட்டுள்ளது) ராயன் பக்குஷியின் கீழே யிருக்கிறவனை அழைப்பிச்சு கேழ்க்குறவிடத்திலே நான் அவர்களண்டை சொல்ப்ப ரூபாயிக்கு சேவித்து வருகிறேன். அதைக் கொண்டு ஜீவனம் செய்து கொண்டிருக்கிறேன். அவர் பத்து ரூபாயி குடுத்தால் எனக்கு காலக்ஷேபம் நடக்கும் யில்லாவிட்டால் எனக்கு பட்டிணிதான் யிருக்கவேணும் என்று சொன்னதுக்கு நல்லது கடசியிலே

ஆகட்டுமென்று முசே துபுவா உத்தாரம் குடுத்தார். அது என்னத்தினாலே என்றால் விசேஷித்து பத்துப் பணம் சிப்பாயியள் கையிலே பிறயோசனப்பட்டு யிருக்குறபடியினாலே கடைசியா விட்டார். தில்லையம்ப செட்டியை அழைச்சு கேழ்க்குற விடத்திலே எனக்கு கொள்ளை போன காலத்திலே எல்லாம் கொள்ளை போயிவிட்டது எனக்கு ஒன்றும் குடுக்குறதுக்குயில்லை கடன்காரரைத் தொட்டு வெகு அக்கிராணிபட்டு நாளது வரைக்கும் காவலிலே யிருந்து ரொம்ப காபிராப்பட்டுப் போனேன். யிப்படி யிருக்கக் கடலோரம் வெள்ளைக்காறன் முசே லாபோத்தேன் (M. Fontaime) விடுதலை பண்ணி வைச்சான். தன்னுடைய ஞாயம் யெல்லாம் யெழுதி வைச்சுக் கொண்டு துரை கையிலே குடுத்தான். பித்திசாமை துரை நம்மை வந்து ஞாயம் என்னாவென்று கேட்டார். மெயிதான் கடன்காரன் கையிலே மெத்த அக்கிராணி பட்டானென்று சொன்னோம். அந்த மட்டுக்கும் விட்டு விட்டார்கள்.

வழிச்சாரி கணக்கு லக்ஷமணபிள்ளை, வீராகவபிள்ளை, அம்மையப்பன், குட்டியாபிள்ளை யிவர்களை அழைச்சு கேழ்க்குறவிடத்திலே நாங்கள் கும்பினியிலே பத்துப் பணத்துக்கு சேவுகம் சேவிக்குறவர்கள். எங்களுக்கு ஒண்ணும் வழியில்லை யென்று சொன்னார்கள். யிவர்கள் கும்பினி முத்திரை போட்டுக் கொண்டு நின்னார்கள். யிவர்களுக்கு ஆஸ்தியொன்றும் யில்லை வெகு ஏழையானபடியாலேயும் விட்டுவிடும்படி சொன்னோம். அந்தப்படிக்கி விட்டுவிட்டார்கள். அப்பிறம் முசே துபுவா தன்னுட சட்டைப்பையிலே யிருந்து ஒரு காகிதம் தமிழில் எழுதி யிருக்கிறதை எடுத்து நயினார் கையிலே குடுத்தான். அதிலே குடைக்காற பெருமாள் குமாரன் தாண்டவராயன் சேனைக் குடைதாண்டவராயன் நாட்டாமைக்காரன் தாண்டவராயன் இவர்களுடைய பேரெல்லாம் அந்த கடுதாசியிலே எழுதியிருந்தது. அந்தப்படிக்கி அதல்கண்டிருக்கிற மனுஷர்களை அழைச்சு வரச்சொல்லி நயினாரிடம் காகிதத்தைக் குடுத்து கொண்டு வந்து விடச்சொன்னார்கள். நான் முன்னாலே சொன்னேனே அந்தப்படிக்கி அவர்களை கொண்டு வரச்சொல்லி உத்தரவு குடுத்தார்கள். பனிரெண்டு மணிக்கி முசே கொடுத்தேனும் முசே துபுவாவும் வீட்டுக்குப் போனார்கள். சாப்பாட்டுக்குப் போய்விட்டார்கள்.

முசே லெறி நம்மை அழைச்சு பட்டணத்திலே யிருக்கப் பட்டவர்களை யெல்லாம் பேர்வழி யெழுதிக் கொண்டு வரச்சொல்லி சொன்னார்கள். அதுக்கு நாம் சொன்னது முன்னாலே பிராஞ்சுப்படுத்தின சாப்பித்தா எழுதி யிருக்குறது அது அப்பாவு கையிலே யிருக்குறது அதன் நக்கல் ஒன்றும் என்னிடம் காண்பிச்சான். அதை முசே கதேவில் கையில் குடுக்கும்படி சொன்னபடியினாலே அந்தப்படிக்கி நகல்

சாப்பித்தாவை குடுத்துப் போட்டோம் என்று சொன்னோம். ஆனால் நாம் வாங்கிக் கொள்ளுகுறோமென்று சொல்லி நம்மை வளவுக்கு போகச்சொல்லி சொன்னார். அந்தப்படிக்கி பனிரெண்டு மணிக்கி வளவுக்கு வந்தோம். தென்னண்டை அரியாங்குப்பத்து வழி குண்டுசாலைக்குள்ளே புளியந்தோப்பிலே சாலையிலே யிறங்கி யிருக்கிற தண்டு வடக்கே கருக்குடிகுப்பம் யிந்தவிடத்திலே தண்டு யிறங்கி குண்டுசாலைக்குள்ளே சோத்துப்பாளையமும் அப்பாலே கோயிலிலே யிறங்கி யிருந்த பாளையமும் அதற்கப்பாலும் யிறங்கினார்கள்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 25; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 14; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறியண்டைக்குப் போயி காண்பிச்சுக் கொண்டதுக்கு அவர் நேத்து சாப்பிதா கதிவேல் கையிலே யிருக்குது என்று சொன்னீரே அவர் தம்முட கையிலே சாப்பிதாயில்லை யென்று சொன்னார். நீர்போயி அந்தப்படிக்கி பிரான்சிலே சாப்பிதா எழுதிக்கொண்டு வரவேணுமென்று சொன்னார் நல்லது என்று சொல்லி பதினோரு மணிக்கு வளவுக்கு வந்து விட்டோம். பிறகு பனிரெண்டு மணிவேளையிலே முசே கொடுத்தேன் கோட்டைக்கு வந்து நம்மை தேடினவிடத்திலே நாம் யில்லை யென்று சொன்னார்கள். பாப்பய்யபிள்ளையும் அவர் குமாரனையும் முசே லெறியண்டை அழைச்சுப்போயி முசே லாலியுட உத்தார மென்னயென்றரல் உம்முட ரெண்டு ஆனையும் கும்பினியிலே குடுக்கவும் முன் யெழுதியிருக்கிற லிஸ்துருப்படிக்கி பணம் வாங்கச் சொல்லியும் லாலியுடைய உத்தாரம். ஒரு ஆனைதான் மைசூராருக்கு குடுத்தீரே மற்றதொரு ஆனையும் கொண்டு போயி முசே பனோ (M. Panon) வீட்டிலே கட்டிப்போடச் சொல்லியும் உமக்குச் சரீரம் ரொம்ப சவஸ்தமில்லாமல் கஸ்திப் படுகிறீரென்று துரை அவர்கள் தயவுபண்ண தென்னயென்றால் வளவிலே போயிருந்து கொண்டு கொஞ்சம் சௌக்கியப்படுத்திக் கொண்டு பணத்தை சீக்கிறமாய் சமைபண்ணச் சொல்லி அந்தப்பணம் செல்லுமட்டுக்கும் நீர்வளவிலே காவல்யென்றும் தாக்கீதா சொல்லி பணத்தை சீக்கிறம் அனுப்பிவிக்கச் சொல்லி வளவுக்கு போகச் சொன்னார்கள். வந்தவுடனே அவர்களவ்விடம் வந்தவுடனே நமக்கு தாங்கள் தயவினாலே வந்து சேர்ந்தோமென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு பின்னையும் ரெண்டு ஆனையும் போச்சுது. ஆனையுடனே போமென்று சொன்னார். ஆராயிரம் ரூபாயும் கேழ்க்குறார்கள். நம்முட கிரகத்தின் கதியிப்படி யிருக்கிறது என்று சொல்லி அனுப்பிவிச்சார். யிந்த முகாந்திரம் விசுப்பு பாதிரிக்கு நன்கொடை ஆயிரம் ரூபாயும் இந்த ஆயிரம் ரூபாயிக்கும் ராமலிங்கம் கையிலே முன்னே ஒரு

ஆனைவித்த சம்மதிக்கு அய்யாயிரம் ரூபாயும் இதுகள் ரெண்டுக்கும் சீட்டெழுதிக் குடுக்கச் சொல்லிச் சொன்னதின் பேரிலே எழுதி குடுத்தான். கோவர்ணமா மேலே ஒசந்த வெளியிலே லங்கருக்கு கொடி அடையாளம் காண்பிக்குறதுக்குக் கம்பம் கட்டி பின்னையும் துரைகளும் யிருக்குறதுக்கு சண்டை பண்ணுறது தெரியுறதுக்கு பலகையிலே ஒசந்த மேடை போட்டார்கள். வழுதாவூர் வாசற்படிக்கு அகழ் ஓரத்திலே நாலு வியாதிப்பட்ட குதிரைகளை நாலு வெள்ளைக்கார சொலுதாதுகள் கொன்று போட்டார்கள். அவர்களுடைய பிஸ்தோலினால் சுட்டுக் கொன்றார்கள் என்று கேழ்க்கப்பட்டுது. ஒரு குதிரையை ஒரு பறையனுக்கு குடுத்தார்கள். பறையர்களும் சட்டைக்காரர்களும் நாலு குதிரைகளையும் அறுத்து துண்டுகளாக்கிக் கொண்டு போனார்கள். யெதினாலே. யென்றால் அரிசி கிடைக்காதபடியினாலே கொண்டு போனார்களென்று சொல்லப்பட்டது.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 26; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 15; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய்க் காத்துக் கொண்டிருந்தவிடத்திலே வரிக்காரரையும் அழைச்சு வைச்சுக் கொண்டிருந்தோம். முசே கொடுத்தேனும் வரயில்லை. முசே துபுவாவும் வரயில்லை பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். முசே லாலி அண்டையிலே யிருந்து முசே லந்தோர்சு (M. L Andres) யெங்கிறவன் முசே லாலி அண்டைக்கு ரெண்டுதரம் வந்து ரெண்டுதரம் முசே லெறி யண்டைக்குப் போனான். அது யென்ன யென்றால் பாவம் பார்த்தால் மைசூரார் பணம் கேழ்க்கிற படியினாலே பணத்து நிமித்தியம் தான் லாந்துருசு போக்குவரத்தாய் பாவம் தோணப்பட்டுது. அதுக்குப் பாவம் நேத்தியதினம் தானே முசே லெறியை முசே லாலி பணம் கேட்டனுப்பிவிச்சதின் பேரிலே தான் மன்னப்ப முதலி குமரப்ப முதலியைக் காலிலே விலங்கு போட்டுக் கசோத்திலே போடச்சொன்னதும் பின்னையும் தமிழரை அழைக்கச் சொன்னான்.

பட்டணத்திலே யிருக்கிற தமிழர் சகலமான பேருடய வீடுகளையெல்லாம் எழுதிவரச் சொன்னான். யிதுகளையெல்லாம் முசே லெறி அடமானம் சொன்னதின் பேரிலே அதுக்கு முசே லாலி சொன்னது யிந்த சறூருக்கு தப்பாமல் பணம் வரமாட்டாது. யிந்த மட்டுக்கும் தமிழர் கையிலே பணம் வாங்கிறதுக்கு யெத்தனைப் பிறயத்தனம் பண்ணினதின் பேரிலே நடந்தது ஆனபடியினாலே வெள்ளைக்காரர் கையிலே பணம் வாங்க வேணுமென்று சொன்னதாய் அதன்பேரிலே தான் லாந்துருசு (M. LAndres) வந்தான் மூணுதரம் நாலுதரம் முசே லாலியண்டை யிருந்து

முசே லெறியண்டைக்கு போக்குவரத்தாய் யிருந்தானென்று பாவகம் தோணப்பட்டுது. அதுக்கு திஷ்ட்டாந்திரம் முசே லெறி யிது பொன்பான் தான் ஒண்ணும், பொன் பன்னீர் சொம்பு ஒண்ணும், அதனுடைய தட்டும், யேகத்துக்கு தொளாயிரம் வராகனிடை பொன் டங்காசாலைக்கி அனுப்பிவிச்சார். ஆனபடியினாலே யினிமேல் வெள்ளைக்காரர் கையிலே பணம் வாங்கப் போறது சரியென்று பாவகம் தோணப்பட்டுது. பின்னையும் ரெண்டொரு ஒப்பிசியால்மாரும் சொல்லிக் கொண்டார்கள். முசே கில்லியார் பின்னையும் அவரவர் வெள்ளைக்காரர் வீட்டிலே சொல்லிக் கொண்டார்கள். யினிமேல் யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது.

இத்தனாள் ராத்திரி யெட்டு மணிக்கு தெத்து வாசற்படி கதவு திறந்து உசார் அலுமாஞ்சு குதிரைக்காரர்களும் பிறப்பட்டு மைசூரார் குதிரை கூட அறுநூறு எழுநூறு குதிரை மட்டுக்கும் பிறப்பட்டு வடக்கே போச்சுது. பறங்கிமலையிலே பிராஞ்சுக்காறர் பிறிசினேரானவர்கள் (Prisomiers) யெழுநூறு பேர் மட்டுக்கும் யிருக்குறார்கள் யென்றும் அவர்களை சிறிதுபேர் சிப்பாயிகள் காத்துக் கொண்டிருக்கிறார்களென்று சமாச்சாரம் வந்ததின் பேரிலே யிந்த குதிரைக்காரர் யெழுநூறு துப்பாக்கியளும் கொண்டு அவர்களை அழைச்சுவரப் போனார்களென்று சேதி கேழ்க்கப்பட்டது.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 27; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 16; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கி நாம் கோட்டைக்குப் போனோம். ஆறு மணிக்கித் தானே முசே லெறி பூசை கேட்டு காம்பிராவுக்குள்ளே போயி விட்டார். பின்னை யொருத்தரும் வெள்ளைக்காரர் வரயில்லை முசே கொடுத்தேன் முசே துபுவாவும் வரயில்லை. பதினோரு மணிக்கி மட்டுக்கும் நாம் கோட்டையிலே யிருந்து வீட்டுக்கு வந்து விட்டோம். கேழ்க்கப்பட்ட சேதி யென்னயென்றால் முன்னே சொல்லப்பட்ட கப்பல் சமாச்சாரம் ராசாவுடைய கப்பல் நாலு கப்பல் சண்டை கப்பலும் அதுக்கு தீனி றஸ்த்து கொண்டு வருகுறது மூணு கப்பலும் ஆக யேழு கப்பலும் காப்தெ பொனேடுயசுப் பிரான்சு (Cap de Bonme Esperance) ரேவண்டை வந்து தண்ணீர் யேத்திக் கொண்டு யிருக்குதென்று தென்மார்க்கு (Danish Ship) வினுடைய கப்பலொன்று வந்து அதுவும் தண்ணி யேத்தச்சே யிந்த கப்பல் தண்ணி யேத்திக்கொண்டு முசே தெஷெ (M.d. Ache's) யுடைய எஸ்காதுரு மோரிசுவிலே யிருக்கிறதும் அழைச்சுக் கொண்டு வருகுறோமென்று மோரிசுக்குப் போனார்களெங்கிறதாய் தலங்கம்பாடிக்கி கோவர்ணதோர் வந்த கப்பலிலே சமாச்சாரம் வந்ததாய் தலங்கம்பாடி கொவற்ணதோர் முசே லாலிக்கு எழுதி அனுப்பிவிச்சதாய் அந்தக்கப்பலிலே அஞ்சு லக்ஷம்

ரூபாயும் ஆயிரத்தெண்ணூறு பேர் சொலுதாதும் துரைத்தனமும் வருதென்று நெசக்கபுராய் எழுதியனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் முசே பசேன் துபாயி கொல்லத்துக்காற சவறிராயனை முசே லாலி நீய் ஊரிலே அவரவர் கையிலே பணம் வாங்கியிருக்குறாய் பதினாயிரம் ரூபாயி குடுயென்று காவலிலே வைச்சிருந்தார். யித்தனாள் வீசுப்பு பாதிரி நொரோன்னு முகாந்திரமாய் அன்னூறு ரூபாயாய் தீந்ததாய் சேதி கேழ்விப்பட்டுது. இத்தனாள் சாயங்காலம் நாம் மைசூராருடைய தண்டு வேடிக்கைப் பார்க்கப் போனோம். முசே லாலியும் பாதிரி வீசுப்பும் நொரோன்னாவும் ரெண்டு பேரும் ஒரு வண்டியின் பேரிலே யேறிக்கொண்டு மகத்துமநாயக்கன் கூடாரத்துக்குப் போய் பேசிக்கொண்டிருந்தார்கள். பேசியான அப்பிறம் பிறப்பட்டு எட்டரை மணிக்கி சென்னப்பட்டணம் தெத்துவாசற்படி திறக்கச் சொல்லி உள்ளே வந்து விட்டார்கள். அயிதர் நாயக்கனென்றும் மகத்துமனாயக்க னென்றும் நாயக்கப்பட்டம் ஆருக்கென்றால் காவாளாயிருக்கிற பத்து பேருக்குப் பெரியவனாயிருக்கிற வனெவனோ அவனுக்குப் பேர். அப்படிப் போலக் கொத்தவன் சிரேயிசு யிப்படிப் போலக்கொத்தவன் செனரால் கொலனால் யிதுயெப்படிப் போலே ஒத்த காலமென்று சகலசெனங்களும் சொல்லிக் கொண்டார்கள். வெள்ளைக்காரர் நாலத்து ரெண்டு பேர் பெரிய மனுஷர் ஒப்பிசியால்மார் சொல்லிக் கொண்டார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 28; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 17; திங்கள்கிழமை*

இத்தனாள் முசே பெடுத்தல்மீக்கி ரொம்ப அபஸ்தையாயிருந்தபடியினாலே நாம் காலமே முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் ஒரு நதிரையும் வச்சுக் கொண்டு மதாம் பெடுத்தல்மீ யண்டைக்கு முசே மொர்சேனும் யிருக்கச்சே அவனுடைய சம்டைக்காரன் லாசும் (Louch) வச்சுக் கொண்டு யிருக்கச்சே துபாசி முத்தையன் நமக்கு குடுக்கவேண்டிய ரூபாயி சம்மதி சீட்டு சம்மதி சோனாசலத்துக் கையிலே நான் தீத்து வாங்கித் தாறேன் யென்று அந்த சீட்டை முசே பெடுத்தல்மீ வாங்கிக் கொண்டதும் அந்த சீட்டு குடுக்கச்சே சட்டைக்கார லூயிசு (Louch) கையிலே குடுத்ததும் யிதுகளுக்கு நடந்த உத்திரபிறதி யுத்தரங்களும் நடந்த தாம்படியே சவிஸ்தாரமாய் சொன்னதின் பேரிலே அவன் பெண்சாதி யிருந்துக் கொண்டு அதுகளுக்கெல்லாம் கடுதாசியிலே எழுதியிருக்குது யிப்போ வேளையாயென்றும் சொன்னாள். யிதல்லாமல் பதினாயிரம் ரூபாயி நாம் நன்கொடையாய் குடுக்குறோமென்று சீட்டெழுதி குடுத்திருந்த சம்மதிக்கி ரூபாயி சென்னு போச்சுது. அந்த சீட்டு நமக்கு குடுக்கயில்லை. யெதுனாலே என்றால் முன்னாலே விசேஷ சம்மதியாய் முசே லாலியுடனே நான்தான்

யிருபதினாயிரம் ரூபாயிக் குடுத்திருக்கிறேனென்று சொல்லியிருந்தார் ஆனபடியினாலே ஒருவேளை அந்த சீட்டுக் காண்பிக்க வேணுமென்றும் அந்த சீட்டு நமக்கு குடுக்காமலிருந்தார். அதல்லாமல் அய்யாயிரம் ரூபாயி சம்மதிக்கி சிறிது பணம் செண்ணு போச்சுது. யின்னம் கொஞ்சம் பணம் செல்ல வேணும் யென்று சொன்னதின் பேரிலே நல்லது. அதுக்கெல்லாம் கணக்குகளிருக்குறது. கணக்காம்படியே பாத்துக் கொள்ளுவோம் அந்த சீட்டுகளும் உமக்கு குடுத்து விடுகுறோம் யிப்போ அவருக்கு ரொம்ப அபஸ்தையாயிருக்குது. யிப்போ பேசுகுறதுக்கு சமயமில்லை. நீர் போமென்று மதாம் பெடுத்தல்மீயும் சொன்னாள். அங்கே யிருந்தவர்களும் சொன்னார்கள். பின்னையும் ரெண்டு நாழிகையிருந்து பேசிக்கொண்டிருக்கச்சே முசே மொற்சேன் நம்மைப் பார்த்து நல்ல ஆடு அகப்படயில்லை ரெண்டு ஆடு நல்லதாய் நீர் அழைப்பிச்சு குடுத்தால் நல்லது. கிரையம் நாம் குடுத்து விடுகுறோம் யென்று சொன்னான்.

நான் அவன் மச்சிலிபந்தரிலே கோவற்ணதோர்த் தனம் பண்ணவன். ஆனால் யிவ்விடத்திலே யிருக்கிற கோவர்ணதோருக்கும் அதிகமாய் யோக்கியதை அனுபவிச்சவன். இப்படிப்பட்டவனை நான் நாலு வருஷமாய்ப் பார்த்ததும் பேசினதும் யில்லை. நம்முடைய யோக்கியதையும் முகத்தையும் பார்க்கிறதில்லை. நாமும் அவன் முகத்தையும் பார்க்கிறதுமில்லை. அப்படிப் போலொக் கொத்தவன் யின்னையத்தினம் யெனக்கு ஆடு அகப்படயில்லை. நல்லதாய் ரெண்டு ஆடு அழைப்பிச்சுக் கொடுக்க வேணுமென்று கேட்டபடியினாலே நல்ல காலமென்று யெண்ணிக் கொண்டோம். நல்லது அப்படியே அழைப்பிச்சுத் தாறேன் யென்று சொல்லி அங்கே யிருந்தவர்களுக்கு ஆசாரம் பண்ணிப்போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டைக்கிப் போனோம். அங்கே காரைக்காலிலே தொரைத்தனம் பண்ணிக் கோட்டையை இங்கிலேசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுப்போட்டு வந்திருக்கிற முசே நிக்கோலா (M. Nicoas) முசே லாலி வீட்டுக்குப் போயிருந்து வந்தான். அவன் சொன்னது "முசே லாலி செனரால் சொன்னது யென்ன யென்றால் இங்கிலீசுக்காரர் கப்பல் கரையோரமாயிருக்கிற கப்பலு யிருக்குதே அதிலே கும்மாந்தாம் கப்பலிலே யிருக்கு கம்பத்திலே சிகப்புக் கொடி போட்டு ஒரு பக்கத்திலே சிகப்புக் கொடியும் வெள்ளைக் கறுப்பு கலந்து ஒரு கொடியும் ஒரு பக்கத்திலே சிகப்புக் கொடியும் போட்டபடியினாலே கப்பலுகளெல்லாம் யேகமாய் சேர்ந்துக் கொண்டு ஒருமுகமாய்ச் சண்டைக்குப் போற அடையாளம் போட்டும் யிருக்கிற படியினாலே நம்முட கப்பல் யின்னம் நாளைக்கு வருகிறபடியினாலே இன்றே வரவேணும் யென்றும்" சொல்லிக் கொண்டிருக்கிற படியினாலே அந்தச் சமாச்சாரம் கப்பலிலே கேட்டிருக்கவேணும். ஆகையினாலே அவர்கள் அந்த அடையாளம் காண்பிச்சு யிருக்க வேணும் என்று சொன்னார்கள்.

நமக்கும் நல்ல காலம் வந்தது. நம்முடய கப்பலும் சீக்கறமாய் வருகுது. நிசமாய்த்தானே முசே லாலி சொன்னாரென்றும் முசே கப்பல் கப்பித்தான்மார்களும் அடையாளமும் காண்பிச்சார்கள்.

அங்கே ராமச்சந்திரராயன் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் யிருந்தார்கள். அவர்களுடனே நாம் சொன்னது “கேது சுபகாலத்துக்கு தோஷமாய் நிர்ப்பான். ஆனபடியினாலே பழய கோவற்ணமாம் வீட்டிலே மேலே கம்பம் நட்டு உன்னிதமாய் கொடி ஒண்ணு புதுசாய்ப் போட்டுது. ஆனபடியினாலே சுபகாலத்துக்கு கேதுவு கொடியாய் நிர்ப்பான். ஆனபடியினாலே பட்டணத்துக்கும் ஒரு உன்னிதமாய் நடக்கும் மத்தப்பேருக்கும் சரிதான். அசுபகாலத்துக்கு போனவருஷம் தூக்கு மரமாய் நின்னானென்று ராமச்சந்திரராயனும் நாம் யிப்படிப் பேசிக் கொண்டிருந்தோம்.” பின்னை யொருத்தரும் கோட்டைக்கி வெள்ளைக்காரர் வரயில்லை முசே லங்கறனை (M. La grenea) மாத்திரம் முசே லெறியண்டை வந்து கண்டு பேசிப்போயிவிட்டான். அப்பிறம் பதினோரு மணிக்கி நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். முசே பெடுத்தல்மீக்கு மீனக்கூரானபடியினாலே சூரிய உதய முதல்க் கொண்டுப் பார்த்தால் யின்னையதினம் விடியக்காத்தாலே செத்துப் போவான் மாசப்பிறவேசம் முதல்க் கொண்டு பார்த்தால் ராத்திரி பத்து நாழிகைக்கு செத்துப் போவானென்று பாச சோசியரும் நாமும் மத்தியானம் பேசிக் கொண்டிருந்தோம்.

இத்தனாள் ராத்திரி யேழுமணிக்கு கேழ்க்கப்பட்ட சேதி நாலானாள் ராத்திரி உசார்க் குதிரைக்காறரும் அலமாங்கி குதிரைக்காறரும் மைசூர் குதிரைக்காறரும் போயி சென்னப்பட்டணம் திருவட்டீசுவரன் கோவிலிலே பிறிசேனரா யிருக்கிறவர்களை அழைச்சு வரச்போனவர்கள் சயிதாப்பேட்டையிலே தோட்டத்திலே பிக்கட்டும் அறுபது பேரும் விளையாட வந்தவிடத்திலே அவர்களையும் பிடிச்சுக் கொண்டு யெழுநூறு பேர் பிறிசினேறகளாயிருந்தவர்களையும் நேத்தியதினம் அழைச்சுக் கொண்டு யின்னையதினம் ராத்திரி யிங்கே வந்து சேருகிறார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டுது. பிக்கட்டைப் பிடிச்சுக் கொண்டு வருகிற பேச்சு நிசமானால் யிண்ணு முதல்க்கொண்டு பிரான்சுக்காறருக்கும் செயம்தான். யிந்தப்பட்டணத்துக்கும் செயந்தான் சுகம். தேசங்களுக்கும் சுகம்தான். கப்பலும் வரும் இத்தனாள் கிடங்கிலே காசுக்கு அஞ்சு வெத்திலை விக்கச் சொல்லி உத்தாரம் பண்ணினார்கள்.

### *1760 வருசம் சூலை மாசம் தேதி 29; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 18; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே சூரிய உதயமாயி ரெண்டு நாழிகை

மட்டுக்கும் முசே பெடுத்தல்மீ செத்துப் போனானென்று முசே மொற்சேன் அண்டையிலே யிருக்கிற சேருவைக்காறனை நம்மண்டைக்கி சமாச்சாரம் சொல்லி தன்னை அனுப்பிவிச்சான். அதிலே நாமும் யெதிர்க்கே போனோம். முசே மொற்சேனும் நமக்கு எதிரே வந்தான். வந்தவிடத்திலே யானால் ஒருத்தரையும் காணோம். நீர் யிவ்விடத்திலே யிருந்து யெவர்களை அழைப்பிக்க வேணுமோ அவர்களை அழைப்பிச்சும் முஸ்திப்பு பண்ணச்சொல்ல வேணுமென்று சொன்னான். நல்லதென்று முச்சியரையும் அழைப்பிச்சு நம்முடய வீட்டிலே யிருந்து சிறிது காங்கு பிடவையும் அழைப்பிச்சு செத்துப் போனவன் முகத்தைப் போலே பண்ணியிருக்கும் யிதுகளையெல்லாம் கட்டச்சொல்லி திட்டம் பண்ணிவிச்சோம். அப்பிறம் மதாம் பெடுத்தல்மீயண்டை போயி முசே பெடுத்தல்மீ செத்துப் போனதுக்கு உபசாரம் சொன்னோம். மதாம் பெடுத்தல்மீ மகளுக்கும் உபசாரம் சொன்னோம். முசே பெடுத்தல்மீ உடம்பிறந்தாள் மகன் ஒருத்தன் யிருந்தான். அவனுக்கும் உபசாரம் சொன்னோம். மதாம் பெடுத்தல்மீ முகத்தைப் பார்த்தால் புருஷன் செத்துப் போனானெங்கிற விசாரமும் யில்லை. யித்தனாளை யிலேயும் யின்றைய தினம் சந்தோஷமாயிருந்தாள். அவள் மகள் மாத்திரம் சத்து முகம் துக்கமாயிருந்தாள். அவன் உடப்பிறந்தாள் மகன் முகத்திலே மாத்திரம் துக்க அசுபமாயிருந்தது.

அப்பிறம் பத்து மணிக்கி நாம் ரெண்டு தரம் மூணுதரம் போறோமென்று சொல்லச்சே முசே மொற்சேன் (M. Marcain) போறீர் யிரும் யென்று சொன்னான். அப்பிறம் பத்து மணிக்கி மேல் முசே லெறி அழைக்குறாரென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். பதினோரு மணிக்கி முசே லெறி அழைச்சனுப்பிவிச்சான். போனவிடத்திலே வீட்டுவரி சம்மதி எழுதி வரச்சொன்னேனே யென்று கேட்டார். நாம் யெழுதியிருந்த கடுதாசியைக் குடுத்தோம். அதைப் பார்த்து யிப்படி யெழுதினால் யெப்படி அந்தந்த வீடுகளை விலை மதிச்சு எழுத வேணும் யென்று சொன்னார். அப்படி யெழுத வேணுமென்றால் ஒரு கொல்லுத்து மேஸ்திரியும் ஒரு கணக்கப்பிள்ளையும் அந்தந்த வீடுகளை வீடுவீடாய் மதிச்சு எழுதினால் ஆறுமாசம் செல்லும் அல்லவென்று யென்னமாய்த் தான் சுறுக்காய்ப் பார்த்தாலும் மூணுமாசம் செல்லும் ஆனபடியினாலே உங்களுக்குப் பணம் சறுருக்கு யிப்படி ஆகாது யென்று நாம் சொன்னத்துக்கு, ஆனால் பின்னையெப்படி யென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது நானா சொல்லுகுறவன். நீங்கள் துரைகளாய் சொல்ல வேணுமென்று சொல்லி பின்னையும் வீட்டுகளை விலை வைச்சு எழுதச் சொன்னீரே விலை வைச்சால் ஆர் கொள்ளுகிறவன் பட்டணத்திலே செட்டி வற்த்தகக்குள்ளே சத்து புஷ்ட்டியா யிருந்தவன் கையிலே வாங்கிப் போட்டீர்கள். அவர்கள் பேரிலே போட்ட வரிக்கி சிறிது பேர் வீட்டுகளை வித்துக் குடுத்தார்கள். சிறிது பேர்கள் வெளியே போயிவிட்டார்கள். அவர்கள் வீடுகளும் யிருக்குது யினிமேல்

யிருக்குறவர்கள் கூலிக்காரர்களும் குப்பைத் தலையனும் அவனவன் இருபது மாசமும் முப்பது மாசமும் சம்பளம் வரயில்லை யென்று அழுகுறார்கள். ஆனபடியினாலே வீட்டுகளை விலை வைச்சு ஆகவேண்டியதில்லை யென்று சொன்னோம். ஆனால் நீர் யிதுக்கு ஒருதுகை யேற்படுத்தி சொல்லுமென்று சொன்னார். நாம் சொல்லுகுறதுக்கு கப்பாசயில்லை.

நீராய்த் தானே சொல்லவேணும் யென்று சொன்னதின் பேரிலே முன்னாலே வீடுகளெல்லாம் நாம் எடுத்தெழுதி ஒரு கடுதாசி பண்ணி யிருந்ததை முசே லாலி கேட்டு வாங்கிக் கொண்டார். அது முசே லெறி கையிலே யிருந்தது. அதை நம்முடைய கையிலே குடுத்து யிதையும் பார்த்துக் கொண்டு ஒருவகை யேற்படுத்தி நாளைக்காலமே கொண்டு வாருமென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். இத்தனாள் சாயங்காலம் அஞ்சரை மணிக்கி கேழ்க்கப்பட்ட சேதி மேஸ்தர் பிக்கட்டையும் பின்னையும் நாலஞ்சு பேர் குமிசேல்க்காரரையும் பிடிச்சுக் கொண்டு முன்னூரு பேர் மட்டுக்கும் சொலுதாதுகளையும் பிடிச்சுக் கொண்டு சதுரங்கப்பட்டணம் விட்டு யிப்பாலே பெட்டிபத்தன்சாவடி யிவ்விடத்திலே வந்தார்களென்றும் முசே பெடுத்தல்மீ செத்துப்போனதுக்கு துக்கம் யென்று முசே லாலி வந்திருக்கச்சே அங்கே வந்து யிந்தக் கபுறு சொன்னார்கள். அவரும் ரொம்ப சந்தோஷமாய் சவம் யெடுத்துப் போனவுடனே வீட்டுக்குப் போயிவிட்டார். சவம் கோட்டை வாசற்படியண்டை யெடுத்துக் கொண்டு போகச்சே முசே லெறியுடனே யிப்படி பிக்கட்டையும் நாலஞ்சு பேர் குமிசேலியரும் நாலத்து ரெண்டு பேர் கணக்கரையும் பிடிச்சுக் கொண்டு முன்னூறு பேர் சொலுதாதுகளையும் பிடிச்சுக் கொண்டு ஆலம்பறவை பெட்டி பத்தன் சாவடிக்கி வந்தார்களென்று முசே லாலிக்கு கபுறு வந்தது யென்று சொன்னார்கள். முசே லெறியும் கேட்டு சந்தோஷமாயித் தானே பேசிக் கொண்டிருந்து சவத்துடனே கூடப்போயி அடக்கம் பண்ணிப் போட்டார்கள். சவம் யெடுத்துக் கொண்டு போகச்சே கோட்டையிலே அரைக்கொடி போட்டு மினோத்தி பீரங்கி ஒண்ணொன்று போட்டுக் கொண்டிருந்தார்கள். அப்பிறம் கோவிலுக்குள்ளே சவம் போனவுடனே மூணுதரம் துப்பாக்கிச் சுட்டு அஞ்சு பீரங்கி போட்டார்கள்.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 30; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 19; புதன்கிழமை***

இத்தனாள் காலமே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே பின்னையொன்றும் விசேஷிச்சு அமில் நடக்கயில்லை. பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். நேத்தியதினம் பிக்கேட்டு அங்கே வந்தான் யிங்கே வந்தான் என்று சொன்னதாய் சேதி யின்னையதினம் பொய்யாயிருக் காணுது.

***1760 வருசம் சூலை மாசம் தேதி 31; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 20; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே வெள்ளைக்காரர் ஒருத்தரும் வரயில்லை நாம் பதினொண்ணரை மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம் பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் நடக்கயில்லை. வரி சம்மதி பின்னையொன்றும் அமில் நடக்கயில்லை. பின்னையொன்றும் சேதி கேழ்க்கப்படயில்லை.

இத்தனாள் காலத்தாலே தேவனாம்பட்டணத்திலே யிங்கேலேசுக்காரர் யிருக்கிற விடத்திலே யிருபத்தோரு பீரங்கி ரெண்டு தரம் போட்டார்கள். லக்ஷமண னாயக்கன் மண்டபத்திலே யிங்கிலீசுக்காரர் யிறங்கியிருக்கிற விடத்திலேயும் வில்லியநல்லூரிலே யிறங்கி யிருக்கிற விடத்திலேயும் யிருபத்தோரு, யிருபத்தோரு பீரங்கியும் போட்டார்கள். என்னத்துக்கென்று தெரியாது. யின்னையதினம் வரைக்கும் ரெண்டு மூணு நாளாய் நம்முட திருவேங்கிடபுரம் அக்கிறகாரம் மண்டபத்துக்கு முன்னே பந்தல் போட்டிருந்த செம்மரம் யிருபத்து நாலும் பிராமணாள் வீட்டு தாவாரத்து செம்மரம் தூண் பெரிய கட்டை கையிகள் றீப்பாயிகள் கதவு சகலமும் மைசூரார் பவுன்சு வந்து பிச்சைக்காறத் தாயோழிகள் வந்து சகலமும் பிடிங்கி வந்து வித்து தின்னுப்போட்டார்கள். யிந்த தர்மம் நம்முட தகப்பனார் உண்டாக்கினார் நாமும் முசே லெறி கையிலேயும் கடுதாசி வாங்கி குடுத்தோம். மால்த்தாரரையும் வைச்சோம். அப்படி யிருந்தும் பிடிங்கிப் போயிவிட்டார்கள். அந்த தர்மம் உண்டாக்கி அன்பது வருஷமாச்சுது. யிதுவரைக்கும் இங்கிலீசுக்காரர் கலாபம் வந்துது, நாசற்சங்கு கலாபம் வந்தது, அன்வற்திக்கான் கலாபம் வந்தது, றகுபோசி புசுரா பத்தே சங்கு முராட்டியர் கலாபம் வந்தது அப்போயெல்லாம் அந்த தர்மத்துக்கு ஒரு சேதமும் வரயில்லை. யிப்போ யிந்த பட்டணத்தை சுத்தியும் கூனிமேட்டு மாத்தூர் யிந்த மட்டுக்கும் கொள்ளை வல்லடி அடிச்சு வீடுவாசல்களெல்லாம் பிடிங்கி நிர்ப்பாந்தம் பண்ணிப்போட்டார்கள். யிந்த மைசூரார் வந்து யிந்த தருமம் காசி டில்லி கன்னியாகுமரி வரைக்கும் பேரும் கீர்த்தியும் ஆகயிருந்தது. யிந்த மண்டபத்திலேயும் அக்கிராரத்திலேயும் யிருந்தகளை ஒரு தருமங்களிலேயும் யில்லை லோகத்திலே பெண்சாதியை விட வேறில்லை எனக்கும் மங்காத்தாயைப் போலே ஒத்தவள் போயிவிட்டும் மனிசிலே கிலேசமும் விசாரமும் யில்லை.

யுவ வருசம் முதல்க் கொண்டு அஞ்சு வருஷமாய் வரதெல்லாம் வந்துது. யிருபது லக்ஷம் ரூபாயும் மடுக்கும் சிலவு ஆச்சுது. அதுகளுக்கெல்லாம் யெனக்கு விசாரமில்லை. யிந்த தருமம் போனதுக்கு யெனக்கு யிருக்கிற மனசுதாபந்தம் யிந்த மட்டுக்கும் யென்று யில்லை தண்டுக்கு விறகுயில்லை யென்று முசே லங்கற்னையும் தூக்கிப்

போடுவேனென்றும் கசோத்திலே போடச் சொல்லியும் கத்தியைப் பிடிங்கிக் கொண்டு சொலுதாதுகள் யிழுத்துக்கொண்டு போகச்சே நல்லதனமாய் உங்களுக்கு வேணுமென்ற விறகு தாறேனென்று உடம்படிக்கை சொன்னதின் பேரிலே விட்டு விட்டார்கள். ஒரு குமிசேலியேருக்கு நடந்த மரியாதை யிது. முசே லெறி கோவர்ணதோருக்கு முன்னாலே நடந்திருக்கிற மரியாதை யெல்லாம் தெரிஞ்சு யிருக்குதே. பக்காளிகள் தண்ணீர் கொண்டு வந்து வார்க்கயில்லை யென்று அவர்களுக்கு சம்பளம் குடுக்கயில்லை யென்று நயினார் சொன்னதின் பேரிலே நயினாரை கசோத்திலே போடச்சொன்னார்கள் அந்தப்படிக்கி கசோத்திலே போட்டார்கள்.

இத்தனாள் பகலைக்கு மேலாக முசே லெறியும் முசே கொடுத்தேனும் முசே திபுவாவும் மூணுபேரும் நம்மை அழைச்சனுப்பிவிச்சார்கள். நாம் போனவிடத்திலே வீட்டின் பேரிலே வரி எழுதச் சொன்னோமே அந்த லீஸ்துரு ஆச்சுதாயென்று கேட்டார்கள். ஆச்சுது நாளை காலைமே கொண்டு வருகுறோமென்று சொல்லிப் போட்டு வரச்சே முசே மொர்சேன் அழைச்சனுப்பிவிச்சான் போனவிடத்திலே யெனக்கு அஞ்சு கோடி க்ாங்குப் பிடவை வேணுமென்று கேட்டான். நல்லது விசாரிச்சுச் சொல்லுகுறேனென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்துவிட்டேன்.

# ஆகஸ்டு 1760

*1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 1; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 21; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே எழுதிக் கொண்டு போன லிஸ்துருவை முசே லெறி கையிலேக் குடுத்துது. அதுக்கு அவர் உள் வயணமும் குடிசைகள் பேரிலே விழுந்த ரூபாயை வீட்டுகள் பேரிலே போட்டு யிருக்குதென்று வயணமாம் படியே சொன்னோம். அதுகளெல்லாம் கேட்டு யிந்த லிஸ்துருவையும் பாத்து சம்மதிச்சுக் கொண்டு யிதுக்கு நடக்க வேண்டிய வயணமென்ன யென்று கேட்டார். நாம் சொன்னது "பட்டணத்திலே யென்னால் ஒண்ணும்யில்லை முன்னாலே ஆயிரம் கடை போட்டு யிருக்கும் யிப்போ சாவடி கணக்கப்பிள்ளையள் பலவந்தத்தைத் தொட்டு பத்துப் பதினஞ்சு கடை மாத்திரம் போட்டிருக்குது. அப்படி ஆளில்லாமல்ப் போச்சு" முன்னே முசேனுவார் நாளையிலே பட்டணத்திலே யிருக்கிற செனங்களெல்லாம் எழுத அன்பதினாயிரம் சனங்களிருந்தது. முசே துப்பிளேயிக்குசு நாளையிலே யிருபத்தீராயிரம் பேர் மட்டுக்கும் துகை எழுதினார்கள். யிப்போ ரெண்டு மாசத்துக்கு முன்னே எடுத்து எழுத மூவாயிரம் சில்லரை பேர் மட்டுக்கும் யிருந்தார்கள். அப்படி செனங்களெல்லாம் போயிவிட்டார்கள். அதல்லாமல் பட்டணத்திலே தானியம் எடுத்தபடியினாலே அவரவர் சம்மதியானபடிக்கி நெல்லுகளை வித்துப்போட்டார்கள். கொஞ்சநஞ்சம் வச்சிருந்ததை யிப்போ கொள்ளைக் கிடைக்காமல் பணத்துக்கு நாழி அரிசி விக்கிறதைத் தொட்டு விலை நயமாயிருக்குதென்று நாலுநாளைக்கி சாப்பாடுக்கு வைச்சிருந்தால் நெல்லுகளை ரெண்டு நாளைக்கு வைச்சுக் கொண்டு ரெண்டு நாளைய நெல்லுகளை வித்துப் போட்டார்கள். வெளியிலே யிருந்து ஒருபடி தானியம் அளவிலே பின்னையும் தினிசுகளாக வருகுறதுக்கில்லை அவரவர்கள் நாலு நாளைக்கு வைச்சிருந்ததை சாப்பிட்டுப் போட்டுப் போயிவிட்டார்கள். யில்லாத செனங்கள் ரெண்டு நாளாய் கொள்ளக் கிடையாமல் வெகுசனம் பட்டிணியாய்க் கிடக்குறார்கள். அப்படி யெல்லாம் பட்டணம் ஆளில்லாமலிருக்குது. யிந்த வரியும் போட்டால் ரொம்ப பட்டணம் பீடாய்ப்போம். யிருக்கிற செனங்களும் வெளியே போயி விடுவார்கள். அப்பிறம் யென்ன யிருக்குதென்று நாம் சொன்னத்துக்கு நீர் யென்ன மறைச்சு சொல்லுகுறது. செனங்களெல்லாம் போயிவிட்டால் நாங்களும் கப்பலேறி போயிவிடுகுறதுதான். அந்த யோசனை தான் பண்ணிக்கொண்டிருக்குறே னென்று சொன்னார். நாம் சொன்னது யிப்படி

முசே லாலியைப் போலே நூறு பேர் வந்தாலும் அவர்கள் பேரெல்லாம் எழும்பாது. யிந்தப்பட்டணத்துக்கு துரைத்தனம் நீரானபடியினாலே யிந்த கீற்த்தி உம்மைச் சேரும் ஆனபடியினாலே நீர் செனங்களுக்கு தயவு வைத்து பதினஞ்சு நாளைக்கு விசாரிச்சால் செனங்களிருக்கும் யென்று சொன்னோம் மெய்தான் நீர் சொன்னதெல்லாம் பட்டணம் ரொம்ப ஆளில்லை. ஆனால் ஆகஸ்து மாசத்தையிலே பாதியும் செத்தேம்பர் மாசத்தையிலே பாதியுமாய் தண்டச்சொல்லுவோமென்று சொல்லி யிந்தக் கடுதாசியை முசே குடுத்தேன் கையிலே குடுத்து வாங்கச் சொல்லிப் போடலாமென்று கேட்டார்.

நாம் சொன்னது அவர் வந்து சத்து கடின பிறகு நித்தி அவர் கையிலே குடுக்கப் போகாது நீர்தானே யிந்த லீஸ்துருவை வைச்சுக் கொண்டு நயினாரையும் சாவடி கணக்கப் பிள்ளையும் அழைச்சு தண்டச் சொல்லி உத்தாரம் பண்ணி அவர்கள் தண்டவும் அவர்களுக்கு கபுறு சொல்லவும் அந்தப்படிக்கி திட்டம் பண்ணி வைக்க வேண்டியதென்று சொன்னதுக்கு நல்லது யென்று சொன்னார். பின்னையும் அவர் சொன்னது முன்னே தொண்ணூறு வருஷத்துக்கு முன்னே யிப்படிதான் றாயித்தினாந்து செனரால் யென்று பதினாலு கப்பல்களுடனே வந்து யிந்த புதுச்சேரி வந்து பிடிச்சு மைலாப்பூரும் பிடிச்சு யிங்கிலீசுக்காரர் உலாந்தாக்காரர் யெல்லாரையும் செயிச்சு யிப்படி யெல்லாம் பண்ணிக்கொண்டு யிருந்தான். அவனை இங்கிலீசுக்காரர் உலாந்தாக்காரரும் கூடிக்கொண்டு யிவனைப் பிடிச்சு பிறிசெனோராக்கிக் கையெழுத்தும் வாங்கிக் கொண்டு கூட வந்தவர்களையெல்லாம் பிற செசேனார்களாக்கி உலாந்தாக்காரன் கப்பலிலே யேத்தி சீமைக்குப் போயிவிட்டான். அப்படிப் போலே முசே லாலியும் கையெழுத்துப் போட்டுக்குடுத்துப் போயிவிடுவான். போலே காணுது யென்று சொன்னார்.

அவன் முன்னே வந்தவன் தான் காரியங்களை செயம் பண்ணி தான் பிறிசெனராய்ப் போயிவிட்டான். முசே லாலி நாலாயிரம் பேர் மட்டுக்கும் சொலுதாதுகளையும் வைச்சுக் கொண்டு அய்யாயிரம் ஆறாயிரம் சிப்பாயியளும் வைச்சுக்கொண்டு ஆயிரம் குதிரையும் வச்சுக் கொண்டு குண்டுக்குள்ளே பூந்துக் கொண்டு யிருக்கிறபடியினாலே அப்படித்தானென்று நாம் சொன்னோம். மைசூரானை அழைப்பிச்சுது யெதுக்கென்றால் யிந்த பட்டணத்தைத் தானே கொள்ளை வல்லடி அடிச்சு கெடுத்துப் போடுகுறதுக்கே யல்லாமல் பின்னை வேறெயில்லை. சண்டைப்பண்ணி செயம் பண்ணிப் போறார்களெங்கிறதில்லை. உம்முட தர்ம சத்திரம் உம்முட தகப்பனாருடைய நாளையிலே உண்டானது. அன்பது வருஷமாச்சுது. அதுகளெல்லாம் யிந்த மைசூரார் மனுஷர்

பிடிங்கிப் போயிவிட்டார்களாம். அதுகளெல்லாம் முசே லாலியைத் தொட்டாம்காட்டும் யென்று சொன்னார். பின்னையும் ரெண்டு காரியம் முசே லாலிக்கு அகப்பட்டது. முசே பெடுதலேன் சம்மதி யிருபதினாயிரம் ரூபாயும் சிறிது பிடவைகளும் குடுக்கிறதாய் தீந்து முசே பெடுத்தல்மீ செத்துப் போனானே அது ஒரு சம்மதியும் அகப்பட்டுது. யிந்த ரெண்டு சம்மதியும் சுத்திக் கொண்டு போவான் யென்று சொன்னார். யிப்படியாக ரெண்டு மூணு நாழிகை மட்டுக்கும் அவர் சொல்லவும் அதுகளுக்கு யெல்லாம் உத்திரம் சொல்லவும் வெகு சம்மதியள் யெல்லாம் பேசிக்கொண்டிருந்தோம். அவர் துரைத்தனத்துக்கு வந்து அஞ்சு வருஷமாச்சுது. யிதுவரைக்குள்ளே ஒரு நாளையிலே யிப்படி மனது கரிச்சு நம்முடனே பேசினதில்லை. யின்னையதினம் அவருக்கும் நமக்கும் நடந்த விசேஷங்கள் ஆனபடியினாலே பிரான்சுக்காரருக்கும் நல்ல காலமென்றும் நமக்கும் நல்ல காலமென்றும் யெண்ண வேண்டியது. அப்பிறம் முசே துபுவாவையும் முசே கொடுத்தேனையும் அழைச்சு அனுப்பிவிச்சார்.

அவர்கள் ரெண்டு பேரும் வந்தார்கள். பதினோரு மணிக்கிப்பிறம் அரைமணிக்கி வந்தார்கள். அவர்களுக்கு யிந்த லீஸ்துருவை காண்பிச்சார் அவர்கள் பார்த்து யிந்த லீஸ்துருவை முசே லாலிக்கு காண்பிக்க வேணுமெயென்று முசே துபுவா வாங்கிக் கொண்டு போயிவிட்டான். முசே கொடுத்தேனும் போயிவிட்டான். அப்பிறம் ரெண்டு பேர் பீறங்கி மேஸ்திரியள் ரெண்டு பேர் வந்தார்கள். சென்னப்பட்டணத்திலே யிருந்து பிறிசெனாராயிருந்தவன் யிருபத்தேழாந்தேதி அவ்விடத்திலே யிருந்து வந்தான். அந்த சமாச்சாரமெல்லாம் சொல்ல வந்தார்கள். பீரங்கி மேஸ்திரியள் அவர்கள் வந்தவுடனே நாம் யிப்பாலே வந்துவிட்டோம். அப்பிறம் முசே லெறி சொன்னது "யிப்போ எழுதி வந்த வரிசம்மதி லீஸ்துரு முசே லாலிக்கு காண்பிச்சுப் போட்டான். முசே துபுவா யெடுத்துக் கொண்டு போயிவிட்டான். நமக்கு ஒண்ணுயிருக்க வேணும். அந்தப்படிக்கி எழுதிக் கொண்டு வாருமென்று" சொன்னார். நல்லதென்று சொன்னோம். அப்பிறம் பனிரெண்டடிச்சு அரைமணிக்கி பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

நேத்தயதினம் நயினாரைக் கசோத்திலே வச்சிருந்துதே யின்னையதினம் பாதிரி வீசுப்பு நொரோன்னு வினுடைய முகாந்திரமாய் யெட்டு பேர் பக்காளியர்களுக்கும் சம்பளமும் படியும் நயினார் குடுக்கவும். அவர்கள் தண்ணி கொண்டு வந்து வார்க்கவும் அந்தப்படிக்கி உடம்படிக்கை பண்ணி சீட்டு வாங்கிக் கொண்டு காவல் விட்டு விட்டார்கள் யென்று சொன்னார். யிந்த படிக்கி யிது நிமித்தியம்தான் நேத்து அவனை காவலிலே வைச்சதாய்ச் சொன்னார்கள். நாம் சாயங்காலம் மைசூரார் தண்டுக்கு சவாரி போகையிலே முசே லாலியும்

பாதிரி வீசுப்பு நொரோன்னுவும் ரெண்டு பேரும் மைசூரார் தண்டுக்குப் போயி முசே லாலி மகத்தும் (Mahudum sahib) சாயபு கூடாரத்திலே அவனுடனே பேசிக்கொண்டிருந்தார்கள். பாதிரி வீசுப்பு நோரோன்னா வெளியே யிருந்து கொண்டு சிறிது குதிரைக்காரரை பயணம் பண்ணான் யென்னத்துக்கென்றால் தெற்க்கே சென்னமனாயக்கன் பாளையம், திருப்பாபுலியூர், கூடலூர், சிதம்பரம் யிந்தமட்டுக்கும் தெற்கே போயி கொள்ளையிட்டுக் கொண்டு வரப்பயணம் பண்ணிக் கொண்டிருந்தான். அப்போ நாம் அப்படி வந்தோம். நம்மை ரங்கப்பிள்ளை யிங்கேவா வென்று அழைச்சு நாம் தமிழருக்கு வெகு சகாயம் பண்ணோம் யென்ன யென்றால் முசே லாலியண்டைக்கி முசே துபுவா ஒரு வரி சம்மதி லீஸ்துரு ஒண்ணு எழுதி வருகுறது. தமிழருக்கு குடுக்குறதுக்கு யில்லையென்று அவருக்குத் தெரியப்படச் சொல்லி வச்சேன். அந்த லீஸ்துருவைப் பார்த்தவுடனே அன்பது பேர் வெள்ளைக்காரர்கள் யிருக்கச்சே முசே லெறி ஒரு திருடன் குமிசெல்க்காரரும் திருடர் கும்பினியர் உடமை யெல்லாம் திருடிக்கொண்டு கீழேபோட்டுக் கொண்டு யிருக்குறார்கள். அதுகளையெல்லாம் நாளை நான் வாங்குறேனென்றும் நாய்கள் யென்றும் பேயென்றும் ரொம்பத்தானே விசேஷங்களாய் கோபிச்சுக் கொண்டான். உதாசீனமாயும் சொல்லி நான் தமிழர் கையிலே வாங்கச் சொன்னேனா கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி சவுரிராயன் யிவர்கள் கையிலே வாங்கச் சொன்னெனேயல்லாமல் யிப்படி யேழையள் பேரிலே வரிப்போட்டு வாங்கச் சொன்னேனா யென்பேரைப் போட்டுக் கொண்டு முசே லெறி யிப்படி யெல்லாம் செய்யுரான் யென்னமோ வந்தான் யென்று பண்ணிக்கொண்டிருக்குறான். யிதுகளெலலாம் நாம் கேழ்க்குறேன்.

வெள்ளைக்காரர் கையிலே பணம் வாங்கச் சொன்னால் தமிழர் கையிலே வாங்குறானென்று கோபிச்சுக் கொண்டார் யென்று சொல்லி யிப்போ யிந்தப்பட்டணமெல்லாம் அவன் தலையிலே யிருக்குதென்று சொன்னான். மெய்தான் யிப்போ நீர்தானே மைசூராரையும் அவர் தண்டையும் அழைப்பிச்சு சகல காரியமும் உம்முடைய முகத்து முன்னே நடக்குது உம்மைப்போலே ஆர் யிப்படி யெல்லாம் நடப்பிப்பார்கள் யென்று சொல்லி தமிழருக்காக யிப்படி ஆர் சகாயம் செய்யப்போறாரென்று நாமும் சொல்லிப்போட்டு பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 2; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 22; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனோம். முசே லெறி கோவிலுக்குப் போயி பூசை கேட்டுப்போட்டு வந்தார். வரச்சே பூச்செண்டு ஒண்ணு குடுத்து ஆசாரம் பண்ணினோம். ஆ உம்முடைய கையிலே செண்டாயென்று சந்தோஷமாய் வாயினாலே சொல்லி வாங்கிக்

கொண்டார். அப்பிறம் நம்முட சத்திரம் எல்லாம் மைசூரார் மனுஷர் பிடிங்கி வந்தார்களே அதிலே விலைக்கி சிறிது வாங்கினோம். அது வண்டியிலே யெடுத்து வருகுறதுக்கு வாசற்படியிலே மறிக்குறார்கள். அதுக்கு ஒரு சீட்டு குடுக்கவேணும் யென்று கேட்டோம். நல்லதென்று வாசற்படிக்கி ஒரு சீட்டு குடுத்தார். அக்கிராரத்திலே அவர்கள் பிடிங்கிக் கொண்டு போகச்சே சிறிது மறிச்சு யிருக்குறோம். அது எடுத்து வருகுறதுக்கு சலங்குக்கு உத்தாரம் பண்ணவேணும் யென்று சொன்னோம். ராமச்சந்திரராயனை அழைச்சு ரெண்டு மூணு சலங்கு யென்ன கேழ்க்குறாரோ அது குடுத்து அந்த மரங்களெல்லாம் கொண்டுவந்து சேத்துப்போடச் சொல்லி சொன்னார். அதிலே முசே லங்கற்னை வந்து யென்ன யென்று கேட்டான். முசே லெறி சொன்னது ரங்கப்பிள்ளை தகப்பனார் திருவங்கிட பிள்ளை கட்டின சத்திரம் சாவடியெல்லாம் மைசூரார் பிடிங்கிப் போட்டார்கள் யென்று சொன்னார். முசே லங்கற்னை சொன்னதுக்கு "நேத்து முசே லாலி மைசூரார் தண்டுக்குப் போயி பார்த்தவிடத்திலே அவர் சொன்னது ரங்கப்பிள்ளை தோட்டம் ஒண்ணு தவிர மத்ததெல்லாம் தோட்டமெல்லாம் சாலைகூட வெட்டிப்போடச் சொல்லி உத்தாரம் பண்ணாரென்று" முசே லங்கற்ணை சொன்னான். அப்பிறம் குமிசெல் கூட குமிசெல்க்காரரெல்லாம் வந்தார்கள். குமிசெல்க்கூட குமிசெல் வீட்டே போனார்கள். நாம் பிறப்பட்டு பத்தே முக்கால் மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். நேத்தும் யின்னும் முசே லெறி நம்முடனே தயவாய் கலந்து பேசுகுறார். அது யின்னம் நடக்கச்சே அறிய வேண்டியது.

இத்தனாள் சாயங்காலம் நாலரை மணிக்கு சென்னப்பட்டணத்து வாசற்படியிலே மைசூராருடைய சிப்பாயி ஒருத்தன் ரெண்டு மூணுபேர் துபாசியளை அடிச்சான். அவர்கள் வந்து வாசற்படியிலே யிருக்கிற ஒப்பிசியாலுடனே சொன்னார்கள். அந்த ஒப்பிசியால் நாலு பேர் சொலுதாதுகளை அனுப்பி அந்த சிப்பாயியைப் பிடிச்சு வரச்சொல்லி சொன்னான்.

பிடிக்கப் போனவிடத்திலே கூடவந்த சிப்பாயியளை கத்தியை உருவிக்கொண்டான். யிவர்கள் துப்பாக்கியை திருப்பிக் கொண்டார்கள். அதின்பேரிலே கத்தியை உருவிக்கொண்ட சிப்பாயி ஓடிப்போயிவிட்டான். அடிச்ச சிப்பாயியை அழைச்சு வந்தார்கள். ஒப்பிசியால் ஏன் அடிச்சாயென்று கேட்டதின் பேரிலே அத்தே பிரிங்கி பாண்சோத்து யென்று கையிலே யிருந்த தடியினாலே நாலஞ்சடி நண்ணாய்த் தானே அந்த ஒப்பிசியாலை அடிச்சான். அதின்பேரிலே அந்த சிப்பாயியை நாலுபேர் துப்பாக்கிக்காரர் வெள்ளைக்காரரையும் சட்டைக்காரரையும் கூட்டி முசே லாலியண்டைக்கி அந்த ஒப்பிசியால் அனுப்பிவிச்சான். அப்படி மைசூரார் தண்டுக்காரர் பறையர் கூடயிந்த பிரான்சுக்காரர்

ஒப்பிசியால்மார் துரைத்தனம் பண்ணுறவரைக் கூட நாயைப் பார்க்குறாப்போலே பார்க்குறார் களேயல்லாமல் பின்னை மனுஷாளைப் பார்க்கிராப்போலே பார்க்கயில்லை. யிப்படி யெல்லாம் யெதுனாலே நடக்குது யென்றால் முசே லாலி மைசூராரைக் கோரிமத்தத்து அழைச்சபடியினாலே அவர்கள் யிவர்களை ஒருகாசாய் மதிக்கயில்லை. இத்தனாள் குமிசெல் கூடினது பட்டணத்திலே வீட்டுவரி வாங்கத் தக்கதாகவும் பின்னையும் பேச வேண்டிய•சம்மதியளுக்கும் பேசினதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் மைசூராருடைய பவுன்சுக்கு சிலவுக்கு தியாக துற்கத்திலே யிருந்து முப்பதினாயிரம் பொன் கெண்டேரிவராகன் பொன் அறுபது குதிரைக்காரர் கொண்டு வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் ராமலிங்கம்பிள்ளை மனுஷன் ஒருத்தன் தண்டிலே வெள்ளைக்காரருக்கு குடுக்கிற சாரயத்திலே குறைச்சு வார்த்தானென்று தண்டிலே முதலியார் கோவில் ரெட்டியார் பாளையத் தண்டுயிருக்குதே அவ்விடத்திலே தூக்கிப் போட்டார்களென்று சேதி கேழ்க்கப்பட்டது.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 3; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 23; ஞாயிற்றுக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போயி முசே லெறியைக் கொண்டு ஆசாரம் பண்ணி பூச்செண்டு ஒண்ணு குடுத்தேன். அதை வாங்கிக் கொண்டு ரொம்ப சந்தோஷப்பட்டுத்தானே ஆசாரம் பண்ணி நீர் யென் பேரிலே ரொம்ப பிறீதியாயிருக்கிறீரென்று சொன்னார். ஆண்டவனே நான் யெப்போதும் தங்களிடத்திலே பிறீதியாயிருக்கிறது தான் யென் பொல்லாத காலத்தி வேளை வேறையெண்ணப்பட்டுது. உங்களுக்கு அப்படி தோத்துப்பட்டு யிருந்ததென்று சொன்னோம். அதுக்கு சந்தோஷமாய் ரொம்ப மரியாதையாய் ஆசாரம் பண்ணார். அப்பிறம் நம்முட அக்கிறகாரத்திலே யிருந்து தட்டு முட்டு சாமான்கள் எல்லாம் யிப்பால் விட்டுவிடச் சொல்லி வழிக்கி எழுதிக் கொண்டு போன கடுதாசியைக் காண்பிச்சோம். அதைப்பார்த்து நேத்துத் தானே முசே லாலி உத்தாரம் பண்ணார். வெளிகளிலே யிருந்து மரம் மட்டும் யென்ன வருகுதோ அதுகளெல்லாம் விட்டுவிடச் சொல்லி உத்தாரம் பண்ணார். ஆனால் யிதுவுமிருக்கட்டும் யென்று வெளியே யிருந்தவர்கள் தாம் தானே உள்ளே வந்து அந்தக் கடுதாசியிலே கையெழுத்துப்போட்டு குடுத்தார். வாங்கிக்கொண்டோம். அப்பிறம் வீட்டு வரி சம்மதி நிமித்தியம் நாளையதினம் மகானாட்டாருடைய நாட்டாமைக்காரரை யெல்லாம் அழைச்சுக் கொண்டு வாருமென்று சொன்னார். நல்லதென்று சொன்னோம். மைசூராருக்குச் சிலவுக்கு கண்டேராயன் முப்பதுனாயிரம் பொன்வந்து தாம் மெய்தானாயென்று கேட்டார் என்று சொன்னார்கள். வந்துதென்று

சொன்னோம். சென்னப்பட்டணத்திலே யிருந்து பிக்கட்டை (Mr. Pigot)ப் பிடிச்சு வந்தார்களென்று சொன்னார்களே. மெய்தானா? யென்று கேட்டார். பிக்கட்டைப் பிடிச்சு வந்த சமச்சாரம் வந்ததைக் காணோம் பிறிசினோரா யிருந்தவர்களை யென்னமோ சிறிது பேரைப்பிடிச்சு செஞ்சியே கொண்டு போனார்களென்று ரெண்டு மூணுநாளாய் சொல்லுகுறார்களென்று சொன்னோம். அதுக்கு யிதுகளை விட மிக்க விசேஷமான சமாச்சாரமுண்டு யென்று சொன்னார். பின்னையும் யென்ன சமாச்சாரமென்று கேட்டார். யென்னயிருக்குது பட்டணம் யிருக்கிற நிறுவாகம்தான் தங்களுக்குத் தெரிஞ்சு யிருக்குதே பதினாயிரம் பேர் யிருந்தாலும் அவர்களை யெல்லாம் சொல்லார்கள். உங்களையாம் காட்டும் சொல்லுவார்கள். ஆனபடியினாலே யிந்த வேளையிலே செனங்கள் பேரிலே தயவு பண்ணி விசாரிச்சு வச்சிருக்க வேணுமென்று சொன்னோம். யிதுவெல்லாம் தங்களுக்காம் காட்டும். யிப்படி பேசிக்கொண்டிருக்கச்சே ரெண்டு மூணு வெள்ளைக்காரர் வந்தார்கள். வந்தவுடனே நாம் ஆசாரம் பண்ணி அனுப்பிவிச்சுக்கொண்டு வரச்சே ராமச்சந்திரராயனும் பாபுராயனும் கந்தப்பமுதலியும் யிவர்கள் முசே துபுவா வீட்டுக்குப் போயி வந்து நம்முடனே சொன்னது, "சிப்பாயியள் சம்மதிக்கி ஒருபேர் வழிக்கு நாலு பேர்வழி செட்டியளும் அவர்களுமாய் அப்படி யெட்டு பேர்வழிக்கு மாத்திரம் யெழுதியிருந்தது. உங்கள் பேருக்கு யெழுதயில்லை. அதை நாங்கள் பாத்து முசே துபுவா உடனே சொன்னோம். அவனும் பார்த்து மெய்தானென்று சொன்னான் என்று சொல்லி யிதுகளெல்லாம் எழுதிக்கொண்டு வருகுறேன். நீங்கள் கோட்டைக்கி போங்களென்று முசே துபுவா சொன்னான்" யென்று சொன்னார்கள். நாம் சொன்னது, "உங்கள் உபகாரம் நமக்குத் தேவையில்லை. அது எழுதிவிச்ச மனுஷரையும் அறிவேன். யெழுதின வெள்ளைக்காரன் மெய்தான் யெட்டு பேருக்கு மாத்திரம் எழுதி யிருக்குது. ஒரு பேர்வழிக்கி யெழுதயில்லை யென்று யெப்போ சொன்னானே அவன் பேரிலே யில்லை. ஆனால் எட்டுப் பிறிச்சு யெழுதச்சே நம்முட பேருக்கும் எழுதி யிருக்கப் போகுது யென்று சொல்லிப்" போட்டு வீட்டுக்கு வந்தார்கள். நாமும் வீட்டுக்கு வந்துவிட்டோம். அவர்களெல்லாம் முசே துபுவா கோட்டைக்கி வந்து கையெழுத்து வாங்கித் தருகிறேனென்று சொன்னானென்று காத்துக் கொண்டிருந்தார்கள். முசே துபுவா வந்து சமாச்சாரம் யினிமேல் தெரிஞ்சு யெழுத வேண்டியது.

இத்தனாள் முசே பெடுத்தலேனை தூக்கிப் போடுத்றகு தீந்திருக்கிறதை முசே லாலி யின்னைக்கி இருபத்தையாயிரம் ரூபாய் குடுக்கச சொல்லி சீவன் மாப்பு பண்ணதின் பேரிலே முசே துலோராம்

பெண்சாதியும், முசே லபோம் (M. Le Beaume) பெண்சாதியும் ரெண்டுபேரும் ஊரிலே யாசகத்துக்குப் பிறப்பட்டு வெள்ளைக்காரத் தெருவிலே நூத்தருபது மரர்க்கு வெள்ளித்தட்டு முட்டு யாசகம் குடுத்தார்கள். யிப்பால் தமிழர் வீட்டுகளிலே பத்து அஞ்சு ரூபாயிக்கு அவரவர்களுக்கு தோணினது குடுக்க சொல்லி கேட்டார்கள். நம்முட வீட்டுக்கும் வந்தார்கள். நாமும் நமக்குத் தோணினது புதுச்சேரி பிரை விராகன் யெட்டு குடுத்தோம்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 4; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 24; திங்கள்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போக வேணுமென்று போகச்சே மதாம் பெடுத்தல்மீ அழைக்குறாறென்று வந்தழைச்சார்கள். போனவிடத்திலே ஒப்பிசேக்கு காங்குப்பிடவை வேணுமென்று கேட்டாள். நம்முடைய வீட்டிலே யிருக்கிற பிடவையும் குடுக்கிறோம். நீங்களும் சாவடி மணியக்காறருடனே சொல்லியிருக்கிறீர்களே வந்தது போக மத்தது குறைவுபட்டதை யிந்த வற்த்தகன் குடுப்பானென்று தையலப்ப செட்டியை அழைச்சு அவனைத் கலிச்சுப் போட்டு கோட்டைக்கி போகவேணுமென்று பிறப்படச்சே துரை அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைச்சார். நயினாரையும் அழைச்சுவரச்சொன்னார். மகாநாட்டாரையும் அழைச்சுவரச் சொன்னாரென்று சொன்னான். முன்னே தானே கோட்டையிலே நயினாரும் வந்திருந்தான். நாமும் கோட்டைக்கிப் போனோம். போன உடனே முசே கொடுத்தேனை அழைச்சனுப்பிவிச்சார். அவன் பத்து மணிக்கி வந்தான். முசே துபுவாவை அழைச்சனுப்பிவிச்சதுக்கு அவன் பதினொண்ணே முக்கால் மணிக்கி வந்தான். அப்பறம் முசே லெறி நம்மையழைச்சு யின்னையதினம் நேரம் சென்னுபோச்சுது. நாளை ஒன்பது மணிக்கி மகாநாட்டாரை யெல்லாம் வரச்சொல்லுமென்று சொன்னார் சொல்லச்சே அவர் முகத்தைப் பார்த்தால் செத்துப்போற பிரேதத்து முகத்திலேயாகிலும் சத்துகளை யிருக்கும் அதுதானும் யில்லை. சொல்லச்சே முகத்திலே கோபமாய்க் கண்டது யிதுகளெல்லாம் யெதனாலே யென்றால் முசே லாலி முசே லெறியை திருடனென்றும் கன்னக்காறனென்றும் விசேஷங்களை யேறக்குறைய பேசின விசேஷமெல்லாம் அவரவர் வந்து சொல்ல சவிஸ்தாரமாய் கேட்டபடியினாலே யிந்த குறிகளெல்லாம் கண்டுது. அப்பிறம் ராமலிங்கம் வீட்டுக்குப் பிறப்பட்டு வரச்சே நயினாரையும் மகானாட்டாரையும் காலமே யேழு மணிக்கி வரச்சொல்லி வராதவர் கையிலே இருபத்துனாலு (24) விராகன் அபராதம் வாங்குவோமென்று சொல்லிப்போட்டு பனிரெண்டடிச்ச உடனே வீட்டுக்கு வந்து விட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் கேழ்க்கப்பட்ட சேதி யென்னயென்றால் மகானாட்டார் நம்முடனே வந்து சொன்ன வீட்டு வரி யெழுதினது சம்மதிக்கி முசே லாலி அவர்கள் பேருக்கு ஒருபித்திசாமும் யெழுதி கொண்டோம். அதை அவர் பார்த்து யிந்த வரி உங்கள் கையிலே வாங்கத் தக்கனதில்லை. நாளை அந்த வரியெழுதின கடுதாசியை அழைப்பிச்சு துணுக்கை துணுக்கையாயி கிழிச்சுப் போடுகுறோம். நீங்கள் சிந்தை பண்ணாதே போங்களென்று சொல்லி நான் முன்னே தானே கடுதாசி யெழுதி கட்டியிருக்கிறேன் முசே லெறி பின்னையும் யாராகிலும் என்ன அனியாயமாய் பண்ணாலும் என்னுடனே வந்து சொல்லுங்களென்று சொல்லி எழுதி யிருந்தேனே யேன் சொல்லாமல் போனீர்களென்று கேட்டார். முசே லெறி கும்பினியார் மனுஷராய் பட்டணத்துக்கும் கோவர்ணதோராய் யிருந்தபடியினாலே யிந்தமட்டுக்கும் அவர் சொன்னபடிக்கி கேட்டோம் யினிமேல் யெங்களுக்கு நிறுவாகமில்லை அவரவருக்கு குடிக்கிறதுக்கு கஞ்சியில்லை. ஆனபடியினாலே தங்களுடனே சொல்லிக் கொண்டோம் என்று சொன்னார்கள். அதன் பேரிலே நல்லது அந்த வரியும் குடுக்கத் தேவையில்லை. வரியெழுதின கடுதாசியும் கிழிச்சுப் போடுறோம் போங்கள் யென்று முசே லாலி சொன்னாரென்று வந்து சொன்னார்கள். முசே புரி மகன் தோட்டத்தை ராமலிங்கம்பிள்ளை மனுஷர் போயி வெட்டினதின் பேரிலே அவன் ராமலிங்கப்பிள்ளை மனுஷரை முசே பனோவுடனே சொல்லி காவலிலே வைச்சான். ராமலிங்கம்பிள்ளை போயி முசே லாலியுடனே சொல்லிக் கொண்டான் முசே லாலி முசே புரி மகனை கோட்டையிலே பதினோரு மணிக்கி கொஞ்சனாது பண்ணச் சொன்னானெங்கிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி தேவனாம்பட்டணத்துக்கு யிங்கிலீசுக்காரருடைய கப்பல் ஆறுகப்பல் லென்றும் மூணு கப்பலென்றும் அதிலே ரெண்டாயிரம் பேர் சொலுதாதுயென்று ஆயிரத்தன்னூறு பேர் சொலுதாதென்றும் அந்தக் கப்பல் சீமையிலே யிருந்து வந்ததென்றும், பொம்பாயிலே யிருந்தும் வந்ததென்றும் அந்த சொலுதாதுகளைக் கரையிலே யிறக்கி ஒப்பிசியால்மார் அவர்களுக்கெல்லாம் யிருசப்பசெட்டி வீடு பின்னையும் தமிழர் வீடுகளெல்லாம் விடுதிவிட்டு கூடலூரிலே யிருக்குறார்களென்றும் உள்ளே யிருந்த சிப்பாயிகள் யெல்லாம் குண்டுசாலை வைத்துப்போட்டார்களென்றும் நாகப்பட்டணத்திலே யிருந்து பழவேர்க்காடுக்குப் போறவழிப் போக்கர் ரெண்டு மூணு பேர் நம்முடனே சொன்னார்கள். நாங்கள் பார்த்தோமென்று சொன்னார்கள். ஆனால், அன்னூறு அறுநூறு பேர் சொலுதாதுகள் மட்டுக்கும் குறைஞ்சு யிருக்குறது யென்று யோசனை பண்ணிக்கொண்டோம்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 5; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 25; செவ்வாயிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே யெட்டரை மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே துபுவாவும் யெட்டரை மணிக்கி வந்தான். முசே கொடுத்தேன் ஒன்பது மணிக்கி சரியாய் வந்தான். வந்தவுடனே நம்மை அழைச்சு மகாநாட்டாரை அழைக்கச் சொன்னார்கள். அவர்களும் வந்தார்கள். வந்தவுடனே வீட்டின் பேரிலே யெழுதின வரி சம்மதி தாக்கசை (Tak) யெடுத்து கல்வீட்டுக்கு பதினஞ்சு ரூபாயும் கூரை வீட்டுக்கு ஆறரை ரூபாயும் யிந்தப்படிக்கி நீங்கள் சாதி சாதிகளுக்கு விதிச்சுக் கொண்டு குடுத்து விடுங்கள் யென்று சொன்னார்கள். அதன்பேரிலே மகானாட்டார் சொன்னது யெங்களுக்கானால் குடுக்குறதுக்கு நிறுவாகமில்லை. ஊரிலேயா கொள்ளக்கிடைக்கயில்லை. ஆறுமாசமாய் வெளியிலே யிருந்து தானியதவசம் வருகிறதுக்குயில்லை. கனகசபை முதலி சொன்னது "யெனக்கு ஆயிரம் ரூபாயும் முன்னே வரிபோட்டதுக்கு யெங்கள் உம்பிறை மேலே போட்டு வாங்கிக் கொள்ளச் சொல்லி உத்தாரம் பண்ணீர்கள். அது வாங்கிறதுக்கு படாதபாடும் பட்டு வாங்குறதுக்கில்லாமல் முன்னூறு ரூபாய் அப்பாலே வாங்கிச் செலுத்தியிருக்கிறேன். யிப்பவே அரை வரிசை முக்கால் வரிசை செனங்கள் வெளியே போயிவிட்டார்கள். கொள்ளக் கிடைக்காததைத் தொட்டு யின்னம் இருக்கிற செனங்களும் போயிவிடுவார்கள். யிந்த வரியும் போட்டால் ஆர் குடுக்குறவர்கள் குடுக்குறதுக்கில்லை யென்று" சொன்னதின் பேரிலே அப்படி அல்லா யெப்படியாகிலும் குடுக்கயில்லை யென்று எட்டு நாளைக்குள்ளே கப்பல் வந்தால் நீங்கள் யிந்தவரிக்கி குடுக்கத் தேவையில்லை. கப்பல் வராவிட்டால் யிந்த வரிப்பணம் யிந்த மாசத்திலே பாதியும் பிறக்கிற மாசம் பாதியும் குடுங்களென்று சொன்னார்கள்.

அப்பிறம் மகானாட்டார் சொல்லத் தக்கின சம்மதியளெல்லாம் சொன்னார்கள். சொல்லியும் அவர்கள் பணம் குடுக்க வேணுமென்று பேசினார்கள். அப்பால் முசே லெறி பேருக்கு எழுதின பித்திசானம் குடுத்தார்கள். அதை முசே லெறி வாங்கிக் கொண்டு யெல்லாரும் கேழ்க்கத்தக்கதாய் கெட்டியாய் படிச்சார். அதிலே எழுதியிருக்கிறது முசே னுவார் நாளையிலே க்ஷாமம் வந்து கொள்ளக் கிடைக்காமல் பட்டணத்திலே செனங்களெல்லாம் ரொம்ப கஷ்டப்படச்சே கண்ணுக்கு நெமையானது யெப்படி காத்துக் கொள்ளுமோ அப்படிக்போலே செனங்கள் நிமித்தியம் அங்கங்கே யிருந்த தானிய தவசங்கள் அழைப்பிச்சு செனங்களை ரட்சிச்சார். அதல்லாமல் நவதானியங்களுக்கும் தீர்வை தள்ளிப் போட்டார். முசே பெவுலியோர் (M. Beauvoilieres) நாளையிலே

சுத்துக்கோட்டை வரி நாலாயிரம் விராகன் போட்டு வாங்கின வரியும் தள்ளிப்போட்டார். காசுக்கடை குத்தகை ஆயிரம் வராகன் அதுவும் தள்ளிப்போட்டார். யிப்படி யெல்லாம் செனங்களுக்கு ஆக வெகு சகாயங்களெல்லாம் பண்ணினார். செனங்களுக்கு யெந்த வேளையிலே யென்ன வருகுதோ அந்த வேளையிலே கண்ணுக்கு நெமையானது யெப்படி கார்க்குமோ அந்தப்படிக்கி காத்து செனங்களையும் ரக்ஷிச்சுப்போட்டார்கள். பட்டணமும் அவர் நாளையிலே தான் பட்டணமென்று யேற்பட்டது. அந்தப்படியாங்காட்டும் யின்னேர வரைக்கும் மூணுதரம் நாலுதரம் வரிப்போட்டதுக்கும் தாளினது தாளாது யென்று யிப்படியெல்லாம் முசேனுவார் துரைத்தனத்திலே செனங்களுக்காக அவர் பிறயாசைப்பட்டு செனங்களை யெந்தெந்த விதங்களிலே காப்பாத்தினாரோ அதுகளெல்லாம் வயணமாய் எழுதியிருந்தது. அதை முசே கொடுத்தேன் கேட்டு மெய்தான் துரைத்தனத்தார் வெகுபேர் சொல்லச்சே நானும் கெட்டியாயிருக்குமென்று சொல்லி யிவருக்கும் அப்படி பத்தத்தினி அதிகமாய் நடப்பிக்க வேணுமென்கிற மனசுதான் ஆனால் உங்களுடைய அதிருஷ்ட்ட முன்னப்பட்ட தென்றும் காலத்தினுடைய யேதுவையும் யிப்படி யெல்லாம் நடக்கிறதெல்லாம் யென்று சொல்லியிந்த பித்திசாம் யெழுதினவர்கள் ஆரு? வெகுகெட்டிக்காரர் புருவீகமாய் சீமையிலே யிதுகளெல்லாம் நடக்கச்சே கூட யிருந்தவனாய்க் காணுது. ஆனால் வெகு கெட்டிக்காரர்கள் அதிலே முசே துபுவா யிருந்து கொண்டு யிந்த லிஸ்துரு யெழுதினவன் தான் யிந்த பித்திசாம் எழுதினது யென்றும் வரியெழுதினவன் தான் என்றும் ரெண்டும் பார்த்து சொன்னானாம். சும்மா கேட்டுக் கொண்டிருந்தோம்.

அப்பிறமும் யிவர்கள் பணமும் வாங்கிற பேச்சே பேசினார்கள். அதிலே மகாநாட்டார் சொன்னது நேத்து முசே லாலியுடனே சொல்லிக்கொண்டோம். அவர் யிந்தவரி நீங்கள் குடுக்க தேவையில்லை போங்கள் யென்று சொன்னாரென்று சொன்னார்கள். அதிலே முசே துபுவா யிருந்துகொண்டு முசே லெறியுடனே சொன்னது தமிழர் மூணுதரம் நாலுதரம் குடுத்திருக்கிறார்கள். யினிமேல் அவர்கள் குடுக்கமாட்டார்களென்று நிறுவாகம் யில்லையென்று வெள்ளைக்காரர் கையிலே வாங்க வேணுமெங்கிறது மனசிலே யிருக்குது. நேத்து முசே லங்கறனை (M. Le grenea) அழைச்சு வெள்ளைக்காரர் பேரிலே வரியெழுதி வரச்சொன்னேனே. யின்னம் ஏன் யெழுதி வரயில்லை யென்று முசே லாலி கோபிச்சக்கொண்டார். ஆனபடியினாலே யினிமேல் வெள்ளைக்காரர் பேரிலே வாங்கிறதுக்கும் அவருக்கு மனசுயில்லாமல் தமிழர் கையிலே வாங்குறதுக்கும் மனசுயில்லை யென்றும் சொன்னான். அதன் பேரிலே முசே லெறி முசே துபுவா வைத்தானே கூட்டி முசே லாலி யண்டைக்கி அனுப்பிவிச்சார் யிந்த வரி வாங்கத்தக்கதாக அப்பிறம்

வீட்டின் பேரிலே எழுதின தாக்கிசிலே முசே லெறி கையெழுத்துப்போட்டு நயினாரையும், சாவடி கணக்கப்பிள்ளையும் அழைச்சு அவர்கள் கையிலே குடுத்து யிந்தப்படிக்கி அவரவர் பேரிலே தமிழிலே எழுதிக்கொண்டு யிப்படிக்கி அவரவர் பேரிலே வாங்கிப் போடுங்களென்று சொல்லி சாவடிப் போங்களென்று கூட்டி அனுப்பிவிச்சார்கள்.

அப்பிறம் முசே துபுவா சிப்பாயியள் சம்மதிக்கி ஒரு கடுதாசியொன்று எழுதிக் கொண்டு வந்தான். அதிலே ஒரு பேர்வழிக்கி நாலு பேர்வழி விழுக்காடு யெட்டுபேர் வழிக்கு மாத்திரம் அதிலே யிருந்தது. அதைப்படிச்சுக் காண்பிச்சான். அதை நாம் கொண்டு போய் நாலு அஞ்சு பேர்வழி மாத்திரம் அழகிய மணவாளசெட்டி பொன்னப்பசெட்டி யென்றும் யிப்படி எழுதியிருக்குது அவர்கள் குடுக்கமாட்டார்கள். அவர்கள் முன்னாலே குடுத்திருக்குறார்கள். அவர்கள் பரிபத்தியத்தைத் தொட்டாங்காட்டும் பரவசனையாய் வெளியே திரிஞ்சு கொண்டிருக்கிறதும் அவர்களுக்கு வெளியே யிருக்கிற பேராங்காட்டும் பரபத்தியங் குடுத்திருக்கிறவர்கள் அவர்களெல்லாம் வந்து யிவர்கள் தோட்டம் குடுத்திருக்குறார்கள். நம்முட பணத்தை நாம் வாங்கிக் கொள்ளுவோமென்று வந்து யிவர்களை உள்ளுக்குள்ளே ரொம்ப கண்டிச்சு கண்டிதமாய் கேட்டார்கள். யிவர்களுக்கு குடுக்கிறதுக்கு நிறுவாகம் யில்லாதபடியினாலே நாங்கள் ஆயிரம் ரெண்டாயிரம் தெண்டம் குடுத்தோம். உங்கள் கையிலே பதினாயிரம் யிருபதினாயிரம் வாங்கிப்போடச் சொல்லுகுறோமென்று மெரட்டினதின் பேரிலே அவர்களெல்லாம் ஓடிப்போயி விட்டார்கள் யென்று சொன்னதின் பேரிலே முசே கொடுத்தேன் யிருந்து கொண்டு தான் வங்காளத்திலே வர்ததகர் யெல்லாரும் கொள்ளல் விக்கல் லக்ஷக்கணக்கிலே மகாராசராயிருப்பார்கள். அவர்களுக்கு யிப்படி ஒரு யிக்கட்டு யிசை கேடு வந்தால் அந்த வேளையிலே பரபத்தியக்காரர் வந்து யெனக்கு குடுக்க வேணும் உனக்கு குடுக்க வேணும் யென்று லக்ஷம் ரெண்டு லக்ஷம் மூன்று லெக்ஷம் ரூபாயிக்கு கணக்குச் சொல்லுவார்கள். அப்படித்தான் வர்த்தகருடைய நடத்தையெல்லாம் பரபத்திய நாணயம் தான் அவர்கள் சுபாவம் யென்று யெல்லாம் சொன்னான். அதன்பேரிலே முசேலெறி யெட்டு பேர்வழிக்கி யெழுதி யிருக்கிறதே யிவர்களெல்லாம் யென்ன யென்று கேட்டார். முசே துபுவா அவருக்கும் யெழுத வேண்டிய ஞாயம் தானென்று சொன்னார். அந்தக் கடுதாசியிலே யிருக்கும் அப்படித்தானே என்று பேர் எழுதி கையெழுத்து போட்டு முசேலெறி நம்முடைய கையிலே குடுத்தார் நாம் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

அப்பிறம் மகானாட்டார் முசே லாலியண்டைக்கிப் போனார்கள் நேத்து தானே சொன்னேனே உங்களுக்கு வரிகுடுக்க தேவையில்லை.

குடுக்க வேண்டாம் போங்களென்று சொன்னேன் ஏன் வந்தீர்கள் என்று கேட்டார். அவர்கள் சொன்னது நீங்கள் போங்களென்று சொன்னார். முசே லெறியும் முசே திபுவாவும் சொன்னீர்கள். இன்னைக்கி முசே கொடுத்தேனும் யெங்களை அழைப்பிக்கச் சொன்னதாக நயினார் கையிலே ஒப்பிவிச்சு சாவடிக்கணக்கப் பிள்ளையும் அழைப்பிச்சு யிந்தப்படி வரிவாங்கச் சொல்லி சாவடிக்கி கூட்டி அனுப்பிவிச்சார்களென்று சொன்னதின் பேரிலே முசே கொடுத்தேனண்டை அழைக்கச் சொன்னார். அதிலே முசே திபுவா வந்தான். அவனையென்னன்னமோ கோபிச்சக் கொண்டார்.

அப்பிறம் முசே கொடுத்தேன் வந்தான். அவனையும் ரெண்டு நாழிகை மட்டுக்கும் ரொம்ப கோபிச்சுக் கொண்டான் வீடுகள் யெல்லாம் எடுத்துக்கொண்டு போறாப்போலே விசேஷங்களை யெல்லாம் முசேலாலி உரத்துப் பேசினார். அப்பிறம் முசியே திபுவாவும் முசே கொடுத்தேனும் போயிவிட்டார்கள். அவர்கள் முசே கொடுத்தேனைப் பார்த்து அவர் வந்ததால் ரொம்ப செத்து அசந்து போனார்கள் முசே லாலியும் உள்ளே தானே யிருந்துவிட்டார். அப்பிறம் கண்டு பேசுகுறதுக்கு சமையமில்லை. அதனால் அவருடைய துபாசியை என்ன யென்று கேட்டால் உங்களுக்கு வரிதேவையில்லை யென்று தள்ளிப்போட்டார். நீங்கள் போங்களென்று சொன்னான். அப்பிறம் முசே கொடுத்தேன் அண்டையிலே வந்தார்கள். வந்து காண்பிச்சுக் கொண்டார்கள். ஏன்யென்று முசே கொடுத்தேன் கேட்டான். வரி சம்மதிக்கி முசே லாலியவர்களுடனே சொல்லிக் கொண்டோம். உங்களை அழைச்சு சொல்லுகுறோமென்று சொன்னார்களென்று சொன்னதுக்கு நல்லது போங்களென்று முசே கொடுத்தேன் சொன்னான் யென்று அதன்பேரிலே நாங்கள் வந்து விட்டோமென்று மகாநாட்டார் நம்முடனே வந்து சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலம் முசே லாலி வீட்டுக்கு முசே லெறி போனார். கோடுத்தேனும் வந்திருந்தான். சாவடிக்கணக்கப் பிள்ளையை அழைச்சனுப்பிவிச்சு நம்முடனே சொல்லி அனுப்பிவிச்சார்கள். அந்தப்படிக்கி சொல்லிப் போட்டுப் போனார்கள். முசே லெறி முதலாகிய குமிசெல்க்காரர் யெல்லாரும் வந்திருந்தார்கள். அந்தப்படியே விசாரிச்சு தெரிஞ்சு நாளையத்தினம் எழுதவேண்டியது.

இத்தனாள் மைசூரார் மகத்தம நாயக்கன் யெங்களுக்கானால் திண்ண சோறுமில்லை. கொள்ளக் கிடைக்கவுமில்லை. நாங்களெப்படி நிறுவாகம் பண்ணுவோம். ஒண்ணு செஞ்சியிலே போயிருக்குறோம் ஒண்ணு விழுப்புரம் அந்தவிடங்களிலே போயிருக்குறோம் ஒண்ணு சண்டைக்கி உத்தாரம் குடுங்கள் யில்லாவிட்டால் யெங்களுக்கு தினத்துக்கு பக்காபடி அரிசியும் குதிரையளுக்கு கொள்ளும் குடுத்தால்

நிறுவாகமாகும் யில்லாவிட்டால் நாங்கள் போயிவிடுகுறோமென்று சொன்னதின் பேரிலே பட்டணத்திலே யிருந்து ஒருபடி அரிசி வெளியே விடாமல் வாசற்படியிலே தாக்கீது பண்ணி யிருந்துதே மறிக்கத் தேவையில்லை. தண்டுக்காரர் அரிசி கொண்டு போனால் மறிக்காமல் விட்டுவிடச் சொல்லி உத்தாரம் பண்ணி பின்னையும் யிதுகளுக்கெல்லாம் வயணம் சொல்லுகுறோமென்று யிழுப்பிலே விட்டதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. நேத்தியதினம் பணத்துக்கு முக்கால்படி அரிசி வித்தார்கள் யென்று சாவடி மணியம் அழகப்ப முதலி சாவடியிலே பிடிச்சு வச்சு முசே கொடுத்தேனுக்கு கபுறு சொல்லாமலிருந்தான். யேனென்றால் அவனைச் சேந்த மனுஷரானபடியினாலே அந்த சமாச்சாரம் யின்னையதினம் முசே கொடுத்தேனுடனே ஆரோ சொன்னார்கள். அதன் பேரிலே அழகப்ப முதலியை அழைச்சு யேன் அரிசிவித்த கபுறு சொல்லயில்லை யென்று கேட்டதுக்கு அவர்களை சாவடியிலே வைச்சிருக்குது. நீங்கள் ஞாயத்துக்கு வருவீர்கள். அந்த சமையம் சொல்லுவோமென்று யிருந்தேன் யென்று சொன்னான். நேத்து தானே யெனக்கு சொல்லயில்லை யென்று காவலிலே வைக்கச் சொன்னார்.

இத்தனாள் வற்த்தகரை சாவடிக்கணக்கப்பிள்ளை அழைச்சு ஒன்பது கால் நெடுமுழம் சிலம்புரி வேணும் காரிக்கமாகுது. சலவையாவது யிருந்தால் குடுங்கள்யென்று கேட்டார்கள். வற்த்தகர் யில்லை யென்னத்தின் பேரிலே யில்லையென்று வர்த்தகர் கையிலே கையெழுத்து வாங்கினார்களென்று சேதி சொன்னார்கள். இத்தனாள் ராத்திரி மூணுமணிக்கி யென் பெரிய தகப்பனார் வெங்கட்டப்பிள்ளை குமாரன் திருமலைப்பிள்ளை சேஷ்ட்டன் யித்தனாள் காலம் பண்ணிப் போனான். அவருக்கு வயது அறுபத்தஞ்சு குமாரன் ஒன்று குமாரத்தியள் ரெண்டு குமாறன் ஒண்ணு காலம் பண்ணிப்போனான். அவருக்கு பெரிய பிள்ளையிருக்கிறான்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 6; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 26;* புதவாரம்

நேத்து ராத்திரி காலம் பண்ணிப்போன திருமலைப்பிள்ளை யவர்களை காலமே பத்துனாழிகைக்கு வெளியே கொண்டு போயி தகனம் பண்ணிவிச்சுப் போட்டு வீட்டுக்கு வந்து ஸ்னானம் பண்ணிப்போட்டு வீட்டிலே யிருந்தோம். ஆனபடியினாலே வெளியே போகாமல் யிருந்தோம்.

இத்தனாள் நேத்து முசே லாலியவர்கள் தமிழர் கையிலே வீட்டுவரி வாங்கத் தேவையில்லை யென்று முசேலெறியையும் அழைச்சு சொல்லியிருக்கச்சே யின்றையதினம் முசே திபுவா நயினாரையும் சாவடி கணக்கப்பிள்ளையளையும் அழைச்சு தமிழர் கையிலே வீட்டுவரி

ஒண்ணும் வாங்கத்தேவையில்லை. ஆராயிரம் ரூபாயி மாத்திரம் யிப்போ குடுங்கள் பின்னையொன்றும் வேறே கேழ்க்கயில்லை யென்று சொன்னதின் பேரிலே மகானாட்டாரையெல்லாம் அழைச்சு ஆராயிரம் ரூபாய் மாத்திரம் குடுங்களென்றும் கேட்டதுக்கு யிவர்கள் ஒண்ணுமில்லை யென்று சொன்னதின் பேரிலே யிழுப்பும் மறிப்பும் ஆகயிருந்து மகானாட்டாரைப் போகச் சொல்லி சொன்னார்களெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டது. இன்னையதினம் வீடுகளிலே சிலம்புரி (Salampores) நெடுமுழம் நாலு ரெண்டு யெடுக்குரார்கள் என்கிறதாய் சேதிக் கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் மத்தியானத்துக்கு மேலாக ரெண்டு மணிக்கி நயினார் வீட்டிலே யிருக்கச்சே முசே லாலியவர்கள் அண்டையிலே யிருந்து ரெண்டு பேர் குவாடுது வெள்ளைக்காரரும் ஒரு சோபுதாரனும் வந்து பிடிச்சுப்பின் கட்டாய் கட்டிக் கொண்டு போனார்கள். யெதினாலே யென்றால் தண்டிலே பக்காளியர் தண்ணி வராமல் ஓடிப்போயி விட்டபடியினாலே நயினாரை தண்ணி குடுக்கச்சொல்லி யிருந்தபடியினாலே நயினாரை கசோத்திலே போட்டார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டது.

முசே லாலிக்கு ராமலிங்கபிள்ளை யென்னமோ குடக்குறோமென்று சொல்லியிருந்ததுக்கு யித்தனாள் அழைச்சு கேட்டதுக்கு யிவன் என்னமோ சத்து யிழுப்பாய்ச் சொன்னதாகவும் அதன் பேரிலே ரெண்டு உதை குடுத்து பொறு உன்னை தூக்கிலே போடுகுறேனென்று சொன்னதின் பேரிலே ராமலிங்கம் ரொம்பவும் விசாரமாய் வீட்டை வந்து மறுபடி முசே துபுவாவண்டை போய் சொல்லிக் கொண்டதுக்கு அவனென்னமோ அதுக்கு உத்தரவு சொன்னான். அந்த மட்டிலே ரொம்ப விசாரத்துடனே வீட்டுக்கு வந்துவிட்டானென்று யிதுகளுக்கெல்லாம் கூட யிருந்த அவனுடைய மனுஷன் வந்து நம்முடனே சொன்னான். யிது நிசமான் கபுறு பிசகில்லை.

இத்தனாள் மையீசூரீலே யிருந்து வந்திருக்கிற மகத்துமனாயக்கனும் (Makdhum Nagakkan) முசே லாலிக்கும் சால்சபாபு நடந்ததிலே யெங்களுக்கானால் கொள்ளக்கிடைக்கயில்லை. யெங்களுக்குச் சொன்ன உடம்படிக்கைக்கு ரெண்டு மாசமும் ஆயிப்போச்சுது ரெண்டு லக்ஷம் ரூபாயும் குடுக்க வேணும் யென்று கேட்டத்திலே பத்துப்பதினஞ்சு கப்பல் வரும் வந்தவுடனே உங்களுக்கு சம்பளம் குடுத்து விடுகுறோமென்று முசே லாலி சொன்னதுக்கு யிந்த மட்டுக்கும் வந்த கப்பல் யினிமேல் யெப்போ வரப்போகுது, யெப்போ சம்பளம் குடுக்கப் போறீர்? அல்லாம் நான் லக்ஷம் ரூபாயி அழைப்பிச்சு அவர்களுக்கெல்லாம் சம்பளம் குடுத்தேன். பணம் யிருந்து கொள்ளக்

கிடைக்காமல் யெப்படி சாப்பிட்டுக் கொண்டு நிறுவாகம் பண்ணுகிறதென்று போற சாடையாய் பேசினத்தின் பேரிலே முசே லாலி சொன்னது உங்களை சென்னப்பட்டணம் மட்டுக்கும் அனுப்பிவிச்சேன் யென்ன காரியம் சாதகம் பண்ணீர்கள் சென்னப்பட்டம் தாலூக்கு காஞ்சிபுரம் அவ்விடங்களுக்கெல்லாம் உங்கள் மனுஷர் ரெண்டு லக்ஷம் மூணு லக்ஷம் சத்து நல்ல ரூட்டி பண்ணி கொள்ளையடித்துக் கொண்டு வந்தார்கள் யென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே கொள்ளையெல்லாம் அகப்பட்டுது ரூட்டி யில்லாவிட்டால் உங்களுக்கு யெங்கே அகப்படுமென்று சொன்னதின் பேரிலே எங்களுக்கென்ன அதனாலே யெங்கள் கையிலேயும் சம்பளம் வாங்கிக் கொள்ளுகுறார்களென்று சொல்லி யிந்தப்படிக்கி சால்சபாபு நடந்தவிடத்திலே ஒண்ணும் பேசாமல் யிருந்தார்கள். இப்படியாக நாளையதினம் மைசூர் மகத்துமனாயக்கன் பயணப்பட்டுப் போறதாக சேதி கேழ்க்கப்பட்டுது. நாளையென்ன நடக்குமோ அது அறிய வேணும்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 7; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 27; வியாழக்கிழமை***

இத்தனாள் நயினாரைக் காவல் விட்டுவிட்டார்கள். நேத்து ராத்திரி முசே லெறி கொத்தளங்களின் பேரிலே கசரத்து போனபடியினாலே காலமே பத்தரை மணிக்கு மட்டுக்கும் நித்திரை போனபடியினாலே பதினோரு மணிக்கி கதவைத் திறந்து கொண்டு வெளியே பிறப்பட்டுப் போனாரெங்கிற சேதி கேழ்க்கப்பட்டது. முசே லாலி மைசூர் மகத்துமனாயக்கனுக்கு சமாதானம் பேசினபடியினாலே யிப்படியானால் வெள்ளைக்காரர் பேரிலே ஆறுலக்ஷம், ஏழு லக்ஷம் ரூபாய் வரிப்போட்டு யிருக்குறோம் யெழெட்டு நாளையிலே அந்த பணமும் வரும் உங்களுக்கும் குடுக்குறோம் நாங்களும் சிலவுக்கு நடப்பிச்சு கொள்ளுகுறோம். உங்களுக்கும் றஸ்த்தும் அழைப்பிச்சு குடுக்குறோம் என்று வெள்ளைக்காரர் பேரிலே எழுதின சாப்பித்தாவையும் பிரிச்சுக் காண்பிச்சு சமாதானம் பண்ணினதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.

முசே திபுவா வண்டை யருக்கிற சட்டைக்காரன். முசே திபுவா சொன்னது, “சிப்பாயியள் சம்மதிக்கி ஒரு பேர்வழியிலே யிருக்கிறதை நாலு பேர்வழியிலே வீதிச்செழுதி முசே லெறியை கையிலே கையெழுத்துப் போட்டு யிருக்கிற கடுதாசி உங்கள் கையிலே யிருக்குதாம். அந்தப்படிக்கி போயியளுக்கு பிறிச்சு விடவேணுமே அந்தக்கடுதாசியை எழுதிவிக்க வேணுமென்று கேட்டான். அந்தப்படிக்கி அவன் கையிலே எழுதிவிச்சோம். நம்முட பேருக்கும் நாளை அந்தப் பேர்வழியிலே வீதிச்சு எழுதியிருக்குறதுக்கு ஆகஸ்து மாசம் முதல்க்கொண்டு வாங்கிக் கொள்ளத்தக்கதாக முன்னே ஒருமாசம் பதினஞ்சு நாள் சம்பளமிருந்த

நிலுவை ஆரும் குடுக்கமாட்டார்கள். அல்லாமல் கும்பினியிலே சேவிச்ச சிப்பாயியளுக்கு பத்துமாசம் யிருபதுமாசம் சம்பளம் நிண்ணுப் போச்சுது. குடுக்கயில்லை. யிவர்களுக்கு யென்னா ரொக்கமாய் வாங்கிறவர்களுக்கு என்னா ஆனபடியினாலே அதை தள்ளிப்போட வேணுமென்று" சொன்னோம். நல்லது அந்தப்படிக்கி செய்யுறேன் யென்று சொல்லிப்போட்டுப் போயிவிட்டான். நம்முடவர்கள் னாயக்குளத் தண்டைட்டாணா யிருந்தவர்களண்டை யிங்கிலேசுக்காரரர்களுட குதிரையள் வந்து காலாடினதின் பேரிலே பிறப்பட்டு ரெட்டியார்பாளையம் ஒழுகரை கோவில் அங்கே வந்து விட்டார்களெங்கிறதாய் கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் ஒழுந்தை யேரியண்டை யிப்போ இங்கிலீசுக்காரர் வந்து மோர்சா போடுகுறார்களென்று கேழ்க்கப்பட்டுது. கொள்ளக் கிடைக்காததைத் தொட்டு ரெண்டு மூணு நாளாய் பட்டணத்திலே யிருந்து வெகுசனங்கள் வெளியே போயிவிடுகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. மைசூர் மகத்துமனாயக்கனுக்கு ஒரு கரிசை அரிசி குடுத்தார்களென்று கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் மகானாட்டார் எல்லாரையும் அழைச்சு ஆராயிரம் ரூபாய் மாத்திரம் குடுங்களென்று இன்னைய தினமாவது நாளைக்காவது குடுங்களென்றும் யினிமேல் உங்களை கேழ்க்கயில்லை யென்று முசே லாலி கையெழுத்துப்போட்டும் வார்த்தை உறுதியும் குடுத்துக் கேட்டார். பின்னையும் சீட்டு வாங்கித் தருகுறோம் யென்று சொன்னதின் பேரிலே யெங்களுக்கு ஆனால் குடுக்கிறதுக்கில்லை. அவகாசமும் யில்லை யென்று சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 8; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 28; சுக்கிரவாரம்*

இத்தனாள் முசே பெடுத்தல்மீ செத்துப்போனத்துக்கு ஒப்பீசு ஆனபடியினாலே முசேலெறி முலே லாலி எல்லாரும் ஒப்பிசுப்படிக்கி கோவிலுக்குப் போயிருந்தார்கள். நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே லெறி யில்லாதபடியினாலே நாம் வெளியே ஒன்பதரை மணி பத்து மணி மட்டுக்கும் யிருந்து அப்பால் பிறப்பட்டு விட்டோம். ஒப்பிசுப்படிச்சு முசே பெடுத்தல்மீ வீட்டுக்கு முசே லெறி போயி யெதிரக்க வந்தார். நாம் கண்டு ஆசாரம் பண்ணி கூடத்தானே கோட்டைக்கி வந்து கோவற்ணமா விட்டு மெத்தைமேலே யிருந்தோம். முசே லெறி காம்பிராவுக்குள்ளே போயிவிட்டார். வெளியே வரயில்லை. நாம் அங்கே யிருக்கச்சே ரெண்டு மூணுபேர் வெள்ளைக்காரர் வந்தார்கள். அவர்கள் சொன்னது "முசே லாலி முசே லெறி முதலாகிய குமிசேல்க்காரர் பத்தொன்பது பேர்வழியிலே நாலு லக்ஷம் ரூபா யிடராயிச்சு யிது மூணு

நாளையிலே குடுக்க வேணுமென்று டராயிச்சாரென்கிறதாய்" சொன்னார்கள். அதைக் கேட்டுப்போட்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம். கேழ்க்கப்பட்ட சேதி முசே திபுவா மகானாட்டாரை அழைச்சு உங்களுக்குத்தான் வீட்டு வரி தள்ளுண்டு போச்சுதே ஆராயிரம் ரூபாயி மாத்திரம் குடுங்களென்று சொல்லிப்போட்டோமே குடுத்தலாச்சு. யில்லாவிட்டால் கட்டிவைச்சு அடிப்போம் என்று சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம் நாம் சவாரி போனோம். அப்போ யிங்கிலீசுக்காரருது முன்னூறு நானூறு குதிரை மட்டுக்கும் காட்டுமேட்டின் பேரிலே வந்தார்கள். அவர்களைக் கண்டு மைசூராருடைய குதிரை நானூறு முன்னூறு குதிரை மட்டுக்கும் ஆறு மணிவேளையுண்டு அப்போ போச்சுது. அவர்களும் ரெண்டு மூணு துப்பாக்கி சுட்டார்கள்.

அந்த மட்டிலே அப்பாலே வாங்கிக்கொண்டுப் போயி ரெண்டு மூணு துப்பாக்கி வெடி சுட்டார்கள் அப்பாலே வாங்கினார்கள். மைசூரார் குதிரைகள் அங்கேதானே யிருந்தது. அப்பால் யென்ன நடந்துதோ அது எனக்கு தெரியாது. அதைப் பார்த்துப்போட்டு நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

யேழு மணிக்கி முசே லாலி சாயபு அவர்கள் சொல்லச் சொன்னாரென்று மமுது சேன் சோபுதாரன் வந்து சொன்னது, "சிப்பாயியள் சம்பளத்து நிமித்தியம் நீங்கள் ஒன்பது பேர்வழியிலே குடுத்து வந்தது யிப்போ பின்னையும் சில்லரையாய் சிறிது பேர்வழியின் பேரிலே போட்டீர்களாம். அப்படி சில்லரை பேர்வழியின் பேரிலே போடத்தேவையில்லை. ஒரு மாசத்துக்கு மாத்திரம் நீங்கள் தானே குடுங்கள் அப்பால் குடுக்கத் தேவையில்லை யென்று சொல்லச் சொன்னார்" யென்று சேதி வந்து சொன்னான். மமுதுசேன் சோபுதாரன் கையிலே தானே ஒரு கடுதாசியிலே சின்ன முதலியார், அப்பு முதலியார், கந்தப்ப முதலியார், பெரியண்ண முதலியார், சவுரிராய பிள்ளை, பாப்பய்ய பிள்ளை, பாலிசெட்டி, ராமச்சந்திரராயன் யிந்த யெட்டு பேர்வழியும் எழுதி அவன் கையிலே தானே குடுத்து நீய்தானே போயி முசே லாலியவர்கள் சொன்னபடிக்கிச் சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சோம்.

சிப்பாயி வரி எழுதின முப்பது பேருக்கும் யினிமேல் யென்ன வருமோ தெரியாதே யிப்போ யிந்தவரி தள்ளுண்டு போனத்தை தொட்டு சந்தோஷத்தையும் அடைஞ்சு ஆனந்தத்திலே மூழ்கியிருந்தார்கள். யிந்த மட்டுக்கும் மைசூராருடைய தண்டுலே சோத்துக்கில்லை. ஆனபடியினாலே முன்னூறு நானூறு பேர் மட்டுக்கும் பாறுக்காரர் துப்பாக்கியளை போட்டுப் போட்டு ஓடிப்போயி விட்டார்கள். சோத்துக்கும் யில்லாமல் கொள்ளவும் கிடைக்காமல் செனங்கள் ஓடிப்போயி விடுகுறது.

நேத்து ராத்திரி ஒலாந்துக்காரன் போத்து ஒன்று பழவேர்க்காடு (Pulicat)லே யிருந்து நாகப்பட்டணத்துக்குப் போனது. நம்முடவர்களுடைய துறைக்கு நேராய் போகச்சே நம்முடைய கப்பல்க்காரர் அதை பிடிச்சுக் கொண்டு சோதிச்சவிடத்திலே அதிலே ஒரு காகிதக்கட்டு யிருந்தது அதை அவித்துப் பார்க்கச்சே ரெண்டு தினசரி ஒரு பிளாம் பிரான்சிலே எழுதினதும் ஒரு யிங்கிரேசிலே எழுத்துலே எழுதினதும் ஒரு கச்சேத்து அகப்பட்டது என்று அதை யித்தனாள் பகலுக்கு மேலாக நாலு மணிக்கி முசே லாலி வீட்டிலே கொண்டு வந்து யேழுமணி மட்டுக்கும் யெல்லாரும் படிச்சதாகவும் அதிலே சீமையிலே யிங்கிலேசுக்காரர்களுக்கும் பிரான்சுக்காரர்களுக்கும் சண்டை சேதி முதலான சமாச்சாரம் எல்லாம் எழுதி யிருந்ததால் கேழ்விப்பட்ட மட்டுக்கும் எழுதின வயணம்,

இங்கிலேசுக்காரர் சண்டையிலே வெகுபேர் குண்டு பட்டதாயும் யினிமேல் அவர்களக்கு நிறுவாகம் யில்லாமல் பிரான்சு சமாதானம் கேழ்க்குறதாயும் அவர் சம்மதியில்லாமல் யிருக்கிறதாயும் சேதி எழுதியிருந்ததாயும் சீமையிலே சண்டையானால் முன்னே ஒருத்தனுக்கு ஒரு பணம் வாங்கினால் யிப்போ ரெண்டுபணம் வாங்குறதாயும் யிப்போ கோந்திரேல் செனரால் தெ பிரான்சு என்குற முசே சிலுவேத்து (M. Silhovette) என்கிறவர் ராசாவுக்கு ஆதாயம் பண்ணுகுற நிமித்தியம் பட்டணத்திலே குடியிருக்குறவர்கள் கையிலே வாங்கினத்துக்கு ரெட்டிப்பு வாங்குறாரென்றும் ஒருவீட்டிலே ரெண்டு பேரிருந்தால் ஒவ்வொரு ரெட்டிப்பு கேட்டாயும் போட்டு வாங்குறரென்றும் பின்னையும் சனங்கள் பீடிச்சு எந்தெந்த விதமாய்ப்பணம் வாங்க வேணுமோ அந்தந்த விதமாய் ச்னங்கள் கையிலே யிமுசைப்படுத்தி பணம் வாங்குறதாயும் எழுதியிருந்தது. பின்னையும் முசே புசியுடைய பிறஸ்தாபமாய் விஸ்தாரமாய் எழுதியிருந்ததென்றும் பலேன் (Baleine) என்குற பிரிகேத்துனுடைய ஒப்பிசியால் யித்தனாள் ராத்திரி வந்து சொன்னான். யிதல்லாமல் பிரான்சு ராச்சியத்துக் கடற்கரை துறைமுகத்திலே பெரெசுத்து என்கிற (Brest) துறைமுகத்திலே யிருந்த பிரான்சு ராசாவுடையது அறுபது சண்டைக் கப்பல்களும் சீமைவிட்டு பிறப்பட்டுதாம் அது யின்னவிடம் போகுதென்று ஒருத்தருக்கும் தெரியாமல்ப் போச்சுது என்று கூட கசேத்திலே எழுதியிருந்ததாய் கூட சேதி சொன்னார்கள்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 9; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 29; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கதவை சாத்திக்கொண்டு காம்பிராவுக்குள்ளே யிருந்தார். ஆனபடியினாலே சாலையிலே உலாத்திக் கொண்டிருந்தோம். அதிலே முசியே கில்லியார் (M. Guillard) வந்தார். வந்தவர் யென்ன

ரெங்கப்பா காணோமென்றார். அதுக்கு யென்னுடைய பெரிய தகப்பனார் குமாரன் காலம் பண்ணிப்போனார். ஆனபடியினாலே வரயில்லை யென்று போக்காய் சொன்னோம். உமக்கு சரீரம் யெப்படி யிருக்குதென்று கேட்டோம். யிப்போ சத்துலகுவா யிருக்குது முன்னே வயிறு பேதியும் கால்பிடிப்பும் கண்டிருந்து தென்று சொன்னார். அப்பிறம் உங்கள் சாஸ்திரியள் யென்ன சொல்லுகுறாரென்று கேட்டார். அவர்கள் சொன்னது பட்டணம் முழுகிப் போறாப்போலே வரும் அப்பிறம் கப்பல் வந்து தேறுமென்று சொல்லி யிருக்கிறார்கள். அதல்லாமல் காரைக்காலிலே ஒரு வள்ளுவன் யிருக்கிறான் அவனும் சோசியம் பார்க்கிறவன்தான். யிந்த ஆவணி மாசம் நாலாந்தேதிக்கு மேல் பனிரெண்டாந்தேதிக்குள்ளே கப்பல் வருமென்று சொல்லி அனுப்பிவிச்சான். நாகப்பட்டணத்திலே ஒரு வள்ளுவன் அவன் நாலு மாசத்துக்கு முன்னே சொல்லி யிருக்குறானாம். ஆவணி மாசத்திலே கப்பல் வருமென்று சொன்னானென்று சொன்னோம். அப்படியே ஆவணி மாசத்தையிலே கப்பல் வந்தால் தான் பட்டணம் யெப்படியாகிலும் தேறப்போகுது. யில்லாவிட்டால் யிங்கிரேசுக்காரராகிலும் வந்து பிறவேசிச்சுப் போடுவார்கள். ரெண்டிலே ஒண்ணு ஆகவேணும் என்று சொன்னார். நாம் சொன்னது ஆவணி மாசம் 12ந் தேதிக்குள்ளே கப்பலும் வரும் யிருபதாந்தேதிக்கு மேல் யிங்கிரேசுக்காரரும் யிங்கே யிருக்கமாட்டார்கள். வாங்கிப்போயி விடுவார்கள். தை மாசத்தையிலே அவர்கள் சிறண் ஆவார்கள் என்று சொன்னோம். அதுக்கு கப்பல் சமாச்சாரத்துக்கு ஆவணி மாசம் முப்பதும் பார்ப்போமென்று சொன்னார்.

அப்பிறம் பட்டணத்திலேயானல் கொள்ளக்கிடைக்கயில்லை. நீர் முன்னாலே யிந்த தீர்வை தள்ளிப்போட்ட படியினாலே அப்போ வந்த தானியம் யிதுவரைக்கும் பட்டணத்திலே தானே யிருந்தது. யினிமேல் தாளமாட்டாது. யெந்தப்பட்டணத்திலேயும் யிப்படி சண்டை வந்து முற்றுகை வந்தால் யெங்கே றஸ்த்து யிருக்குதோ அவ்விடத்துக்கும் மனுஷரை அனுப்பி பணத்தை குடுத்து அனுப்பி வாங்கி வரச்சொல்லி யிவ்விடத்திலே யிருந்து கும்முக்கு அனுப்பி யெதிராளியை பங்கம் பண்ணி றஸ்து அழைப்பிச்சுக் கொள்ளுவார்கள். ஒண்ணுமில்லாமல் யிப்படி யிருந்தால் யெந்தக்காரியம் கட்டி வரும் யென்று சொன்னதுக்கு அவர் சொன்னது "முசேலெறி ஒரு பயித்தக்காரனாய் தீந்தது. முசே லாலிக்காக யிந்தப் பிரபஞ்சம் எல்லாம் போச்சுது. ஆனபடியினாலே யெல்லாம் அபந்தறையாய்ப் போனதுதானென்று சொன்னான். அப்படியெல்லாம் யிதுகளெல்லாம் நீர் தெரியப்படச் சொல்லவேணும் யென்று சொன்னோம். நல்லது சமையம் பார்த்துச் சொல்லுகுறேனென்று" சொன்னார். நானும் முசே லெறிக்குச் சொல்லுகுறேன் யென்று சொன்னோம். யிப்படி லோகா பிறமாய் பின்னையும் சிறிது சம்மதிகளெல்லாம் பேசிக் கொண்டிருந்தோம் அப்பிறம்

முசே லெறியண்டைக்கிப் போகவேணுமென்று போனானர். அவர் கதவை அடைச்சுக் கொண்டு கடுதாசி யெழுதிக் கொண்டிருந்தபடியினாலே சமையமில்லாமல் பிறப்பட்டு வீட்டுக்குப் போயிவிட்டார்.

அப்பிறம் முசே லெறி வெளியே வந்தார். நாம் போயி ஆசாரம் பண்ணி யிப்படியானால் நேத்து ராத்திரி யேழு மணிக்கி முசே லாலி சோபுதார் மமுது சேனுடனே சொல்லியனுப்பிவிச்சார். யிப்படியானால் போயியள் சம்மதிக்கி பின்னையும் சிறிது பேர்வழி யெழுதினீர்களாம் அவர்கள் கையிலே வாங்கத் தேவையில்லை. யின்னம் ஒரு மாசத்தைக்கு மாத்திரம் யெப்போதும் குடுக்குறாப் போலே குடுங்கள் அப்பால் குடுக்கத் தேவையில்லை யென்று சொல்லி அனுப்பிவிச்சார். அந்த சோபுதாரனுடனே தானே அவரவருக்கு சொல்லியனுப்பிவிச்சேனென்று சொன்னதுக்கு முசே லாலி சத்தியம் தப்பினவன் ஆணை நம்பிக்கை யில்லாதவன் ஒரு நாளைக்கி யிருபது பேச்சு பேசுறானென்றும் யிந்த சத்திய வந்தன் முசே லெறி சொன்னான். அப்பிறம் நாம் சொன்னது பட்டணத்திலேயானால் கொள்ளக் கிடைக்கயில்லை. ஆலத்துப் போச்சுது யினிமேல் பட்டணமாகிறது. வெகுபிறயாசையா யிருக்கும் யிந்த வேளையிலே யாங்காட்டும் நீர் கடாட்சிச்சு செனங்களை சம்ரக்ஷணை பண்ணி வைக்க வேண்டியது யிப்படிப் போலக்கொத்த முசே லாலி லக்ஷம் பேர் வந்தாலும் முசே சுப்பீயரைப் போலேக் கொத்தவர் லக்ஷம் பேர் வந்தாலும் அவர்களை யெல்லாம் ஒண்ணும் சொல்லார்கள் நீர் வந்து யிந்த பட்டணத்துக்கு கோவற்ணதோர் ஆனபடியினாலே உம்முடனாளையிலே பட்டணம் யிப்படியெல்லாம் ஆலத்துப் போச்சுதென்று உம்மைச் சொல்லுவார்கள். யிதுகளெல்லாம் யெதினாலே சொல்லுகுறேன் யென்றால் உமக்கு கீற்த்தி வரவேணும் என்கிறதைத் தொட்டு நாங்கள் அன்பது வருஷமாய் யிந்தப் பட்டணத்திலே யிருந்து பிரான்சு கொடியின் கீழே யிருந்து கீர்த்தியும் பெத்தோம். டில்லி வரைக்கும் யெங்களுடைய பேர் பிறகாசிக்கவும் மன்சுபா சாகீரும் யெத்தோம் சீமை யேரொப்பாவிலே யெல்லாம் யெங்களுடைய பேரும் கீற்தியும் பெத்தோம்.

ஆனபடியினாலே ஒரு நிழலின் கீழே யிருந்தால் அந்த செடிக்கு தர்மம் கோற வேணும் ஆனபடியினாலே நீர் யிந்த வேளையிலே மனசு வைச்சுக் கொண்டு யெப்படி செனங்களைக் காப்பத்த வேணுமோ அந்தப்படிக்கி யெத்தனம் பண்ணி நடப்பிக்க வேணும் அவர்களும் பிழைப்பார்கள். பட்டணமும் பேரும் யிருக்கும் யில்லாவிட்டால் முழுகிப்போம் யென்று சொன்னதுக்கு அவனும் மனசு கரிச்சு நானும் யொரு யோசனையள் பண்ணியிருக்குறேன் அந்தப்படிக்கி நடப்பிவிக்குறேன் என்று நாம் சொன்னதுக்கு யெல்லாம் உத்திரப் பிறதியுத்திரம் சொன்னார். அதிலே முசே லங்கற்னையும் பின்னையும் ரெண்டு மூணு பேர் வந்து பேசினார்கள் நாம் யிப்பாலே வந்தோம்.

அங்கே கந்தப்ப முதலி, அப்பு முதலி, ராமச்சந்திர ராயன், சவுரிராயப்பிள்ளை யிவர்கள் வந்து சொன்னது முசே துபுவா வீட்டுக்குப் போயி அவருடனே சொல்லிக் கொண்டோம். அவர் சொன்னது யினிமேல் அது யென்னுடைய வேலையில்லை. உங்களுக்காக வெகுசகாயம் பண்ணேன். யினிமேல் யென்னாலே யில்லை முசே கதுவேலண்டைக்குப் போங்கள் அவனாங்காட்டும் முசே லாலி தலையை திருப்பிப் போட்டான். யென்ன யென்றால் யிந்த ஒன்பது பேரையும் யெப்போதும் போலே சிப்பாயிகளுக்கு சம்பளம் குடுக்கவும் யிப்போ நூதனமாய் யெழுதியிருக்கிற பேர்வழி கையிலே அசாலாயிதாய் வாங்கி பழய சிப்பாயிகளுக்கு குடுக்கலாம். அவர்கள் சம்பளம் யில்லாமல் கூப்பிடுகிறார்கள். ஆனபடியினாலே அவர்களுக்கு குடுக்கலாமென்று சொல்லியிருக்குறா ரென்று முன்னே முசே துபுவா சொன்னார் என்கிறதாய் சொன்னார்கள். யிந்த சம்மதி முசே லெறியுடனே சொல்லுவோம். வாங்களென்று நம்மையும் அழைச்சார்கள். நாம் முன்னே தானே யிந்த சமாச்சாரமெல்லாம் சொன்னேனென்று சொன்னோம்.

அப்படியல்ல நீங்களும் வரவேணுமென்று சொன்னார்கள். நல்லதென்று போய் நாமும் போய் சும்மா நின்னோம். கந்தப்ப முதலி யிதுகளெலலாம் முசே லெறியுடனே சொன்னான். முசே னுவாரு வந்திருந்தான். யிதுகளெல்லாம் முசே லெறி கேட்டு முசேனுவார் யிங்கே வரட்டும் அவருடனே சொல்லி யிந்த சிப்பாயிகள் சம்மதிக்கி ஆகப்பண்ணுகுறேன். முசே லாலிக்கும் நான் போயி சொல்லுகுறேன் என்று சொன்னார்.

அப்பால் நான் சொன்னது "யிந்த போயிகள் பண்ணுகிறதானால் ஒரு மிதத்திலே யில்லை. அவர்கள் வீட்டுகளிலே வந்து வாசற்படிகளை சாத்தி உள்ளே யிருந்து மனுஷரை வெளியே போகவொட்டாதேயும் வெளியே யிருந்து உள்ளே போகவொட்டாதேயும் சமைக்கட்டாதேயும் யிப்படியெல்லாம் லச்சை பண்ணுகுறார்கள். நீங்கள் யெங்களை மரியாதையாய் நடப்பிக்கிற படியினாலே செனங்களும் மரியாதையாய் நடப்பிக்கிறார்கள். யிந்தச் சின்ன மனுஷர் ரொம்ப லச்சை பண்ணுகுறார்களென்று" சொன்னதுக்கு யினிமேல் அப்படியெல்லாம் செய்யார்கள் தாக்கீது பண்ணுகுறோமென்று சொன்னார். அப்பிறம் குமிசேலுக்கு யெழுதின பித்திசாமிலே யிந்த சிப்பாயிகள் பண்ணுகிற லச்சைகளையும் எழுதச் சொல்லி ராமச்சந்திர ராயன் கையிலே குடுத்துப்போட்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

அப்பால் கந்தப்ப முதலி முசே லெறியையும் முசே னுவாரையும் வைச்சுக் கொண்டு நம்மையும் வைச்சுக் கொண்டு கந்தப்ப முதலி சொன்னது, "பெரியண்ண முதலி, சவுரிராயபிள்ளை, கந்தப்ப முதலி,

ராமச்சந்திரராயன், அப்பு முதலி யிப்படி அஞ்சு ஆறு பேர்வழியிலே சத்து விசேஷிச்சுப் பணம் யிருக்குது வாங்கலாமென்று நேத்து முசே லாலியுடனே ராமலிங்கம்பிள்ளை, அய்யண்ண சாஸ்திரி, மைசூர் வைக்கீல் யிவர்கள் மூணுபேரும் போயி நீர் யென் பணத்துக்கு அங்கலாய்க்குறீர் யிந்த அஞ்சு ஆறு பேரையும் யெங்கள் கையிலே ஒப்பிவிச்சுப்போடும் ரெண்டு லக்ஷம் ரூபாயும் வாங்கிக் கொள்ளுறோமென்று சொன்னாரென்றும் அதுக்கு முசே லாலி யோசனை பண்ணி சொல்லுகுறேனென்று" சொன்னதாய் சமாச்சாரம் கேட்டேனென்று கந்தப்ப முதலி சொன்னான். அதுக்கு முசே னுவார் சொன்னது முசே லாலி தமிழர் கையிலே வாங்கத்தக்கீதுயில்லை. தமிழர் குடுத்து குடுத்து ரொம்ப நொந்து போனார்கள். ஆனபடியினாலே வெள்ளைக்காரர் கையிலே வாங்க வேணுமென்று கும்பலாயிருக்கச்சே பத்து தரம் யெட்டு தரம் சொல்லியிருக்குறான் யெங்கள் பேரிலேயும் தாக்கசு (Tax) டராயிச்சு யிருக்குறான். ஆனபடியினாலே உங்கள் கையிலே யினிமேல்வாங்கத் தக்கதில்லை ஆர் தப்பு சமாச்சாரம் சொன்னார்களோ யென்று சொன்னான். அதுக்கு முசே லெறி சொன்னது. அப்படி யேதாகிலும் நடந்தால் நாங்களும் அதுகளெல்லாம் யோசனை பண்ணி யிருக்குறோமென்று சொன்னார்.

பெரியண்ண முதலி சாவடி குளாதாங்கி என்கிற விடத்திலே யிருக்கிற பிராமணன் பெரியண்ண முதலி வீட்டுக்கு வந்து யெண்ணை வாங்கி தலையிலே தேச்சுக்கொண்டு ஸ்தானம் பண்ணப் போகச்சே மைசூராருடைய தண்டுக்காரன் லப்பைகள் ஆறுபேர் காது அறுப்புண்டவர்களிலே மூணுபேர் யிந்த பிராமணனைக் கண்டு பிடிச்சு முசே லாலியண்டை கொண்டு போயி விட்டு யிப்படியானால் நாங்கள் வெளியே போகையிலே வெத்திலை ரஸ்து கொண்டு வருகுறது. நேத்தும் நாங்கள் போனவிடத்திலே குளந்தாங்கியிலே யிருந்தோம். அப்போ யிந்த பிராமணன் யெப்போதும் அங்கே யிருக்குறவன் நாங்கள் போகவரச்சே நாலு ரெண்டு பணம் குடுப்போம். அப்படி யிருக்க நேத்து அவ்விடத்திலே தலையாரிச்சி யிருந்தாள் அவனுடனே யிப்படி புதுச்சேரியராம் மனுஷர் றஸ்து கொண்டு போகிறவர்கள் வந்திருக்குறார்கள் யென்று யிங்கிரேசுக்காரர் மனுஷருக்கு யிவன் சொல்லி அனுப்பிவிச்சான். அவர்களும் கும்பலாய் வந்தார்கள். ஆர்காணும் பாப்பான் கும்பலாய் வாரார்களென்று கேட்டோம் அவர்கள் குடியானவர்களைக் கண்டு பயப்படாதே யென்று சொன்னார்கள். அவர்களும் வந்துதும் பின்கட்டும் மாறையாய்க் கட்டினார்கள். யென்னடா பாப்பானென்று கேட்டோம் நான் யென்ன செய்வேன் யிங்கிலேசுக்காரர் அவர்களென்று சொன்னான். அவர்கள் யெங்களை காதை அறுத்துப் போட்டார்களென்று சொன்னதின் பேரிலே இத்தனாள் சாயங்காலம் அந்தப்பிராமணனை ரெண்டு காதையும் குடும்புடனே அறுத்துப்போட்டு மூக்கையும் அறுத்து தூக்கிப் போடச்

சொல்லி சொன்னார். அந்தப்படிக்கி காதையும் அறுத்து மூக்கையும் அறுத்து தூக்கிப் போட்டார்கள். ஆனால் யிந்த பட்டணம் தோணின அறுபது வருஷம் பிடிச்சு பிராமணனை சீவவதை பண்ணதில்லை. இன்னையதினம் பிராமணனைத் தூக்கிப் போட்டு விட்டார்கள். முன் ஒரு தரம் ரெண்டு தரம் பிராமணரைத் தூக்கிப் போடுகிற மட்டுக்கும் வந்ததுண்டு அதுகளுக்கு துரைகளுக்கு தெரியப்படச் சொல்லி பிராமணனைக் கொன்றால் ரொம்ப தோஷமென்று சொல்லி துரைகளும் மாப்பு பண்ணி விட்டுவிட்டார்கள்.

அது பட்டணத்துக்கு விருத்திகாலமான படியினாலே விடுதலையாச்சுது. யிப்போ ஷீணகாலமான படியினாலே யிப்படி சீவவதை பண்ண வந்தது. ஆனால் சுப்பா சோசிய்ன யிந்த ஆடி மாசம் 28 தேதிக்கு மேல் 31 தேதிக்குள்ளாக மீனக்கூறு வருகுது அந்தக் கூறுலே யிதுவரைக்கும் அபசவ்விய பிறசாபத்தியம் யிந்த மீனச்சக்கிரம் ஒன்பது வருஷத்துக்குள்ளாக யோகம் போசிச்சவர்களும் ஒருத்தனும் பலயீனம் வந்து அடிபடுவானென்று சொன்னபடிக்கி யோகம் போசிச்சவர்களாய் அடிபடாதபடிக்கி அக்கிறமம் பண்ண யேழை பிராமணனுக்கு சீவ ஆனி வந்தது. ஆனால் யிந்த கற்கடக மாசம் பிராசாப்பதிக்கி உச்ச வீடு ஆனபடியினாலே யிந்த ஒன்பது வருஷத்தையிலே யோகம் போசிச்ச அபசவ்விய பிறசாபத்தியம் அடிபடுவானென்றும் சவ்விய பிராசாபதி பிலப்படுவானென்றும் சொன்னதுக்கு யின்னம் காலபிலம் வராதபடியினாலே அந்தச் சின்னம் கண்டுது. ஆனபடியினாலே அபசவ்விய பிராசாபதியும் அடிபடுவான் சவ்விய பிரசாபதியும் பிலப்படுவான். ஆனபடியினாலே சாஸ்திரம் சரியெங்கிறது மெய்.

யித்தனாள் மைசூரார் தண்டுக்காரர் கருக்கடிக்குப்பம் பாக்கமுடையான்பட்டு யிவ்விடங்களிலெல்லாம் கொள்ளை வல்லடி அடிச்சு வீடு வாசலுகள் யெல்லாம் பிடிங்கியும் சுட்டுப்போட்டும் யிப்படியெல்லாம் ரொம்ப றூட்டி பண்ணிப்போட்டார்கள். யேண்டாயென்று கேட்டால் நாங்கள் திண்ணுகுறதுக்கு யில்லாமல் செத்துப் போகச்சே யென்ன செய்வோமென்று சொன்னார்கள்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 10; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 30; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியும் முசே கில்லியாரும் ரெண்டு மூணு பேர்களும் கணக்கரும் கடலோரத்துக் கணக்கரும் அஞ்சாறு பேராய் கோட்டை கோவிலுக்குப் போயி திறந்து பூசை கேட்டு வந்தார்கள். நாம் போயி ஆசாரம் பண்ணி பூச்செண்டு ஒண்ணு குடுத்தோம். சந்தோஷமாய் வாங்கிக் கொண்டு யென்ன சமாச்சாரம் யென்று கேட்டார். சகல செனங்களும் உங்களுடைய

தயவுக்கு பாத்திரமாய் காத்துக் கொண்டிருக்குறோம் யென்று சொன்னோம். அந்த பூச்செண்டை முசே லெறி முகந்துப்பார்த்து முசே கில்லியாரிடம் குடுத்து முகர்ந்து பார்க்கச் சொன்னார். அவர் முகந்து யெல்லாரும் முகந்தார்கள். அப்பிறம் காப்பிராவுக்குள்ளே போயி பேசிக் கொண்டிருந்தார்கள். பேசிக்கொண்டிருக்கச்சே நேத்து முசே கில்லியாருடனே றஸ்து சம்மதிக்கி பேசிக்கொண்டிருந்தோமே அதை யின்னையதினம் முசே லெறியுடனே முசே கில்லியார் சொன்னது யிப்படியானால் றஸ்து யில்லாமல் யிருந்தால் யெப்படி நிறுவாகமாகும். றஸ்து அழைப்பிக்கிறதுக்கு யோசனை பண்ணாவிட்டால் கோட்டையை நாமாய்த்தானே யெதிராளியின் கையிலே ஒப்பிவிச்சுப் போட வேண்டியதுவாக யிருக்கும். யிதுகளுக்கெல்லாம் ரங்கப்பிள்ளையை அழைச்சு யோசனை பண்ணினால் காரியம் நடக்கும் யென்று சொன்னதின் பேரிலே மெய்தான் அவரையும் அழைச்சு யோசனை பண்ணுவோம். ரஸ்துமில்லை யின்னம் அஞ்சு ஆறு நாளைக்குள்ளே கப்பலும் வராவிட்டால் ஒண்ணும் நிறுவாகமில்லை யிதுகளுக்கெல்லாம் ஒரு யோசனை பண்ணுவோமென்று சொன்னார். யிப்படி பேசிக்கொண்டிருந்து போட்டு முசே கில்லியார் வீட்டுக்குப் போக வெளியே வந்தவர் நம்மண்டைக்கு வந்து நேத்து றஸ்து சம்மதியாய் பேசிக் கொண்டிருந்தோமே அதுகளெல்லாம் முசே லெறியுடனே சொன்னேன். உம்மையும் அழைச்சு யோசனைப் பண்ணச் சொல்லிச் சொன்னேனென்று சொன்னார். நேத்துதானே நாம் யிதுகளெல்லாம் முசே லெறியுடனே சொல்லியிருக்குறோமே அதை யேன் சொல்லுகுறோமென்று சும்மாயிருந்தோம். நல்லது யென்னை அழைச்சுக் கேட்டால் நானும் சொல்லுகுறேனென்று சொன்னோம்.

முசே கில்லியார் வீட்டுக்குப் போயிவிட்டார். அப்பால் கந்தப்ப முதலி, பெரியண்ண முதலியார், நரசிம்ம செட்டி, அப்பு முதலி யிவர்களெல்லாம் முசே துபுவா வருவானென்று காத்துக் கொண்டிருந்தார்கள். முசே துபுவா வந்ததும் முசே லெறியண்டைக்கு போய் கண்டு பேசினதென்ன வென்றால் அது தெரியாது. அவர் பிறப்பட்டு அந்த க்ஷணம் போயி விட்டார். யென்ன காரியமாய் வந்து கண்டு பேசினானோ அதுதெரியாது. அவர்கள் கார்த்துக் கொண்டிருந்தார்கள். நாம் முசியே தொபேனுடனே (M. Tobain) லோகா பிறமமாய் பேசியிருந்து பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

நேத்திய தினம் ராமலிங்கன் முசே லாலி வீட்டுக்கு போயிருந்தவிடத்திலே தண்டு கும்மாந்தான் வெள்ளைக்காரன் ஒருத்தன் யிவனை யென்னமோ கேட்டதின் பேரிலே யிவன் அதுக்கு யென்னமோ உத்தாரம் சொன்னான். அதுக்கு அந்த கும்மாந்தான் தண்டிலேயானால்

யின்னேரம் உன்னை தூக்கிப் போடுவேன் யென்று மூணு உதையும் உதைச்சு மூணு அடிகையினாலே கன்னத்திலே அறைஞ்சான் அந்தமட்டிலே வீசுப்பு பாதிரி அங்கே யிருந்தான். அவனுடனே ராமலிங்கன் சொன்னான். அவன் முசே லாலியுடனே போயி சொன்னான். அந்த கும்மாந்தாமை முசே லாலி கோட்டையிலே கொஞ்சனாது பண்ணச் சொன்னார். நேத்தைய தினம் முசே பெடுத்தலென் சம்மதிக்கி ரொக்கம் யிருபதினாயிரம் ரூபாயிம் யேனத்து உரப்பு பிடவை அய்யாயிரம் ரூபாயுக்கும் ஆக யிருபத்தையாயிரம் ரூபாயும் செண்ணு போச்சுது. அவன் வீட்டு மனுஷர் மாமியார் பெண்சாதி வேலைக்காரியள் அவனண்டைக்கு கோட்டைக்கி வந்து கண்டு பேசவும் காவலிலே யிருக்கிறவன் வெளியே திரியவும் யிருக்குறான். ஆனால் யின்னம் காவல் விடயில்லை. அது யென்னமோ தெரியவில்லை. முசே லெகு கையிலே முசே பனோ முன்னே ஒருபாரம் மிளகு வாங்கி யிருந்தானாம் அதுக்குப் பணம் குடுக்கயில்லையாம் யிப்போ அந்த ஒரு பாரம் மிளகுக்குப் பணம் தருகுறேன் யின்னம் ஒருபாரம் மிளகு குடுக்கச் சொல்லி கேட்டதுக்கு பணம் குடுத்தாலும் சரிதான் குடாவிட்டாலும் நல்லதுதான் யென் கையிலே மிளகுயில்லை. வித்துப்போட்டேன் யென்று சொன்னான். கொண்ட மனுஷரை சொல்லுயென்று கேட்டதுக்கு தண்டுக்காரருக்கு வித்துப்போட்டேனென்று சொன்னதின் பேரிலே முசே பனோ முசே லாலியுடனே சொன்னான். அதன்பேரிலே முசே லெகுவை கோட்டையிலே காவலிலே முசே லாலி வைக்கச் சொன்னார் காவலிலே வைச்சார்கள்.

*1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 11; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 31; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியும் மய்யோர் முசே கக்கெத்தி (M. Ceccaty La Major) யும் பின்னையும் ரெண்டு மூணுபேர் வெள்ளைக்காரரும் பேசிக் கொண்டிருந்தார்கள். நாமும் போயி ஆசாரம் பண்ணி பூச்செண்டு குடுத்தோம். அதை வாங்கிக் கொண்டு ரொம்ப ஆசாரம் பண்ணி முகந்து பார்த்துக் கொண்டே யிருந்தார். அப்பிறம் யென்ன சேதி யென்று கேட்டார். யிப்படியானால் பட்டணத்திலே கொள்ளக் கிடைக்காததைத் தொட்டு யேழையா யிருக்கப்பட்டவர்கள் பட்டிணியாய் கிடந்து சாக மாட்டாமல் ரெண்டு நாளாய் வெகுபேர் வெளியே போயி விடுகுறார்களென்று சொன்னோம். அதைக் கேட்டு என்ன செய்வோமென்று உள்ளே போயி விட்டோர். அப்பிறம் நாம் யிப்பாலே வந்திருந்தோம். அங்கே ரெண்டு மூணுபேர் வெள்ளைக்காரர் வந்தார்கள். அவர்கள் சொன்னது வெள்ளைக்காரரை யெல்லாம் முசே துபுவா அழைச்சு அவரவருக்கு வரி யிம்மாத்திரம் என்று நேமிக்குறான். அது நிமித்தியம்

வெள்ளைக்காரரெல்லாம் போயிருக்குறார்களென்று சொன்னார்கள். அப்பிறம் பதினோரு மணிக்கு நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

நேத்தியதினம் முசே லாலி ராமலிங்கனையும் அய்யண்ண சாஸ்திரியையும் செஞ்சிக்குப் போயி றஸ்துக் கொண்டு வர நிமித்தியம் போகச் சொன்னானென்று ராத்திரி பயணப்பட்டுப் போனவர்கள் மழையிலே அடிபட்டு வழி தெரியாமல் முறட்டாண்டிசாவடி குயிலாப்பாளையம் காட்டுமேடு யிதுகளெல்லாம் சுத்தி யின்றைய காலமே வீடு வந்து சேர்ந்தானென்கிறது என்று சேதி கேழ்க்கப்பட்டுது. முசே லெறி ஒப்பிசியால் முன் சீமாமூலம் நம்முடையவர்கள் வசமாயிருக்கச்சே அய்யண்ண சாஸ்திரிக்கு பிணையிருந்தான். அவன் யின்னையதினம் செத்துப்போயி விட்டான். அவன் பேரிலே சீமாமூலம் சம்மதி பிணையிருந்ததுக்கு பணம் வரவேணும். நமக்கு சாமீன் சொன்னவர்கள் பேரிலே யெல்லாம் பணம் வரவேணும் யென்று முசே லெறியுடனே நாம் சொல்லிக் கொண்டதுக்கு அந்தப்பணமெல்லாம் நாம் வாங்கிக் கொள்ளுகுறோமென்று முசே லெறி சொன்னபடியினாலே யிந்தப்பணம் எல்லாம் முசே லெறியையாகிலும் சேருது கும்பினீயையாகிலும் சேருதென்ற யிருந்தோம். முசே துபுவா சாவடிக் கணக்கப்பிள்ளையை அழைச்சு மகாநாட்டார் கையிலே ஆறாயிரம் ரூபாயி வாங்கச் சொன்னேனே வாங்கயில்லை யென்று கேழ்க்கவும் சாவடி கணக்கப்பிள்ளையள் மகாநாட்டாரை அழைச்சு யித்தனாள் கேட்டார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது. நேத்தியதினம் செஞ்சிக்கிப் பயணமாய்ப் போன ராமலிங்கப்பிள்ளை மழையானபடியினாலே திரும்பி வந்துவிட்டான். அவன் யின்னையதினம் சாயங்காலம் பயணமாய் பிறப்பட்டு தெத்துக்கப்பாலே ராமலிங்கன் செஞ்சிக்குப் போனான். அய்யண்ண சாஸ்திரி மைசூருக்குப் போனானெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 12; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 32; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனோம் ஒன்பது மணிக்கி முசே லெறி கதவை திறந்து கொண்டு வெளியே வந்தார். அதிலே முசே கில்லியார், முசே னுவார், முசே கிரேனோ, முசே லங்கற்னை குமிசெல்க்காரர் அஞ்சாறு பேர் முசே லெறியண்டை போனார்கள். நாமும் கூடப்போய் காண்பிச்சுக் கொண்டோம். அவர்களெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள். நாம் வெளியே வந்து உளுக்காந்திருந்தோம். கந்தப்ப முதலி வந்து கும்பினிக்கு சிலவு போட்ட சம்மதிக்கி முசே லெறி வழுதாவூர் சீமையின் பேரிலே முசே பொசேத்து பேருக்கு பதினெண்ணாயிரத்து அறுபத்தி ரெண்டு ரூபாயிக்கி

சீட்டுக்குடுத்திருந்தார். அந்தப்பணம் குடாமல் கும்பினீக்கு செண்ணு போச்சுது தாறேன் யென்று சொல்லிக் கொண்டிருந்தான். பிறகு கேட்டால் சீமையானால் யிங்கிலீசுக்காரர் வசமாய்ப் போச்சுதே பணம் யில்லையென்று சொன்னான். ஆனால் சீட்டாகிலும் குடுமென்று கேட்டுக்கொண்டிருந்தேன். தாறேன் தாறேன் யென்று சொல்லிக் கொண்டிருந்தான். யின்னையதினம் அந்த சீட்டை குடுத்தான். சீட்டைப் பாருங்களென்று சொன்னான். அதிலே 1759 வருசம் தெசம்பர் மாசம் 20 தேதியிலே பதினெண்ணாயிரத்தி அறுபத்தி ரெண்டு ரூபாயிக்கு யெழுதியிருந்தது. அப்பால் கந்தப்ப முதலி சொன்னது ராமலிங்கம் பிள்ளையும் மைசூர் வக்கீல் வெங்கட்ட நாராணப்பய்யனும் ரெண்டு பேரும் யென் பேரிலேயும் சவுரிராய பிள்ளையும் அப்பு முதலி யிவர்களை யெல்லாம் யெங்கள் கையிலே ஒப்பிவிச்சால் அவர்கள் கையிலே பணம் வாங்குறோம் யென்று ரொம்பத்தானே அவர்களாலே ஆன மட்டுக்கும் பிறயத்தினம் பண்ணார். வராமல்ப் போச்சுது முன்னே பாப்பய்யபிள்ளை யிப்படி யெல்லாம் செய்யுரானென்று யிருந்தோம். யிப்போ யிவர்கள் யிதுகளுக்கும் யேர்ப்பட்டார்கள். யிவனுக்கு நாம் யென்ன செய்தோம் யெங்கள் அதிருஷ்ட்டம் யிவனை அடிச்சுக் கொண்டு போச்சுதென்று சொன்னான். இதுகளெல்லாம் முசே துபுவா குட்டைராய பிள்ளையுடனே சொன்னான். அவன் யெங்களுடனே சொன்னானென்று சொன்னான்.

அப்போ நயினார் வந்து முசே கொடுத்தேன் யென்னை கசோத்திலே போடச்சொன்னான் யென்று கொறப்பரால் (Corporal) வந்தழைக்குரான் துரையைக் கண்டு பேசி வாறேனென்று சொல்லிப் போட்டு வந்தேன். நீங்கள் வந்து சொல்ல வேணுமென்று சொன்னோம். அப்பால் நாமும் நயினாரும் கந்தப்ப முதலி மூணு பேரும் போயி நின்றோம். முசே லெறி யென்ன யென்று கேட்டார். நயினார் சொன்னது யிப்படி கொஞ்சக் காரியத்துக்குயெல்லாம் கசோத்திலே மூணு நாளைக்கு ஒரு தரம் போடச் சொல்லியும் பின் கட்டு மாறையாய் கட்டிக்கொண்டு போகவும் யிப்படியானால் யெனக்கு யிந்த உத்தியோகம் தேவையில்லை. அப்படிப்பட்ட நேரம் யேதாகிலும் செய்திருந்தால் உங்களுடனே சொல்லி அழைச்சுக் கேழ்க்க அப்படி செய்ய கொஞ்ச காரியத்துக்கு எல்லாம் கண்டவன் கண்டபடி யெல்லாம் கசோத்திலே போட்டால் யென்னாலே நிறுவாகம் பிராக்குதானென்று சொன்னதின் பேரிலே நல்லது யிங்கே யிருயென்று முசே கொடுத்தேனை அழைச்சு வரச்சொன்னான். அதிலே பனிரெண்டு மணி அடிச்சது வீட்டுக்கு வந்துவிட்டோம். அப்பால் யென்ன நடந்ததோ தெரியாது.

இத்தனாள் முசே கொடுத்தேன் சாவடி ஞாயத்துக்கு வந்திருந்தவிடத்திலே சாவடி துபாசி தயிரியனாத முதலியை அழைச்சனுப்பி விச்சார்கள். அவனும் வந்தான் வந்தவுடனே சாவடியிலே

வைக்கச் சொன்னான். அந்தப்படியே வைச்சார்கள். யெது நிமித்தியம் என்றால் அழைச்சனுப்பிவிச்சால் நோவு நோவு யென்று வீட்டிலே யிருக்குறானென்று காவலிலே வைக்கச் சொன்னானெங்கிறதாய் சொன்னார்கள்.

முசே லெறி யண்டைக்கி முசே கொடுத்தேன் வந்தவிடத்திலே யேன் நயினாரைக் கசோத்திலே போடச் சொன்னீரென்று கேட்டார். யிவன் யென்னண்டைக்கி வருகுறதில்லை அழைச்சனுப்பிவிச்சுப் போட்டோம் வருகுறதுயில்லை. முன்னே முசே கில்லியார் வீட்டிலே யென்னேரமும் யிருக்கயில்லையா அவன் துபாசி வெங்கிடாசல நாயக்கனும் யிவனும் கூடிக்கொண்டு ஊரிலே பத்துப்பணம் சம்பாதிச்சார்கள். யென்னிடத்திலே யிவன் வந்தால் யெந்த சம்மதியாகிலும் வெளியாகப் போகுது என்கிற பயத்தின்பேரிலே வாரதில்லை. நான் யிவனை நித்தியம் ரெண்டு தரம் வந்து கபுறு சொல்லச் சொன்னேன். யிவன் வாறதேயில்லை. ஆனபடியினாலே யிவனைக் கசோத்திலே போடவேணுமென்று சொன்னான். அதன் பேரிலே நயினாரை முசே லெறியும் கோபிச்சுக் கொண்டு ஆனால் கசோத்திலே போடப் போகாது வெளிக்காவலாய் வைப்போமென்று சொன்னார். முசே கொடுத்தேன் சொன்னது யிதோ யிப்போ நான் மெய்யா சொல்லுகுறேன் யினிமேல் நித்தம் ரெண்டு தரம் யென்னண்டைக்கு வந்து கபுறு சொன்னாலாச்சுது. யில்லாவிட்டால் யிவனைச் சாவடி கம்பத்திலே கட்டி வைச்சு நூறு அடி அடிச்சு ரெண்டு காதையும் அறுத்து காலிலே விலங்கும் போட்டு வைப்போனென்று சொல்லி யிவனை சாயங்காலம் மட்டுக்கும் கசோத்திலே போட வேணுமென்று சொன்னான். அந்தப்படிக்கி கசோத்திலே போட்டார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 12; விக்கிறம வருசம் ஆடி மாசம் தேதி 32; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணுமணிக்கி முசே லாலி அழைச்சு வரச்சொன்னாரென்று ஒரு சோபுதாரனும் ஒரு சேவுகனும் வந்து அழைச்சான். நாம் போனவிடத்திலே யெதிர்க்க மகானாட்டார் வந்து சொன்னது, "மத்தியானம் முசே துபுவா யெங்களை அழைச்சனுப்பிவிச்சு ஆராயிர ரூபாயிக்கும் யென்ன பண்ணீர்களென்றும், பணம் சேர்மானமாச்சுதா யென்று கேட்டார். யின்னம் பிறிச்சு யெழுதயில்லை யென்று சொன்னோம். நாலு நாள் ஆச்சுதே உங்களுடனே சொல்லி யிப்போ வந்து யின்னம் யெழுத யில்லை யென்று சொல்லுகிறீர்களாயென்று" அராமிசெட்டி ரெண்டொருத்தரை அடிச்சு தில்லைமேஸ்திரியைக் காவல் பண்ணி முசே லாலி யண்டைக்கு அழைச்சு வந்தார்கள். நாங்கள் சலாம் பண்ணிப் பித்திசாமை குடுத்தோம். அதைப்

பார்த்துக் கொண்டு குமிசேலியோர் உங்கள் பேரிலே முப்பத்தாராயிரம் ரூபா வரி யெழுதினார்கள். நம்முடனே சொல்லிக்கொண்ட படியினாலே நாம் அதை தள்ளிப்போட்டு ஆராயிரம் ரூபாயி குடுக்கச் சொன்னோம். யிந்த ரூபாயி மாத்திரம் குடுத்து விடுங்கள் யினிமேல் உங்களை பணம் என்கிறது கேழ்க்கயில்லை. தமிழர் சோலிக்கு வரயில்லை ஒருத்தரையும் ஒரு காசு கேழ்க்கயில்லை. யென் விசேஷத்தை கெட்டியாய் நம்புங்கள் சத்திய பிறமாணிக்கமாய் சொல்லுகுறேன். அந்தப்படிக்கி கடுதாசி யெழுதி கையெழுத்தும் போட்டு தருகுறேன். யினிமேல் குமிசேல்க்காரர்கள் ஆகட்டும் நானாகட்டும் யினிமேல் வருகுறபேர் துரைகள் ஆகட்டும் ஆரும் உங்கள் கையிலே வரி வாங்கத்தேவையில்லை யென்று எழுதி கையெழுத்துப்போட்டுத் தாறேன் என்று சொல்லிப்போட்டு உங்களை அழைக்கச் சொல்லி உள்ளே போயி விட்டாரென்று" சொன்னார்கள். அப்பிறம் நாம் போனோம். அங்கே முசே துபுவாவும் பாதிரி வீசுப்பு நொரோன்னு (Bishop Father Noronha)வும் யிருந்தார்கள். நாம் முசே லாலிக்கு ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணி சொன்னது, "மகானாட்டார் பேரிலே முசே லெறி குமிசேல்க்காரர் வீட்டு வரி முப்பத்தாராயிரம் ரூபாயி போட்டார்கள். அவர்கள் வந்து நம்முடனே சொல்லிக்கொண்டார்கள். நாம் அதை தள்ளிப்போட்டு ஆராயிரம் ரூபாயி மாத்திரம் நாலு நாளையிலே குடுக்கச் சொன்னோம். யிந்த ரூபாயி குடுத்தால் ஆச்சுது. யில்லாவிட்டால் முப்பத்து ஆராயிரம் ரூபாயும் குடுத்துப் பின்னையும் குடுக்க வேண்டியிருக்கும். அதினால் வருத்தப்பட வேண்டாம். ஆனபடியினாலே ஆராயிரம் ரூபாயும் குடுத்து விடச்சொல்லும் யினிமேல் அவர்கள் பேரிலே வாங்கிப்போட்டு வாங்கயில்லை. அந்தப்படிக்கி யெழுதி கையெழுத்துப் போட்டுத் தாறேன் அவர்களுக்கு நீர்தானே சமாதானம் சொல்லி அழைச்சுக் கொண்டு போமென்று சொல்லி" உள்ளே போயிவிட்டார். அப்பிறம் முசே துபுவாவும் வீசுப்பு பாதிரியும் யிருந்தார்கள். முசே துபுவா சொன்னது யிந்தப்படி மகானாட்டார் ராமலிங்கம் பிள்ளை முகாந்திரமாய் வந்து யிருபதுனாளைக்கு உத்தாரம் குடுத்தால் ஆராயிரம் ரூபாயும் தண்டி செலுத்திப் போடுகுறோமென்று சொன்னார்கள். கூடாதென்று சொன்னோம். பதினஞ்சு நாளைக்காகிலும் உத்தாரம் குடுக்க வேணும்மென்றும் சொன்னார்கள். அப்படியெல்லாம் கூடாதென்றும் எட்டு நாளைக்குள்ளே குடுத்து விடுங்கள் யென்று சொன்னேன்.

அப்படி யிருக்க நாலுநாள் பொறுத்து வந்து யின்னம் எழுதவும் யில்லை ஒண்ணுமில்லை யென்று சொன்னார்கள். அதன் பேரிலே ரெண்டு பேரை அடிச்சேன். தில்லை மேஸ்திரியை காவல் வைச்சேன். யிவர்களை யெல்லாம் முசே லாலியண்டைக்கி அழைச்சுக் கொண்டு வந்தேன். யிப்போவும் நீர்தானே யிந்தக் காரியத்திலே யிருந்து மகானாட்டாரை தாக்கீது பண்ணி சீக்கிறத்துக்கு ஆராயிரம் ரூபாயும்

செலுத்திப் போடத்தக்கதாக திட்டம் பண்ணி வைக்க வேணுமென்று சொன்னான். நல்லது அந்தப்படிக்கி செய்வேனென்று சொன்னோம். பின்னையும் முசே துபுவாவும் பாதிரி வீசுப்பும் (நொரோன்னா) சொன்னது சிப்பாயியள் சம்மதிக்கி ஒருபேர் வழியிலே குடுக்கிறது. நாலுபேர் வழியிலே குடுக்கத் தக்கதாக பிறயத்தனம் பண்ணி திட்டம் பண்ணினோம். அதை முசே கதிவேல் வந்து முசே லாலியுடனே யிப்போ சிப்பாயியள் சம்மதிக்கி அலாயிதாய் எழுதின பேர்வழியிலே அலாயிதாக வாங்கினால் காமாட்டியள் சம்பளத்துக்கு குடுக்கலாம். முன்னே குடுத்த ஒன்பது பேர்வழியிலே தானே சிப்பாயிகளுக்கும் சம்பளம் குடுக்கத் தக்கதாகவும் சொல்லிப் போட்டான் யிப்பவும் அதுக்கு யெத்தனம் பண்ணி ஒரு காரியமாய் நடப்பிக்கிறோம். அப்பு முதலியுடனே சொல்லியிருக்குறேன். ஒரு பித்திசாமொன்று பண்ணச் சொன்னேனென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே முசே கதிவேலும் அங்கே வந்துவிட்டான். அவனைக் கண்டவுடனே முசே துபுவா ஒருத்தரும் பேசாதேயுங்கள் வாயி மூடிக்கொண்டுயிருங்கள் யென்று சொன்னான் எதுணாலே முசே கதிவேலைக் கண்டால் முசே துபுவாவுக்கும் அத்தனை பயமென்று சொன்னால் பலவிதத்திலேயும் பத்துப்பணம் பிறயோசனப்பட்டு யிருக்கிறபடியினாலே அத்தனை பயமென்று மனசிலே யெண்ணிக் கொண்டோம் முசே கதிவேல் வரச்சே போன் சுவார் (Monseuir) முசே றெங்கப்பிள்ளை என்று சொன்னான் நாமும் ஆசாரம் பண்ணினோம் நயினாரைப் பார்த்து குழந்தை செட்டியை அழைச்சு வரச்சொன்னேனே யேன் அழைச்சுவரயில்லை யென்று கேட்டான். நயினார் யிதோயிருக்கிறான் குழந்தை செட்டியென்று சொன்னான். குழந்தை செட்டிக்கு வாய்குளரிப் போய் கைகாலெல்லாம் நடுக்கலெடுத்து கொளரிக் கொண்டு யென்னடா அப்பா யென்னான் முசே கதிவேல் சொன்னது நீயென்னதுக்கு பிடவை (Yanom) வாங்கியிருக்கிறீயே அந்தப்பிடவை யெங்கே யென்று கேட்டான். குழந்தைசெட்டி சொன்னது அதுகளில்லை பதினோரு பிடவை யிருந்தது. சாவடியர் எடுத்துக் கொண்டு போயிவிட்டார்கள். வேறே என் கையிலே பிடவையில்லை யென்று சொன்னான். அந்தப்படிக்கி சீட்டுக் குடுயென்றும் கேட்டான். அங்கே சீட்டு எழுதுகுறதுக்கு ஆரும் யில்லை ஆனபடியினாலே சாவடிக்கிப் போயி சாவடி கணக்கப்பிள்ளையன் கையிலே சீட்டு எழுதிவிச்சு வாங்கி அனுப்பிவிக்குறேன் என்று சொன்னோம். அந்தப்படிக்கி முசே மொர்சேன் சீட்டு வாங்கி அனுப்பிவிக்க வேணுமென்று சொன்னான். நல்லதென்று சொன்னோம். அப்பிறம் வாசற்படி மட்டுக்கும் கொண்டு வந்துவிட்டு ஆசாரம் பண்ணினான். நாமும் ஆசாரம் பண்ணி வந்துவிட்டோம். அங்கே யிருக்கச்சே நயினார் சொல்லியனுப்பிவிச்சு யித்தனாள் நான் காவலிலே யிருக்குறேனெ

என்னை விடுதலை பண்ணி வைக்க வேணுமென்று சொல்லி அனுப்பிவிச்சான். யிந்தப்படி பணம் தண்டுகுறதுக்கு நாமும் சாவடிக் கணக்கப்பிள்ளையும் கூடயிருந்து மகானாட்டார் கையிலே பணம் தண்டவேணும் யென்று முசே லாலி வீட்டிலே யிருந்து ஒரு மனுஷரை அனுப்பி நயினாரை காவல் விடுதலையாயி அழைச்சு வரச்சொன்னோம். நயினாரும் காவல் விடுதலையாயி நம்முடன் கண்டு பேசவந்தான்.

நானாவுடைய குதிரை முப்பதினாயிரம் குதிரையென்றும் பதினைய்யாயிரம் குதிரை யென்றும் சொன்னார்கள். அதுக்கு சறுதாராய் வந்திருக்கிற விசுவாசப் பண்டிதன் (Sardar Visivasa Pandit) முசே லாலிக்கும் முசே லெறிக்கும் கடுதாசி யெழுதி ஒரு பிராமணன். கையிலே குடுத்து நமக்கும் கடுதாசி அனுப்பிவிச்சான். நாங்கள் பதினாயிரம் குதிரைகள் கணவாய் மேலே வந்திருக்குறோம். நீங்கள் வரச்சொன்னால் வருகுறோமென்று எழுதியனுப்பிவிச்சான். அந்தக் கடுதாசி கொண்டு வந்த பிராமணன் பலுமொக்கனாயும் உசந்தும் சிகப்பு பாகை பெரிசாய்க் கட்டிக் கொண்டு யிருந்தான். அவன் சொன்னது முசே லாலிக்கு ஒரு கடுதாசியும் முசே லாலி கையிலே குடுத்தேன். யிந்தக் கடுதாசி ஆருதென்று கேட்டார். வாசறத்துராயருக்கு வந்த கடுதாசி யென்றும் சொன்னேன். வாசராத்ராயன் ஆரென்று கேட்டார். யிப்படி யின்னாரென்று உங்கள் பேரை சொன்னேன். நல்லது அவருக்கு நான் கடுதாசியைக் குடுத்தேன் என்று தம்முடைய கடுதாசியைப் பார்த்துக் கொண்டார். உம்முட கடுதாசியைக்கிட்ட யிருந்த விசுப்பு பாதிரி நான் குடுக்குறேனென்று எடுத்துக்கொண்டு போனார். அந்தக் கடுதாசி உங்களுக்கு வல்லையா யென்று கேட்டான் வரயில்லை யென்று சொன்னோம். ஆனால் முசே லாலிக்கும் முசே லெறிக்கும் யெப்படி எழுதியிருக்குதே அப்படி தான் உங்களுக்கும் எழுதியிருந்தது. உங்களண்டைக்கி நேத்துானே வரவேணுமென்று யிருந்தேன். வழிப்பயணம் குதிரையின் பேரிலே வந்தபடியினாலே உடம்பு அயர்ந்து ஆயாசமாயிருந்தேன். ஆனபடியினாலே வரயில்லை. யிங்கே கடுதாசி வாங்கிக் கொண்டு போகச்சே உங்களண்டைக்கும் வந்து கண்டு பேசிப்போறேனென்று சொன்னான். வரச்சே நம்முடைய கடுதாசியை கேட்டு வாங்கிக் கொண்டு வாருமென்று சொன்னோம் அவன் சொன்னது உங்கள் பேர் விசுவாசிப் பண்டிதர் கிட்ட. ரொம்ப பிறக்கியாதி யெப்படி யென்றால் காசியிலே குமார சுவாமி தம்பிரானண்டைக்கி விசுவாசி பண்டிதர் போயிருந்தார். அவர்களுடைய பேரும் கீர்த்தி பிறதாபமும் சொல்லச்சேயும் காட்டு வாத்தியம் சுப்பய்யன் உங்களண்டை வந்திருக்கச்சே ரெண்டாயிரம் மூவாயிரம் சிலவழிச்சு நாகப்பத்துகள் அடிச்சு ஆனை அம்மாரியளும் வைச்சு வெகுசம்பிறமமாய் கல்லியாணம் பண்ணிவிச்சீர்களென்று சுப்பய்யன் சொல்லச்சே விசவாசு பண்டிதன்

கேட்டு உங்களை யென்னேரமும் ரொம்ப கொண்டாடிக் கொண்டிருக்குறார் காட்டுவாத்தியம் சுப்பைய்யன் யிப்போ அவரண்டைதான் யிருக்குறார். உங்கள் பேர் டில்லி சத்தாரா பூனா சூசி யிவ்விடங்களிலேயெலலாம் உங்களுடைய கச்சேரி யிருக்கிற சம்பிறமும் பாட்டும் ஆட்டும் யென்னேரமும் சம்பிறமமாயிருக்குறதும் துரைகளிடத்திலே உங்கள் பேச்சேயல்லாமல் மட்டிலே வேறே பேச்சுயில்லை என்று சகல கீர்த்தியும் பிராஞ்சுக்காரருக்கு உங்களாலே வந்துதென்றும் உங்கள் பேரும் கீர்த்தியும் பிறதாபமும் சகலமான பேரும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அப்படி யிருக்கச்சே நீங்கள் ஒரு பல்லக்கிலே யேறிக்கொண்டு நாலுபேர் சேவுக்குடனே வந்தீர்களென்று கேட்டான். யெப்படி யிருந்தாலென்னா யென்று அதுக்கு சமானத்தி பேருடைய கருடன் தேவேந்திரன் செயிச்சு தேவாமிருதம் கொண்டு வரயில்லையா யென்று அதுக்கு சிறிது சமாரத்திகள் சொன்னோம்.

அப்படி யிருக்கச்சே மைசூரார் வைக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யரும் வெங்காசி பண்டிதனும் ரெண்டு பேரும் வந்து வீசுப்பு பாதிரி நோரோனானுவுடனே சமாதானம் பண்ணிக்கொண்டது. மைசூரார் பவுன்சு செஞ்சிக்குப் போயி அவ்விடத்திலே யிருந்து யிவ்விடத்துக்கு றஸ்துக்கள் அனுப்பி விக்கவும் யிங்கிலீசுக்காறருக்கு றஸ்து வராமல் அடிக்கவும் அவர்கள் சகாயம் பண்ணவும் யிப்படி யெல்லாம் உடம்படிக்கை பேசிக்கொண்டு போயிவிட்டார்கள். அப்பிறம் மகானாட்டாரை அழைச்சுக் கொண்டு முசே லெறியண்டைக்கி வந்தோம். அவருடனே முசே லாலி யண்டை நடந்த சம்மதியாம் படியே சொல்லி யிப்படி குமிசேல்க்காரர் வீட்டு வரி முப்பத்தாராயிரம் ரூபாயி மகாநாட்டார் பேரிலே எழுதினார்கள். அவர்கள் நம்முடனே சொல்லிக் கொண்டார்கள். நாம் அதுகளெல்லாம் தள்ளிப்போட்டு ஆராயிரம் ரூபாயி குடுக்கச் சொன்னோம் யென்று நாம் நடந்த சம்மதியாம் படியே சொன்னதின் பேரிலே பாத்தீரா முசே லாலி தானே வீட்டு வரி எழுதச் சொல்லி யிப்போ நம்முட பேரிலே பழி சொல்லுகுறாரென்றும் பாத்தீரா உமக்கு என்ன தெரியாதா யிதுகளெல்லாம் யென்று சொன்னார். யெனக்கென்னா தெரியாதா யிதுகளெல்லாம் தெரியும் யென்றும் சொன்னோம். அதுக்கு முசே லெறி சொன்னது நல்லது யிந்த ரூபாயியை சீக்கிரம் தண்டி செலுத்திப் போடச் சொல்லுமென்று சொன்னார். நல்லதென்று வீட்டுக்கு வந்து மகாநாட்டாரையும் வைச்சுக் கொண்டு சாவடி கணக்கப்பிள்ளையளையும் அழைச்சுக் கொண்டு நயினாரையும் அழைச்சு சீக்கிறத்துக்கு ரெண்டு மூணு நாளைக்குள்ளே தண்டி செலுத்திப் போடச் சொல்லி தாக்கீது பண்ணி அனுப்பிவிச்சோம்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 13; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 1; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே லெறி காம்பிராவிலே கதவை திறந்து கொண்டு வெளியே வந்தார். அஞ்சாறு பேர் வெள்ளைக்காரருடனே நாமும் போயி காண்பிச்சுக் கொண்டோம் சத்து நேரம் பேசியிருந்து போட்டு உள்ளே போயிவிட்டார். அப்பிறம் நாம் வீட்டுக்கு வரச்சே முசே பெடுத்தல்மீயுடைய கணக்கன் முசே மடுத்தேன் நம்மைக் கண்டு பதினாயிரம் ரூபாயி சீட்டு சம்மதிக்கிப் பணம் சென்னு போச்சுது. அந்த சீட்டு உமக்கு வரயில்லையே பகலைக்கி மேலாக முசே புலோ வருகுறார் முத்திரை போட்டதெல்லாம் சோதிச்சுப் பார்க்க அப்போ உம்மை அழைச்சு அனுப்பிவிப்பார். நீர் வந்து பணம் சென்ன சம்மதி சொல்லி சீட்டை வாங்கிக் கொண்டு போகச் சொல்லி முசே பெடுத்தல்மீயுட பெண்சாதி சொல்லச் சொன்னாளென்றும் சொன்னான். நல்லதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். வந்தவுடனே மதாம் பெடுத்தல்மீ அழைக்குறாளென்று ஒரு காப்பிரி வந்து அழைச்சான். போனவிடத்திலே சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நாம் வந்த சேதி சொன்னார்கள். அங்கே யிருக்கச் சொல்லுவாறோமென்று சொல்லியனுப்பி விச்சாள் அங்கே வந்தோம். சாப்பிட்டு ஆனவுடனே மதாம் பெடுத்தல்மீயும் முசே பெற்னோ பெண்சாதியும் முசே மெடுத்தேனும் உள்ளே யிருந்தார்கள். நாம் வந்த சேதியும் சொல்லி முசே மடுத்தேன் வெளியே வந்து பதினாயிரம் ரூபாய் சீட்டு சம்மதி யென்ன யென்று கேட்டான். உமக்கென்ன தெரியாதா முன்னாலே சீமா மூலம் சம்மதிக்காக பதினாயிரம் ரூபாயி நன்கொடையாய்த் தானே தாரோமென்று சீட்டு எழுதிக் குடுத்திருந்தோம். அதுக்குப் பணம் சென்னுபோச்சுது சீட்டு குடுக்கயில்லை. யெதுனாலே குடுக்கயில்லை யென்றால் அவர் துபாசி ராமய்யபிள்ளை பெண்சாதி செத்துப்போனாள். மறுபடி அவன் கலியாணம் பண்ணுகுறத்துக்கும் வடக்கே போயி பெண் கேட்டவிடத்திலே குடுக்கமாட்டோமென்று சொன்னார்கள். அதனாலே பெண் குடுக்கச் சொன்னால் சீட்டு தாறேன் யில்லாவிட்டால் சீட்டு குடுக்குறதில்லை யென்று சொன்னார். அதிலே முசே லாலி வந்தார் அவர் வந்தவுடனே முசே லெறி பேரிலே நாம் பிராது சொல்லிக் கொண்டதுக்கு யிவர் நமக்காகப் பிடிச்சுப்பேசினார். நீர் என்ன யித்தனை பிடிச்சப் பேசுகிறீரென்று கேட்டதுக்கு நாம் சீமா மூலம் சம்மதிக்காக இருபதினாயிரம் கடன் குடுத்திருக்கிறேன். அவருக்கு சீமாமூலம் சம்மதிக்கு வரவேண்டிய பணம் வந்தாலல்லவா எனக்குப் பணம் வரவேணும் ஆனபடியினாலே நான் பேசுகுறேன் என்று சொன்னார். அந்த சம்மதி யென்னுடனே யிப்படியானால் சீமா மூலம் சம்மதிக்காக உமக்கு இருபதினாயிரம் ரூபாயி கடன் குடுத்திருக்கிறேனென்று சொல்லி

யிருக்குறேன். ஒருவேளையிலே பிறஸ்தாபமானால் சீட்டுக் கேழ்ப்பார்களே ஆனபடியினாலே அந்த சீட்டு யிருக்க வேணுமென்றார் நல்லதென்று யிருந்தோம். அப்படி யிருக்கச்சே அவர் தலங்கம்பாடிக்கி போயிவிட்டார். அப்போ நம்மை அழைச்சனுப்பிவிச்சு நீர் அய்யாயிரம் ரூபாயி குடுக்க வேணுமே அந்த ரூபாய் குடுமென்று கேட்டார். யிப்போ அகப்படாது பணமில்லை யென்று சொன்னேன். ஆனால் வட்டியாகிலும் குடுமென்று கேட்டதுக்கு வட்டி குடுக்குறதுக்கு யிந்த வேளையென் கையிலே பணம்யில்லை யென்று சொன்னேன். அப்போதும் பதினாயிரம் ரூபா சீட்டுக்குப் பணம் செண்ணு போச்சுது. சீட்டு குடுக்கயில்லை யென்று சொன்னோம். நல்லது அவர் வரட்டும் சீட்டு குடுத்து விடுவோம் யென்று சொன்னீரே அவரும் வந்தார். அதிலே நாம் சரீரம் சொஸ்தமில்லாமல் ரெண்டு மாசம் வீட்டிலே தானே யிருந்தோம். அப்படி யிருக்கச்சே பதினாயிரம் ரூபாய் தெண்டம் குடுக்கச் சொல்லி யென் பிள்ளையைக் காவலிலே வைச்சார்கள். அந்த பதினாயிரம் ரூபாயி சம்மதியை தொட்டும் ஊரிலே வாங்கி வரிகளுக்கு நம் முகாந்திரமாய் விசேஷ வார்த்தை நடந்தபடியினாலேயும் யிந்த யிழுப்புகளைத் தொட்டு யென்னேரமும் அது வேலையாயிருந்து விட்டோம். அதிலே முசே பெடுத்தல்மீயும் சரீரம் சொஸ்தமில்லாமல் வீட்டிலே விழுந்து விட்டார். பத்து நாளைக்குப் பிறகு நாம் வந்து பதினாயிரம் ரூபாயி சீட்டுக்குப் பணம் செண்ணு போச்சுதே சீட்டு குடாமல் போனீரே என்று கேட்டதுக்கு அதுக்கென்ன தீந்து போனசம்மதிக்கி நானும் அதுகளெல்லாம் கணக்கு தீத்து வயணமாய் எழுதி யிருக்குறேன் உமக்கு யென்னா முசே மடுத்தேன் வரட்டும் சீட்டு குடுத்து விடச்சொல்லுகுறேன் என்று சொன்னான். நாம் போயிவிட்டோம். அப்பிறம் அவர் சாகரெண்டு நாளைக்கு முன்னே வந்தோம் சீட்டு சம்மதி கண்டு பேசிக்கொண்டு போவோமென்று அவருக்குப் பிரஞ்ஞை யில்லாதபடியினாலே உம்மண்டைக்கு வந்து யிப்படியானால் பதினாயிரம் ரூபாயி சீட்டு யிருக்குது பணமானால் செண்ணு போச்சுது சீட்டு குடுக்கயில்லை யென்று சொன்னதுக்கு அதுக்கு யென்ன யிப்போ சமயமா பிறகு ஆகட்டும் யென்றும் சீட்டு குடுத்து விடுவோம் யென்று சொன்னீர். அப்போ முசே மடுத்தேனும் எல்லாரும் யிருந்தார்கள் யென்று யிப்படியாக யெல்லாம் நடந்த பூருவோத்திரமாக சொன்னதுக்கு நாங்கள் யெதுனாலே உம்மை யிப்போ கேட்டோம் யென்றால் யிந்த ஆஸ்தி முசே பெடுத்தல்மீ மக்கள் மனுஷருக்கு பாதியும் யெனக்குப் பாதியும் ஆக தீந்தது. யென்னுடைய பாதிக்குத்தான் நான் அறிஞ்சு யிருக்கிறபடியினாலே தான் பணம் சேர்ந்து போச்சுதென்று யிருக்குறேன். அவர்கள் அறியார்களே ஆனபடியினாலே சத்தியமாய் கேழ்ப்பார்களே நீர் சத்தியம் சொல்ல வேணுமென்று கேட்டான். அதுக்கென்ன பணம் சேர்ந்து போயிருக்க யிந்த சம்மதியாம்படி அவர்களுடனே நாம்

சொல்லுகுறேனென்று சொன்னதுக்கு அவர்கள் சொன்னது யிந்த பதினாயிரம் ரூபாயும் கடன் வாங்கினது தானென்று சொல்லும் யினாம் சம்மதி யென்று சொல்ல வேண்டாமென்று சொன்னார்கள். யிந்த சம்மதி நாம் அழைச்சனுப்பிக் கேட்டோமெங்கிறது வெளியிலே சொல்லத் தேவையில்லை. நீர் அறிஞ்சதும் நாம் அறிஞ்சதும் ஆகத்தானே யிருக்கட்டும் என்று சொன்னார். அப்பிறம் நாம் சொன்னது துபாசி முத்தையன் நமக்கு குடுக்க வேண்டிய சம்மதிச்சீட்டுக்கு சோணாசலம் கையிலே பணம் வாங்கி தாறோமென்று சீட்டு வாங்கிக் கொண்டார் அந்தப்பணம் வாங்கி குடுக்கயில்லை சீட்டும் குடுக்கயில்லை யென்று சொன்னோம். அந்தப்படிக்கி விசாரித்ததிலே அகப்படாதே பிறம்பாயிருந்தபடியினாலே துபாசி முத்தையன் பேருக்கு யெழுதியிருக்குற இருபத்தோராயிரம் ரூபாயி சீட்டு ஒண்ணும் நம்முட பேருக்கு எழுதியிருக்கிற யேழாயிரம் ரூபாயி சீட்டு ஒண்ணும் நூறு விராகன் சீட்டு ஒண்ணும் அந்த மூணு சீட்டும் குடுத்துப் போட்டார்கள். அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். யின்னை நாளையிலே முசே புலோ வந்து முத்திரை அவிழத்துப்பார்ப்பார் அப்போ உம்மை அழைச்சு சீட்டு சம்மதியென்ன யென்று கேழ்ப்பார். அப்போ பணம் சேர்ந்த சம்மதியும் நடந்தபடிக்கி சொல்லுமென்று சொன்னார்கள். நல்லதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 14; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 2; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனோம் முசே லெறி காம்பிராவிலே உள்ளே யிருந்தார் நாம் ஒரு பூச்செண்டு ஒண்ணு கொண்டு போயி குடுத்து ஆசாரம் பண்ணினோம். அவரும் பூச்செண்டு வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணினார். அப்பிறம் யென்ன சமாச்சாரமென்று கேட்டார். பட்டணத்திலேயானால் கொள்ளக் கிடைக்காமல் மதாம் எலியாசு (Madame Elias) போகச்சே சிறிதுபேரும் போயிவிட்டார்கள். யிந்த மட்டுக்கும் முன்னும் பின்னுமாய் வெகு செனங்கள் ஆயிரம் பேர் மட்டுக்கும் உண்டு மைசூரார் தண்டு போகுதே அதன் பிறகே போறதுக்கு சிறிதுபேர் பயணமாயிருக்குறார்கள் முன்னே இங்கிலீசுக்காரருக்குப் பயந்து செனங்கள் வெளியே போனார்கள். யிப்போ கொள்ளக் கிடையாமல் பட்டிணியாயி செத்துப்போறதைத் தொட்டு சனங்கள் போயிவிடுகுறார்கள் யென்று சொன்னத்துக்கு நல்லதுதானே செனங்கள் வெளியே போய் விடுகுறது கொஞ்சம் நஞ்சம் தானியதவசம் பட்டணத்திலே யிருக்கிறது. பின்னையும் ரெண்டு நாளைக்கி யிருக்கும் யென்று சொன்னார். அப்படி பேசிக்கொண்டிருக்கச்சே குமிசேல் கூடுகுறதுக்கு குமிசேல்க்காரரும் எல்லாரும் வந்தார்கள்.

முசே லெறியும் குமிசேலுக்குப் போக பயணமானார் நாம் அனுப்பிவிச்சுக் கொண்டு பிடவை பார்க்கிற சாலையிலே போயிருந்தோம். அங்கே கந்தப்ப முதலி அப்பு முதலி ராமச்சந்திரராயன் யிவர்கள் வந்து போயிகள் சம்மதி பேசிக் கொண்டிருந்தார்கள். யிப்படியானால் பின்னையும் சிறிது பேரையும் சேத்து அல்லவா போயிகள் சம்பளம் குடுக்கத் தக்கதாக யோசனை பண்ணி யிருக்கிறோம் நம்முடைய பளுவை நாம் கழிச்சக் கொள்ள வேணுமென்றும் அல்லாமல் மத்தப்படியல்ல யிப்போ நம்மை ஒரு மாசத்தைக்கல்லவா குடுக்கச் சொல்லி சொன்னார்கள். யெப்படியாகிலும் குடுத்து விடுகுறோம் யினிமேல் யெங்கள் கையிலே நிறுவாகம் யில்லை போயியள் ஞாயம் பண்ண வேணுமென்றும் அவர்கள் பண்ணுறது லச்சை சொல்லப் போகாது எங்களை வீட்டிலே யிருக்க வொட்டயில்லை. நாங்கள் யினி கோட்டையிலே வந்து யிருக்குறோம். சிப்பாயியள் உபத்திரவம் பொறுக்கயில்லை அவர்களுக்குத் தக்க தாக்கீது பண்ணி வைக்கச் சொல்லி யிப்படியெல்லாம் ஒரு பித்திசாம் பண்ணச் சொல்லி டராய்ச்சோம். யிப்படி யிருக்கச்சே ஒன்பது மணிக்கி குமிசேல்க்காரர்கள் பதினோரு மணிக்கி கலைஞ்சு யெல்லாரும் முசே லெறி கூட மேல் வீட்டின் பேரிலே யிருந்து யிப்பாலே வந்தார்கள். முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் பல்லக்கு யேறிக்கொண்டு முசே லாலி வீட்டுக்குப் போனார்கள். மத்த குமிசேல்க்காரர்கள் யெல்லாரும் அவரவர் வீட்டுக்குப் போயிவிட்டார்கள். நாமும் பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம். முசே லாலி யண்டைக்கிப் போனவர்கள் ரெண்டு மணி மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டு முசே கொடுத்தேன் வந்து முசே பொற்ஷே வீட்டிலே சாப்பிட்டான். முசே லெறி வந்து தம்முட வீட்டிலே சாப்பிட்டார். முசே லாலியும் ரெண்டு மணிக்கிப் பிறகுதான் சாப்பிட்டார். குமிசேல் கூடினது என்ன யென்றால் வெள்ளைக்காரர் பேரிலே வரிடராயிச்சு யிருக்குதே அது நிமித்தியம் கண்டு பேசப் போனதாய் யெழுத வேண்டியது.

நேத்தியதினம் மைசூராருடைய பவுன்சும் பயணப்பட்டுப் போனது அவர்கள் பீறங்கி வண்டிகள் யிழுக்கிற மாடுகளை நம்முடவர்கள் யெங்களுக்கு மாடு குடுக்கிறோமென்று குடாமல்ப் போனீர்களே என்று அவர்கள் வண்டி மாட்டை ஒட்டிக் கொண்டு போனதின் பேரிலே யிந்தப் பாவம் உண்டா பீறங்கி வண்டி யிழுக்கிற மாட்டை ஒட்டிக் கொண்டால் யெப்படிப் பீறங்கி போயிச் சேருமென்று யிவர்களுக்கும் அவர்களுக்கும் வெகு விசேஷம் நடந்ததின் பேரிலே யின்னைய தினம் பிறப்பட்டப் பயணம் நின்று போனது.

முதலி ஜொகான்சு வினுட மகன் (Mudevi-Johannes) மதாம் எலியாசுக்கு நாகப்பட்டணத்துக்குப் போகுறதுக்கு பாஸ்போர்ட்டு வாங்க

வேணுமென்று கேட்டுக் வாங்கிக் கொண்டு வந்தான். மதாம் எலியாசி முன்னே போயிவிட்டாள். யிவன் பின்னே யின்னைய தினம் ராத்திரிக்கி முத்திருசப்பிள்ளை சாவடியிலே போயிருந்து அவ்விடத்திலே யிங்கிலேசுக்காரர் மனுஷர் வந்து நீயாரென்று கேட்டவிடத்திலே நான் வற்த்தகன் நாகப்பட்டணத்துக்கு போறேனென்று சொன்னான். ஆனால் கலோனல் கோட்டு (Colonel Coote) அண்டைக்கி வாயென்று அழைச்சார்கள். நான் வற்த்தகன் யெனக்கென்ன கவை வருகுறதுக்கு யென்று வாறதில்லை யென்று தகராரு பண்ணதின் பேரிலே இங்கிலேசுக்காரர் மனுஷர் யிவனை காயப்படுத்தி கையிலே பின்னையும் அவரிடமிருந்த பதினாயிரம் விராகனையும் பிடிங்கிக் கொண்டு அவனுடைய விரலையும் வெட்டிப் போட்டு அவன் ஏறிக்கொண்டு வந்த பல்லக்கையும் ஒடிச்சுப் போட்டு விட்டார்கள். அதன்பேரிலே போயிண்டாக்கள் யெல்லாரும் ஓடிப்போயி விட்டார்கள். அவனை அங்கே போட்டுப்போட்டு யிங்கிலீசுக்காரர் மனுஷர்கள் போயிவிட்டார்கள். அதன் பேரிலே அவன் உடப்பிறந்தாளை கொண்டவன் மோன்சியோர் திரிக்குயோர் (Monsure Major Trinquire) என்கிறவன் அவனையும் எடுத்துக் கொண்டு வில்லியநெல்லூரிலே யிருக்கிற கலோனல் கூட்டு (Colonel Cotte) அண்டைக்கு கொண்டு போயி வற்த்தகன் வழிப்போக்கனாய் போனால் உங்கள் மனுஷர் அட்டிசெய்யுறதில்லை. ஆனால் யிப்போ இவனுடைய கை விரலையும் வெட்டிப்போட்டு பணத்தையும் யெடுத்துக் கொண்டு போனார்கள் யென்று சொன்னத்துக்கு யெங்கள் மனுஷர் அப்படி செய்யுறதில்லை உங்கள் மனுஷர் மைசூரார் மனுஷராங்காட்டும் அடிச்சு யிப்படி யெல்லாம் செய்தவர்கள் எங்கள் மனுஷர் செய்யார்களென்று சொல்லி யினிமேல் யிப்படி யாராகிலும் போகவேணும் யென்றால் யென்னண்டைக்குச் சொல்லியனுப்பி யென்னுடைய பாசுப்போடுது வாங்கிக் கொண்டு போகவேணும். அல்லவென்றால் யென்னண்டைக்கி வந்து கண்டு பேசி பசுப்போடுது வாங்கிக் கொண்டு போகவேணும் பசுப்போடுது யில்லாமல் போனால் யென்ன நடந்தாலும் நான் பாத்திய படமாட்டோம் யென்று சொன்னான். அதுவேயல்லாமல் பின்னையும் புதுச்சேரியிலே தானே யிருந்து சென்னப்பட்டணத்திலே போயி கொள்ளையிட்ட பணமெல்லாம் புதுச்சேரியிலே தானே யிருக்குது. அதுகளெல்லாம் வெளியே விடுவோம் பட்டணம் யெங்கள் வசமாகப்போகுது. அந்தப்பணம் யெல்லாம் யெங்களைச் சேரவேணும் யென்று சொன்னானென்று முசே திராங்கோர் ரெண்டொரு வெள்ளைக்காறருடனே சொன்னான். அவர்கள் நம்முடனே கோட்டையிலே சொன்னார்கள்.

முசே கறுவாலி (M. Carvalli) க்கி ஆயிரத்தன்னூறு ரூபாயி வரி போட்டதுக்கு முசே லாலி யண்டைக்கி முசே கறுவாலி போயி முன்னேயும்

என்னை முசே துப்பிளேயிக்சு வரவழைச்சார். அதன்பேரிலே நான் யிங்கே வந்தேன். யிப்போ நீங்கள் யெனக்கு யிப்படி வரி யெழுதியிருக்கிறீர்கள். நான் முன்னேயும் கும்பினிக்கு பணம் குடுத்திருக்குறேன். யிப்பவும் யென்னை ஆயிரத்தன்னூறு ரூபாயி கேட்டால் யெப்படி குடுப்பேன் யென்று சொன்னதின் பேரிலே நாயே உன்னுடைய வீடுயென்னா நீயேன்னா நீய் ஆயிரத்தன்னூறு ரூபாயி குடுக்கப் போகாதா உன்னைக் கசோத்திலே போடுவேன் காலிலே விலங்கு போடுவேன் யென்று விசேஷங்களை ரொம்ப உதாசீனமாக பேசி கோபிச்சுக் கொண்டு கையிலே யிருந்த பிறம்பினாலே குத்தித்தள்ளி போ நாயேயென்று தள்ளிவிட்டான். முசே கறுவேலி முசே லெறியண்டைக்கு வந்து பார்த்தான். முசே லாலி யிப்படி யென்னை அவமரியாதை பண்ணத்தை யென்று தாபந்தப்பட்டுச் சொல்லிக் கொண்டான். யென்ன செய்வோம் அப்படி அவன் செய்யச்சே நாம் செய்ய வேண்டிய தென்ன யிருக்குதென்று சொன்னதாகவும் அதுவும் ரெண்டொரு வெள்ளைக்காரர் நம்முடனே சொல்லசமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் மைசூரார் வண்டி மாடு குடுத்தார்கள். அவர்களும் செஞ்சிக்குப் பயணமாய்ப் போயிவிட்டார்கள். அவர்கள் பிறகே பட்டணத்திலே யிருக்கிற சனங்களிலே வெகுபேர் போயிவிட்டார்கள். ஆனால் அவர்கள் வந்ததுலே வெகுபேர் பட்டிணியாலே செத்துப் போனார்கள். வெகு குதிரையும் செத்துப் போயிவிட்டது.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 15; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 3; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் நாம் கோட்டைக்கிப் போனோம். அங்கே வெள்ளைக்காரருக்குப் பண்டிகையானபடியினாலே முசே லெறி கோயிலுக்குப் போயி பூசை கேட்டு ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தார். கோவிலுக்குப் போகச்சேயும் ஆசாரம் பண்ணினோம் வரச்சேயும் ஆசாரம் பண்ணினோம். காம்பிராவுக்குள்ளே போனார் கூட முசே அஷேனோல் (M. Renault)வும் முசே கருவாலியும் கூடப்போனார்கள். அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். பின்னை அஞ்சாறு பேர்கள் வெள்ளைக்காரர் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள் நாம் வெளியே யிருந்தோம். கந்தப்ப முதலி வந்து லோகா பிறமமாய் பேசியிருந்தோம். அப்படி யிருக்கச்சே ராமச்சந்திரராயன் வந்து சிப்பாயியள் உபத்திரவம் ஒண்ணும் பொறுக்கப் போகயில்லை. நேத்து யோசனை பண்ணினபடிக்கி நாம் ஒருத்தன் பேரிலே எழுதத் தேவையில்லை. குமிசேலுக்கு ஒரு பித்திசாமெழுத வேணும். ஒரு மாசத்தைக்கல்லவா குடுக்கச் சொன்னார்கள். அதுவும் குடுக்குறதுக்கு நிறுவாகமில்லை யென்று எழுதி குடுத்தால் அந்த ஒரு மாசத்துக்காகிலும் குடுக்கச் சொல்லி தீருமென்று சொன்னான். அப்படி

போயிகள் சம்மதியாய் பேசிக்கொண்டிருந்தோம். அதிலே நாம் முசே புலோ ஒரு லீவுறு கொண்டு கையெழுத்து வாங்க முசே லெறி யண்டைக்கி வந்து பேசிக்கொண்டிருந்தான். பதினோரு மணியடிச்சு நாம் வீட்டுக்கு வரப்பயணப்பட்டோம். அதிலே முசே துபுவாபண்டையிலே யிருந்து மன்னப்ப முதலி மச்சினன் சக்கரையப்ப முதலி மகன் சரவணன் ஒரு கடுதாசி யொண்ணு வாங்கிக் கொண்டு முசே துபுவா சேவுகன் கையிலே குடுத்து சரவணன் யென்கிறவனும் கூட வந்தான். அந்தக் கடுதாசியை முசே லெறி கையிலே குடுத்தான். அதைப் பார்த்துக் கொண்டு நம்மை அழைக்கச் சொன்னார் நாம் வீட்டுக்குப் பயணமாய் வெளியே வந்தோம். அழைச்சார்கள். நாம் முசே லெறியண்டைக்கிப் போனோம். முசே துபுவா ஒரு கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சார் மன்னப்ப முதலி குமரப்ப முதலி விலங்கு போட்டிருக்குதே அவனை யிப்போ அறுநூறு (600) ரூபாயிக்கி சம்மதிச்சுக் கொண்டான். அவனைக் காவல் விட்டு விடச்சொல்லி எழுதியிருக்கிறார் யென்ன யென்று கேட்டார். அதுக்கு சரவணன் யெங்கிறவன் சொன்னது. யிப்போ வேறே அறுநூறு ரூபாய்க்கி சம்மதிக்கவுமில்லை. அந்தப் பேச்சே பேசவில்லை. துபாசித் தனம் பண்ணவனை தொட்டு வந்திருக்குது. முசே துபுவாவுக்கா பறங்கிப்பேச்சு தெரியவில்லை. துரைத்தனம் பண்ணவனுக்கு புடுதிக்கீசு பேசத் தெரியாது. ஆனபடியினாலே அவருக்கு அப்படி தோணப்பட்டுது. நான் வேறே பேசயில்லை யென்று சொன்னான் யென்னா யென்று கேட்டார். அப்படி யிவன் பேசி யின்னை ஆனால் முன்னே அறுநூறு ரூபாய் தீத்து கொண்டு எழுதி குடுத்தான். அந்த ரூபாய் குடுக்கயில்லை. போனதை மறுபடி கேழ்க்குறது காரியமாய் காணயில்லை. ஆனால் உன்னுடைய இஷ்டம் என்னவோ அப்படிக்கி இப்போ அறுநூறு ரூபாயும் ரொக்கமாய் குடுக்கச் சொன்னது ரொக்கமாய் குடுக்கச் சொல்லு யென்று கேட்டார். அதின் பேரிலே முசே கொடுத்தேன் நாலாயிரம் ஐயாயிரம் ரூபாய் குடுயென்று கேட்டு காலிலே விலங்கு போட்டு கசோத்திலே போடச்சொன்னார். அதுக்கு சரவணன் சொன்னது ரொக்கமாய் குடுக்குறதுக்க யில்லை யெட்டு நாளைக்குள்ளே யெப்படியாகிலும் சம்பாதிச்சு குடுக்குறேன் யென்று சொன்னான். அப்படியானால் ஒரு பிணை சொல்லி வையென்று கேட்டார். கந்தப்ப முதலியை அழைச்சு வந்து விட்டு யிவர்கள் தான் பிணை யென்று சொன்னான். கந்தப்ப முதலியும் யெட்டு நாளைக்குள்ளே பணம் நான் சம்மதி பண்ணுகுறேனென்றும் யிவன் யெங்கள் ஒரம்பறையான்தா னென்று சொன்னான். அப்பறம் மன்னப்ப முதலி குமரப்ப முதலியை காவல் விட்டு விட்டார்கள். பின்னையும் ஆர் யிருக்குறார்களென்று கேட்டார். யிருசப்பச் செட்டி முத்து யிருக்குறானென்று சொன்னோம். அழையுமென்று யிவன் சம்மதி யென்ன யென்றுகேட்டார். யிவனுக்கு குடிகக் கஞ்சியுமில்லை உடுத்த துணியுமில்லை. யிதுப்பட்டணத்திலே சகலமான பேரும்

அறிவார்கள். முன்னே வற்தகம் சற்தகம் பண்ணிக் கொண்டிருந்தான். யிப்போ குடிக்கக் கஞ்சி யில்லாமல் யிருக்குறான் ராமலிங்கம் போட்டு யிவர்களை யெலலாம் எழுதிவிச்சானென்று சொன்னதின் பேரிலே நல்லது விட்டுவிட்டுப் போமென்று சொன்னான். அப்பிறம் எல்லாரி மகனை அழைச்சு வரச்சொல்லி யிவன் சம்மதி யென்ன யென்று கேட்டார். யிவனுக்கு நூறு ரூபாய் எழுதி யிருக்குது குடுப்பானென்று சொன்னதுக்கு அவன் கையிலே சீட்டு வாங்கிக் கொள்ளச் சொன்னார். அந்தப்படிக்கி நூறு ரூபாயிக்கிம் எல்லாரி மகன் கையிலே சீட்டு வாங்கி முசே லெறி கையிலே குடுத்தோம். யின்னம் ஆராகிலும் யிருக்கிறார்களா யென்று கேட்டார் யினிமேல் கசோத்திலே ஒருத்தரும் யில்லை யென்று சொன்னோம். பனிரெண்டடிச்சு அனுப்பிவிச்சுக் கொண்டு நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் இங்கிலீசுக்காரர் வந்து அரியாங்குப்பம் கொத்தளத்தின் பேரிலே சண்டை குடுக்கிறபடியினாலே வண்ணாந்துரை அந்த வட்டங்களிலே யிருந்த வெள்ளைக்காரரும் பீரங்கியும் யெல்லாம் அரியாங்குப்பத்து வழியிலே போயி யிறங்கினார்கள். இத்தனாள் பத்து மணிக்கு நாம் கோட்டையிலே யிருக்கச்சே ஆயிரத்து எழுநூத்து அன்பத்தொன்பதாம் ஆண்டு திசம்பர் மாசம் முப்பதாம் தேதியிலே வெகுதானிய வருசம் மார்கழி மாசம் 19 தேதி வில்லியநெல்லூர் சீமைக்கி நம்முட பங்கு சம்மதிக்கி நம்முட மனுஷர் யிருந்த அமுல்தாரரை முன்னே வாங்கிப்போட்டிருந்தவர்களை மறுபடியும் மகாராஜஸ்ரீ ஆனந்த ரெங்கப்பிள்ளை யவர்கள் அமுல்தாராய் வருவார்கள். அவர்கள் வசம் முன் நடந்து வந்தபடி அமுல்தாக்கீது பண்ணிவிக்கச் சொல்லி குண்டூர் பாலிசெட்டி பேருக்கு தாக்கீது யெழுதி முசே லெறி கோவர்ணதோர் பேரிட்ட பாரீசு முகறும் பண்ணிப்பிராஞ்சு எழுத்திலே தம்முட கையெழுத்தும் போட்டு குடுத்த பற்வானா (Parwana) சீமா மூலசம்மதிக்கி சேர்ந்த தபிக்காதி (Takid) ஒண்ணு யெழுதி முசே லெறியும் முசே துபுவாவும் நம்மை கையெழுத்துப் போடச்சொல்லச் சொன்னதுக்கு நாம் கையெழுத்துப் போடாமல்படி யிருந்தபடியினாலே அந்தப் பற்வானா (Parwana) அந்தப்பற்வானா வாங்கிக் கொண்டது. யித்தனாள் கந்தப்ப முதலி வைச்சுக் கொண்டிருந்து பலவந்தமாய் கோட்டையிலே பத்துமணிக்கி நம்முட கையிலே குடுத்து யிந்த பற்வானாவைத் தொட்டு குண்டூர் பாலிசெட்டி கையிலே பணம் வாங்குறதுக்கு சாதகமென்று குடுத்தான். அதை வாங்கிக் கொண்டு யிதென்னா யிப்படி அனேகம் சாதகம் யென் கையிலே யிருக்குதென்று சொல்லி வாங்கிக் கொண்டு வந்து கூடத்திலே யிருக்கிற சாயமான பெட்டி அறையிலே வைச்சோம்.

முன்னாலே பொல்லாத காலத்திலே யிப்படி யெல்லாம் போன காரியங்களெல்லாம் யிப்போ ஆவணி மாசம் முதல்க்கொண்டு

பலவந்தமாய் நம்முடைய கைக்கு வருகுறபடியினாலே யினிமேல் ஆவணி மாசம் முதல் தேதி முதல்க்கொண்டு சுபகாலமெங்கிறதுக்கு தப்பிதமில்லை யென்று மனசிலே திடாரிக்கமாயிருக்குது.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 16; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 4; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே லெறி முசே றெனோ முசே புலோ முசேனுவார் யிப்படி நாலஞ்சு பேர்போயி உள்ளே பேசியிருந்து வெளியே வந்தார்கள். நாமும் ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பன்னினார். அப்பாலே யென்ன சேதி யென்று கேட்டார். யென்ன சேதியிருக்குது பட்டணத்திலே கொள்ளக் கிடைக்காததைத் தொட்டு அஞ்சாறு நாளாய் ஆயிரம் ரெண்டாயிரம் செனங்களுண்டு வெளியே போயிவிட்டது. யின்னம் போக்காய்த் தானே யிருக்குது. மைசூரார் போனத்தைத் தொட்டு ஆயிரம் ரெண்டாயிரம் பேர் பட்டணத்து செனங்கள் போயிவிட்டதைத் தொட்டும் சத்து பறப்பில்லாமல் உண்டென்னாப்போலே அரிசியிருக்குது யென்று சொன்னதுக்கும் முசே லாலி வரிப்பணமும் சீக்கிறத்துக்கு தண்டச்சொல்லி தாக்கீது பண்ணி யிருக்குறோம் மனுஷர் தண்டுகுறார்கள் யென்று சொன்னதுக்கு போறதுயெல்லாம் நல்லதுதான். யிந்தவேளை யிருக்கிறது யின்னம் யிருக்கிற பேருக்கு நாலு நாளைக்கி உண்டென்று சாப்பிடுவார்கள் யென்றும் சொன்னார். அப்பிறம் அப்படி பேசியிருந்து அவரவர் பிறப்பட்டு வீட்டுக்குப் போயிவிட்டார்கள். நாமும் பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் இங்கிலேசுக்காரர் முத்திருசப்பிள்ளை சாவடி தவளைகுப்பம் சாவடி சுண்ணாம்பாறு அந்த வட்டங்களிலே வந்து யிறங்கி மோற்சா போட்டு அரியாங்குப்பம் கோட்டை வாங்கிற யெத்தனத்தின் பேரிலே யிருக்குறார்கள் நம்முடவர்கள் அதின் பேரிலே வாசுதேவன் சாவடி அரியாங்குப்பம் கோட்டைக்கி அடுத்தாப்போலே மேலண்டை யிருக்கிற இருசாம்பாளையத்திலேயும் மோற்சா போடுகுறார்கள். இங்கிலேசுக்காரர் சுண்ணாம்பாத்துக்கு அந்தண்டை யெத்தனம் பண்ணுறார்கள். நம்முடவர்கள் ஆத்துக்கிந்தண்டை யெத்தனம் பண்ணுறார்கள் யிந்தப்படியாக நேத்து முதல்க்கொண்டு யிந்த யெத்தனத்தின் பேரிலே யிருக்குறார்கள்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 17; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 5; நாயத்துக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். போறதுக்கு முன்னே யேழுமணிக்கித் தானே முசே லெறி கப்போசு

கோவிலுக்குப் போயி பூசை கேட்டு வந்தாரென்று மூணு கிழமையாய் ஒரு பண்டிகையினால் கோட்டைக் கோவில் திறந்து மூணு நாலு பேருடனே போயிபூசை கேட்டு வருவார். யின்னைய தினம் கப்போசு கோவிலுக்குப் போயிருந்தது யெதினாலே யென்றால் மனசிலே முசே லெறிக்கு முசே லாலியுடைய பாணபேதை யென்னமோ பட்டிருக்கிற படியினாலே மனஸ்தாபம் வந்து அதனாலே போனாரென்று ரெண்டு ஒருத்தர் அங்கே யிருந்தவர்கள் சொன்னார்கள். ஒன்பதரை மணிக்கி நாம் போயி மலையாளம் கடப்பநாட்டு ராசா முசே லெறிக்கு ஒரு ஓலையும் நம்முட பேருக்கு ஒரு ஓலையும் சம்பா கோவில் பாதிரி பேருக்கு ஒரு ஓலையும் யிந்த மூணு ஓலையும் ஒரு பிராமணன் கையிலே குடுத்து அனுப்பிவிச்சார். அந்த ஓலையைக் கொண்டு போயி யிப்படியானால் மலையாளம் கடப்பனாட்டு ராசா உங்களுக்கு ஒரு ஓலை யெழுதி அனுப்பிவிச்சாரென்று சொன்னோம். யென்ன யெழுதியிருக்குதென்று கேட்டார். அந்த ஓலையைப் படிச்சு ஓலை மத்தலப்பு சொன்னோம். பின்னையும் யிருக்கிற ஓலை ஏதென்று கேட்டார். நமக்கு வந்த ஓலை ஒண்ணும் கப்போசு கோவில் பாதிரிக்கி வந்த ஓலை ஒண்ணுயென்று சொன்னோம். அதிலே யென்ன எழுதியிருக்குறது கேட்டார். ரெண்டு ஓலையும் படிச்சு அதிலே யிருக்கிற மத்தலப்பும் சொன்னோம். தம்முட பேருக்கு எழுதியிருக்கிற ஓலையைப் பிரஞ்சுப்படுத்தி வரச்சொன்னார். யிப்போ பிரஞ்சுப்படுத்துறவர் ராமச்சந்திர ராயனாங்காட்டும் அவரை அழைச்சு பிரஞ்சுப்படுத்தி வரச்சொன்னார். அவர் முசே திபோம் கையிலே பிரஞ்சுப்படுத்திக் கொண்டு வரப்போனார். அப்படி யிருக்கச்சே முசே துபுவா வந்தான். வந்தவன் முசே லெறியும் ரெண்டு பேரும் யென்னமோ பேசிக்கொண்டிருந்தார்கள் ஆருதோ யிப்போ ரெண்டு கடுதாசி பிரஞ்சு எழுத்திலே எழுதி ஒரு கட்டு கடுதாசி கனகராய முதலியார் பாட்டனாரைப் புதைச்சு கோரிகட்டி யிருக்கிறதின் பேரிலே ஒரு கடுதாசியும் செஞ்சி ஸ்தம்பங்கள் வந்திருக்கிறதின் பேரிலே ஒரு கடுதாசியும் ரெண்டு கடுதாசி ஒட்டி யிருந்தது. அதை செனங்கள் கும்பலாய்க் கூடிப்பார்த்துக் கொண்டிருந்தார்கள். முசே லெறிகப்போசு கோவிலுக்குப் போனவர் அதைக் கண்டு தம்மண்டை யிருக்கிற சட்டைக்கார (லுசு) (Louche) யைப் போய் யெடுத்துவரச் சொன்னார். அவன் போறதுக்கு முன்னே முசே லாலி அண்டையிலே யிருந்து ஒரு குதிரைக்காரன் துற்கம் வந்து அந்த ரெண்டு கடுதாசியும் எடுத்துக் கொண்டு போய்ப் படிச்சுப்பார்த்து சவாத்து யெழுதிக்கொண்டு அந்தக் கடுதாசியை முசே லெறியண்டைக்கி அனுப்பிவிச்சார். அவர் அதைப் பார்த்துக் கொண்டு மறுபடி முசே லாலியண்டைக்கி அனுப்பிவிட்டார். அதிலே யெழுதி யிருக்கிற மத்தலப்பு யென்னயென்றால் முன்னே கும்பினி தாலூக்காயிருந்த கோவர்ணதோர் குமிசேலியோர் கொஞ்சம் பேர் சொலுதாதுகளை வைச்சுக் கொண்டு

சென்னப்பட்டணம் பிடிச்சுக் கொண்டு மேஸ்தர் மாசு முதலாகிய பேரை செயிச்சு அவனையும் கொன்னார்கள். திருச்சினாப்பள்ளிக்கிப் பவுஞ்சு அனுப்பி அவ்விடங்களிலே சிறிது சீமையைக் கட்டினார்கள் முசே புசியை சலாபத்து சங்கு அண்டைக்கி அனுப்பி பந்தர் அந்த வட்டங்களிலே கோடி ராச்சியம் மட்டுக்கும் கட்டினார்கள். யிப்படி யெல்லாம் முன்யிருந்த கோவர்ணதோர் கும்பினி மனுஷர் செயம்பண்ணினார்கள். என்கிறது சீமையிலே ராசாவானவர் கேட்டு யின்னம் யிவ்விடத்திலே சீமையள் கட்டவும் பின்னையும் காரியங்கள் யெல்லாம் செயம் பண்ணவும் றூயித்தினாந்து செனராலாயிருக்கிற உம்மை அனுப்பிவிச்சால் வெகு சீமைகளை கட்டி வெகு சீக்கிறத்திலே கீற்த்தி கொண்டு வருவீரென்று யிவ்விடத்துக்கு பதினாறு கப்பலும் அய்யாயிரம் சொலுதாதும் உம்மையும் கூட்டி அனுப்பிவிச்சார். நீர்வந்து வடக்கே யிருந்த முசே புசியை அழைச்சனுப்பிவிச்சு அவ்விடத்துக் காரியங்களெல்லாம் நிறுவாகம் பண்ணிப் போயிவிட்டார். பந்தரிலே யிருந்து முசே மொற்சேனை அழைச்சனுப்பி வைச்சு பந்தர் முதலாகிய கோடி ராச்சியம் யெல்லாம் நிறுவாகம் பண்ணிப்போட்டீர். திருச்சினப்பள்ளியிலே யிருந்த பவுன்சு அழைச்சு அனுப்பி அதையும் சரிப்படுத்திப் போட்டீர். காரைக்கால்ப் பேச்சையும் நிறுவாகம் பண்ணிப்போட்டீர் வழுதாவூர் வில்லியனூர் முதலாகிய தெல்லாம் நிறுவாகம் பண்ணிப்போட்டீர். தியாகதுற்க்கம் யிருந்ததையும் அதையும் சரிக்கட்டிப் போட்டீர் இனி செஞ்சியும் புதுச்சேரியும் யிருக்கிறது செஞ்சியும் அஞ்சாறு நாளையிலே ஒப்பிவிச்சுப்போட்டு அப்பிறம் புதுச்சேரியும் ஒப்பிவிச்சுப்போட்டு இங்கிலேசுக்காரர் கையிலே அகப்பட்டுக் கொண்டேனென்று கையெழுத்தும் போட்டுக் குடுத்து அதுக்கு முன்னே அகப்பட்ட பணம் யெல்லாம் சுத்திக்கொண்டு அங்கங்கே வெளிகளிலே பத்திரம் பண்ணிப்போட்டு நீரும் சீமைக்கிப் போயி உம்மை அனுப்பிவிச்சு ராசா உடனே யிப்படி யெல்லாம் நான் போயி சகலகாரியமும் திக்கு விசயம் யெல்லாம் நான் போயி சகல காரியமும் திக்கு விசயம் பண்ணி நிறுவாகம் பண்ணி புதுச்சேரியும் இங்கிலீசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுப்போட்டு கையெழுத்தும் போட்டு குடுத்து வந்தேனென்று சொல்லத்தக்கதாக யோசனை பண்ணிக்கொண்டிருக்கிறீர். உம்மை ராசா அனுப்பிவிச்சதுக்கு கன்னியாகுமரி முதல்க்கொண்டு டில்லி மட்டுக்கும் பிரஞ்சுக்காரருடைய கீர்த்தியும் பிறதாபமும் விளங்க வேணும் யின்னம் வெகுராச்சியங்கள் கட்டவேணும் யென்று உம்மை அனுப்பிவிச்சு யின்னம் அப்பிறமும் பிராஞ்சு ராசாவுடைய கீற்த்தியும் பிறதாபமும் விளங்க வேணுமென்றும் உம்முடய கீற்த்தியும் விளங்க வேணுமென்று அனுப்பிவிச்சதுக்கு நீர் சகலகாரியங்களுக்கும் திக்கு விசயம் பண்ணி உம்முடைய பேரும் விளங்கப் பண்ணி உம்மை அனுப்பிவிச்ச ராசாவுக்கும் சகல கீற்த்தியும்

வருவிச்சீர் உம்மைப் போலே யிப்படி யெல்லாம் ஆர் செய்யப்போறார்கள். பட்டணத்திலேயா சகலசெனங்களும் பிச்சை யெடுக்கப் பண்ணீர்யென்றும் யிப்படியெல்லாம் எழுதியிருந்ததாய் கோட்டையிலே ரெண்டு ஒருத்தர் சொன்னார்கள். யிந்த சம்மதிக்காகத்தான் முசே லெறியுடனே முசே துபுவா பேசிக்கொண்டிருந்து நம்மை அழைச்சு பணம் தண்டியாச்சு தா யென்று கேட்டார்கள். அதே வேலையாய்த்தான் பணமும் தண்டுகுறார்கள். கருமார் தச்சர் சிறிதுபேர் அவரவர் சிபாரிசு கொண்டு வருகுறார்கள் நீங்களும் அதுக்கு உத்தாரம் குடுத்துப் போடுகிறீர்கள். ஆனபடியினாலே அதைப் பார்த்துக் கொண்டு குடுக்கிற பேரும் சண்டித்தனம் பண்ணுகுறார்கள். ஆகையினாலே சத்து மெதுவிலே பணம் வரும் தண்டியானவுடனே பணம் தண்டின கணக்கும் நீங்கள் உத்தாரம் குடுத்த கணக்கும் ரெண்டும் எழுதிவந்து தாறோம் யென்று சொன்னோம். அப்பிறம் நாம் வந்து வெளியே யிருந்தோம். முசே துபுவா பிறப்பட்டுப் போயிவிட்டான். பிறகு முசே புலோவும் முசே லங்கற்னையும் ரெண்டு பேரும் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள் யென்ன யென்றால் அவர்கள் பேரிலே போட்ட வரி சம்மதிக்கித்தான் அப்பிறம் முசே கொடுத்தேனையும் முசே தெனியும் அழைச்சு வரச்சொன்னார்கள். அப்படி யிருக்க முசே லாலியுடைய சக்கிறத்தார் முசே ரொஷேத்து யென்கிறவன் முசே லாலியுடைய வேலைக்காறருக்கும் நீய் வரி வாங்கிறியாம் முசே லாலியுடனே நீ யென்ன விளையாடுறாயா யென்று ஒரு கடுதாசியிலே யெழுதி அனுப்பிவிச்சான். அதிலே முசே புலோ வெளியே வந்தார். அவருக்கு அந்த கடுதாசியைக் காண்பிச்சோம். அவர் அதைப்பார்த்துக் கொண்டு முசே லெறிக்கிட்ட கொண்டு போயி காண்பிச்சார். அவர் பாத்துக்கொண்டு நகைச்சுக் கொண்டிருந்தாரே யல்லாமல் வாய்திறந்து ஒண்ணும் உத்தரவு சொல்லயில்லை. மறுபடி முசே புலோ வந்து சொன்னது பதிலுக்கு நான் அந்த வேலையிலே யில்லை. அதுக்கு முசே லாலியுடைய ஒடுதிப்படிக்கி வீட்டுவரி அவரவர் பரம்பரையார் வாங்குறார்களென்று எழுதியனுப்பி வையுமென்று சொன்னார். நல்லது அந்த கடுதாசியை வாங்கிக் கொண்டு கடுதாசி கொண்டு வந்த சாந்தப்ப சேருவைக்காறனை முசே லாலியுட வேலைக்காரன் யெத்தனை பேரென்று கேட்டோம். சோபுதாரன் சேர்வைக்காரர் தண்ணிக்காரர் நாங்கள் யேகத்துக்கு பனிரெண்டு பேரென்று சொன்னான். அந்தப்பேர்வழியாம் படியே எழுதிக்கொண்டு வா தள்ளிப் போடுகுறோமென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம் வரச்சே முசே கொடுத்தேன் யென்னைக் கண்டு யென்னுட சொந்த காரியம் சம்மதியள் பேசவேண்டியிருக்கு யிப்போ சமயமில்லா யின்னோரு வேளையிலே கண்டு பேசிக்கொள்ளுகுறேனென்று சொல்லிப் போட்டு போயி விட்டான். இத்தனாள் கும்பினி சேவுகர் அல்லாமல் அவரவர் வீட்டிலே முத்திரை குடுத்து சேவுகராய் வச்சு யிருந்தால் அந்த முத்திரை யெல்லாம்

கும்பினியிலே கொண்டு போயி குடுத்து விடச்சொல்லி தாக்கீது பண்ணி உத்திரவு பிறந்தது. மலையாளம் கடப்பனாட்டு ராசா முசே லெறி பேருக்கு யெழுதியனுப்பின ஓலை சமாச்சாரம் யென்னயென்றால் உங்களுடைய மனுஷர் நம்மை சிறிது பணம் கடன் கேட்டார்கள். அதுக்குப் பணம் குடுத்தோம். அந்தச் சமாச்சாரம் மூத்தாராகிய முசே லுயேத்தும் யிளையாராகிய குமிசேல்க்காரரும் தங்களுக்கு எபதியிருப்பார்களே அந்த சமாச்சாரம் தங்களுக்கு தெரிஞ்சு யிருக்குமே. பிரஞ்சு குமிபினியாருடைய சினேகம் வேணுமென்று நாங்கள் யெழுதியனுப்பி விச்சோம். புதுச்சேரி யிங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டார்களெங்கிற சேதி அவ்விடங்களிலே யெல்லாம் மறுபடியும் நம்முடையவர்கள் மயேயிலே யிருக்கிறவர்கள் கடன் கேழ்க்கப் போனார்கள். புதுச்சேரி யிங்கிலேசுக்காரர் கையிலே அகப்பட்டுது யெங்கிற சேதியினாலே யிதை அறிஞ்சு கொள்ளுவோமென்று கடன் கேழ்க்க வந்த மனுஷரை வைச்சுக் கொண்டு பணம் தாறோமென்று சொல்லி அவர்கள் அறியாமல்ப் படிக்கி யிவ்விடத்துக்கு எழுதி அனுப்பிவிச்சார்கள். புதுச்சேரியின் பேரிலே யிங்கிலீசுக்காரர் வந்து யிறங்கி யிருக்கிறார்களென்று சமாச்சாரம் கேட்டோம் அது தெரிய எழுதியனுப்பி விக்கச் சொல்லி யெழுதியிருந்தது.

*(1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 17; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 4;)*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்ன வென்றால் நேத்து பகலுக்கு மேலாக முதல்க்கொண்டு ராத்திரி யெட்டரை மணி மட்டுக்கும் நடந்தது. முசே லாலி ஒரு கடுதாசி யெழுதியனுப்பிவிச்சார். அப்போ முசே லெறியும் முசே மொர்சேனும் முசே கொடுத்தேனும் மூணுபேரும் யிருந்தார்கள். அந்தக் கடுதாசி பார்த்துக் கொண்டு பதில் கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சார்கள். மறுபடிக்கி முசே லாலி தம்முடைய சக்கிறத்தார் கையிலே ஒரு கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சார். அதுவும் பார்த்துக் கொண்டு அதுக்கும் பதில் உத்தாரம் எழுதி அனுப்பிவிச்சார்கள். மறுபடிக்கி ராத்திரி யெட்டரை மணிக்கி முசே லாலி எழுதி அனுப்பிவிச்சான். யிந்தப்படியாக மூணுதரம் கடுதாசி போக்கும் வரத்தும் ஆக யிருந்தது. இந்த சம்மதிக்காகத்தான் யின்னைய தினமும் முசே லெறி முசே புலோ முசே கொடுத்தேன் முசே லங்கற்னை முசே தெனி யிவர்களெல்லாம் கூடிப் பேசி யோசனை பண்ணினார்கள். இத்தனாள் ராத்திரி யெட்டு மணிக்கி கேழ்க்கப்பட்ட சேதி முசே லாலி முசே லெறி பேருக்கு கடுதாசி ஒண்ணு எழுதி கையெழுத்துப் போட்டு அனுப்பிவிச்சான். யென்ன யென்றால் பட்டணத்திலேயுள்ள வெள்ளைக்காரர் ஆலி மூவாலி சகலமான பேரையும் நாளைக்காலமே ஒன்பது மணிக்கி கோட்டையே வரச்சொல்லி சொன்னதாய் நாளையதினம்

பெரிய குமிசேல் கூடுகிறதாயும் ரெண்டொரு வெள்ளைக்காரர் நம்முட வீட்டுக்கு வந்தார்கள். அவர்கள் சொன்னார்கள். இன்னத்துக்கென்று தெரியாது மறுபடியும் அவர்கள் தானே சொன்னார்கள். இத்தனாள் காலமே ஒரு கடுதாசியிலே முசே லாலியை ரொம்ப நிந்திச்சு எழுதியிருந்ததென்றும் அது நிமித்தியம் போல காணுதென்று சொன்னார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 18; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 6; திங்கள்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் ஒன்பது மணிக்கி கோட்டைக்கிப் போயி முசே லெறியை காண்பிச்சுக் கொண்டு மலையாளம் கடத்தை நாட்டு ராசா அனுப்பிய ஒலை பிறஞ்சுப் படுத்தினதை குடுத்தோம். அதைப் பார்த்துக் கொண்டு அந்த ஒலை யெங்கே யென்றார் ஒலையும் குடுத்தோம். அதையும் வாங்கிக் கொண்டு வந்தவனை நாளையதினம் பயணம் பண்ணி அனுப்பிவிப்போம் யென்று சொன்னார். அப்பிறம் முசே லாலியுடைய சக்கிறத்தார் முசே ரொஷேத்து யெங்கிறவன் நமக்கு நேத்து எழுதியனுப்பிவிச்ச பில்லேத்துக்கு பதில் எழுதினத்தை முசே லெறிக்கு காண்பிச்சோம். அதைப்பார்த்து நண்ணா யிருக்குது அனுப்பிவிக்கலா மென்றும் சொன்னார். நாம் பட்டணத்திலே செனங்கள் ரொம்ப தத்தளிக்குறார்கள் யென்று சொல்லி பேசிக்கொண்டிருக்கச்சே முசே மொர்சேன் வந்தான். ரெண்டு பேரும் உள்ளே போனார்கள். நாம் வெளியே வந்தோம். அங்கே முசே புலோ வந்தார். அவருக்கும் முசே ரொஷேத்துக்கும் யெழுதின பில்லெத்துவைக் காண்பிச்சோம். அவரும் பார்த்து அனுப்பிவிக்கலாமென்று சொன்னார். அப்பிறம் கந்தப்ப முதலியும் ராமச்சந்திரராயனும் நம்மண்டைக்கி வந்து போயிகள் சம்மதிக்கி எழுதின பித்திசாமுக்கு நீங்களும் கையெழுத்துப் போட்டு குடுக்க வேணுமென்று சொன்னார்கள். மூணு பித்தி சாமிலேயும் கையெழுத்துப் போட்டோம். அப்படி யிருக்கச்சே முசே லாலியுடைய ரிஷிமெண்டிலே (Lally's Regiment) அன்பது பேர் சொலுதாதும் ரெண்டு கப்பித்தானும் யிவர்களெல்லாரும் வந்து மெத்தை வீட்டின் கீழே வரிசையாய் நின்னார்கள். அப்பால் குமிசேல்க்காரர் கணக்கர் வெள்ளைக்காரர் ஆலிமூவாலி சகலமான பேரும் கோட்டையிலே வந்திருந்தார்கள். பத்துமணிக்கி முசே லாலியும் பாதிரி வீசுப்பு நொரோன்னும் அவருக்கு ஆப்த்தமான வெள்ளைக்காரர் அஞ்சாறு பேரும் ஒப்பிசேல் மாரும் துற்க்கம் குதிரைக்காரர் முன்னும் பின்னும் துப்பாக்கியளுடனே சுத்திவர கோட்டைக்கி வந்தார். வரச்சே அவர் வருகிற சாடையும் முகத்தையும் பார்த்தால் ரொம்ப பயந்து வருகிறவனைப் போலே கண்டுது. அந்தப் படிக்கி வந்து கோவற்ணமாம் வீட்டிலே மெத்தை மேலே யேறி முசே திம்மோ யென்கிறவன் (M. Dumont) யெழுதின கடுதாசியைப் படிச்சுக்

காண்பிச்சார். அதிலே நம்முடவர்கள் யிசுக்காதர் கப்பல் சீமைவிட்டு பிறப்பட்டு மசுக்கரை வந்து சேர்ந்தது. அதிலே திரவியமும் செனங்களும் விஸ்தாரமாக வருகுறார்கள். கப்பலும் சீக்கிறமாய்த் தானே வரப்போகுது. யென்னதான் தடிச்சாலும் நொவம்பர் மாசம் 30க்குள்ளே யெப்படியும் வரும் யெல்லாரும் சுகப்படுவோ மென்றும் முன்னாலே நான் வந்தவாசியிலே யிருக்கச்சே முசே லெறிக்கு சொல்லியனுப்பி விச்சேன். ஒரு வருஷத்துக்கு றஸ்து சேர்த்து வைக்கச் சொல்லி எழுதியனுப்பி விச்சோமே, அந்தப்படிக்கி சேர்த்து வையாதபடியினாலே முசே லெறி பேரிலே யிப்போ நம்முடவர்கள் சொலுதாதுகளுக்கு சோறுயில்லாத படியினாலே, ஒப்பிசியால் மாருக்கும் சோறும் யில்லை. அவர்களுக்கு சோறில்லாத படியினாலே சண்டைக்குப் போகச்சொன்னால் ஒப்பிசால் மாரெல்லாரும் உள்ளே வந்து சேருகுறார்கள். சொலுதாதுகளைச் சண்டைக்குப் போகச் சொன்னால் யெங்கே சத்துராதிகளுடனே கூடிக் கொள்ளுகுறார்களோ என்கிற யோசனையா யிருக்குது. ஆனபடியினாலே அவர்களெல்லாம் சோறுயில்லாமல் சாகச்சே யெப்படி சத்துருதிகளின் பேரிலே சண்டைக்கிப் போவார்கள். ஆனபடியினாலே ஒப்பிசியால்மார் சொலுதாதுகளுக்கு சம்பளம் சிலவும் நடக்க வேணும். யிதுகளுக்கு யெல்லாம் நீங்கள் யெல்லாருமாய்க் கூடி யோசனை பண்ணி சொல்லுங்களென்று சொல்லிப் போட்டு நில்லாமல் படிக்கி அந்த க்ஷணம் பிறப்பட்டு வீட்டுக்குப் போயிவிட்டார். போகச்சே ரிஷிமாம் தெலொறேனுடைய (Reginont de Lorrane) சொலுதாதுகளை பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச் சொல்லியும் ரெஷிமாம் லாலியுடைய சொலுதாதுகளை கோவற்ணமாம் வீட்டிலே யிருக்கிற பல்லக்குச் சாவடியிலே காவல் யிருக்கச் சொல்லிப்போட்டு வீட்டுக்கு போயிவிட்டார். போகச்சேயும் வரச்சேயும் வெகு பயத்துடனே போனார். யெதிராளி கொல்ல வரச்சே பயந்தால் யெப்படி யிருப்பானோ அப்படி யிருந்தது முகத்தைப் பார்த்தால் கண்டுது. அப்பிறம் கோட்டையிலே குமிசேல் கூடி யிருந்தார்கள். யென்னமாய் தீந்துதோ தெரியாது.

இத்தனாள் ராத்திரி ரெண்டு கடுதாசியும் முந்தாம் நாள் ராத்திரி ரெண்டு கடுதாசியும் எழுதி முசே லாலியுடைய கட்டிலின் பேரிலேயும் மேசையின் பேரிலேயும் யிருந்தது. அதைப் படிச்சுப் பார்த்தால் உன் சீவனைப் பத்திரமாய்ப் பார்த்துக்கோ. உன் ஒரு சீவன் போனால் மத்த சகல செனங்களெல்லாம் சுகப்பட்டுப் பிழைச்சுப் போவார்களென்று எழுதியிருந்ததாய் கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் முசே லாலி வந்து கோட்டையிலே சொன்னது யென்ன யென்றால் முசே லெறி கோவற்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர் கணக்கர் சு. மர்ஷான்கள் கும்பினியில் சேவிச்சவர்கள் வெள்ளைக்காரர் யாதாமொருத்தருண்டோ அவர்களுடைய ஆஸ்தியள் ரொக்கமும்

தட்டுமுட்டு பொன் நகை, வெள்ளி நகையள். சாப்பிடுகிற வஸ்துக்கள் நெல்லு அரிசி, நெய், கோழி, ஆடு, மாடு யென்ன உண்டோ அதுகளெல்லாம் அவரவரைக் கொண்டு வந்து எழுதிவிக்கச் சொல்லிச் சொன்னார். ரொக்கம் தட்டு முட்டு ஆஸ்தியளுடனே சேர்த்து எழுதுகுறதுக்கு முசே மொற்சேனையும் முசே கொடுத்தேனையும் நேமிச்சார்களென்று சொல்லிக் கொண்டார்கள். சாப்பிடுகிற வஸ்து நெல்லு அரிசி சாமக்கிறயத்துடனே சேர்ந்தது அவரவர் வீட்டிலே போய் சோதிச்சு எடுத்துக் கொண்டு வந்து முசே பனோ கையிலே ஒப்பிவிக்கிறதுக்கு முசே மீராவையும் முசே தினேனையும் நேமிச்சார்கள். அதின் பேரிலே முசே லெறி, கோவற்ணதோர் முசே மோர்சேன், முசே கொடுத்தேன், முசே புலோ குமிசேல்க்காரர் யெல்லாரும் குமிசேல்க்கூடி ஒரு கடுதாசி யொண்ணு எழுதி முசே லங்கற்னை கையிலே குடுத்து முசே லாலியண்டைக்கி அனுப்பிவிச்சார்கள். அதுக்குப் பதிலுத்திரவு நாலுமணிக்கி எழுதி அனுப்பிவிச்சார்கள்.

முசே லெறி அதை முசே மொற்சேன் முசே கொடுத்தேன் அவர்களெல்லாரும் பார்த்துக் கொண்டு அதுக்கும் பதிலுத்திரவு எழுதியனுப்பி விச்சார்கள். அதுக்குப் பதிலுத்திரவு ராத்திரி யெட்டு மணிக்கி எழுதியனுப்பி விச்சார்கள். இந்தப்படியாக உத்திரப் பிறதியுத்திரம் நடந்தது. முசே சொல்மினியாக்கு முசே புலி (M. Puly) யிப்படி இருபத்திரெண்டு பேர் வெள்ளைக்காரர் பேர்வழியிலே முப்பதினாயிரம் ரூபாய் போட்டதும் மத்த தமிழரும் தவிர எழுதிப்போட்டார்கள். மத்த முசே லெறி முதலாகிய குமிசேல்க்காரர் கணக்கர் சு. மார்ஷான்மார்கள் கும்பினியிலே சேவிச்சவர்கள் யாதாமொருத்தர் உண்டோ அவர்களுடைய ஆஸ்தியளெல்லாம் கொண்டு வந்து யெழுதிவிக்கச் சொல்லிப் போட்டுப் போயிவிட்டான். யினிமேல் யென்ன நடக்குமோ அதுகளை அறிய வேண்டியது.

*1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 19; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 7; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே யிருந்தார். முசே லங்கற்னை ரெண்டொருத்தர் வெள்ளைக்காரர் வந்து காத்துக் கொண்டு யிருந்தார்கள். ஒன்பது மணிக்கி கதவைத் திறந்து கொண்டு வெளியிலே வந்தார். நாம் போயி ஆசாரம் பண்ணி ஒரு பூச்செண்டு ஒண்ணு குடுத்துப்பார்த்தோம். அதை வாங்கி மேசைப் பலகையின் பேரிலே வச்சுப்போட்டு யெப்போதும் பூச்செண்டு குடுத்தால் யெத்தனை சந்தோஷமாய் வாங்கிக் கொண்டு முகந்து கொண்டே யிருப்பார். யின்றையதினம் முகம் சத்து ரொம்ப வாடியிருந்தது. பூச்செண்டையும் மேசைப் பலகையின் பேரிலே வச்சுப் போட்டார். அப்பிறம் முசே

மொற்சேனமும் முசே புலோவும் சம்பாவுலு கோவில் சுப்பீரியர் பாதிரியும் வந்தார்கள். அவர்கள் வந்த உடனே முசே லாலி நேத்து எழுதி அனுப்பிவிச்சு கடுதாசியைக் காண்பிச்சதின் பேரிலே பேசிக் கொண்டார்கள். அதைக் கொண்டு போயி படிச்சுக் காண்பிச்சுப் பேசிக்கொண்டார்கள். முசே தினே ரெண்டு மூணுதரம் வந்து கண்டு பேசிப் போனானென்றும் அதனாலே யெல்லாம் யென்ன யென்றால் வெள்ளைக்காரர் வீட்டிலே சாமானுகள் யெடுக்குற சம்மதிக்கு வந்து கண்டு பேசி போனான்.

அப்புறம் முன்னே தமிழருடைய தெருவுகளிலே யெப்படி யெழவு குடுத்தார்களோ அந்தப்படிக்கி யின்னைய தினம் கோவற்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர் வீடுகளெல்லாம் கணக்கர் சுமர்ஷான்மார்கள் யிவர்கள் வீட்டுகளிலே யெல்லாம் வெள்ளைக்காரர் தெருவுகளெல்லாம் யெழவு பிறந்தது. சாவடி ஞாயத்துக்குப் போயிருந்த முசே கொடுத்தேன். பதினோரு மணிக்கி வந்து பேசிக் கொண்டிருந்தான். அப்பிறம் முசே துபுவா வந்து பேசிக் கொண்டிருந்தான். அப்பிறம் பனிரெண்டு மணி வேளையான படியினாலே நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். இனிமேல் நடக்கிற சமாச்சாரம் தெரிஞ்சு எழுத வேண்டியது.

முசே லெறியுடனே சொன்னது ஆராயிரம் ரூபாயி வரி சம்மதிக்கி நேத்திய தினம் வரைக்கும் தண்டலான ரூபாயி ரெண்டாயிரம். யிந்த ரெண்டாயிரம் ரூபாயும் முசே துபுவா அண்டைக்கி கொண்டு போனார்கள். அவர் கடுதாசி ஒண்ணு எழுதிக் குடுத்து முசே துப்பிளாம் கையிலே செலுத்தச் சொல்லி அனுப்பிவிச்சார். முசே துப்பிளாம் கையிலே ரெண்டாயிரம் ரூபாயிம் செலுத்தி ரெசீது வாங்கிக் கொண்டு வந்தார்கள். மத்தப்பணமும் தண்டுகுறார்கள். அதுவும் கொண்டு வந்து செலுத்திப் போடுவார்களென்று சொன்னோம். சீக்கிறத்துக்கு தண்டி செலுத்திப் போடச்சொல்லி சொன்னார். முசே கில்லியாருடைய பிரம்பு பொன்பிடிக்கு விராகனிடை 80 பொன்பிடி கத்தி விராகனிடை 140 பொன்சுமிள் கப்பு வெள்ளி நகையள் பொட்டி யிதுகளை உருக்குறதுக்கு டங்காசாலைக்கி அனுப்பி விச்சான். முசே புலோ வந்து யிப்போ உருக்க வேண்டாம் யென்று சொல்லிப்போட்டு எடுத்துப் போகச் சொல்லிப் போட்டபடியினாலே முசே கில்லியார் மறுபடி வீட்டே யெடுத்துக் கொண்டு போனான் என்கிறச் சமாச்சாரம் டங்காசாலையார் வந்து சொன்னார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 20; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 8; புதன்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போயிருந்து முசே லெறியைக் காண்பிச்சுக் கொண்டு முசே லாலி அண்டையிலிருக்கிற சோபுதாரன் சேருவைக்காரன் தண்ணி யெடுக்குறவர்கள்

அவர்களுக்கெல்லாம் வரி வாங்கத் தேவையில்லை. யிது முசே லாலியுடைய ஒடுதி யென்று அவருடைய சக்கிறத்தார் நமக்கு யெழுதியனுப்பி விச்சார் யென்று நாம் சொன்னதுக்கு அவர் சொன்னது தம்மண்டையிருக்கிற பேரும் நம்மை வந்து கேட்டார்கள். யிப்படி யெல்லாருக்கும் உத்தாரம் குடுத்தால் பணம் யெப்படி அறுவாகும் யென்று நாம் சொன்னோம். அப்படி பேசிக்கொண்டிருக்கச்சே முசே மொற்சேன் முசே கொடுத்தேன் யெல்லாரும் வந்தார்கள். வந்தவர்கள் வெள்ளைக்காரர்கள் கையிலே வரி வாங்கிற நிமித்தியம் பேசித் தீந்துது. கோவற்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர்களை இங்கே அழைச்சு கேழ்க்கிறது மரியாதையல்லா தமிழரையும் யிவ்விடத்திலே யழைச்சுக் கேட்டு யிவர்களையும் அழைச்சுக்கேட்டால் அது மரியாதையல்லா ஆனபடியினாலே முசே மொர்சேனையும் முசே கொடுத்தேனையும் அல்லவா அழைச்சுக் கேழ்க்கச் சொன்னது. யிவர்கள் ரெண்டு பேருமாய் அவரவர் வீட்டுகளிலே போயி கேழ்க்கிறது அவரவர் யிதா சத்திக்கி ஆஸ்திக்குத் தக்கினதாய் குடுக்கிறது. அதை வாங்கிக் கொண்டு வருகுறது அந்தப்படியாக தீந்து முசே மொற்சேனும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் பிறப்பட்டு முன்னே சம்பாவுலு கோவிலுக்குப் போனார்கள். அப்பிறம் அவரவர் வீட்டுக்குப் பணம் கேழ்க்கப் போனார்கள்.

அப்பிறம் பதினொண்ணரை மணிக்கி முசே லாலி அழைக்குறாரென்று வந்து அழைச்சார்கள். நாம் போனவிடத்திலே முசே லாலி காம்பிராவிக்குள்ளே யிருந்தார் முசே கதிவேல் வராந்தாவிலே யிருந்தவன் நம்மைக் கண்டவுடனே போன்சூர் (Bonjour) மோன்சியோர் யென்றார். நாமும் போன்சூர் (Bonjour) முசே யென்று சொல்லிப்போட்டு உடனே முசே லாலி உம்மை கோபிச்சுக் கொண்டு காவலிலே வைக்கச் சொல்லிச் சொன்னாரென்று சொன்னான். என்னை யெதுக்காக காவலிலே வைக்கிறது யென்று கேட்டதுக்கு முசே லாலி தம்மண்டைக்கி வேலை செய்கிறவனுக்கும் கோட்டையிலே சேவிக்கிற பேர்வழி தமிழர். ஒரு வருஷம் ரெண்டு வருஷமாய் சம்பளமில்லாமலிருக்கச்சே யேழை சாதியள் பேரிலே வரிவாங்குறீராம் அதினாலே யென்று சொன்னான். அது யெனக்கென்ன கவை முசே லெறியும் முசே துபுவாவும் ரெண்டு பேரும் மகாநாட்டாரை அழைச்சு அவர்களுடனே சொல்லி வரிவாங்கச் சொல்லி உத்தாரம் பண்ணார்கள். அதிலே யெத்தாஷ்ஷி வந்தால் அவர்களை அழைச்சு கேழ்க்க வேண்டியதென்றும் சொன்னோம். ஆனால் நீர் போமென்று சொன்னான். அப்பிறம் முசே துபுவாவை அழைச்சு முசே லாலி ரொம்பவும் கோபிச்சுக் கொண்டு முன்னே ஊரிலே வாங்கினது போதாதா யிப்பவும் யேழைச்சாதியள் பேரிலே வரிபோட்டு வாங்கி கொள்ள வேணுமா? ஆராயிரம் ரூபாயி வாங்கச் சொன்னதுக்கு யிருபதினாயிரம் ரூபாயி வரிபோட்டு வாங்குறீர்களாம். அது அவரவர்

வந்து சொல்லிக் கொண்டார்கள் யென்று விசேஷங்களை உதாசீனமாய் ரொம்ப பேசிக் கோபிச்சுக் கொண்டாராம். நாம் அப்படியே முசே லெறி அண்டைக்கி வந்து யிப்படி முசே லாலி அழைக்குறா ரென்று அழைச்சதும் நாம் போனவிடத்திலே முசே கதிவேல் சொன்னதும் யிதுகளெல்லாம் நாம் சொன்னவிடத்திலே யிதுவெல்லாம் முசே லாலி அறியான் முசே கதிவேலாய் மிறட்டுகுறது யென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது இஞ்சினீர் முசே துபாஷாழ் (M. Passage de Engineer) என்கிறவருக்கும் நல்லதம்பி மேஸ்திரியும் சோலையப்பனும் கருமார் தச்சர் பத்துப் பேர் கும்பலாயி நான் போகச்சே முசே லாலி வீட்டிலே யிருந்து யெதிர்க்க வந்தார்கள். அவர்கள் பிராது பண்ணாப் போலே காணு தென்று சொன்னதுக்கு முசே திப்பாசாழ்க்கு (M. Passage de Engineer) நம்முடனே சொல்லாமல் படிக்கி அப்படி நடப்பிக்க மாட்டானென்று சொன்னான். பகலிலே நாம் போகச்சே யெதிர்க்க வந்தார்கள். அவர்களெல்லாரும் தானே செய்ததென்று சொல்லிப்போட்டு பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் பகலைக்கு மேலாயி முசே துபுவா அழைக்குறானென்று சேவுகன் வந்து அழைச்சான். நாம் போனவிடத்திலே முசே லாலி நம்மை அழைச்சு யிப்படி யேழையள் பேரிலே வரிபோட்டு யிருபதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் வாங்குறார்களென்று ரொம்ப கோபிச்சுக் கொண்டு விசேஷங்களை பேசினார்களென்று சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, "யிது வீட்டு வரியே அல்லாமல் அவரவர் பேரிலே யிம்மாத்திரம் யென்று வரி வாங்கிறதல்லா ஆனபடியினாலே மகாணாட்டார் வாங்கிற வரிக்கி அவரவருக்கு அவர்கள் ரசீது குடுக்குறது, அந்த ரெசீதை கொண்டு வந்து முசே லாலியுடய கோந்துவாரிலே எழுதிவிக்கச் சொல்லுகுறது, மகாணாட்டாரும் தண்டினபடிக்கிக் கெழுதி வைப்பார்களே அதுக்கும் அவரவர் கொண்டு வந்து எழுதிவிச்சறசீதுக்கும் ஒத்துப்பாத்தால் யேத்த தாழ்ச்சி யிருந்தால் அப்போ அவர்களை ஆக்கினை பண்ணலாம் அந்தப்படிக்கி தமுக்குப் போடுவிக்கச் சொல்லுமென்று" சொன்னதுக்கு நல்லதென்று சொல்லி பிறப்பட்டு முசே லெறியண்டைக்கிப் போனான். முசே லெறி வீட்டிலே யில்லாமல் சுவாரி போயிவிட்ட படியினாலே முசே லாலி வீட்டுக்குப் போனான். நாம் பிறப்பட்டு வெளியே சுவாரி போயி யேழுமணிக்கி வீட்டுக்கு வந்தோம்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 21; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 9; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் ஒன்பது மணிக்கி கோட்டைக்குப் போயி முசே லெறியைக் கண்டு பேசி ஆசாரம் பண்ணி நேத்துப் பகலுக்கு மேலாய் முசே துபுவா நம்மை அழைத்து அனுப்பி முசே லாலி தம்மை

அழைச்சுக் கோபிச்சுக் கொண்டது யெல்லாம் நம்முடனே சொன்னதும் நான் சொன்னது உத்தாரம் நடந்த படிக்கி சொல்லி முசே லாலி தம்மை அழைச்சு பேசின விசேஷம் யெல்லாம் ரொம்ப மனஸ்தாபமாய் நம்முடனே சொன்னதும் அதன் பேரிலே உங்களண்டைக்கு முசே துபுவா வந்ததும் நீங்கள் வீட்டிலே யில்லாதபடியினாலே முசே லாலி வீட்டுக்குப் போனதும் யிதுகளெல்லாம் சொன்னோம். அதன் பேரிலே வீட்டு வரி ஆராயிரம் ரூபாயிக்கு யிப்போ ரெண்டாயிரம் ரூபாயும் இரண்டாயிரத்தன்னூறு இரண்டாயிரத்தறு நூறு ரூபாயி தண்டி ஆச்சுதென்று சொல்லுகுறீரே குறை முவ்வாயிரத்தி நானூறு ரூபாயும் சீக்கிறத்துக்கு மகானாட்டாருடனே சொல்லி தண்டி செலுத்திப் போடச்சொல்லும். அவனோரு கடுதாசி தாறோமென்றானே அதைக் கேட்டு வாங்கிக் கொள்ளச் சொல்லுமென்று சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, “சின்ன முதலியார் சவுரராயபிள்ளை, ராமச்சந்திரராயன், சோனாசல பிள்ளை யிப்படி பின்னையும் சிறிது பேரைக் கேட்டால் குடுக்க மாட்டோமெங்கிறார்கள் அதைப் பார்த்துக் கொண்டு மத்தப்பேரும் சண்டித்தனம் பண்ணுகுறார்கள். யெப்படி சீக்கிரம் பணம் வருமென்று சொன்னதுக்கு” குடாதவர்கள் ஆறோ அவர்கள் பேரை யெல்லாம் எழுதிக் கொண்டு வாரும் அது நாங்கள் குமிசேலிலே கேழ்க்கிற விதமாய் கேட்டுக் கொள்ளுகுறோம் மத்தப்பேர் கையிலே சீக்கிரத்துக்கு தண்டி செலுத்திப் போடச் சொல்லுமென்று சொன்னார். ஆனால் அந்தப்படிக்கி குடாதபேரை யெழுதிவந்து தாறோம் மத்தப்பேர் வழியிலே தண்டி செலுத்திப் போடச்சொல்லுகுறோம் யென்று சொன்னோம். அப்படி யிருக்கச்சே வாசுதேவ பண்டிதன் மகன் பாபுராயன் வந்து முசே கதிவேல் யென்னை அழைச்சு புகையிலைக்கி தீர்வை வாங்கத் தேவையில்லை வாங்கினால் உன்னை அப்படி செய்வேன் யிப்படி செய்வேன் யென்று சொன்னான் யென்று சொன்னதுக்கு முசே துபுவாவுடனே போயி சொல்லுயென்று சொன்னார். அதுக்கு பாபுராயன் சொன்னது யிது வந்து கும்பினீக்கி நஷ்ட்டமே யல்லாமல் மத்தப்படியல்லா சகல தீர்வையும் நின்று போச்சுது. யிதுவும் நிண்ணு போனால் கும்பினீக்கி நஷ்ட்டந்தானே யிதை உங்களுடனே சொன்னேன் நான் போயி முசே துபுவாவுடனே சொல்லவேண்டிய தென்னாயென்று சொன்னான். ஆனால் முசே துபுவாவுடனே நான் சொல்லுகுறேன் யென்று சொன்னார். அப்படி யிருக்கச்சே முசே மொறசேன் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் வந்தார்கள். யெல்லாருமாய் முசே லெறியுடனே பேசிக் கொண்டார்கள். நாம் பிறப்பட்டு யின்னைய தினம் திருமலை ராய பிள்ளை யவர்கள் கருமாந்திரமான படியினாலே கேணிக்குளத்துக்கு கருமாந்திரம் செய்யுரயிடத்துக்குப் போயி வீட்டுக்கு வந்து விட்டோம்.

அதன்பிறகு தமுக்குப்போட்டு கடுதாசி யெழுதி கட்டினார்கள். அந்தக்கடுதாசி வயணம் யென்ன யென்றால் மகாராச ஸ்ரீ முசே மோன்சியோர் கோந்திதே லாலி சாயபு அவர்கள் கட்டளை யிடுகுறதாவது சகல செனங்களும் அறிய வேண்டியது. உங்கள் சாதி தலைவர்மார் உங்கள் பேரில் பட்டி போட்டு பணம் வாங்கினார்களே அந்தப்பணத்திலே கும்பினீருக்கு செலுத்தினதை விட உங்கள் கையிலே அதிகமாக வாங்கினார்களென்று சேதி கேட்டு அதுக்குத் தக்க நீதி பண்ண கட்டளையிடுகுறோம். சகல செனங்களும் நீங்கள் யிப்போ குடுக்க வேண்டிய ஆராயிரம் ரூபாயும் உங்கள் சாதி தலைவர் மார் கையில் செனங்கள் செலுத்துகுறபோது அவரவர் ஒரு ரசீது வாங்கிக்கொண்டு யிந்த ரெசீதுகளெல்லாம் நம்முட கணக்கெழுதுகுற கூடத்திலே அவரவர் கொண்டு வந்து குடுக்கவும், யேனென்றால் யிதுகளெல்லாம் தஸ்திரத்திலே பதிய வேணும் யிதுவுமல்லாமல் உங்கள் சாதி தலைவர்மார் உங்கள் கையிலே அதிகமதிகமாய் பணம் வாங்காமலிருக்கவும் யிந்த கட்டளையிடுகுறோம். இந்தக் கட்டளைப் படிக்கி அவரவர் சாதி தலைவர்மார் கையிலே செலுத்துகிற பணத்துக்கு ரெசீது வாங்கிக் கொண்டு வந்து நம்முடனே கணக்கு கூடத்திலே கொண்டு வந்து குடாவிட்டால் மறுபடியும் ரெண்டாந்திரம் பணம் குடுக்க வேண்டியிருக்கும். ஆயிரத்தி எழுநூத்தி அறுபதாம் ஆண்டு ஆகொஸ்து மாசம் இருபதாம் தேதி (20–8–1760) யிந்தப்படிக்கி பெருமாள் கோவில் செவுரிலே ஒண்ணும் முத்திரைச்சாவடியிலே ஒண்ணும் பிராஞ்சிலே, பிடுதீக்கிலே, பாரிசியிலே, மராஷ்ட்டத்திலே, தெலுங்கிலே, தமிழிலே எழுதி அடிச்சு யிருக்குது யிந்தப்படிக்கி தமுக்கும் போட்டார்கள். யிந்த சம்மதிகளினாலே நேத்தும் யிண்ணைக்கும் சாதி மகானாட்டார் வரி தண்டாமல் நிண்ணு யிருந்தார்கள். யித்தனாள் சாயங்காலம் மகாநாட்டாரை அழைச்சு காலமே முசே லெறி கோவற்ணதோர் சொன்னதெல்லாம் சொல்லி சீக்கிரத்துக்கு பணத்தை தண்டி செலுத்திப் போடச்சொன்னார். நீங்களும் சீக்கிறத்துக்கு தண்டி செலுத்திப் போடுங்களென்றும் சொல்லி தாக்கீது பண்ணினோம்.

முசே மொற்சேனும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் பிறப்பட்டு சம்பாகோவில், கப்போசு கோவில், மீஷனார் கோவில் குமிசேலியோர் வீடுகள், பரித்துக் கொல்லியள் வீடுகள், வெள்ளைக்காரர் வீடுகள் யெல்லாம் பிஷ்ஷை கேட்டு அவரவர் குடுத்த வெள்ளி நகையுடனே சேர்ந்தது. கப்பு குல்லியோர் தட்டுகள் அய்யாயிரம் ரூபாயையும் பொன் நகைகளுடனே சேர்ந்தது யெட்டு விராகனிடையும் டங்காசாலையிலே கொண்டு வந்து உருக்கினதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 22; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 10; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். ஒன்பதரை மணிக்கி கதவை திறந்து கொண்டு முசே லெறி வெளியே வந்தார். முசே கில்லியாரும் முசே திப்பிளாமும் ரெண்டு பேரும் வந்தார்கள். அவர்களுடனே நாமும் கூடப்போய் காண்பிச்சுக் கொண்டோம். முசே திப்பிசாலுடனே (M. du Passage) பேசிக்கொண்டிருந்தார். முசே லெறி வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார். அப்பிறம் குமிசேல்க் கூட குமிசேல்க்காறரெல்லாரும் வந்தார்கள். அப்பிறம் யெல்லாரும் குமிசேல் கூடினார்கள். அதிலே கந்தப்ப முதலி வந்து போயிகள் சம்மதிக்கு எழுதியிருக்கிற பித்திசாமை குடுக்கலாமே யென்று சொன்னான். மெய்தான் குடுக்கலாமென்று சொன்னோம். கந்தப்ப முதலி வீட்டிலே பித்திசா மிருந்தபடியினாலே எடுத்து வர பத்துமணி செண்ணு போச்சுது. அதிலே குமிசேல்க்கூடி பேசினார்கள். பேசுகிற படியினாலே நாம் போகப்போகாது. வெளியே வரட்டும் குடுப்போமென்று சொன்னோம். பனிரெண்டடிச்சும் வெளியே வரயில்லை. யினிமேல் வெளியே வந்து குடுத்தாலும் வீட்டுக்குப்போற அவசரத்தைத் தொட்டு சாவகாசமாய்ப் பார்க்க மாட்டார்கள் நாளை குமிசேல்க்கூடினால் குடுப்போமென்றும் சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். குமிசேல்க் கூடினது யென்னத்துக்காக யென்றால் செத்துப் போனவர்கள் கெட்டுப் போனவர்களுடைய ஆஸ்தியள் தட்டுமுட்டு நிமித்தியமும் பணத்து நிமித்தியமும் தான் பின்னை வேறேயில்லை. பகலைக்கு மேலாய் முசே லாலியும் பாதிரி விசுப்பு நொரோன்னுவும் .வண்டியேறிக் கொண்டு முசே லெகு வீட்டுக்குகிட்ட யிருக்கிற பிக்காத்தண்டையிறங்கி பீயையெல்லாம் மிதிச்சுக் கொண்டு பார்த்து யிதுகளெல்லாம் கப்பல் வந்தாப்போலே வீதியாக்க வேணும் யென்று சொல்லிப்போட்டு மறுபடியும் வண்டியேறிக் கொண்டு சென்னப்பட்டணத்து வாசற்படிக்கு அப்பிறம் சுவாரி போனார்கள்.

இத்தனாள் வழுதாவூரிலே யிருபத்தோரு பீரங்கிப் போட்டார்கள். நாம் கோட்டையிலே யிருக்கச்சே யென்னா பீறங்கி போட்டார்களென்று யோசனையா யிருக்கச்சே கந்தப்ப முதலி வந்து வழுதாவூரிலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்களே கேட்டீர்களா யென்று சொன்னான். நாம் கேட்டோமென்றும் சொன்னோம். கந்தாட்டிலே தில்லையப்ப முதலி காலம் பண்ணிப் போன அந்தச் சமாச்சாரம் கொண்டு வந்தவன் சொன்னான். ரெட்டை அரிக்கை போட்டுக் கொண்டு கந்தாட்டு வழியாய் வந்ததாகவும், ஆரென்று விசாரிச்சால் மேஸ்தர் பிக்கட்டு (Mr. Pigot) வழுதாவூருக்குப் போரான் யென்று சொன்னார்களாம். கந்தாட்டு

வழியாய்த்தான் போனானாம் அவன் சொன்ன சேதிக்கும் யின்னையதினம் வழுதாவூரிலே இங்கிலீசுக்காரர் தண்டிலே யிருபத்தோரு பீரங்கி போட்டதுக்கும் சரியாயிருக்குதென்று சொன்னான்.

இரண்டு மூணுநாளாய் ஊரிலே யிருக்கிற வைக்கலுகளெல்லாம் கும்பினீருக்கு யெடுக்குறார்கள் நேத்து முதல்க் கொண்டு யெருமை மாடு, கிடா மாடு பிடிச்சு யிகுப்பித்தாலுக்கு தீனிக்கு அடிக்குறார்கள். யிதுவரைக்கும் பசுமாடு யெருமை மாடும் பிடிச்சு அடிச்சார்கள். யினிமேல் பசுமாடு யெருமை மாடு ஒண்ணும் தப்புகுறதில்லை. சாடாவாய் தீத்துப் போடுகுறார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 23; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 11; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். ஒன்பதரை மணிக்கி மேல் முசே லெறி கோவற்ணதோர் காம்பிராக் கதவு திறந்தார்கள். நாமும் கடலோரத்து வெள்ளைக்காரன் முசே வாலாற்மே (M. Valarmee) யெங்கிறவனுமாய் போய்க் காண்பிச்சுக் கொண்டோம். யென்ன சமாச்சாரமென்று கேட்டார். மகானாட்டாரை முசே துபுவா அழைச்சனுப்பி பணம் தண்டியாச்சுதா யென்று கேட்டாராம் அன்னூறு ரூபாயி மாத்திரம் தண்டலாயிருக்குது யென்று சொன்னதின் பேரிலே ரெண்டு மூணு நாளைக்கு முன்னே ரெண்டாயிரம் ரூபாயி தண்டியாச்சுதே யிப்பறம் யிம்மாத்திரம் தானா தண்டியானது யென்று கேட்டார். யிப்பால் பணம் தண்டல் ஆகயில்லை யென்று சொன்னார்களாம். ஆனால் யிப்போ தண்டலான பணத்தை கொண்டு வாருங்களென்று சொன்னார். அன்னூறு ரூபாயி கொண்டு போயி செலுத்தினார்கள் யென்று சொல்லி யிதல்லாமல் யிஞ்சினீர் வீடுகள் யெழுதிக் குடுத்திருக்குறார் முசே லாலி யவர்களுடைய வேலைக்காரர் முப்பது வீடுகள் மட்டுக்கும் தள்ளியிருக்கிறார் பறையர் குச்சும் குடிசையளுமாய் யிதுகளிலே யிறநூறு முன்னூறு வீடுகள் மட்டுக்கும் போம் ஓடிப்போனவர்களும் குடியில்லாத வீடுகளும் யிப்படியாக ஆயிரம் வீடு மட்டுக்கும் தள்ளுபடியாப் போனால் அப்பிறம் ஆயிரம் வீடுகள் மட்டுக்கும் யிருக்கும் யிதுகளிலே யெந்த விதத்திலே யிந்த ஆராயிரம் ரூபாயி தண்டியாம் யிந்தப்படிக்கி வீட்டு வீட்டுக்கும் துரைத்தனமானாலே யென்று சொன்னதுக்கு ஒண்ணும் சொல்லாமல் ஆகாசத்தையும் பூமியையும் பாத்துக் கொண்டிருந்தான். யிப்படியிருக்கச்சே புகையிலைக் கிடங்கு பாபுராயன் வந்து யின்னையதினம் முசே துபுவாவுடனே புகையிலை தீர்வை சம்மதிக்கி போயி சொன்னேன் அவர் அதுக்கு குமிசேலுக்கு ஒரு பித்திசா மெழுதிக் கொள்ளுயென்று சொன்னார்.

அதுக்கு நான் சொன்னது யிது வந்து கும்பினீர் காரியத்துடனே சேர்ந்தது யென் சொந்தக் காரியம் அல்லா. நான் பித்திசா மெழுதிக் கொள்ள வேண்டிய காரியமில்லை யென்று சொன்னதுக்கு ஆனால் முசேலெறியை எழுதிக் கொள்ளச் சொல்லு யென்று சொன்னாரென்று சொன்னதுக்கு அதுக்கும் ஒண்ணும் சொல்லாமலிருந்தார்.

அப்பிறம் குமிசேல்க்காரர் ஒருத்தரும் வரயில்லை முசே கில்லியார் மாத்திரம் கோந்தவாருக்கு வந்து போயிவிட்டார். அப்பிறம் முசே சொலிமியாக்கு (M. Solminiae) முசே லத்தூரு (M. La Tour) யிப்படியாக பத்துப்பேர் மட்டுக்கும் வந்து தங்கள் பேரிலே யென்னமோ வரி போட்டதுக்கு வந்து கண்டு பேசிப்போனார்கள். சம்பாகோவில் பாதிரியள் ரெண்டு பேரும் கப்புசுக்கோவில் பாதிரியளும் வந்து கண்டு பேசிப்போனார்கள். போயிகள் சம்மதிக்கி பித்திசாம் குடுப்போம் யென்றால் யின்னைய தினம் குமிசேல் கூடயில்லை. நாளைய தினம் குமிசேல்க் கூடினால் குடுப்போமென்று அப்பு முதலியுடனே சொல்லிப்போட்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம்.

இத்தனாள் மத்தியானம் சின்னமயோர் முசே கொந்தேன் (M. Gontin the second Major) நம்முடைய மூத்த பிள்ளையை அழைச்சனுப்பிவிச்சான். அவர் வீட்டிலே திதியான படியினாலே தம்முட தம்பி அப்பாவுவை அனுப்பிவிச்சார். போனவிடத்திலே முசே லாலியுடய உத்தாரம் சொலுதாதுகளுக்கானால் சோறுயில்லை. பட்டணத்தை சொலுதாதுகளை விட்டு அவரவர் வீட்டுகளிலே யிருக்கிற தானியம் றஸ்துக்கள் யெடுக்கச் சொன்னார். நாங்களிருந்து கொண்டு அப்படிச் செய்யப் போகாதென்று அவரவரை அழைச்சுக் கேட்டு ரஸ்து யிருக்கிறதைக் கேட்டு வாங்குறோமென்று சொன்னோம். ஆனபடியினாலே உங்கள் வீட்டிலே யிருக்கிற றஸ்து அரிசி நெய் யிருக்கிற தென்னமோ அதை யெழுதி வையுமென்று சொன்னானாம் அதுக்கு யிவன் சொன்னது யென் வீட்டு சமுசாரம் இருபது பேர் யிருக்கிறார்கள். நித்தம் யிருபது படி அரிசி செல்லும் அந்தப்படிக்கி பதினைஞ்சு நாளைக்கி யிருக்குது. மத்தப்படி வேறேயில்லை யென்றும் சொன்னதுக்கு நீங்கள் யெல்லாம் யிப்படி சொல்லுவீர்கள் சொலுதாதுகளை விட்டு கொள்ளையிட்டால் அப்போ தெரியும் யென்று சொன்னானாம். யென் வீட்டிலே யிருக்கிறது பதினைஞ்சு நாளைக்கி மாத்திரம் தான் யிருக்குது. அதன் பேரிலே வேறே யில்லை யென்று சொன்னதுக்கு ஆனால் போயென்று சொன்னான். யிந்தப்படியாக பொறுக்குப் பேராய் நம்முட பேர் சவுரிராய பிள்ளை ராமலிங்க பிள்ளை யிப்படியாக இருபது முப்பது பேர்வழிகள் மட்டுக்கும் எழுதியிருக்குதாம் அவர்களையெல்லாம் அழைச்சுக் கேழ்ப்பார் களெங்கிறதாய் சொன்னார்கள்.

இத்தனாள் முசே புசியுடய சக்கிரத்தார் சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்தான். நாம் சாயங்காலம் சுவாரி போகச்சே சென்னப்பட்டணத்து வாசற்படிக்கி அப்புறம் நம்மைக் கண்டு அவன் சொன்ன சேதி முசே புசியும் முசே கின்னேலியும் ரெண்டு பேருமாய் இங்கிலேசுக்காரருடய கப்பலின் பேரிலே யேறி சீமைக்கி யேறிப் போயிவிட்டார்கள். யிண்ணு யேழு நாளாச்சுது. அவர்கள் யேறிப் போயி மூணுநாளைக்கிப் பிறகு நான் பிறப்பட்டேன். நான் வரச்சே மேஸ்தர் பிக்கட்டும் பின்னையும் அஞ்சாறு பேர் குமிசேல்க்காரரும் துபாசியளுமாய் பத்துப்பனிரெண்டு பல்லக்குக்காரரும் ஆயிரம் பேர் சிப்பாயியளும் யிறநூறு குதிரைக்காறரும் ரெண்டு பீரங்கியும் அவர்கள் சம்பிறமத்துடனே பிறப்பட்டார்கள். அவர்களுடனே கூடத்தானே நானும் வந்தேன். அவர்கள் அப்படி வழுதாவூருக்கு போனார்கள். நான் யிப்படி வந்தேனென்று சொன்னான். ஆனபடியினாலே நேத்து வழுதாவூரிலே யிருபத்தோரு பீரங்கி போட்டதும் யிண்ணு சூரிய உதயத்துக்கு வில்லியநெல்லூரிலே யிருபத்தோரு பீரங்கி போட்டதுக்கும் பிக்கட்டு வந்தானெங்கிறது நெசம். யெதுனாலே யிப்படி ஒட்டா ஒட்டியாய் வந்தானென்றால் பிக்கட்டை பிறஞ்சுக்காரர் போயி பிடிச்சு வந்தார்களென்று யிவ்விடத்திலே பிறப்பிச்ச படியினாலே யிவர்கள் மூஞ்சியிலே குத்தினாப்போலே யிருக்க வேணுமென்கிறதாய் வந்தானென்று சொன்னார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 24; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 12; ஞாயிற்றுக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கோவற்ணதோர் பூசை கேழ்க்க வெளியே பிறப்பட்டார் நாம் கண்டு ஆசாரம் பண்ணினோம். பூசை கேழ்க்க கோட்டைக் கோவில் திறந்து முஸ்தீப்பு பண்ணச்சொல்லி அனுப்பிவிச்சார். கேட்ட பாதிரி கப்புசு கோவிலுக்கு வருகுறோமென்று சொன்னாரென்று சொன்னாப் போலே கேழ்விப்பட்டு அவன் அங்கே போயிருந்தான். முசே லெறி கோட்டைக் கோவிலிலே போயிப் பார்த்தார் அங்கே கதவு சாத்திப் போட்டிருந்தது. அதன் பேரிலே கப்போசு கோவிலிலே பார்த்தால் அங்கே பூசை முடிஞ்சு போச்சுது. அதன் பேரிலே பத்து மணிக்கி சம்பாகோவிலுக்குப் போயி தமிழருடனே பூசை கேட்டு முசே லந்து வீசன் வீட்டுக்குப் போயி பேசியிருந்து மறுபடி கோட்டைக்கு வந்துவிட்டார். அங்கும் யிங்கும் முட்டிப்பார்த்து கடைசியாக சம்பாவுலுக்கோயிலிலே பூசை கேட்டு பிறப்பட்டார் என்றும் சொன்னார்கள்.

நம்மண்டை ராமச்சந்திர அய்யன் கந்தப்ப முதலியார் பாப்பய்யபிள்ளை மகன் யிவர்களெல்லாம் வந்து சிப்பாயியள் சம்மதிக்கி பேசிக்கொண்டிருந்தார்கள். அதிலே முசே கில்லியார் வந்தார். அவருடனே

மய்யோர் முசே கொத்தேன் என்கிறவன் சொன்னானாம். யிப்படி பட்டணத்திலே யிருக்கிற செனங்களை யெல்லாம் வெளியே போகச் சொல்லி தமுக்குப் போடப் போறார்களென்றும் றங்கப்பிள்ளை வீட்டிலே நூறுபேர் செனங்கள் யிருக்குதாம். நித்தம் அவர்களுக்கு யிறுநூறு படி அரிசி செல்லுமே அந்தப்படிக்கி ஒரு மாசத்தைக்கி ஆராயிரம் படி அரிசியாச்சுதே யிந்த ஆராயிரம் படி அரிசியும் நம்முடய சொலுதாதுகள் ஆராயிரம் பேருக்கு ஆகுமே ஆனபடியினாலே அவர் வீட்டிலே மாத்திரம் நாலுபேர் யிருக்கிறது மத்தப்பேரை யெல்லாம் வெளியே போயிவிடுகுறது. குறை பேரை வீட்டுகளிலேயும் வீட்டுக்கு ஒருத்தர் யிருக்கிறதும் மத்தப் பேரெல்லாம் வெளியே போயிவிடுகுற தெங்கிறதாய் சொன்னானே என்கிறதாய் சேதி கேட்டோம் யென்று சொன்னதுக்கு நானானால் யிது அறியேன். யிதுயெல்லாம் முசே லாலியுடய உத்தாரமாங்காட்டும் நான் எண்ணியிருந்தேன். யின்னம் பதினைஞ்சு இருபது நாள் பொருத்து சொலுதாதகளை விட்டு கொள்ளை யிடுவார்களென்று யிருந்தேன்.

யிப்போதானே நடக்குறாப் போலே யிருக்குது யென்று சொல்லி நான் செத்துப் போனால் மெத்த நல்லது என்றும் யெனக்கு மூணுநாளைக்கி சாப்பாடு யில்லாமல் போனல் செத்துப் போவேனென்று தன்னுடைய பாட்டைச் சொன்னான். நாம் சொன்னது நல்லது நம்மைப் போகச்சொன்னால் நாம் போறதுக்கு மேஸ்தர் பிக்கட்டு (Mr. Pigot) பசுப்போடுதாகிலும் (Pass-port) கலோனல் கூட் (Colonel-coots) பசுப்போடுதாகிலும் நமக்கு அழைப்பிச்சுக் குடுக்க வேணும். அதல்லாமல் தலங்கம்பாடி கோவற்ணதோருக்கு ஒரு கடுதாசியும் நாகப்பட்டணம் கோவற்ணதோருக்கு ஒரு கடுதாசியும் ரெண்டு கடுதாசியும் நீங்கள் யெழுத வேணும். மத்தப்படிக்கு கும்பினியைச் சேர்ந்தவர்கள் வருகுறார்கள் அவர்களை நீங்கள் வச்சு விசாரிச்சுக் கொள்ளுங்கோள் என்று நீங்கள் யெழுதிக் குடுக்க வேணும். முன்னே இங்கிலேசுக்காறருடைய கலாபத்திலே சகலமான பேரும் போயிவிட்டார்கள். நாம் மாத்திரம் கும்பினியாருக்கு ஒத்தப்படிக்கி இருந்தோம். அந்த சமாச்சாரம் முசே துப்பிளேயிக்குசு (M. Dupleix) சீமைக்கி எழுதி அனுப்பிவிச்சார்.

அதுக்கு நமக்கு தாரீப்பு எழுதியனுப்பிவிச்சார்கள். யிப்பவும் நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் போகலாகாதென்று யிருந்தோம். நீங்களாய்த் தானே போகச் சொன்னால் நாம் செய்ய வேண்டியதென்னா யென்று சொன்னதுக்கு, நல்லது யிதுகளெல்லாம் நாலு மணிக்கி வந்து முசே லெறியுடனே சொல்லுகுறோமென்று சொன்னார். அப்பிறம் நாம் சொன்னது முன்னே மூணு வருஷத்துக்கு முன்னே உம்முடனே சொல்ல யில்லையா சமுத்திரத்திலே காத்து பிசலிலே கப்பலானது அகப்பட்டுக் கொண்டு முழுகிப் போறவிடத்திலே தெலுமென்றும் மனுஷனுக்கு சலவை

சன்னி பிறந்து சீவன் போற வேளை வந்து பிழைக்கிறவன் யெப்படியோ அப்படிப் போல யிந்தப்பட்டணத்துக்கும் அப்படித் தானென்று சொன்னத்துக்கு மெய்தானென்றும், மூனு வருஷத்துக்கு முன்னே சொன்னபடிக்கித் தானே நடந்தது. சகலமும் நடந்தது யென்று தம்பி தெலுமென்று சொன்னது மாத்திரம் காணமென்று சொன்னார் யிதுகளெல்லாம் நடந்த படியினாலே அதுவும் நடக்குமென்று சொன்னோம்.

அப்பிறம் அவர் பிறப்பட்டுப் போயிவிட்டார். நாமும் பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். இன்னையதினம் சாயங்காலம் முதல்க்கொண்டு நாளைவரைக்கும் ராசா உடய சல்லுசாம் பண்டிகையான படியினாலே முசே லாலி நாம் பண்டிகைக்கு விசித்தாரிடுகுறதுயில்லை. நாம் நாளைக்காலமே தண்டுக்குப் போய் விடுகுறோம், முசே லெறியைத் தானே விசித்தாரிடச் சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது. நாளை காலமே யென்ன நடக்குமோ அது அறிய வேண்டியது.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 25; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 13; திங்கள்கிழமை***

இத்தனாள் ராசாவுடைய பேர் பண்டிகையான படியினாலே முசே லாலி செனராலையும் முசே லெறி கோவற்ணதோரையும் கண்டு சந்திச்சுப் போடுவோமென்று கோட்டைக்கிப் போனவிடத்திலே, யிந்தப்பண்டிகை முசே லெறியைத் தானே கொண்டாடச் சொல்லி ரெண்டு தரம் பீறங்கி போடச்சொல்லி உத்தாரங்குடுத்துப் போட்டு முசே லாலியும் பாதிரி வீசுப்பு நொரோன்னாவும் பிறப்பட்டு ஒழுகரை தோட்டத்துக்குப் போயிவிட்டார்கள். அப்பிறம் ஒன்பது மணிக்கி முசே லெறி கோவற்ணதோர் குமிசெல்க்காரர் பின்னையும் யிவ்விடத்திலே யிருந்து கொண்டு யிருந்த ராசாவுடைய மனுஷரெல்லாரும்மாய்ப் பிறப்பட்டு கோட்டை கோவிலிலே பூசை கேழ்க்கப் போனார்கள். யெப்போதும் பாதி பூசையாயி தீப தூப நெய்வத்தி யேத்தி வைப்பார்கள். அப்போ ஒருத்தரம் பீறங்கி போடுறது பூசை முடிந்தவுடனே ஒருதரம் பீறங்கி போடுகிறது.

ஆசீர்வாதம் பண்ணி நாக்கறுணை குடுக்கிற போது ஒரு தரம் பீரங்கி போடுகுறது. யிந்தப்படியாக மூணுதரம் பீரங்கி போடுகிறது. யின்னைய தினம் பாதி பூசையாயி தீபதூபம் குடுக்கிற போது ஒருதரம் பீரங்கி போட்டார்கள். மத்தப்படி வேறே பீறங்கி போடயில்லை. அப்புறம் பூசை முடிஞ்சு கோவற்ணமா வீட்டுக்குப் போனார்கள். அங்கே தானே மேசை போட்டு கொஞ்சம் மாம்சங்கள் வச்சிருந்தது அதை அவரவர் கொஞ்சம் கொஞ்சம் சாப்பிட்டு அப்பிறம் வீதுருலே சாராயம் வார்த்துக் கொண்டு ராசாவுக்கு சிரஞ்சீவி யென்று வீவ்லாரூவா யென்று மூணுதரம்

கூப்பிடச்சே ஒருதரம் பீரங்கி போட்டார்கள். மத்தப்படி யெப்போதும் சொலுதாதுகள் ஒப்பிசியால்மார் யெல்லாரும் வரிசை நிண்ணு தம்பூறு அடிச்சு மூணுதரம் துப்பாக்கியள் சுட்டு தொப்பி கழட்டி ஆசாரம் பண்ணிவிக்கிறது. போன வருஷம் முசே லாலி யிருந்து பண்டிகை கொண்டாடின படியினாலே யிந்த மரியாதை களெல்லாம் நடந்தது. யிவ்வருஷம் முசே லெறி பண்டிகை கொண்டாடின படியினாலே முசே லாலியும் யிருக்கிற படியினாலே யிவருக்கு சொலுதாதுகள் தொப்பி கழட்டி ஆசாரம் பண்ணக்கூடாது. ஆனபடியினாலே யிதுகளெல்லாம் நடக்கயில்லை. நாம் முசே லெறி கோவற்ணதோருக்கு பூச்செண்டு ஒண்ணு குடுத்து ஆசாரம் பண்ணோம். அவரும் பதிலுக்கு தொப்பி கழட்டி குனிஞ்சு ரொம்ப மரியாதையாயி முகம் குளுந்து ஆசாரம் பண்ணினார். அதை கிட்டயிருந்த கந்தப்ப முதலி அவர்களெல்லாம் பாத்து உங்களுக்கும் அவருக்கும் யிருந்ததுக்கு யிண்ணையதினம் தொப்பி கழட்டி ரொம்ப மரியாதையாயி ஆசாரம் பண்ணாரென்று ரொம்பவும் ஆச்சரியப்பட்டார்கள். அப்பிறம் நாமிருந்து கொண்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம். பகலைக்கு மேலாய் ரெண்டு மணிக்கி வெளியே போயிருந்த முசே லாலி ஒழுகரைத் தோட்டத்திலே சாப்பிட்டு வீட்டுக்கு வந்தாரெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 26; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 14; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியும் முசே வறுனேயும் ரெண்டு மூணுபேர் கணக்கரும் ஆக பேசிக் கொண்டிருந்தார்கள். நாம் போயி ஆசாரம் பண்ணினோம் யென்ன சமாச்சாரமென்று கேட்டார். பின்னையொன்றும் விந்தையான சமாச்சாரமில்லை. யென்று சொல்லி மய்யே கடத்தனாட்டு ராசா அனுப்பிவிச்ச ஓலைக்கி பதிலுத்திரம் ஓலை கொண்டு வந்த பிராமணன் கேழ்க்குறானென்றும் நாம் சொன்னதுக்கு யென்ன உத்திரவு யெழுதுவோம் நீர்தானே சொல்லுமென்று சொன்னார். நமக்கு யெப்படி தெரியும் அது நீங்களாய்த் தானே சொல்ல வேண்டியதென்று சொன்னோம். அவர் சொன்னது அந்த ஓலையைப் பிரஞ்சு படுத்தினவர் நீர்தானே அது உமக்கு தெரியுமே யென்ன உத்திரவு யெழுதலாமென்று கேட்டார். யெனக்குத் தெரியுமா அவ்விடத்துச் சம்மதியும் யிவ்விடத்துச் சம்மதியும் உங்களுக்குத் தெரியும் நீங்களாய்த்தானே சொல்ல வேணுமென்று சொன்னதுக்கு நல்லது நாளை சொல்லுகுறோமென்று சொன்னார். அந்தப் பிராமணனை நாம் அழைச்சு துரையுடனே சொன்னோம். யின்னம் ரெண்டு மூணு நாள் பொறுக்கச் சொன்னாரென்று

சொல்லிப் போகச் சொன்னோம். யிப்படி யிருக்கச்சே முசே கொற்னேத்து வந்து முசே துளாராமை யென்னமோ கேட்டான். அதன் பேரிலே முசே பிலவான் (M. Pilavoine) அவனை செவிருடனே யிடிச்சு மென்னியைப் பிடிச்சுக் கொண்டு ரெண்டு குத்துயிட்டான். அதன் பேரிலே நாங்களெல்லாம் போயி விடுவிச்சோம். யின்னம் அவர்கள் நிக்கயில்லை. ஒருத்தருக் கொருத்தர் மல்லுக்கட்டாய்த் தானே யிருக்குதென்று சொன்னான். அதன் பேரிலே அங்கே யிருந்த ஒரு ஒப்பிசியால் கிழவன் யிருந்தான். அவனையும் கூட்டி கிட்டயிருந்த கணக்கர் மூணு நாலு பேரையும் கூட்டி முசே பிலவானை வீட்டே போகச் சொல்லென்று சொல்லி அனுப்பிவிச்சார். அந்த ஒப்பிசியால் வந்து ராசாவின் பேரிலே ஆணையிட்டு கத்தியைக் காண்பிச்சான். அந்த மட்டிலே முசே தொளாராம்மை விட்டுவிட்டான். அவன் பிறப்பட்டு வீட்டே ஓடிப்போயி விட்டான் முசே பிலவான் வீட்டே போகச்சொன்னால் நான் முசே லெறியைக் கண்டு பேசவேணும் யென்று மல்லுக்கட்டினான். யென்னமாய்ச் சொன்னாலும் கேழ்க்கமாட்டமென்று தள்ளிக்கொண்டு கொவற்ணமா வீட்டுக்கு வந்தான். யிவன் வருகுற சமாச்சாரம் முசே லெறி கேட்டு காம்பிராவுக்குள்ளே பூந்து கதவைச்சாத்திக் கொண்டு சாவி போட்டுக் கொண்டு தம்மண்டைக்கு காவலிருக்கிற வெள்ளைக்காரர் துப்பாக்கிக்காரர் ரெண்டு பேரையும் வாசற்படியிலே யிருக்கச் சொல்லி வந்தால் உள்ளே கவையாயிருக்குறார் போகப்போகாதென்று சொல்லி வீட்டை அனுப்பிவிடுங்களென்று சொல்லிக் கதவை சாத்திக் கொண்டார். முசே பிலவான் வந்தவனை உள்ளே போகப்போகாதென்று சொன்னதின் பேரிலே முசே லாலி யண்டைக்கிப் போறேன் யென்று பல்லக்கிலே யேறிக்கொண்டான். பல்லக்குக்காரனை அழைச்சு வீட்டே தானே கொண்டு போகச் சொல்லிச் சொன்னார்கள்.

அப்பிறம் சிப்பாயியள் சம்மதிக்காக ராமச்சந்திர ராயனும் கந்தப்ப முதலியும் பித்திசாம் குடுக்க வந்தார்கள். குமிசேல் கூடாத படியினாலே பித்திசாம் குடுக்கயில்லை. அவர்களுடனே லோகா பிறமாயி பேசிக் கொண்டிருந்தது. பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம். பின்னை குமிசேல்க்காரர் ஒருத்தரும் வரயில்லை. விந்தையான சமாச்சாரம் ஒண்ணுமில்லை.

கேழ்க்கப்பட்ட சேதி மேஸ்தர் பிக்கட்டு வந்தவன் கூடலூருக்குப் போயி கப்பல் கொம்மாந்தாம் அமிரால் மேஸ்தர் கோற்னீசும் (Admiral Mr. Corinish) ரெண்டாவது கொம்மாந்தாம் என்ற இரண்டு பேரையும் யிறக்கிக் கொண்டு தண்டுக்கு வந்து கற்னல் கூட்டும் (Colonel Coote) பிக்கெட்டும் மேஸ்தர் கோற்னீசும் சின்ன கொம்மாந்தமும் நாலு பேருமாய்

பெருமுக்கலண்டை குமிசேல்க்கூடி வெகு பணமானால் சிலவாச்சுது புதுச்சேரியின் பேரிலே ஒரு சண்டை பார்ப்போமென்று யோசனையாயி. அல்லவென்று போயிவிடுவோமா யென்று யோசனை பண்ணுகுறார்களென்று நாலத்து ரெண்டு பேர் வெள்ளைக்காரர் சொன்னார்கள். யென்னமாய் தீருமோவென்று சொன்னார்கள். வீட்டு வரிபோட்டதுக்கு நம்முட வீட்டுக்கு வரி போட்டதுக்கு சாதினாட்டாமைக்காரன் கையிலே சீட்டு வாங்கிக் கொண்டு அந்த சீட்டை முசே லாலியுடைய கோந்தவாரிலே அவருடைய சக்கிறத்தாருக்கு ரெண்டாவதாய் குமாஸ்தாவாயிருக்கிற முசே கலிக்கு (M. Clegg) கையிலே சாதினாட்டாமைக்காரர் கையிலே நாற்பத்தி நாலு ரூபாயி செலுத்தினோமென்று நம்முட பேருக்கு யெழுதிவிச்சோம். பின்னையும் நம்முட வீட்டுகளிலே குடியிருக்கிற பேர் அவரவர் வரி குடுத்து அவரவர் பேருக்கு சீட்டுமிருக்கும். இத்தனாள் சாயங்காலம் அஞ்சரை மணிக்கி நாம் அரியாங்குப்பத்திலே முப்பதுபேர் சிப்பாயிகளிருந்தவர்கள் தங்களுக்கு சம்பளம் வரயில்லை யென்று நாங்கள் போயிவிடுகுறோமென்று சொன்னதாகவும், போகக்கூடாதென்று யிவர்கள் சொன்னதாகவும் சிப்பாயிகள் கேளாமல் ஓடிப்போறதுக்கு யெத்தனமா யிருந்ததின் பேரிலே அந்தச் சமாச்சாரம் முசே புலி (M. Pouly) யென்கிறவன் அறிஞ்சு முசே லாலியுடனே சொன்னதாகவும் அவர் உத்தாரத்தும்படியே முசே புலியென்கிறவன் அரியாங்குப்பத்துக்குப் போயி முப்பது பேர் சிப்பாயிகளையும் தூக்கப் போகாதே சோத்திப் போட்டுப் பார்க்கிறது, ஆர்பேர் வருகுறதோ அவனை தூக்கிப் போடுகிறதென்று குண்டு உருட்டினதின் பேரிலே ஒருத்தன் பேருக்கு விழுந்துது. அவனை பீரங்கி வாயிலே வைச்சு சுட்டுப் போட்டார்கள். அவன் மாரைப்பிளந்து கொண்டு போச்சுது. அவன் வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகள் யெல்லாம் அழுதுக் கொண்டு ஊருக்குள்ளே வந்தார்கள்.

திருவெண்ணெய்நல்லூரிலே யிருந்து ஆயிரம் மாடு நூறு சிப்பாயிகள் ஓட்டிக்கொண்டு வந்து சுண்ணாம்பாறு முத்திருசப்பிள்ளை சாவடியண்டை வரச்சே நம்முடவர்களுது நூணாங்குப்பத்தண்டை போட்டிருக்கிற மோர்சாவுக்கும் மாடு வந்ததுக்கும் நம்முட வீட்டு புகையிலைக் கிடங்கு யித்தனை தூரம் யிருக்கச்சே இங்கிலேசுக்காரர் குதிரை நூறு மட்டுக்கும் வந்து ஆயிரம் மாட்டையும் ஓட்டிக்கொண்டு போயிவிட்டார்கள். மாடு ஓட்டிவந்த நூறுபேர் சிப்பாயிகளும் ஓடிப்போயி விட்டார்கள். அந்த மோர்சாவிலே யிருந்த வெள்ளைக்காரன் நீங்கள் இங்கிலேசுக்காரருக்கு உடந்தையாயிருந்து மாட்டை விட்டுவிட்டீர்கள் யென்று அந்த சிப்பாயிகளிலே ரெண்டு மூணு பேரை கட்டிக் கொண்டு வந்தார்கள். மத்த ஓடிப்போன சிப்பாயிகளெல்லாம் பிறகே வந்தார்களெங்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

துறையிலே நம்முடவர்களுது கப்பலிருந்தது பலேன் யென்கிற கப்பலும் கும்பாய் தெ யீந்து என்கிற பிறிகேத்தும் ரெண்டும் காலியாய் அதுகளெல்லாம் முஸ்தீது பண்ணுகுறார்கள். பிறயாணத்துக்கு ஒரு கப்பல், மோர்சா போம்பு சுடுகுறதுக்கு முஸ்தீது பண்ணி யிருந்த கப்பலொன்றும் இந்த மூணு கப்பலும் மத்த சாமானுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணுவிச்சு அதிலேயுள்ளதை யெல்லாம் வாங்கிப் போட்டு அதுக்கும் பாய்மரம் காலியா யெல்லாம் ஒசத்தி முஸ்தீது பண்ணுகுறார்கள் மூணு கப்பலும் பிறயாண முஸ்தீது பண்ணுகுறார்கள். நாலஞ்சு நாளாய் யென்னத்துக்கென்று தெரியாது. அது யினிமேலறிய வேண்டியது.

இதல்லாமல் மத்தியானம் கோட்டையிலே நாம் கோவற்ணமாம் மேலே யிருக்கச்சே நம்மண்டை கந்தப்ப முதலி ராமச்சந்திரராயன் புகையிலை கிடங்கு பாபுராயன் பின்னையும் ரெண்டொருத்தர் கிறிசஸ்ததுவர் யிருக்கச்சே ராமச்சந்திரராயன் சொன்னது நான் முசே லாலி வீட்டுக்குப் போயி வந்தேன். அங்கே பாதிரி வீசுப்பு நோரோன்னும் முசே புலியும் முசே லந்து வாசுவும் பின்னையும் ரெண்டு ஒப்பிசாலிருந்தார்கள். முசே லாலி உள்ளே காம்பிராவுக்குள்ளே யிருந்தான். யிவர்களெல்லாம் யிப்பாலே யிருந்தார்கள். பாதிரி வீசுப்பு சொன்னது யிப்படி கசேத்து வந்தது. முசே லாலி படிச்சார் சீமையிலே பிராஞ்சுக்காறருது ஒரு யிசுக்காதுருவும் பிரஞ்சுக்காறருக்கும் இங்கிலேசுக்காரருக்கும் சமாதானமாச்சுது. பிரஞ்சு யிஸ்காதுரும் பிறப்பட்டு மோரீசு வந்து சேர்ந்தது. பிறகு ஒரு யிஸ்காதுரும் சிறிது திரவியமும் மனுஷரும் யேத்திக்கொண்டு அதுவும் மோரிசு வந்து சேர்ந்தது. இதல்லாமல் மத்த இஸ்காதுரு கப்பலொன்று பிறப்பட்டு அதுவும் புதுச்சேரிக்கு வந்து சேரும் அந்த இஸ்காதுரு இங்கிலீசுக்காரர் ஆரெதித்தாலும் பிலனாயிருக்கப்பட்டது. யிதிலே யிங்கிலேசுக்காறருக்கும் நம்முடவர்களுக்கும் சமாதானமாச்சுது. அந்த சமாச்சாரம் ஒரு பிரிகாதிலே எழுதியனுப்பிவிச்சார்கள். அதுவும் செத்தேம்பர் மாசம் அதுக்குள்ளே வரும், அதிலே முசே லாலி, முசே லெறி குமிசேல்க்காரர் யெல்லாரையும் வந்துவிடச் சொல்லியும் யிவர்களுக்கெல்லாம் பதில் துரைகள் வருகிறார்கள் யென்றும் யிந்த சமாச்சாரம் யெல்லாம் யிங்கிலீசுக்காரருக்கு வந்த கசேத்திலே வந்து தங்களுக்கு வந்ததென்றும் யிப்படி யெல்லாம் முசே லாலி வாசிச்சார் யென்றும் சீமையிலே ராசாவை குத்தச் சொன்னவர்கள் சம்பாகோவில் பாதிரியளென்றும் அறிஞ்சு, அந்த பாதிரியளை யெல்லாம் பிடிச்சு ஒரு கப்பலிலே யேத்தி மேற்கு தீவுலே கொண்டு போயி விட்டு விட்டுபோடச் சொல்லி ராசா சொன்னார். அந்தப்படிக்கி கப்பலிலே யேத்திக்கொண்டு போகச்சே வழியிலே கப்பல் முழுகிப்போச்சுது பாதிரியள் யேகத்துக்கு முழுகிப் போனார்கள்.

யிவ்விடத்திலே யிருக்கிற சம்பாகோவில் பாதிரியளை யெல்லாம் பிடிச்சு அனுப்பச் சொல்லியும் கோவிலையும் யிடிச்சுப்போடச் சொல்லியும் அந்த சமாச்சாரமும் பிறகே வருமென்று சொல்லி யின்னாசி முத்தப்பிள்ளை கிட்டயிருந்தான். அவனை அழைச்சு பாத்தியா உங்கள் குருக்கள்மாருக்கு வந்த அவசியென்று சொல்லி கிட்டயிருந்த முசே புலி முசே லந்துவீசன் பின்னையும் ரெண்டொருத்தர் ஒப்பிசால்மார் யிருந்தவர்களையும் பார்த்து யிதென்னா கேட்டாயல்லவா, முசே லாலி கசேத்து படிச்சுக் காண்பிக்கயில்லையா யென்று கேட்டதுக்கு மெய்தானென்று அவர்களும் சொன்னார்கள். அதிலே முசே லாலி வந்து அந்த கசேத்தை முசேலெறி யண்டைக்கி அனுப்பிவிக்க யில்லையா யென்று கேட்டார். அனுப்பிவிக்குறோமென்று சொன்னான் யென்று நம்முடனே ராமச்சந்தரய்யன் வந்து சொன்னான்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 27; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 15; புதன்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கோவற்ணதோருடனே முசே ரெனோ (M. Renault) முசே லாமேர் (M. La Mairs) என்கிற வெள்ளைக்காரார் ரெண்டு பேரும் பேசிக் கொண்டிருக்கச்சே பின்னையும் ரெண்டொரு மனுஷரும் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள். முசே லெறி, முசே லமேருடனே கோபிச்சுக் கொண்டுயிருந்தார். யிப்போ நாம் போயி ஆசாரம் பண்ணி பூச்செண்டு ஒண்ணும் குடுத்தோம். அதை முகந்துப்பார்த்து மரியாதையாயி ஆசாரம் பண்ணார். பூச்செண்டை பத்துதரம் யிருபது தரம் அடிக்கடி முகந்துப் பார்த்துக் கொண்டு யிருந்தான். விடாமல் முகந்து பார்த்துக் கொண்டேயிருந்தார். அதை கந்தப்ப முதலி ராமச்சந்திரய்யனும் பார்த்துக் கொண்டே யிருந்தவர்கள் யெதுனாலே அப்படி முகந்து பார்க்கிறதென்றால் நித்தம் நீங்கள் கொண்டு வந்து குடுக்க வேணுமெங்கிறதின் பேரிலே யென்று சொன்னார்கள். அப்பிறம் அங்கே நின்னுக் கொண்டிருந்தோம். அதிலே அங்கே முசே லங்கற்னையும் வந்தான்.

முசே லெறியும் முசே லங்கற்னையும் ரெண்டு பேரும் பேசிக்கொண்டு உள்ளே போயிவிட்டார்கள். நாம் யிப்பாலே வந்து கந்தப்ப முதலி ராமச்சந்திரய்யனும் நாமும் பேசிக்கொண்டிருக்கச்சே சிப்பாயிக் கப்பித்தான் சேக்கு தூக்கி வந்து சொன்னது "சிப்பாயியள் சம்பளம் கேட்டால் ஒருத்தனை பீரங்கி வாயிலே வச்சு சுட்டார்கள். குறை முப்பது பேர் சிப்பாயியளையும் அவர்கள் கப்பித்தான் அல்பேரையும் பிடிச்சு வந்து கசோத்திலே முசே லாலி போடச் சொன்னாரென்று முசே துபுவா போயிருக்குறான்" யென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே முசே துபுவாவும்

முசே கதிவேலும் முப்பதுபேர் சிப்பாயியளையும் கொண்டு வந்து கசோத்திலே போட்டுவிட்டு முசே துபுவா மாத்திரம் வந்து முசே லெறியண்டைக்கி வந்து கண்டு பேசிக் கொண்டிருந்தான். அப்படி யிருக்கச்சே முசே லெறியண்டைக்கு வந்து சொன்ன சமாச்சாரம் தாத்தான்சாவடிக் கிட்ட முசே பர்த்தல்மீ தோட்டத்துக்கு வடவண்டை இங்கிலேசுக்காரர் வந்து பிலத்த மோர்சா போடுகுறார்கள் யென்று சொன்னதுக்கு அவன் சொன்னது வழுதாவூர் கோட்டையைப் பிடிச்ச போது குமுக்கில்லாமல் போச்சுது. வில்லியநல்லூர் கோட்டையைப் பிடிச்ச போதும் நடவடிக்கையில்லாமல் போச்சுது. யிதல்லாமல் நூறுபேர் மட்டுக்கும் நம்முடவர்களிருக்கிற யிடத்துக்கிட்ட கோட்டை கட்டி விக்க யெத்தனம் செய்விக்கிறார்கள். மோர்சா போட்டுவிக்கிறார்கள். இதுக்காகிலும் போட முடியாமல் மனுஷரை அனுப்பி அவர்களை தடுக்கயில்லை. இதற்கு மேல் செய்யவேண்டிய தென்னா? யென்று அவர் வாயினாலே சொன்னார். அந்த மட்டிலே பதினோரு மணிக்கி நாம் வீட்டுக்கு வந்து விட்டோம்.

கேழ்க்கப்பட் சேதி முந்தாம்னாள் ராசாவினுடைய பண்டிகை நடந்தது. ஒரு யிங்கிலீசுக்கார னொருத்தன் கடுதாசி ஒன்று கொண்டு முசே லெறி கையிலே குடுத்தான். அந்த வெள்ளைக்காரன் கூடலூரிலே தானிருந்து வந்தானோ அல்லவென்று கப்பலின் பேரிலே யிருந்து துறை யிறங்கி வந்தானோ தெரியாது. அந்த கடுதாசி இங்கிலீசு எழுத்திலே யெழுதி யிருந்தபடியினாலே கிட்ட மொற்சேனும் முசே லாசும் யிருந்தார்கள். முசே லாசுக்கிட்ட அந்த கடுதாசியை குடுத்துப் போட்டார். அவன் அதைப் படிச்சு பிராஞ்சிலே சொன்னான். அதைக் கேட்டவுடனே சந்தோஷமாய் தாம் தானே உள்ளே போய் பத்து விராகன் எடுத்து வந்து அந்த வெள்ளைக்காறனுக்கு குடுத்து ரெண்டு ரொட்டியும் ரெண்டு போட்டுலு சாராயமும் ஒரு வசி மாமிசமும் குடுத்துப் போகச் சொன்னா னெங்கிறதாய் கேழ்க்கப்பட்டுது. யிந்தப்படி சந்தோஷ சமாச்சார மில்லாமலிருந்தால் இந்த சாமானுகள் யெல்லாம் குடுக்கத் தக்கினதில்லை. அதல்லாமல் சந்தோஷசமாச்சார வார்த்தையா யிருக்க வேண்டியபடியினாலே தன் சொந்த விராகனை குடுத்தான். சமாச்சாரம் இங்கிலேசுக்காரருக்கும் பிரஞ்சுக் காரருக்கும் நடந்ததென்று ஆனபடியினாலே சமாதானம் என்று எழுதியிருந்த படியினாலே..........

இத்தனாள் சாயங்காலம் இங்கிலீசுக்காரருடைய குதிரை காட்டுமேட்டிலே வடவண்டை கோட்டைகுப்பம் குண்டுசாலை மட்டுக்கும் வந்து காலாடினதின் பேரிலே வடக்கு வழகுண்டுசாலையிலே யிருக்கிற பீரங்கியிலே ஒரு பீரங்கி சுட்டதின் பேரிலே அப்பாலே வாங்கிப் போனார்களென்றும் நாயக்கன் குளத்தண்டை இங்கிலீசுக்காரர் வந்து

யின்னைய தினம் மோர்சா போடுகுறார்களென்று சொன்னார்கள். ஞாயிற்றுக் கிழமைய நன்று மேஸ்தர் பிக்கட்டும் மேஸ்தர் கலோனல் கூட்டும் ரெண்டு பேரும் கூடலூருக்குப் போனார்களென்றும் மத்தியானம் சாப்பிட்டு அங்கே யிருந்து சாயங்காலம் பிறப்பட்டு கப்பலின் பேரிலே யேறிப்போயி அமிரால் மேஸ்தர் காரினுசு (Admiral Mr. Carnish) என்கிறவனைக் கண்டு பேசி திங்கள்கிழமை மத்தியான மட்டுக்கும் கப்பலின் பேரிலே யிருந்து சாயங்காலம் யிறங்கி கூடலூரிலே செவ்வாயிக்கிழமை சாயங்காலம் மட்டுக்கும் யிருந்து, கூடலூரிலே தானே மேஸ்தர் பிக்கட்டும் மேஸ்தர் கர்ணல் கோட்டும் ரெண்டு பேரும் யிருக்குறார்கள். தண்டுக்குப் போகிறார்கள் யென்று சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் நாம் கூடலூரின் வழியே நான் சுவாரி போகச்சே சாயங்காலம் கூடலூரிலே யிருந்து வந்தவன் ஒரு மனுஷன் என்னுடனே சொன்னான்.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 28; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 16; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம் முசே லெறி கோவற்ணதோரும் பாதிரி லவோவும் வங்காளத்தில் திரேக்குதேராயிருந்த முசே றெனோவும் பேசிக்கொண்டிருந்தார்கள். நாம் போயி ஆசாரம் பண்ணி பூச்செண்டு ஒண்ணு குடுத்தோம். அதை வாங்கிக் கொண்டு பதிலுக்கு ஆசாரம் பண்ணி பூச்செண்டை அன்பது தரம் முகந்து பார்த்து அப்பிறம் அரைநாழிகை மட்டுக்கும் அங்கே நின்னோம். இப்பால் அவர்கள் ரெண்டு பேரும் தனியே பேசினார்கள். நாம் யிப்பாலே வந்திருந்தோம். அங்கே நயினாரும் சாவடி கணக்கப் பிள்ளையும் வந்து நம்முடனே சொன்னது யெங்களை துரை அழைக்குராரென்று வந்து அழைச்சார்கள். முசே லெறி கொவற்ணதோர் அண்டைக்கி வந்தோம். அவர் முசே துபுவா அண்டைக்குப் போகச் சொன்னார். அவர் ஊரிலே யிருக்கிற மாடுகளெல்லாம் ஒட்டி வாருங்களென்று சொன்னார். அதுக்கு நாம் யெங்களாலே ஆகுமாயென்று சொன்னதுக்கு நீங்கள் ஆரென்று கேட்டார். நாங்கள் பாளையக்காற நயினார், நான் சாவடி கணக்கப்பிள்ளை யென்று சொன்னோம். ஆனால் நீங்கள் முசே லெறியண்டைக்கிப் போங்கள். நான் வாறேனென்று சொன்னார். அந்த மட்டிலே கூடத்தானே யெங்களையும் அழைத்துக் கொண்டு முசே லெறியண்டைக்கி வந்து நயினாரை மாத்திரம் மனுஷரைக் கூடக்கூட்டி மாடு ஒட்டச் சொன்னார். யெங்களை வாணாமென்று போகச் சொன்னார் யென்று சாவடி கணக்கப்பிள்ளையள் சொன்னார்கள். யெங்களுக்கு மாடு ஒட்டுகிறதுக்கு காலம் வந்துதென்று சொன்னார்கள். காலமெப்படி யிருக்குதோ அப்படி

யெல்லாம் நடக்குமென்று சொன்னோம். பின்னை ஒருத்தரும் வரயில்லை முசே புலோ மாத்திரம் வந்து முசே லெறியண்டை பேசியிருந்து போயிவிட்டார். அப்பறம் பத்தரை மணிக்கி நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம். யித்தனாள் நாம் வெள்ளைக்காரத் தெருவிலே மாடு ஓட்டினார்கள். யின்னைய தினம் வெள்ளைக்காரர் பிறப்பட்டு தமிழர் வீட்டிலே யிருந்த மாடுகளை ஓட்டுகிறார்கள். இத்தனாள் சாயங்காலம் முசே லெறியும் முசே கொடுத்தேனும் ரெண்டு பேரும் முசே லாலி வீட்டுக்குப் போயி ராத்திரி யெட்டு மணிமட்டுக்கும் பேசிக்கொண்டிருந்தார்கள். பேசின சம்மதி யின்னதென்று தெரியாது. யினிமேல் அறிஞ்சு எழுதவேண்டியது.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 29; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 17; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி கோட்டைக்கிப் போயி கோவற்ணமாம் வீட்டிலே மெத்தையின் பேரிலே போனோம். அங்கே சொன்ன சமாச்சாரம் முசே லெறி யெட்டு மணிக்கி யெழுந்திருந்து மறுபடியும் படுத்துக்கொண்டு கதவை சாத்திக்கொண்டார். கதவு திறக்கயில்லை. முசே புலோ வந்தார். வந்தவன் யென்ன சமாச்சாரமென்று கேட்டார். யென்ன சமாச்சாரமிருக்குதென்று சொல்லி பின்னையும் பேச்சுகள் அதிகமாய்க் காணோம். கப்பல் வரந்தன்னிலும் விசேஷித்த யேற்பாடு ஒன்றும் வேறே ஒன்றும்யில்லை யென்று சொன்னதுக்கு யென்னா நீர் சொல்லுகுறது நாங்கள் யெண்ணி யிருக்குறோம். கடைசியாக யென்று எண்ணிக் கொண்டிருக்குறோம். யென்று சொல்லிப்போட்டு பிறப்பட்டுப் போயிவிட்டார். அப்பிறம் நாம் வந்து பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்தோம். கந்தப்ப முதலி வந்து தன் வீட்டிலே மாடு ஓட்டினதும் அதுக்கு தான் ரொம்ப சொன்னதும் குழந்தைகள் மோரில்லாமல் செத்துப் போமென்று சொன்னதின் பேரிலேயும் குழந்தைகள் யெல்லாம் வந்து காச்சு மூச்சென்று அழுததின் பேரிலே ஒரு பசுவும் ஒரு கன்றும் விட்டுப்போட்டு மத்தப்பசு மூணும் கண்ணுகளையும் ஓட்டிக்கொண்டு போயிவிட்டார்கள். அந்தப்படிக்கித்தானே பெரியண்ண முதலி வீடுகளெல்லாமும் மத்தப்போர் வீடுகளிலேயும் மாடுகளை ஓட்டினார்கள் யென்று நின்னுடைய நிறைவு குறைவு யாவும் சொல்லிப் பேசிக் கொண்டிருந்தான். அப்படி யிருக்கச்சே சோணாசல பிள்ளை வந்து கந்தப்ப முதலியை அல்லிக்கானுக்கு குடுக்க வேணுமென்று ஒரு சீரொப்பா கேட்டான். அவன் யில்லையென்று நம்மைக் கேட்டான். நாம் ஒரு சீரொப்பா அனுப்பிவிச்சோம். அது ஆகாதென்றும் மறுபடி அனுப்பிவிட்டார்கள். அப்பிறம் பதினோரு மணி மட்டுக்கும் யிருந்து வீட்டுக்கு வந்துவிட்டோம். பின்னையொன்றும் விந்தையான

சமாச்சாரம் யில்லை. யித்தனாளும் கோட்டையிலே நாலத்து ரெண்டு பேர் வெள்ளைக்காரர் வருவார்கள். யின்னையதினம் ஒருத்தராகிலும் யீய் காக்காய் ஒண்ணும் வரயில்லை.......

டங்காசாலையிலே நம்முட வெள்ளி யூதுகுற விடத்திலே யெசமானாய் வச்சிருந்த வெங்கட்டராம செட்டி யெங்கிறவன் மேலுகிரி செட்டி அண்ணன் நேத்து ராத்திரி செத்துப் போனான். யிண்ணு காலமே சாமபத்து நாழிகைக்கு கொண்டு போயி தகனம் பண்ணிப்போட்டார்கள். அதுக்கு விசாரிக்க சாயங்காலம் நாம் அவன் வீட்டுக்குப் போயி விசாரிச்சோம்.

இத்தனாள் அல்லிக்கான் சவாயிக்கி (Trooper) சீரொப்பா ஒண்ணு குடுத்து ஆயிரம் குதிரையும் நாலாயிரம் பாறும் வைக்கச்சொல்லி கடுதாசி ஒண்ணும் எழுதிக்குடுத்து அவனையும் ரசாசாயபுவையும் பாதிரி வீசுப்பு நொறென்னும் செஞ்சிக்கிப் போகச்சொல்லி முசே லாலி சொன்னதாகவும் யிவர்கள் மூணுபேரும் சாயங்காலம் பயணமாய் போனதாயி சேதியும் மறுபடி போக வேண்டாமென்றும் யின்னம் மூணுநாள் பொறுத்து நானும் கூட வாறேன், போவோமென்று அவர்களை போக வேண்டாம் யென்று அழைப்பிச்சுக் கொண்டு வந்ததாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது.

***1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 30; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 18; சனிக்கிழமை***

இத்தனாள் காலமே சூரிய உதயமாய் அஞ்சு நாழிகைக்கு பிறம்பூர் மகாராச ராசஸ்ரீ திருவெங்கிடபிள்ளை யவர்கள் தமையனார் குமாரர் திருமலைப்பிள்ளை யவர்கள் குமாரத்தி நயிணம்மாள் யெங்கிறவள் சுமங்கலி மரணத்தை அடைஞ்சாள். பத்துனாழிகைக்கி கொண்டு போயி தகனம் பண்ணிப்போட்டோம். யிந்த பெண்ணுக்கு பத்து நாற்பதாச்சுது. யிந்த பெண்ணுக்கு புத்திரி புத்திராள் பிறக்கயில்லை. ஆனால் வெகு புத்திசாலி, படிச்ச சாஸ்திரிகள் கூட யிப்படி சமத்காரமாய் உத்திரப்பிரதியுத்திரம் சொல்லமாட்டார்கள். ஆனால் காலங்கள் வந்தால் ஒருவராலுமில்லை. ஆயுத்தாரணம் அவள் நாளானபடியினாலே மரணத்தை அடைஞ்சாள். யிருக்குற மட்டுக்கும் பிதாவுக்கு சிசுஷை பண்ணிக் கொண்டிருந்தாள். பிதா மரணத்தை அடைஞ்ச யிருபத்தாஞ்சாம் நாள் யிவளும் மரணத்தை யடைஞ்சாள். யிப்படி நடந்த படியினாலே யித்தனாள் நாம் வெளியே போகயில்லை. யிதுவரைக்கும் தமிழரென்று அவர்கள் வீட்டுகளிலே பறையர் வெள்ளைக்காரர் நுழையப்போகா தெங்கிற அத்து இருந்தது. ரெண்டு மூணு நாளாய் ஊரிலே மாடு ஒட்டுகுறோமென்று தமிழருடைய வீட்டு வாசல் சமைக்கிற யிடங்களிலேயெல்லாம் பறையரும் வெள்ளைக்காரரும் பூந்து அத்து தப்பி

போச்சுது. ஆனால் வீடுகளிலே யிருக்கிற மனுஷருகளெல்லாம் வெளியே தெரத்திவிட்டு கொள்ளையிடாத குறையாய் போயி மாடுகள் மத்ததெல்லாம் நடந்தது. யினிமேல் அதுவும் நடக்கும் போலே காணுது. ஆனால் யிதுகளெல்லாம் நடக்கிறது கால சேதியைத் தொட்டு நடக்குது. யித்தனாள் தமுக்கும் போட்டது, வெளிகளிலே விரைக்கிறதுக்கு நெல்லு விரை முளைக்கப் போடத்தேவையில்லை யென்றும் தமுக்கும் போட்டார்கள். யெதுனாலே யென்றால் யினிமேல் பட்டணத்திலே அவரவர் வீட்டுகளிலே பூந்து நெல்லு எடுக்குறதுக்கு சரி அதுபிசகில்லை. இவ்வருஷம் அரியாங்குப்பம் திருணாள் நடக்கயில்லை. சம்பாகோவிலிலே தானே அரியாங்குப்பம் திருனாள் செய்யுறார்கள்.

### *1760 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 31; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 19; ஞாயிற்றுக்கிழமை*

இத்தனாள் நேத்தியதினம் நயினம்மாள் காலமானதுக்கு தலைக்கட்டான படியினாலே வெளியே போகயில்லை. இத்தனாள் மத்தியானம் கேழ்க்கப்பட்ட சேதி யென்னவென்றால் காலமே ஒன்பது மணிக்கு குமிசேல் கூடி மத்தியானம் மூணுமணிக்கி கலைஞ்சார்கள். அந்த குமிசேல் பெரியகுமிசேல் அதிலே குமிசேலியோர் சும்மற்ஷாங்கள் (Sous Merchant) பரித்திக் கொல்லாரா யிருக்கப்பட்டவர்கள் சம்பாகோவில் பாதிரியள் கப்போசுக் கோவில் பாதிரியள் விசனார் கோவில் பாதிரியள் யிவர்களெல்லாம் குமிசேல்க்கூடி மூணு மணிக்கு கலைஞ்சார்கள். அது யெது நிமித்தம் யென்றால் ரெண்டொரு வெள்ளைக்காரர் சொன்னது. அது யென்ன யென்றால் முசே லாலி அவர்கள் கடுதாசி ஒண்ணு எழுதியனுப்பிவிச்சார்கள். நமக்கானால் யிந்த உத்தியோகம் தேவையில்லை. யிந்த கடுதாசியை முசே லெறி கையிலே கொண்டு வந்து குடுத்தார்கள். அது நிமித்தியம் குமிசேல் கூடினது என்ன யெழுதியிருந்ததென்றால் நீங்கள் தானே பார்த்துக் கொள்ளுங்களென்றும் நாம் யிந்த உத்தியோகம் விட்டு விட்டபடியினாலே ஒப்பிசேல் மார்களும் ராசா மனுஷாள் ஒப்பிசேல் மார்களுமான படியினாலே அவர்கள் உங்கள் ஒடுதிப்படிக்கி அதைக்கேட்டு ஒடுதிப்படிக்கி நடக்கமாட்டார்கள். அவர்களும் உத்தியோகம் விட்டுவிட்டார்கள். நீங்கள் கும்பினியாரை சேவிச்சு கும்பினி மனுஷரானபடியினாலே யென்று எழுதியனுப்பி விச்சார். அதுக்கு யிவர்கள் ஆலிமூவாலி யெல்லாருமாய்க்கூடி பதிலுத்திரம் எழுதியனுப்பிவிச்சது. நாங்களா வாணாமென்றும் வேணுமென்றும் சொல்லுகுறது. நீர் சீமையிலே யிருந்து ராசாவுடைய ஒடுதிப்படிக்கி வந்தீர்கள். வந்து நீர் சகலத்துக்கும் யெசமானாய் சகல காரியமும் நீர் பார்த்துக் கொண்டு உம்முட மனசுப்படிக்கி நடப்பிச்சுக் கொண்டு வந்தீர். யிப்போ நீர் யெனக்குத் தேவையில்லை யென்றால் யெப்படி ஆனால்

யெங்களுக்கும் தேவையில்லை யென்று அந்த கடுதாசி கொண்டு வந்த சக்கிறத்தார் கையிலே பதிலுத்திரவு யெழுதியனுப்பி விச்சார். அதுக்கு பதிலுத்தரவு முசே லாலி அவர்கள் எழுதி அனுப்பிவிச்சார்............

ஒழுகரை கோவில் குண்டுசாலை யிவிடத்திலே யிருக்கிற சொலுதாதுகள் வெள்ளைக்காரர் யெல்லாரையும் கோட்டைக்குள்ளே அழைப்பிச்சுக் கொள்ளுகுறோம் யென்று எழுதியனுப்பிவிச்சார். அதுக்கு யிவர்கள் பதிலுத்திரவு யெழுதியனுப்பிவிச்சது யிப்போ யென்ன காரியம் கெட்டுப் போச்சுது யென்று அவர்களை உள்ளே அழைப்பிச்சுக் கொள்ளுகுறது. இங்கிலேசுக்காரர் வந்து எதாகிலும் போர்சாத்து பண்ணிக் கொண்டிருக்குறார்களா. யில்லையே அவர்கள் மட்டிலே அவர்கள் யிருக்குறார்கள். நம்முடவர்கள் வெளியே யிருக்கிற படியினாலே யிந்த மட்டுக்கும் ஆகிலும் ராவிலே பகலிலே திருட்டுத்தனமாய் யெவ்வளவாகிலும் அவரவர் றஸ்து கொண்டு வருகுறார்கள். யெவ்வளவு ஆகிலும் கிடைக்கிறது யிவர்கள் உள்ளே வந்தால் பிரம்பை மேட்டிலே யிருக்கிறவர்கள் பெடுத்தல்மீ தோட்டத்திலே யிருக்கிறவர்கள் வில்லியநெல்லூரிலே யிருக்கிற யிங்கிலீசுக்காரர் எல்லாரும் யேகத்துக்கு வந்து வாசற்படியிலே உள்க்காந்து கொள்ளுவார்கள். ஒரு பிடியளவிலேயாகிலும் வெளியிலே யிருந்து வரமாட்டாது. அவர்களை அனுப்பிக்கப் போகாது யென்று மறுபடி எழுதியனுப்பிவிச்சதாகவும் அதுக்கு பதிலுத்திரவு முசே லாலி அவர்கள் எழுதியனுப்பிவிச்சார். அதிலே யெழுதி யிருக்கிறதென்ன வென்றால் நீங்கள் நம்மை வழுதாவூரை வித்துப் போட்டானென்றும் வில்லிய நெல்லூரையும் வித்துப் போட்டானென்றும் யிப்போ புதுச்சேரியும் இங்கிலீசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுப்போட்டு விடுவானென்றும் யின்னாரின்னாரும் பேசிச் சொல்லியிருக்குறார்கள். சம்பாகோவில் பாதிரியளும் சொல்லி யிருக்குறார்கள். நான் பார்த்து யெப்படி செய்ய வேணுமோ அப்படி செய்வேன் உங்களாலே அல்ல. என்ன செய்யக்கூடுமாயென்று கோபிச்சுக் கொண்டு உங்களுக்குயென்ன வகையாயிருக்குது. கோட்டைக்குள்ளே யிருக்குறது யென்று சொல்லி அனுப்பிச்சதின் பேரிலேயும் குமிசேல் கூடி பேசி ஒன்றும் தீந்து பேசி முடிக்கவில்லை. அதன் பேரிலே அப்பிறம் யென்ன நடக்குமோ அதை அறிஞ்சு எழுத வேண்டியது.

# செப்டம்பர் 1760

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 1; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 20; திங்கட்கிழமை*

இத்தனாள் நேத்தியதினம் முசே லாலி அவர்கள் நீங்கள் கோட்டையிலே யிருக்கத் தேவையில்லை வெளியே போங்கள் அல்லவென்றால் யிருந்தால் அதுக்குத்தக்கின ஆக்கினை பண்ணுவேனென்று சொல்லியனுப்பிவிச்சதுக்கு யிவர்களுக்குப் பதிலுத்தரவு சொல்லியனுப்பிவிக்க பிறியாதபடியினாலே முசே லெறி நாம் கோட்டையிலே யிருக்கிற படியினாலே யல்லவா யிவன் யிந்த விசேஷம் சொல்லியனுப்பினானென்று தாம் குடியிருக்கிறதுக்கு ஆலம் பிரவியிலே கொம்மாந்தாமா யிருந்த முசே லெறி என்கிறவனுடைய வீட்டுக்கு தம்முடய சாமானுகளெல்லாம் யித்தனாள் யெடுத்தனுப்பிவிச்சார். நாளை ராத்திரிக்கி தாமும் முசே லெறி வீட்டே போயி யிருக்கிறதாயி சொல்லிக் கொண்டார். முசே லெறிக்கு ரொம்ப மனசு மனஸ்தாபமா யிருக்குறாரென்றும் கேழ்க்கப்பட்டது. பட்டணத்திலேயும் யிருக்கிற செனங்கள், யிருக்கிற தானிய தவசங்களை வித்துப்போட்டு வெளியே போறதாய் அஞ்சாறு நாளாய் அந்த யெத்தனத்தின் பேரிலே போயிவிடுகுறார்கள். அதின் பேரிலே முசே லெறி கோவற்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர் யெல்லாரும் பிறப்பட்டார்கள் யென்கிறதாயும் சொல்லிக் கொண்டார்கள்.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 2; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 21; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் ஒன்பது மணிக்கி கோட்டைக்கிப் போனோம். அதுக்கு முன்னே யேழு மணிக்கித் தானே முசே லெறி முசே லெறி வீட்டுக்குப் போயிப்பார்த்து வந்தார். அப்புறம் செத்துப் போனவர்கள் கெட்டுப்போனவர்கள் நிமித்தியம் யெழுதி யிருக்கிற படியிக்கி முசே கில்லியார், முசே புலோ, முசே துப்பிளாம் இவர்கள் யெல்லாம் வந்து குமிசேல்க் கூடினார்கள். அதிலே கந்தப்ப முதலி அப்பு முதலியிருந்து கொண்டு சிபாயிகள் சம்மதிக்கி எழுதின பித்திசாம்மை குடுக்கலாமெயென்று சொன்னார்கள். நாம் சொன்னது ஆனால் ஒரு சம்மதி கேட்டிருக்குது. தடியாபிள்ளை (Tadea Pilly) சொன்னது அந்த சிப்பாயிகள் கும்பினியிலே ரெண்டு வெள்ளாழப் பசகள் யிருக்கிறார்கள். அவர்கள் சொன்னார்களென்று சொன்னான். முசே கதிவேல் சொன்னது ஆகஸ்த்து மாசத்தைய சம்பளம் மாத்திரம் அவர்கள் கையிலே சம்பளம்

வாங்கிக் கொள்ளுங்கள். செப்த்தோம்பர் மாசத்தைக்கி அவர்களை சம்பளம் கேழ்க்கத் தேவையில்லை. செப்த்தேம்பர் மாசம் முதல் கொண்டு சிப்பாயி ஒருத்தனுக்கு ஒருபடி அரிசியும் மூணு துக்காணியும் குடுத்துக் கொண்டு வருகுறோம் யென்று சொன்னான் என்கிறதாய் சொன்னான். அது மெய்தான் (13 வரி கிழிந்து போயிருக்கிறது).

முசே லெறி பேருக்கு எழுதின பித்திசாமை கந்தப்ப முதலி முசே லெறி கையிலே குடுத்தான். குமிசேலுக்கு யெழுதின பித்திசாமை அப்பு முதலி முசே கில்லியார் கையிலே குடுத்தான். அதை வாங்கிக்கொண்டு குமிசேலிலே பார்த்துச் சொல்லுகுறேன் யென்று சொன்னார்கள். குமிசேல் கூடி யிருந்தும் பேசியிருந்து முசேதுப்பளாம் வெளியே வந்தான். அவனுடனே போயி பெரியண்ண முதலி சொல்லிக் கொண்டான். நம்மையும் ஒரு விசேஷம் சொல்லச் சொன்னதுக்கு முசே துப்பிளாம் சொன்னது ரெண்டு மூணு நாளாய் முசே லாலி நடப்பிக்கிற காரியத்தினாலே நாங்களெல்லாம் முழுகிப் போக வந்திருக்கிற காரியம் யென்ன நடக்குமோ தெரியவில்லை. அதனாலே உன்னுடைய காரியம் எப்படியாகப் போகுதோ என்று சொல்லிப் போட்டு போயிவிட்டான். அப்படி யிருக்கச்சே முசே துபுவா அங்கே வந்தான். அவனுக்கு முசே லெறி பேருக்கு யெழுதின கடுதாசியும் குமிசேலுக்கு எழுதின கடுதாசியும் பித்திசாமையும் துபுவாவிடம் சொல்லி அதுக்கேதாகிலும் முசே லாலியுடனே சொல்லி எப்படியாவது காரியம் ஆகப்பண்ண வேணுமென்று சொன்னதுக்கு அவன் யிப்பல் வந்து முசே கதிவேலுடனே சொல்லி ஆகப்பண்ண வேணுமேயல்லாமல் பின்னே வேறேயில்லை யென்றும் சொல்லிப்போட்டு முசே லாலி வீட்டுக்குப் போயி விட்டான்.

அப்புறம் முசே துபுவா வந்து இந்தப்படிக்கி யிந்த சமாச்சாரம் முசே லாலிக்குச் சொன்னால் அவர் ரொம்ப கோபிச்சுக் கொள்ளுவாரென்றும் சொன்னான். முசே லெறி பேருக்கு ஒரு பித்திசாமையும் ரெண்டு கடுதாசியும் முசே லெறிக்கு காண்பிச்சு குமிசேலுக்கு காண்பிச்சு முசே லெறியைக் கண்டு பேசி அதன் பேரிலே எப்படியாகிலும் காரியம் ஆகப்பண்ணுவிக்க வேணும்யென்று ரொம்பவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டோம். முசே லெறிக்கி தெரியப்படச் சொல்லிவிக்கச் சொன்னோம். அந்தப்படிக்கித் தானே சொல்லுகுறோமென்று சொன்னான். அப்போ முசே துபுவா வெளியே வந்து சொன்னது முசே லாலி இந்த சேதிக்கேட்டால் ரொம்ப கோபம் வரும் பின்னையும் அவர் தாம் துரையா அல்லவென்றால் அவர்கள் துரைகளா வென்றும் கேட்பார்யென்று சொன்னான். அந்த செனங்கள் யார் யிந்த பித்திசாமைக் குடுக்க யிவ்வளவு துணிச்சலென்று கேட்பார். ஆதனால் யிந்தக்காரியம் முழுதும் கெட்டுப் போமென்று சொன்னான். அதுக்கு முசே துபுவா சொன்னது யிந்த பித்திசாமிலே யெழுதின

காரியத்தை முசே கதிவேலுடனே சொல்லிவிச்சால் நான் அவரிடம் சொல்லிக் கொள்ளுகிறேன். முசே லாலிக்கு தெரிய வேண்டாம் யென்று சொன்னான். அந்தப்படிக்கிச் சொல்லிப்போட்டு முசே லாலியுட வீட்டே போயிவிட்டான்.

நாம் சொன்னது கந்தப்ப முதலி, அப்பு முதலி, பெரியண்ண முதலி ராமச்சந்திரய்யன் அவர்களையெல்லாம் பார்த்து நாம் சொன்னால் கேட்டீர்களா? யிந்த பித்திசாம் குடுக்கிறத்திலே காரியமில்லை குடுத்தது விறுதாவு யென்று சொன்னான். நான் கேட்டீர்களா கதிவேலுடனே தானே சொல்லி அவனைத் தொட்டுத்தானே ஆகப்பண்ண வேணும் யென்று சொன்னானென்று யிருக்கச்சே முசே கதிவேலும் ஆகொஸ்து மாசத்தைக்கி மாத்திரம் அவன் கையிலே சம்பளம் வாங்கிக் கொள்ளுங்கள் செத்தேம்பர் மாசத்தைக்கி அவர்களை சம்பளம் கேழ்க்கத் தேவையில்லை. சிப்பாயிகளை அழைச்சு சொல்லி முசே லாலியும் யின்னம் ஒரு மாசத்தைக்கி மாத்திரம் சம்பளம் குடுங்கள் அப்பிறம் குடுக்கத் தேவையில்லை யென்று சொல்லி யிருக்குறான் நாம் யிந்த பித்திசாமை குடுக்கப் போகாதென்று சொன்னதுக்கு அவர்கள் கேட்டார்களா? குடுத்ததினாலே யிவர்களைத் தொட்டு சிலகாரியம் ஆகாது. யிந்த பித்திசாமை குடுத்து யேதாகிலும் காரியம் ஆகப்போகாதென்று சொன்னோம். கந்தப்ப முதலி தன் துரை முசேலெறிக்கி குடுத்தால் அவன் பேசுவானெங்கிறதின் பேரிலே அவனுக்கு குடுக்கவேணும் யெங்கிறது, பெரியண்ண முதலிக்கி முசே துப்பிளாம் பேசுவானெங்கிறது அவனுக்கு குடுக்க வேணுமெங்கிறது. யிப்படி யிருக்கச்சே பனிரெண்டு மணிக்கி குமிசேல் கலைஞ்சு வெளியே வந்தார்கள். முசே கில்லியாரைக் கேட்டால் நாங்கள் தான் செத்துப் போறகாலம் வந்திருக்கச்சே உங்கள் காரியம் யென்ன நடக்கப் போகுதென்றான். யிப்படி யிவர்களெல்லாம் சொல்லச்சே முசே துப்பிளாம் முழுகிப்போற காலம் வந்திருக்குதென்றான். யிப்படி யிவர்கள் யெல்லாம் யென்ன நடக்கப் போகுது. நீங்கள் யென்ன சொன்னாலும் கேழ்க்க மாட்டமென்று யிருந்தீர்கள் யென்று சொன்னதுக்கு அப்பு முதலி யிருந்து பாதிரி விசுப்பு வையாகிலும் கண்டு பேசுவோமென்று சொன்னான். ஆனால் முசே கதுவேல் சொல்லியிருக்குறானென்று சொன்னார்களே அதை அறிஞ்சுக் கொண்டு அப்பிறம் ஆகட்டுமென்று சொன்னதுக்கு ஆனாலும் ஒரு பேச்சு சொல்லுவோம், நீங்களும் நாளை வாங்களென்று சொன்னான். நல்லது வாறோமென்று சொல்லிப்போட்டு பனிரெண்டு அடிச்சு அரைமணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் கூடலூர் துரையிலே யிருந்த யிங்கிலீசுக்காரர் கப்பலுகளிலே பீரங்கியிலே மருந்து குண்டு போட்டிருந்ததை யேகத்துக்கு சுட்டார்கள். யேனென்றால் யிவர்கள் மயக்க

வேணுமென்று வேடிக்கை பண்ணார்கள். அதை நம்முடவர்கள் கப்பலும் வந்து யிங்கிலேசுக்காரர் கப்பலுடனே சண்டை போடுகுறார்கள் யென்று கடலோரத்திலே செனங்களெல்லாம் போயி வேடிக்கை பார்த்தார்கள். யிவ்விடத்திலே துறையிலிருந்த யிங்கிலீசுக்காரருடைய கப்பல் அசையாமலிருந்தபடியினாலே நம்முடவர்கள் கப்பல் வந்ததென்று சொல்லுகிறது அபத்தம்.

குமிசேல் கலைஞ்சு முசே லெறி கோவற்ணதோர் முதலாகிய குமிசேல்க்காரர் வெளியே வந்தாப்போலே பார்த்தால் அவர்கள் முகத்திலே சத்தாகிலும் களையில்லை. செத்துப்போற பிரேதத்தின் முகம் யெப்படி யிருக்குமோ அப்படி யிருந்தது. நெகத்தினாலே கிள்ளினாலும் முகத்திலே ஒரு துளி ரெத்தம் வெளியே பிறப்படாது யின்னையதினம் அப்படி யிருந்தது. யின்னையதினம் ராத்திரிக்கி முசே லெறி, முசே வெறி வீட்டே போவோமென்று யிருந்தவர் அந்த விசேஷத்தை குமிசேலிலே சொல்லிக் கொண்டார். அதுக்கு குமிசேலியோர் சொன்னது யிப்ப முசே லாலி நூறுதரம் யிறநூறு தரம் சொன்னான். அவன் விசேஷத்தை மெய்யென்று யெண்ணப் போகாது. சம்மதியான படிக்கிச் சொல்லுவான். ஆகையினாலே யிப்போ போகப்போகாது முன்னே தானே யிருக்கவேணும், யில்லாமல் போச்சுதே ஆனபடியினாலே யிப்போ போனால் பயந்து போனதாயிருக்கும். அவனாயி போயென்று சொல்லியனுப்பினால் அப்போ பாத்துக் கொள்ளுவேண்டியது. யிப்போ போக வேண்டாம் யென்று சொன்னார்கள். அதின்பேரிலே யின்னையதினம் போறதை மோக்கூப்பாயி நின்றுது. யினிமேல் யென்னமாய் நடக்குமோ அதறிய வேண்டியது.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 3; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 22; புதன்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி உள்க்காம்பிராவிலே உள்ளே யிருந்தார் கதவைச் சாத்திக் கொண்டிருந்தார். வெள்ளைக்காரர் வந்தவர்களெல்லாரும் சும்மாய் போயிவிட்டார்கள். முசியே கில்லியார் ரெண்டொரு வெள்ளைக்காரர் வந்தவர்கள் முசே லங்கற்ணை கோந்துவாரிலே பேசிக்கொண்டிருந்தது போயிவிட்டார்கள். அப்பால் முசே புலோ வந்தார். அவரும் குவற்ணமாம் வீட்டின் பேரிலே போயி பிடவைப் பார்க்கிற சாலையை வந்தார். நம்மை யென்ன சமாச்சாரம் யென்று கேட்டார். யென்ன யிருக்குது பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் யில்லை யென்று சொன்னோம். அவர் சொன்னது ஒரு குழியிலே விழுந்தோம். அன்பது நாளையிலே செத்துப் போவோம் யென்று நினைச்சிருந்தோம். நாற்பத்தஞ்சு நாளையிலே தானே செத்துப்

போறதாயிருக்குது. அது உமக்கு தெரிஞ்சுதா யென்றார். தெரிஞ்சுது யென்று சொன்னோம். ஆனால் செத்துப்போற காலம் வந்திருக்குதே யல்லாமல் பின்னை பிழைக்கிற காலம் யில்லை யென்று சொல்லி மாடு ஒட்ட வந்த வெள்ளைக்காரர் உம்முட வீட்டிலே பண்ணின மரியாதை நம்முடய வீட்டிலே யில்லாமல்ப் போச்சுது. நம்முடய வீட்டே வந்து வீடு வீடாய் திறக்கச் சொல்லிப் பார்த்தார்கள். ஒரு காம்பிராவுக்கு சாவியில்லை யென்றால் அந்தக்கதவை உடைச்சுப் பார்த்தார்கள். அந்த சீஞ்ஞேர்கள். அப்படிப்பட்ட மரியாதை நம்முட வீட்டிலே நடப்பிச்சார்கள். உம்முட வீட்டே வந்தவர்கள் மாட்டுப் பேச்சே யெடுக்கயில்லை. யாம் உம்முடனே பேசிக் கொண்டிருந்து பிறப்பட்டுப் போயி விட்டார்களாமென்று சொன்னான். அதுக்கு நாம் ஒண்ணும் சொல்லாமலிருந்தோம். அப்பிறம் முசே லங்கற்ணையை அழைச்சுப் பாத்தீரா மாடு ஒட்டவந்தவர்கள் நம்முட வீட்டிலே நடப்பிச்ச மரியாதையும் ரங்கப்பிள்ளை வீட்டிலே நடப்பிச்ச மரியாதையும் யென்று யிதுகளை சொன்னான் நாம் பார்த்தோமானால். காலன் யெதிர்க்க உத்திரவு பண்ணுகுறானென்று சொன்னதாகவும் அதுபோல அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். நேத்து ராத்திரி முசே லாலியும் பின்னையும் சிறிது வெள்ளைக்காரர் துற்க்கம் குதிரைக்காறருமாய் போய் முசே பெடுத்தல்மீ தோட்டத்திலே யிறங்கி யிருக்கிற இங்கிலேசுக்காரர் பேரிலே விழுந்து சண்டை பண்ணவிடத்திலே யிங்கிலேசுக்காரர் மனுஷரிலே பத்து பதினஞ்சு பேருக்குக் காயம் பட்டுது. அவர்களுது ஒரு பீரங்கியும் பிடிச்சுக் கொண்டு யிருபது முப்பது வண்டி யெருதுகளையும் ஒட்டிக்கொண்டு செயமாய் வந்தார்கள். இவர்களிலேயும் பத்துப் பேருக்கு காயம் பட்டது.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 4; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 23; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கதவைச் சாத்திக் கொண்டு காம்பிராவிலே உள்ளே யிருந்தார். அங்கே முசே கில்லியார் முசே புலோ பின்னையும் நாலத்து ரெண்டு பேர் வெள்ளைக்காரர் வந்தார்கள். முசே லெறி கதவைச் சாத்திக் கொண்டு யிருக்கிற சமாச்சாரம் கேட்டுப் பிடவைப் பார்க்கிற சாலையிலே தானே சத்துநேரம் பேசிக் கொண்டிருந்து போயிவிட்டார்கள். முசே கில்லியார் மாத்திரம் என்னா யெல்லாம் முழுகிப் போற காலமாய் வந்திருக்குது யென்று சொன்னார். நாம் சொன்னது, "அப்படி வராது யிந்த மாசத்தையிலே கப்பல் வரும் யெல்லாக் காரியமும் நன்றாய்த் தானே நடக்கும் சுவாமி தயவு பண்ணுவார் யிந்த மாசத்தையிலே கப்பல் வராமல்ப் போனால் யெல்லாம் முழுகிப் போறது தானென்று"

சொன்னோம். யிதிலே முசே துபுவாவை சிப்பாயியள் சம்மதிக்கி கண்டு பேசுகிறதுக்கு அப்பு முதலி, பெரியண்ண முதலி சின்ன முதலி யாரெல்லாரும் கூடியிருந்து கொண்டு நம்மையும் அழைச்சு அனுப்பிவிச்சார்கள். அதுக்குப் போயிண்டரானால் பழயது சாப்பிடப் போனார்கள். போயிண்டரில்லை யென்று சொன்னதுக்கு தானியப்ப முதலியார் போயிண்டர் யிருக்குறார்கள் அவர்களை அனுப்பிவிக்குறோம். நீங்கள் வராமல் காரியம் கெட்டுப்போகுதென்று சொல்லியனுப்பிவிச்சார்கள். நல்லதென்று நாம் போனோம். அவர்கள் சொன்னது நேத்து பாதிரி வீசுப்புவைக் கண்டு பேசினோம். அவன் சொன்னது முசே லாலியண்டைக்கி முசே துபுவாவும் வந்திருந்தான்.

அப்போ முசே லாலியுடனே சிப்பாயியள் சம்திக்கி சொன்னேன். அவர் கப்பல் வரத்தனிலும் சம்பளம் குடுக்க வேணுமென்று சொன்னார். அதுக்கு நீங்கள் தானே சொன்னீர்களே அகொஸ்து மாசத்தைக்கி மாத்திரம் சம்பளம் அவர்கள் குடுக்கிறது செத்தம்பர் மாசத்து முதல்கொண்டு அவர்கள் குடுக்கத் தேவையில்லை யென்று சொன்னீர்களே யென்று சொன்னேன். நல்லது அகொஸ்து மாசத்தைக்கி மாத்திரம் தான் குடுக்கச் சொல்லுமென்று முசே துபுவா உடனே சொன்னார். ஆனபடியினாலே முசே துபுவா அண்டையிலே நீங்கள் போயிமோர்ஷை சொல்லுங்களென்று சொன்னான். ஆனபடியினாலே சொல்லுவோம் வாருங்களென்று அழைச்சார்கள். பாதிரி பேச்சை நம்பப் போகாது அவன் சொல்லுகுறதெல்லாம் பொய். நமக்குத்தான் யிப்படி நாலத்து ரெண்டு காரியம் சொல்லி பொய்யாய்ப் போச்சுது. அவன் பேச்சை நம்பி நாம் போகலாகாதென்று சொன்னோம். அப்படியல்ல அவன் அப்படி சொல்லியிருக்கச்சே கண்டுபேச வேணுமென்று அழைச்சார்கள். நல்லதென்று நாமும் கூடப்போனோம். கண்டு பேசினவிடத்திலே முசே கதி வேலைக்கண்டு பேசி சொல்லுகுறேனென்று முசே கதிவேல் வீட்டுக்குப் போயி நாலு நாழிகை பொறுத்து வந்து ஒண்ணும் சொல்லாமல் வீட்டை போயிவிட்டான். யென்ன பேசாமல் போனானென்று யெல்லாரும் போயி சலாம் பண்ணினத்துக்கு முசே கதிவேல் சொன்னான், "யிசுக்காதரு வருந்தனிலும் சம்பளம் குடுக்க வேணும் யென்றும் சொன்னான். அதுக்கு நீய் சொன்னியே ஆகஸ்த்து மாசத்தைக்கி மாத்திரம் அவர்கள் சம்பளம் குடுக்கிறது. அப்பிறம் தேவையில்லை என்று சொன்னியே யென்று சொன்னதுக்கு அதுக்கு அவன் வழவழயென்று சொன்னான். ஆனபடியினாலே முசேலாலிக்கு ஒரு பித்திசாமெழுதி குடுங்களென்றும் நானும் தெரியப்படச் சொல்லுகுறேனென்று" சொன்னான். யிவர்களெல்லாரும் வெழ்க்கினாப் போலே யிருந்தார்கள். அப்பிறம் நாம் சொன்னது பார்த்தியளா? நாம் சொன்னால் கேழ்க்க மாட்டமென்று சொன்னீர்களே குமிசேலுக்கு பித்திசாம் குடுத்ததுக்கு

அவர்கள் நாங்கள் செத்துப்போற காலம் வந்திருக்கச்சே உங்கள் ஞாயம் யென்ன நடக்கப் போகுதென்று அவர்கள் சொல்லிப் போட்டார்கள். அந்த மட்டிலேயாகிலும் யிருங்களென்று சொன்னால் அதுவும் கேளாமல் பாதிரி வீசுப்புவைக் கண்டு பேசினீர்கள். அதுக்கு யிப்போ முசே துபுவா சொன்ன உத்திரவுதான் தெரிஞ்சுதா வாணாமென்றால் கேழ்க்கமாட்டமென்னீர்களே முசே கதிவேல் சொன்னானென்று லூசும் சொன்னான். சிப்பாயிகளும் சொல்லிக்கொண்டு திரியுரார்கள். ஆகஸ்த்து மாசத்தைக்கி மாத்திரம் சம்பளம் அவர்கள் கையிலே வாங்கிக் கொள்ளுகுறது. செத்தம்பர் மாசத்தைக்கி தேவையில்லை யென்று சொன்னானெங்கிறது நாமும் கேட்டு யிருக்குறோம். நீங்கள் கேட்டிருக்கிறீர்கள் அப்படி யிருக்கச்சே யென்னமாய் நடக்குதோ அதைப்பார்த்துக் கொண்டு போவோமென்றால் கேழ்க்க மாட்டமென்றீர்கள்.

முசே கதுவேனாலும் கோபிச்சுக் கொண்டாகிலும் அறுத்து ஒரு பேச்சாய் சொல்லுவான். யிவன் யிருக்கிற நிமித்தியம் யிப்படி வழவழத்தப் பேச்சாய்ச் சொல்லுகிறது யென்று யென்ன சொன்னாலும் கேழ்க்க மாட்டாமென்னீர்களே நீங்களாய்த் தானே மாட்டிக் கொண்டீர்களென்று சொன்னதுக்கு ஒருத்தரும் பேசக்கூட வாயிலே வரயில்லை விரலை வைச்சுக் கொண்டு அவரவர் வீட்டுக்குப் போயிவிட்டார்கள் நாமும் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 5; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 24; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கி கேழ்க்கப்பட்ட சேதி யென்ன யென்றால் நம்முடவர்கள் பெருமாள் நாயக்கன் சாவடியிலே யிருக்கிறவர்கள் யெல்லைப்பிள்ளைச் சாவடியிலே யிருக்கிறவர்கள் யெல்லாரும் நேத்து ராத்திரி போயி முரட்டாண்டிச் சாவடியிலே மோற்சா போட்டுக் கொண்டு யிருக்கிற இங்கிலேசுக்காரர் பேரிலே போயி விழுந்து சண்டை பண்ணவிடத்திலே யிங்கிலேசுக்காரர் மனுஷர் சிறிது பேர் பதுங்கியிருந்தார்கள். அதன் பேரிலே நம்முடவர்களிலே பத்துப்பதினஞ்சு பேர் செத்துப் போனார்கள். பத்துப்பதினஞ்சு பேர் மட்டுக்கும் காயமென்றும் பத்துப்பனிரெண்டு குதிரை விழுந்து போனதென்றும் சேதி சொன்னார்கள். அந்த மட்டிலே நம்முடவர்கள் வாங்கி வந்து விட்டார்கள். முசே லாலி ஒழுகரை பாதிரி கோவிலிலேதானே யிருந்தான். சண்டைக்கிப் போகயில்லை யென்று சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்குப் போனோம். முசே கில்லியார் முசே புலோ யெல்லாரும் வந்திருந்தார்கள். பத்தரை மணி மட்டுக்கும் முசே லெறி காம்பிராக்கதவு திறக்கயில்லை.

உள்ளே தானே யிருந்தார். முசே கில்லியார் முசே புலோ யெல்லாரும் சத்துநேரம் யிருந்து மறுபடி வீட்டுக்குப் போயிவிட்டார்கள். அப்புறம் பதினோரு மணிக்கி கதவு திறந்தார்கள். ரெண்டொரு வெள்ளைக்காரர்கள் வந்து கையெழுத்து வாங்கிக் கொண்டு போயிவிட்டார்கள். நமக்கும் அவருக்கும் பேட்டியில்லை பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்து விட்டோம். பின்னையொன்றும் விந்தையான சேதி கேழ்க்கயில்லை. இத்தனாள் சாயங்காலம் இருபத்து நாலு ராத்தல் பீரங்கி ஒன்றும் மூணுமருந்து பெட்டியும் ஒழுகரை வழியாய்ப் போச்சுது. யெங்கே போச்சோ தெரியாது.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 6; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 25; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியுடைய காம்பிராக் கதவு சாத்தியிருந்தது. அப்புறம் பத்துமணிக்கி கதவு திறந்து விட்டார்கள். அப்புறம் நாம் போயி காண்பிச்சுக் கொண்டு யிப்பாலே வந்து யிருந்தோம். முசே துலோராமும் (M. Dulaurens) முசே கொற்னேத்தும் (M. Cornet) வந்து அவர்களுட கோந்தவாரிலே (இர்ம்ல்ற்ர்ண்ழ்) எழுதிக் கொண்டிருந்தார்கள். பத்தரை மணிக்கி முசே துபுவா வந்து கண்டு பேசிப்போட்டு முசே லாலி வீட்டுக்குப் போயிவிட்டான். அப்புறம் முசே புலோ வந்து யென்னமோ கடுதாசியள் கொண்டு வந்து கையெழுத்து வாங்கிக் கொண்டு போயிவிட்டான். பின்னை ஒருத்தரும் கோவற்ணமா வீட்டின் பேரிலே வரவுமில்லை கோட்டைக்கி வரவுமில்லை. பதினோரு மணிக்கி நாம் புறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். வீட்டே யிருக்கச்சே கந்தப்ப முதலியும் புகயிலைக் கிடங்கு பாபுராயனும் வந்தார்கள். கந்தப்ப முதலி சொன்னது சிப்பாயிகள் சம்மதிக்கி முசே துபுவாவுடனே முந்தாம் நாள் கண்டு பேசினவிடத்திலே அவன் சொன்ன உத்தாரம் அதைப் பார்த்தால் முசே கதுவேலைத் தொட்டும் மத்தப்பேரைத் தொட்டும் காரியமில்லை. யெல்லாம் யிவன்தான் பிரட்டிக் குடுத்துக் கொண்டிருக்குறானென்று நான் முசே லெறியுடனே சொன்னதுக்கு அவர் சொன்னது யின்னம் அஞ்சாறு நாளையிலே நம்முடய இசுக்காதுரு (French Squadron) வரப்போகுது. நீங்களும் சகலசெனங்களும் உற்சாகப்படப் போறீர்கள் நீங்களும் ரொம்ப கஷ்ட்டப்பட்டீர்கள். யின்னம் அஞ்சாறு நாளைக்குள்ளே சுவாமி தயவுனாலே சுகப்படப் போறீர்கள் யென்று சொல்லி ஆனால் யெனக்கும் முசே லாலிக்கும் யிருக்கிறதுதான் உங்களுக்குத் தெரிஞ்சு யிருக்குதே. ஆனபடியினாலே நான் சொல்லக்கூடாதே யென்றும் யென்ன செய்வோமென்றும் சொன்னார்யென்று சொன்னான். அதுக்கு பாபுராயன் அதுக்குள்ளே நம்முட பேச்சுகளெல்லாம் கீழுக்கு யிறங்கிப் போகுதென்றும்

சொன்னான். பின்னையும் பட்டணத்திலேயானால் சகலதினிசுகளும் ரொம்ப குறைச்சலாய் விற்கறார்கள் விளக்கெண்ணை விராகன் ஒண்ணுக்கு சேர் அஞ்சு நல்லெண்ணை விராகனுக்கு சேர் ஆறு நெய்சேர் ஒண்ணுக்குப் பணம் அஞ்சும் கொட்டைப்பாக்கு பணம் ஒண்ணுக்கு யெட்டு பத்தும் களிப்பாக்கு பணம் ஒண்ணுக்குப் பலம் ஒண்ணும் பச்சைப்பயறு உளுந்து துவரம்பருப்பு பணம் ஒண்ணுக்கு முக்கால் படியும் சின்னப்படியிலே யிந்தப்படியாக தினிசுகளும் யிந்தவிலைக்கு அகப்படுகிறது ரொம்ப பிறயாசம் யிதுவும் சகல செனங்களும் அகப்படயில்லை. நேத்து வந்து அஞ்சாறு நாளைக்கி முன்னே பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெளியே போயி விடுகிறபடியினாலே யிருக்கிற தானியங்களை பணத்துக்கு ரெண்டு அரை ரெண்டே முக்கால் மூணு படியும் யிந்தப்படியாக வித்துப்போட்டு பணத்துகளை கையிலே பிடிச்சுக் கொண்டு போயிவிட்டார்கள். யிப்போ முன்னே வித்தபடியில்லாமல் மறுபடியும் பணத்துக்குச் சின்னபடியாலே ரெண்டு படியெங்கிற விலை விக்குதென்று யிந்தப்படியாக கந்தப்ப முதலியும் பாப்புராயனும் சொல்லிக் கொண்டிருக்கச்சே வங்காளத்திலே திறேக்கிதோர் யிருந்த முசே றேனோ (M. Renault) மகன் வந்தான். அவனண்டை ரெண்டு பேரும் போயி பேசிக்கொண்டிருந்தார்கள். அதிலே பதினோரு மணி ஆச்சுது. நாம் வீட்டுக்குப் போகவேணுமென்று பிறப்பட்டோம்.

கந்தப்ப முதலியும் கூடவந்து தாம் கிரேப்பியோர் காம்பிரா மட்டுக்கும் வந்து விட்டுக்குப் போறீர்களா அய்யாவென்று அனுப்பிவிச்சுக் கொண்டு போனான். அந்த மட்டிலே பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் நித்தம் கொஞ்சம் கொஞ்சமாக வெளியே போயி விடுகிறார்கள். யின்னைய தினம் வெகுசெனங்கள் வெளியே போயிவிட்டார்கள். நாம் கோட்டையிலே யிருக்கச்சே முசே றெனோ மகன் யென்ன சுப்பா சோயேன் சொன்ன சோசியமெல்லாம் பொய்யாய்ப் போச்சுதே ஒண்ணும் நடக்கயில்லை யென்றும் சோசியத்தை நம்பப் போகாதென்று அதுக்கு நான் சொன்னது. இன்னைய சாயங்காலம் ரெண்டு குண்டுகளும் மருந்தும் பெட்டிகளும் கொண்டு போனார்கள். செனங்கள் வெளியே போறபடியினாலேயும் யிருக்கிற பணத்தை விராகனாக மாத்திக் கொண்டு போறபடியினாலே யிருக்கிற பேர் பணத்தை விராகனாக மாத்துகிற படியினாலேயும் விராகன் நூத்துக்கு ரூபாயி முன்னூத்தறுபத் தொண்ணாய் வித்த ரூபாயி யின்னையதினம் விராகன் நூத்துக்கு ரூபாயி முன்னூத்தி யெழுபத்தேழு ரூபாயாக விலைவிக்குது. பிறைவிரகனுக்கு யிந்த விலையானால் நக்ஷத்திர விராகனுக்கு பின்னையும் சத்துவிலை அதிகமாயிருக்கும் யென்று சொல்லிக்கொண்டார்கள். அஞ்சாறு நாளைக்கி முன்னே முசே

லாலியுடைய ஒடுதி யென்று புடுத்திக்கீசு (Potirgusae) வெள்ளைக்காரன் ஒருத்தன் வந்து சொன்னது உங்கள் ஆறு பேர்களையும் ஆறு பேர் அறுக்கார பிராமணர்களை வைக்கச் சொன்னார்கள். அந்தப்படிக்கி அப்பு முதலியை ஆறுபேரும் கந்தப்ப முதலியும் ஆறுபேரையும் பெரியண்ண முதலியை ஆறு பேரையும் பாப்பய்யப்பிள்ளை ஆறுபேரையும் சின்ன முதலியாரை ஆரு பேரும் ராமச்சந்திரராயனை ஆறுபேரையும் சோணாசல பிள்ளை ஆறுபேரும் யிந்தப்படியாக அவரவர் வைக்கச் சொன்னார்களென்று சொன்னான். நாம் சொன்னது அறக்கார பிராமணர் ஒருத்தராகிலும் அகப்படுகிறது யில்லை. யிருக்கிற பேரெல்லாம் வெளியே போயிவிட்டார்கள். அகப்படாதென்று சொன்னதுக்கு பிராமணர் அகப்படாவிட்டால் தமிழரை ஆகிலும் வைச்சு அறுக்காறுகளுக்கு கப்பித்தானாய் யிருக்கிறவன் கையிலே ஒப்பிவிக்கச் சொன்னாரென்றும் சொன்னான். அவன் சொல்லிப் போட்டுப் போயி அவரவருடனே யிந்தப்படிக்கி சொன்னதுக்கு அவரவர்களும் அகப்படாதென்று சொன்னார்கள். சோணாசலப்பிள்ளை மாத்திரம் பார்த்து அனுப்பிவிக்குறேன் யென்று சொன்னான். நாம் மாத்திரம் மதாம் திப்பிளேக்கிசுட நாளையிலே வெகு விசாரிச்சுக் கொண்டிருந்தவர்களிலே பொன்னப்ப சேருவைக்காரன் மாரிபத்திலே ஆறுபேர் தமிழர்களை லாவணம் வைச்சு ஆறு ரூபாயும் குடுத்து அமத்தி வைச்சோம். அவர்கள் யின்னம் நம்மை பார்க்க அனுப்பிக்கயில்லை கேட்டனுப்பிவிச்சால் அனுப்புவோமென்று அந்த வேகுக்காரனுக்கு இண்ணைக்கி நாளைக்கி யென்று சொல்லிக் கொண்டிருக்குறோம் அனுப்பாவிட்டால்.......

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 7; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 26; ஞாயிற்றுக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறி கோவிலுக்குப் போயி பூசை கேட்டு மேல்வீட்டின் பேரிலே வந்தார். நாம் கண்டு ஆசாரம் பண்ணோம். அவரும் தலை குனிஞ்சு ஆசாரம் பண்ணினார். அவர் பிறகே குமிசேல்காரர் ஒருத்தரும் வரயில்லை. கடலோரத்து கணக்கர் முசே வற்னேயும் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் கணக்கர் நட்டா முட்டியளுடனே காம்பிராவுக்குள்ளே போயிவிட்டார். அப்புறம் ஒன்பதரை மணிக்கி முசே கில்லியார் மாத்திரம் வந்து கண்டு பேசி போயிவிட்டார். பின்னை ஒருத்தரும் வரயில்லை பத்து மணி மட்டுக்கும் நாமிருந்து அதுக்குப் பிறகு வீட்டுக்கு வந்துவிட்டோம். முசே லாலி யண்டை அறக்காறுகளுக்கெல்லாம் கப்பித்தானாயிருக்கிற மிஸ்தீஸு வெள்ளைக்காரன் வீட்டுக்கு வந்தான் அவனுடனே பத்து வருஷமாய் யிந்த உத்தியோகத்திலே யில்லை. அதுகளெல்லாம் யிப்போ நமக்கும் தெரியாதென்று உபசாரமாய் மரியாதை

பண்ணி அனுப்பிவிச்சோம். அவனும் போயிவிட்டான். மத்தப்படி பின்னையொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை.

கேழ்க்கப்பட்ட சேதி சிப்பாயிகளுக்கு கணக்கனா யிருக்கிற லதுசு என்கிறவன் சிப்பாயிகள் சம்மதியிலே மூவாயிரம் ரூபாயும் பின்னை ஒரு சம்மதியிலே மூவ்வாயிரம் ரூபாயும் பதிணைய்யாயிரம் ரூபாயி பில்லேத்து ஒண்ணும் ஆராயிரம் ரூபாயி பில்லேத்து ஒண்ணும் யிதுகளெல்லாம் கிறகிச்சானென்றும் அதன் பேரிலே கணக்குகள் விசாரிச்சு லூசு என்கிறவனை சாவடியிலே நேத்தைய தினம் காவலிலே வைச்சார்கள். நம்முடைய பேருக்கு யிருக்கிற சிப்பாயிகளுக்கு கப்பித்தானா யிருந்த குப்பினாயக்கன் யென்கிறவனைக் கசோத்திலே போட்டார்கள். சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்தவன் சொன்ன சமாச்சாரம் சென்னப்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர் பிக்கெட்டு நாற்பது பேர்வழியிலே ரெண்டு லக்ஷம் விராகன் எழுதி போட்டு லக்ஷத்து முப்பதினாயிரம் விராகனை செலுத்திப் போட்டார். பின்னையும் எழுபதினாயிரம் விராகனும் அவரவர் கெடுவுப்படிக்கி கொண்டு வந்து செலுத்துனார்கள். தினிசுகளும் ரொம்ப விலைகிராக்கியா யிருக்கிறது யென்றும் யிந்த கஷ்ட்டம் யெங்களுக்குண்டாயிருக்குதென்று சொன்னார்கள்.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 8; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 27; திங்கள்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனோம். அரியாங்குப்பம் திருனாள் சம்பாகோவிலிலே செய்யுறபடியினாலே யின்றைய தினம் நாவிக்கறணை குடுக்கிறதான படியினாலே முசே லெறி சம்பா கோவிலுக்குப் போயி பூசை கேட்டு நாக்கறணை ஆசீர்வாதம் பெத்து ஒண்டி பூரா பல்லக்குடனே ரெண்டு சோபுதாரரும் ரெண்டு மூணு சேவுகரும் ஒரு சேருவைக்காறனுடனேயும் கோட்டையே வந்தார். முகத்தைப் பார்த்தால் சத்தாகிலும் தேயசுயில்லை. நாம் கண்டு பூச்செண்டு ஒண்ணும் குடுத்து ஆசாரம் பண்ணினோம். அதை வாங்கிக் கொண்டு யென்ன சமாச்சாரமென்று கேட்டார். யென்ன சமாச்சாரம் பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெகுபேர் வெளியே போயிவிடுகுறார்கள். கொள்ளக் கிடைக்கவில்லை. அஞ்சாறு நாளைக்கி முன்னே வெளியே போறவர்கள் யிருக்கிறதை வித்துப்போட்டு கையிலே பிடிச்சுக் கொண்டு போறதைத் தொட்டு பணம் ஒண்ணுக்கு மூணு படியும் ரெண்டே முக்கால் படியென்று வித்தார்கள். யிப்போ ரெண்டுபடி நெல்லும் கொள்ளக் கிடைக்கயில்லை. யின்னம் பதினைஞ்சு நாளைக்குள்ளே இசுக்காதுரும் வந்தால் எல்லாம் சுகப்படுவார்கள். வராவிட்டால் பதினைஞ்சு நாளைக்குள்ளே ஒருவரும் யிருக்கமாட்டார்கள்

யென்று சொன்னோம். அதுக்கு பதினைஞ்சு நாளைக்குள்ளே இசுக்காதுரு வராமல்ப் போனால் யொண்ணுமில்லை யென்றும் சொன்னார். அதிலே முசியே கில்லியேரும் பின்னை யொருத்தனும் வந்து முசே லெறியுடனே பேசினார்கள். நாம் வெளியே வந்து உளுக்காந்திருந்தோம். மறுபடி முசே லெறி யழைச்சு மைசூர் அயிதர்னாயக்கன் மச்சான் மகத்துமனாயக்கன் முன்னே வில்லியநல்லூரிலே வந்திறங்கி மறுபடி தியாகதுற்க்கத்துக்குப் போயிவிட்டார்.

மறுபடி வந்து அரியாங்குப்பத்திலே வந்திறங்கினதும் அங்கேயிருந்து கோட்டைக்கி வந்து வெகுமான சாமானுகளெல்லாம் யெடுப்பிச்சுக் கொண்டு போனதும் எந்த நாளிலே அவன் கோட்டை விட்டுப்போவான் யென்று சொன்னோம். யிப்படியாக குமிசேலுக்கும் யெழுதினதும் பார்த்துக் கொண்டு அந்தப்படிக்கி கடுதாசி ஒண்ணு பிறஞ்சு பாஷையிலே எழுதி அனுப்பிவிச்சான் யென்று சொன்னார். நல்லதென்று சொல்லி வெளியே வந்தோம். முசே கில்லியார் பேசியிருந்து நம்மண்டைக்கி வந்து நாமும் அவருமாய் லோகாபிறமமாய்ப் பேசிக்கொண்டிருந்தோம் யென்று சொன்னதுக்கு பார்த்தீரா கோட்டையிலே ஒருத்தரைக் காணோம். பட்டணத்திலேயா ஒண்ணும் கொள்ளக் கிடைக்கயில்லை. நல்லகோழி அகப்படயில்லை. ஆடு அகப்படயில்லை மீன் அகப்படயில்லை. அப்படியாயிப் போச்சுது பட்டணமென்று ரொம்பவும் தாபந்தமாய்ச் சொன்னார். யிப்படி பேசியிருந்து பதினோரு மணிக்கி அவரும் நாமும் பிறப்பட்டு பல்லக்கேறிக் கொண்டு அவரவர் வீட்டுக்குப் போயிவிட்டார்கள். நாமும் வீட்டுக்குளு வந்துவிட்டோம். வீட்டை வந்து மகத்துமனாயக்கன் வந்ததேதியும் அவன் பிறப்பட்டுப் போன தேதியும் பிறஞ்சியிலே ஒரு கடுதாசியிலே எழுதிவைச்சோம்.

முசே லாலி வந்தது ஆயிரத்தி எழுநூத்தி அன்பத்து யெட்டாம் ஆண்டு மே மாசம் முதல் தேதி ஆயிரத்தி எழுநூத்தி அன்பத்தொன்பதாம் ஆண்டு சூன் மாசம் வரைக்கும் சிலவு குமிசேல் கடுதாசி யெழுதி சீமைக்கி கும்பினியாருக்கு யெழுதின கடுதாசியிலே சிலவு யெழுதினது **(12668664)** நூத்திருபத்தாறு லெக்ஷத்தி அறுபத்தெட்டாயிரத்தி அறுநூத்தி அறுபத்து நாலு ரூபாயும் சில்லரைப் பணமும் சில்லரைக் காசும் எழுதினார். **1759** ஆண்டு சூலை மாசம் முதல் தேதி முதல்க் கொண்டு **1760** ஆண்டு சூலை மாசம் முதல் தேதிவரைக்கும் சிலவானது ரூபாயி யினிமேல் யிவ்வளவு யென்று அறிஞ்சு யெழுதவேண்டியது.

பட்டணத்திலே கும்பினியார் மாடு ஒட்டின படியினாலே முசே சொபினே துபாசி முத்து யெங்கிறவன் மூணு மாடு பிளாம் யெங்கிறவன் வீட்டிலே ஒளிச்சு வைச்சான். பிளாமெங்கிறவன் முத்து யெங்கிறவனை

யென்னமோ கேட்டான். அவன் குடுக்கயில்லை மாட்டை வெளியே முத்து யெங்கிறவன் ஒட்டிவிட்டான். அதன்பேரிலே திப்பிளாம் யெங்கிறவன் போயி முசியே துபுவாவுடனே துபாசி முத்து யெங்கிறவன் யேன் யென் வீட்டிலே மூணு மாடுகளை ஒளித்து வைத்திருக்கிறதை ஒட்டிக்கொண்டு போனானென்று சொன்னான். அதன்பேரிலே துபாசி முத்து யென்கிறவனை அழைச்சு அந்த மாட்டைக்கொண்டு வந்து ஒட்டி விட்டுப்பின்னையும் அந்த மாடு வெளியே யேன் போச்சுது யென்று யெல்லாம் சொல்லுயென்று கசோத்திலே போடச் சொன்னார்.

இத்தனாள் பகலைக்கு மேலாக முசே கொடுத்தேன் அழைக்குறானென்று சேவுகள் வந்து அழைச்சான். மூணு மணிக்குப் போனவிடத்திலே அவன் சொன்னது பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் யிவ்வளவு யிருக்குறார்களென்று ஒருதுகை டராயிக்க வேணும் யென்று சொன்னபடியினாலே சாவடிக்கணக்கப் பிள்ளை யித்தனை பேரென்று வீட்டுக்கு வீடும் எழுதிக் கொண்டு வரச்சொல்லும் நம்முட கப்பலானது வருகிற சமாச்சாரம் ஒண்ணும் தெரியவில்லை யென்று சொன்னான். நல்லது சாவடிக்கணக்குப் பிள்ளைதான் யிருக்குறார்கள் சாதி சாதிக்கும் நாட்டாமைக்காரர்கள் யிருக்கிறவர்களையும் அழைப்பிச்சு எழுதி வரச்சொன்னார்கள். நல்லதென்று சொன்னோம். ஆனால் அந்தப்படிக்கி யெழுதி வரச்சொல்லுமென்று சொன்னான். அவர்கள் யெல்லாரையும் யிங்கே அழைப்பிப்போம் யென்று நாம் சொன்னதுக்கு தேவையில்லை உம்முட வீட்டிலே தானே அழைச்சனுப்பிவிச்சு சொல்லித் தாக்கீது பண்ணி சீக்கிறத்துக்கு எழுதிவரச்சொல்லுமென்று சொல்லி பாத்தீயா யிந்தப் பட்டணத்துக்கு உன் சகாயம் செய்தது போலே ஒருத்தரும் செய்யவில்லை. முசே லாலி செனங்களை வெளியே போகவிடமாட்டாமென்று சொன்னார். அதுக்கு நான் அப்படி அல்லா போற செனங்கள் போகட்டும் யென்று சொல்லி உத்தாரம் வாங்கிக் கொண்டேன் யென்று சொன்னதுக்கு உம்மைப் போலே யிப்படிப்பட்ட சகாயம் அங்கே யிருப்பாரா. ஆனால் நல்ல உபகாரம் செய்தீர்கள். முன்னே பட்டணத்திலே யிருந்து வெளியே போன செனங்களிலே சிறிது பேர் திரும்பி வந்தார்கள். ஆனால் ஏழு யெட்டு நாளாக செனங்கள் வெளியே போயிக் கொண்டு யிருந்தார்கள். பட்டணத்திலேயுள்ள பாதி செனங்களிலே பாதி செனங்கள் வெளியே போயி விட்டார்கள் யென்று சொன்னதின் பேரிலே போக வேணுமென்று யிருக்கிறவர்கள் போகட்டுமென்று சொன்னார். அதுக்கு நான் உத்தாரம் கொடுத்தேன் என்றும் சொன்னார். ஆனால் உம்மைப் போலே

செனங்களிடத்திலே யிவ்வளவு பக்ஷம் யிருக்கிறவர் ஒருத்தரும் யில்லை. யிப்படியாக பேசிக் கொண்டிருக்கச்சே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு யிருப்பாலே வந்து விட்டேன். நான் படியிறங்கி கீழே வருகிறபோது நயினார் யெதிர்க்க வந்தான். வந்தவனுடனே சாதினாட்டாமைக் காரரையும் சாவடி கணக்கப்பிள்ளைகளையும் அழைச்சுக் கொண்டு வீட்டுக்கு வாருமென்று சொல்லிப்போட்டு அப்படித் தானே கோட்டைக்கி முசே லெறியண்டைக்கிப் போய் மைசூர் மகத்துமனாயக்கன் பவுன்சு வந்தது. மறுபடி போனதும் எழுதிவரச் சொன்னாரே அந்தப்படிக்கி பிரஞ்சிலே எழுதிக் கொண்டு போன கடுதாசியைக் குடுத்து முசே கொடுத்தேனை அழைச்சு அனுப்பிவிச்சு சொன்ன சமாச்சாரம் யெல்லாம் சொல்லி அதுக்கு அப்படி முன்னே தானே கந்தப்ப முதலியும் சவுரிராயப் பிள்ளையும் போக வேணுமென்று கேட்டார்கள். யிவர்கள் போனால் நமக்குப் பழிவரும் யென்று வாணாமென்று சொன்னேன். யிப்போ யெப்படி போவார்கள். யெங்கே யிருப்பார்கள் யென்று அவர்களுக்கு அங்கலாயிச்சான். பாத்தீயா யிவன் மனசு அவிப்பிறயம் யெனக்கு சொல்லுகிறயா நம்முடய செனம் ஆண்பிள்ளை பெண்டுகள் யெல்லாம் யேகத்துக்கு நூறு செனமிருக்கும். யிவர்கள் போறதுக்கு நாகப்பட்டணம் கோவற்ணதோருக்கு ஒரு கடுதாசியும் தயங்கம்பாடி கோவற்ணதோருக்கு ஒரு கடுதாசியும் எழுதி யிவர்கள் கும்பினியாரை சேவித்த ஒப்பிசியால் மார்கள் யிருக்குறார்கள். யிவர்களை விசாரிச்சுக் கொள்ளவேணும் யென்று ரெண்டு கடுதாசி யெழுதிக் குடுக்கவேணும். யிங்கிலேசுக்காரருடைய பசுப்போடுது (Pass-port) ஒண்ணும் அனுப்பிவிச்சு வைக்க வேணும் யெதுனாலே யென்றால் அவர்களுக்கு வழியிலே ஒருத்தரும் மறியல் செய்து கஷ்டப்படுத்தாதபடி அதுக்குத் தக்கினபடி நாம் சொன்னோம். அவர்கள் துணி தலையில் பாகை மட்டும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனபடியினாலே நாம் போறவேளைக்கி யிதுகளெல்லாம் வேணுமென்றும் சொன்னேன். அதுக்கு ஆனால் நான் எழுதும்போது நாகப்பட்டணம் கோவற்ணதோருக்கும் குமிசேல்க்காரர் கடுதாசியாய் ஒரு கடுதாசியும் தருகிறேன். இங்கிலேசுக்காரர் பசுப்போடுதும் ஒண்ணும் யென்னாலே யாகாது அது வந்து கிடைக்கிறது ரொம்ப கஷ்ட்டம் என்றும் சொன்னார். அந்த மட்டிலே பிறப்பட்டு வீட்டுக்கு வந்தோம். அதிலே சாவடி கணக்கப்பிள்ளையும் நயினாரும் சாதி நாட்டாமைக்காரரும் வந்தார்கள். அவர்களுடனே சாவடி கணக்கப்பிள்ளையள் நாலு பேரும் நாலு விதமாய் பிறிஞ்சு தெருவுக் கொருத்தராய் பிறிஞ்சு வீட்டுவீடு யித்தனை ஆண்பிள்ளையள் யித்தனை பெண் பிள்ளையள் யென்று சீக்கிறத்துக்கு எழுதிக் கொண்டு வாருங்களென்று நயினாருக்கும் சாவடி கணக்கப்பிள்ளையளுக்கும் நாட்டாமைக்காரருக்கும் சொல்லி அனுப்பிவிச்சோம்.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 9; விக்கிரம வருசம் ஆவணி மாசம் தேதி 28; செவ்வாய்க்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியைக் கண்டு பூச்செண்டு ஒண்ணு குடுத்தோம். அவர் முகத்தைப் பார்க்குமிடத்திலே துரைத்தனம் பண்ணுகிறவன் முகத்தைப் போலே யிருக்கயில்லை. துரைத்தனம் இழந்தவன் முகத்தைப் போலே யெட்டு நாளாயிருக்குது. சத்தாகிலும் களையில்லை. அதிலும் யிவர் யின்னையதினம் அவருடய முகத்தைப் பார்க்கப் போகயில்லை மெத்தவே சாறவாய் சத்தாகிலும் முகத்திலே களையில்லை. அப்படியிருக்க நான் நேத்து சொன்னேனே யெங்களுக்கு ஒரு பகுப்போடுது வாங்கி குடுக்க வேணுமென்று சொன்னதுக்கு அவர் வந்து கேழ்க்கவில்லையா? ராத்திரி முசே லாலி சொல்லி அனுப்பிவிச்சார். இங்கிலேசுக்காரருக்கு நாலு கப்பல் வந்து கூடலூரிலே அன்னூறு பேர் சொலுதாதும் சிறிது சிப்பாயிகளும் வந்திறங்கினார்கள். யின்னம் பதினைஞ்சு நாளையிலே புதுச்சேரியும் இங்கிலேசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுப் போட வேண்டியதா யிருக்குமென்று சொல்லியனுப்பி விச்சார். அப்படி யிருக்க யென்ன காரியம் நடக்கப் போகுதென்று சொன்னார். யென்னா யிவர் யிப்படி சொல்லுகுறார்? யிதை நன்னாய் விசாரிப்போமென்று வெளியே வந்தோம்.

அங்கே பெரிய மனுஷர் வெள்ளைக்காறனொருத்தன் வந்தான். அவன் சொன்னது நேத்து ராத்திரி யெட்டு மணிக்கி முசே லாலி முசே மொர்சேனையும் முசே கொடுத்தேனையும் ரெண்டு பேரையும் அழைச்சனுப்பி முசே லெறியுடனே சொல்லுங்கள் இங்கிலேசுக்காரருக்கு நாலு கப்பல் வந்துது. அதிலே அன்னூறு பேர் சொலுதாதும் சிறிது சிப்பாயிகளும் வந்து கூடலூரிலே யிறங்கினார்கள். ஆனபடியினாலே புதுச்சேரியை இங்கிலேசுக்காரர் கையிலே பதினைஞ்சு நாளையிலே குடுத்துவிட வேண்டியதாயிருக்குமென்று சொல்லுங்களென்றும் சொல்லியனுப்பி விச்சதை அவர்கள் வந்து அந்தப்படிக்கி சொன்னார்கள். அதுக்கு முசே லெறி சொல்லி அனுப்பிவிச்சதுக்கு அவரென்னமோ சொல்ல வேணுமென்றும் சொல்லியனுப்பிவிச்சார். ஆனால் அப்படிக்கி யில்லை. பிறஞ்சுக்காரருக்கு சரீரத்திலே துளி ரெத்தம் யிருக்குந்தனிலும் விடத்தக்கினதில்லை யென்று சொல்லியனுப்பி விச்சார். அவர்கள் போய் சொன்னதும் மறுபடிக்கி அவர் சொல்லி அனுப்பினதில்லை. யெப்படியும் பதினைஞ்சு நாளைக்குள்ளே யிங்கிலேசுக்காரர் கையிலே பட்டணம் விட்டுவிட வேண்டியதாயிருக்கும். யிதுக்கு பதினாயிரம் ரூபாய் பாரபத்தியமென்று சொல்லியனுப்பி விச்சதுக்கு முசே லெறி மறுபடி சொல்லியனுப்பி விச்சது யென்ன யென்றால் பதினாயிரம் ரூபாயிக்கிப் பங்கும் செய்ய வேணுமோ. அப்புறம் சகலத்துக்கும் யெசமானனாய்

தம்முட மனசு யெப்படியோ அப்படி ஆனபடியினாலே நானா பதிலுத்தரவு சொல்லுகுறவனென்று சொல்லியனுப்பிவிச்சார். அதைக் கேட்டுப் போட்டு பிடவைப் பார்க்கிற சாலையிலே வந்தோம். அங்கே ராமச்சந்திர அய்யனும் கந்தப்ப முதலியும் வந்தார்கள். கந்தப்ப முதலி சொன்னது, "நேத்து முசே லெறியுடனே வெளியே போற சம்மதிக்கிச் சொல்லிக் கொண்டேன். அவர் யின்னம் யெட்டு நாளைக்குள்ளே கப்பல் வருகுது. நீயெல்லாம் உன் சமுசாரத்தையும் அழைச்சுக் கொண்டு யெங்கே போய் அலையப் போராய் யென்று சொன்னாரென்று" சொன்னான். அதுக்கு நாம் நேத்து முசே லெறியுடனே கண்டு பேசினதுக்கு அவர் சொன்ன உத்தாரம் யின்னைய தினம் கண்டு பேசினவிடத்திலே அவன் சொன்ன உத்தாரம் யிவர்களுடனே யென்னதுக்கு சொல்லுகுறோமென்று சும்மாயிருந்தோம். மறுபடியும் முசே லாலி யவர்கள் முசே லெறிக்கி சொல்லியனுப்பிவிச்ச சமாச்சாரமும் யிவர் அதுக்குப் பதிலுத்தரவு சொல்லியனுப்பி விச்சதும் அவர்களாய்த்தானே சொன்னார்கள். யிந்தப்படியாக லோகாபிறமமாய் தங்களுடைய நிறைவு குறைவு சொல்லிக் கொண்டு பட்டணமும் முன்னாலே உண்டான சம்மதியும் யிப்போது அழிஞ்சு போற சம்மதியும் பேசிக் கொண்டிருக்கச்சே... முசே புலோவும் முசே லங்கற்னையும் முசே தெனியும் வந்து கோந்துவாரிலே கணக்கு கடுதாசியளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். முசே லங்கறணை வந்து நேத்து உம்மைக் கேட்டேனே மைசூர் மகத்துமனாயக்கன் பவுன்சு வந்த நாளும் அவன் போயிவிட்ட நாளும் கேட்டேனே யென்று சொன்னான். அது பிறஞ்சிலே கடுதாசியிலே எழுதியிருந்ததை குடுத்தோம். அதை வாங்கிக் கொண்டு மெத்த மோர்ஷி (Mercy) சொல்லி யிதினாலே சீமைக்கி அனுப்புகிற கடுதாசி அடைக்காமல் மெனக்கடா யிருந்தது யென்று சொல்லிப் போயிவிட்டான். அப்புறம் அமாவாசையான படியினாலே பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

ரெண்டு மூனு நாளாய் இங்கிலேசுக்காரர் பெடுத்தல்மீ தோட்டத்தண்டை யிருந்து சுடுகுறதும் ரெண்டு பேர் பேரிலே குண்டும் விழுந்து நடுவழியிலே விழுந்து போகுறதே யல்லாமல் ஒருத்தருக்கொருத்தர் தயங்கயில்லை.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 10; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 29; புதன்கிழமை***

இத்தனாள் நேத்து ராத்திரி இங்கிலேசுக் காரருடைய பவுன்சு முரட்டாண்டிச்சாவடி வழியாய் வந்து நம்முடவர்கள் பெருமாள் நாயக்கன் சாவடியிலே அன்பது பேர் சொலுதாதும் நாலு பீரங்கியும் வைச்சுக் கொண்டு யிருந்தவர்கள் பேரிலே வந்து விழுந்தார்கள். நம்முடவர்கள்

வரானென்று யேமாறினாப் போலே யிருந்த படியினாலே அவர்கள் வந்து சண்டை பண்ணி வெகுசாய்த் துப்பாக்கி சத்துகளும் பீரங்கி சத்துகளும் அவர்களும் சுட்டார்கள். நம்முடவர்களும் சுட்டார்கள். அதின் பேரிலே நம்முடவர்கள் பெருமாள் நாயக்கன் சாவடியிலே போட்டிருந்த மோர்சையும் பீரங்கியும் விட்டுவிட்டு வந்து விட்டார்கள். அவர்கள் அதைப் பிடிச்சுக் கொண்டு யிப்பாலே சாரம் நம்முட தோட்டம் மங்கத்தாயை தகனம் பண்ணினயிடம் மட்டுக்கும் வந்து அவர்கள் மனுஷர்கள் நடமாடினார்கள். யிந்த வேடிக்கை பட்டணத்திலேயுள்ள சகல செனங்களும் போயி வேடிக்கை பார்த்தார்கள். அப்புறம் நம்முடவர்கள் ஒழுகரை யெல்லப்பிள்ளைசாவடியிலே யிருந்தவர்கள் பேரிலேயும் இங்கிலேசுக்காரர் வந்து சண்டை பண்ணினார்கள். அதையும் நம்முடவர்கள் விட்டு விட்டு யெல்லாரும் வந்து அரியாங்குப்பம் போற புளியஞ்சாலையிலே யிறங்கினார்கள். அதன் பேரிலே முசே லாலி வந்து முசே துரி (M. Dure)யும் முசே திராங்குரையும் (M. Theiquiere) நீங்கள் கையிலே ஆகாதவர்களென்று கோபிச்சுக் கொண்டு முசே பிமேலுக்கு (M. Fumeh) கொம்மாந்தாம் தனம் குடுத்து முசே லந்து வீசனையும் (M. Landiarisian) பின்னையும் ரெண்டொருத்தருக்கு உத்தியோகம் குடுத்து விசாரிக்கச் சொல்லி திட்டம் பண்ணினான்.

அப்புறம் வெள்ளைக்காரர்களை யேகத்துக்கு யெண்ணிப்பார்க்கப் பத்துப் பதினஞ்சு பேருக்கு காயமும் இருபது குறைச்சலாக மத்தப்பேர் முன்னிருந்த யெண்ணிக்கைப்படிக்கி சரியாயிருந்தார்கள். இங்கிலேசுக்காரர் வந்து குண்டுசாலை அத்ததாயி பிடிச்சுக் கொண்டபடியினாலே பட்டணத்திலே யிருக்கிற செனங்களெல்லாம் ரொம்ப காபரா பட்டார்கள். யிதிலே சிறிது பேர்கள் பயந்து பட்டணம் யினிமேல் நிக்கமாட்டாது. யிங்கிலேசுக்காரர் வசமாய்ப் போகுமெங்கிறவர்களும் சிறிது பேர் யின்னம் செஞ்சியிருக்குது. அவ்விடத்திலேயும் சிறிது ராணுவும் பிலனிருக்குது. அப்படி யிருக்க பட்டணம் அவன் கையிலே அகப்படத் தக்கினதில்லை யென்றும், யித்தனாளும் பிரம்பை மேட்டுலே யிருக்கயில்லையா அப்படித்தான் குண்டு சாலையிலே வந்தார்கள். யின்னம் பத்து நாளைக்கி யிருக்கப் போறான். அப்புறம் பிறப்பட்டுப் போயி விடுகுறானென்று சொல்லுகுறவர்களும் யிப்படி அவரவர் மனசுக்கு தோத்தினதெல்லாம் சொல்லிக் கொள்ளுகுறார்கள். பின்னையும் யின்னைய தினம் ராத்திரிக்கி இங்கிலேசுக்காரர் பேரிலே நம்முடவர்கள் போயி விழப்போறார்களென்று சொன்னார்கள். யிதுகளெல்லாம் முசே லாலி திட்டம் பண்ணிப்போட்டு வில்லியநெல்லூர் வாசற்படியண்டை பீப்பாய்க்காரன் தோட்டம் முசே லெறி யிருக்கிறதுக்கு முஸ்தீப்பு பண்ணி யிருந்ததை தாமிருக்கிறதுக்கு முசே லெறியை கேட்டனுப்பிவிச்சு உத்தாரம் வாங்கிக் கொண்டு அதிலே வந்து

யிருந்து அங்கே யிருந்து கோட்டையே வந்து ஈசானிய மூலையாயி கொத்தளத்து யேறுகிற வழியாயி யேறி மேல் மெத்தையின் பேரிலே யேறி வந்து கூட வந்த வண்டி மாடுகளெல்லாம் அதுகளுக்கு யெசமானாய் விசாரிக்கிற பீரங்கி மேஸ்திரி முசே லக்லேன் (M. Laiglon) யெங்கிறவனை கோவற்ணமாம் வீட்டின் பேரிலே நட்டிருக்கிற கொடி மரத்தின் பேரிலே யேறி இங்கிலேசுக்காரர் தண்டு யெங்கே யிறங்கி யிருக்கு தென்று பார்க்கச் சொன்னான். அதன்பேரிலே ராசாவுக்கு சிரஞ்சீவி யென்று விலருவா (Vive la Roi) சொல்லச் சொல்லி மறுபடி அந்த வழியாய்த் தானே யிறங்கி தாமிருக்கிற விடுதியைப் போயி விட்டார். முசே லாலி கோட்டைக்கி வந்தாரெங்கிறதின் பேரிலே யிவரைக் காண்பிச்சுக் கொள்ள வேணுமென்று முசே லெறி முஸ்தீதாயிருந்து கொண்டு குமிசேல்க் காரரை யெல்லாம் அழைச்சனுப்பி விச்சார். அவர்களெல்லாம் வந்து விட்டபடியினாலேயும் வழியிலேயும் காத்துக் கொண்டிருந்தார்கள். முசே லாலி கொத்தளத்தின் வழியாயி போயி விட்டபடியினாலே முசே லெறி கோவற்ணதோர் தொப்பியை வாங்கி தாழ அடிச்சு கையை கடிச்சுக் கொண்டு பாத்தீயா இங்கிலீசுக்காரர் குண்டுசாலையைப் பிடிச்சுக் கொண்டார்களென்று ரொம்ப கஸ்திப்பட்டார். குமிசேல்க்காரர்களும் ரொம்ப கஸ்திப்பட்டார்கள். இன்னையதினம் கப்பலின் பேரிலே யிருந்து யிறுநூறு பேர் மத்தலோத்து மறினேர்களை யிறக்கி யிவ்விடத்திலே யிருந்து சிறிது வெள்ளைக்காரரும் சிறிது சிப்பாயிகளையும் யேகத்துக்கு அன்னூறு பேர் மட்டுக்கும் கூட்டி ரெண்டு பீரங்கியும் யிழுத்துக் கொண்டு யிங்கிலேசுக்காரர் பேரிலே ராத்திரி பனிரெண்டு மணிக்கி வடக்கு வழியாய் சண்டை பண்ணினார்கள். போனவிடத்திலே அவர்களும் மெலுக்கு வாய் யிருந்து கொண்டு ரெண்டு மூணு பீரங்கியும் சுட்டார்கள். துப்பாக்கி வெடியும் தீந்தார்கள். அதின் பேரிலே யிவர்களுக்கு லகுவுயில்லாத படியினாலே திருப்பிக் கொண்டு வந்து விட்டார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டது....

இத்தனாள் கந்தப்ப முதலியும் பெரியண்ண முதலியும் வந்து குஞ்சு குழந்தையள் யெங்களுதெல்லாம் யிருக்குதே உங்கள் குஞ்சு குழந்தையளும் யிருக்குதே யிதுகளெல்லாம் அனுப்பிவிக்கிறதுக்கு யென்ன யென்று கேட்டார்கள். கந்தப்ப முதலியானால் சொன்னது நான் துரையை உத்தாரம் கேட்டால் பரிச்சேதம் போகப்போகாதென்று சொன்னார். யிதுக்கு யென்ன யோசனை யென்று யென்னைக் கேட்டார்கள். நாம் சும்மா போகப் போகாது. பசுப்போடுது (Pass-port) அழைப்பிச்சுக் கொண்டு ஒரு தாவு டிக்காணா பாத்துக் கொண்டு போகவேணுமே யல்லாமல் சும்மாய்ப் போகப் போகாதென்று சொல்லி நாமும் தெற்க்கேயும் வடக்கேயும் மனுஷர்களை அனுப்பிவிக்க திட்டம் பண்ணினோம்.

ரசாசாயபு மனுஷன் வந்து நம்முட வீட்டுப் பெண்டுகள் பிள்ளையள் யிருக்கிறவர்களை வெளியே அனுப்பிவிக்க வேணுமே யென்ன யோசனை யென்று கேட்டுவரச் சொன்னாரென்று வந்து கேட்டான். ஆனால் யிது வேளையா யிருக்கயில்லையே போற வேளையிலே ஒரு தாவும் டிக்காணா பார்த்துக் கொண்டு போறவிதமாய் பிலனாய்ப் போகவேணும். உங்களுக்கு ஒரு வேலூரிருக்குது அங்கே போறதானால் நீங்களும் பேசினால் நாமும் மத்தத்தாறு பேசுகுறோம். நம்முட வீட்டுப் பசகள் குஞ்சு குழந்தைகளும் உங்களுடனே கூட அனுப்பி விக்குறோம். நீங்கள் விசாரிச்சுக் கொள்ளுகுறீர்கள். அப்படி போகத்தக்கின திராணி உண்டானால் போகலாம். அல்லவென்று போய் அவன் கையிலே அகப்பட்டுக் கொண்டு அவதிப்படுகுறிதிலேயும் யிங்கே தானே யிருந்தால் ஆச்சுதே. தேவன் உள்ளப்படிக்கி நடக்குது. பின்னையும் யிவர்கள் உப்பு தின்னு யிங்கே தானே யிருந்தால் யிவர்களுக்குத்தப் படிக்கி யிருந்தார்களென்கிறதாய் யிருக்கும். யிவர்களுக்கு பட்டணம் நின்னால் அல்லவென்று ஒருவேளை யிங்கிலேசுக்காரர் பட்டணத்தைப் பிடிச்சுக் கொண்டாலும் அவர்கள் மனசிலே பாத்தியா அவர்கள் உப்பு தின்னபடியினாலே அவர்களுக்குத்த படிக்கி யிருந்தார்கள் யென்று ஒரு வேளை மனசு வந்து தயவு பண்ணாலும் பண்ணுவார்களென்று சொன்னோம்.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 11; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 30; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போய் முசே லெறியைக் காண்பிச்சுக் கொண்டோம். அவர் யென்ன சமாச்சாரமென்று கேட்டார். யென்ன சமாச்சாரம் யிருக்குது சகலமும் தெரிஞ்சது தானே யிருக்குது. நான் சொல்ல வேண்டியிதென்ன யிருக்குது யென்று சொன்னதுக்கு அதுக்கு உன் மனதுப் படிக்கி உடம்பைக் குலுக்கிக் கொண்டு ஆனால் யெப்படியும் நம்முட கப்பல் வரும் யெப்படி யென்னால் அவ்விடத்திலே யிருந்து யெழுதி வந்ததைத் தொட்டு சிகுத்தாரிடுகுறேன்....

கப்பல் வராத பக்குவத்துக்கு கடுதாசி யெழுதி ஒரு பிறகாதிலே போட்டு யெப்படியாகிலும் மோரிசுலே யிருந்தாகிலும் ஒரு கடுதாசி யெழுதி பிறகாதிலே போட்டு வரும். யிவ்விடத்து சமாச்சாரம் யெல்லாம் அவர்களுக்கு தெரிஞ்சு யிருக்கிறபடியினாலே யெப்படியும் கப்பல் வரும் மோரிசுலே யிருந்து எழுதி வந்தது. யிவ்விடத்திலே யிருக்கிற கப்பலுகளை முஸ்தீப்புப் பண்ணி சிறிது பணமும் போட்டு அனுப்பிவிக்குறோம் யென்று யெழுதி யிருக்குறார்கள். ஆனபடியினாலே யெப்படியும் கப்பல்வரும் யென்று சொன்னார். நாங்களும் கப்பல் வரவேணுமென்று தான்

சுவாமியை யென்னோரும் பிரார்த்திச்சுக் கொண்டிருக்குறோமென்று சொன்னோம். அதிலே முசே துபுவா யொண்ணுதானே தானே பிடிச்சுக் கொண்டு கால்நடையாய் வந்து முசே லெறியுடனே பேசிக் கொண்டிருந்தார். நாம் யிப்பாலே வெளியே வந்தோம். அங்கே பாபுராயன் சோணாசல பிள்ளை யெல்லாரும் யிருந்தார்கள். அதிலே வீராம்பட்டணத்தண்டை வீடுகள் பத்திக்கொண்டு எரியுதென்று சொன்னார்கள். அந்த வேடிக்கையை சத்துநேரம் பார்த்துப் போட்டு கீழே யிறங்கி வந்தோம். அங்கே முசே புலோ யிருந்தார். அவர் சொன்னது நீர் ரொம்ப அதுருஷ்ட்டசாலி யெப்படி யென்றால் யிந்தக் காரியங்களிலே ஒரு காரியத்திலேயும் நுழையாமலிருந்தீர். யிப்போ யிருக்கிற வேளைக்கி முன்னே முசே லாலியண்டை அழைச்சுப் போயிவிட்டு யிதுகளெல்லாம் விசாரிக்கச் சொல்லி ரொம்ப பொறசாது பண்ணோம். அப்போவும் மாட்டமென்னீர் முன்னே நல்ல காலத்திலே சகல கீர்த்தியும் பெத்தீர். சகல காரியமும் விசாரிக்கவும் விசாரிச்சு யிப்போ பொல்லாத காலத்திலே சகல கீர்த்தியும் பெத்தீர் சகல காரியமும் விசாரிக்கவும் விசாரிச்சு யிப்போ பொல்லாத காலத்திலே ஒரு காரியத்திலேயும் நுழையாமல் படிக்கி கீர்த்தியைப் பெத்தீர். ஆனபடியினாலே நீர் ரொம்ப அதிருஷ்ட்டசாலி யென்று நேத்தும் முந்தாம் நாளும் தானே நாங்களெல்லாம் கூடி பேசிக் கொண்டிருந்தோம் யென்று அதுக்கு யேதுவான விசேஷங்களெல்லாம் ரெண்டு நாழிகை மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்து விட்டு வீட்டுக்கு அனுப்பி விச்சுக் கொண்டு வரச்சே முசே கொடுத்தேன் கண்டு வீடுகளிலே யிருக்கிற செனங்களெல்லாம் எழுதியாச்சுதா யென்று கேட்டார். யெழுதியானாப் போலே தான் யிருக்குதென்று சொன்னோம். ஆனால் சீக்கிறமாய்த் தானே வருமென்று சொல்லிப் போட்டு பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்துவிட்டோம்...

இத்தனாள் ராத்திரி பனிரெண்டு மணிக்கி நம்முடவர்கள் போய் டப்படிப்பு யென்று சத்தம் கேட்டுது. அந்த மட்டிலே நிண்ணு போச்சுது. இத்தனாள் பட்டணத்திலேயுள்ள சகல செனங்கள் முகத்திலேயும் தேயசு வாங்கிப்போய் வேறே முகங்களாய் போச்சுது. சனிபகவான் வந்து சகல செனங்கள் பேரிலேயும் நிச்சயமாய் நிறைஞ்சு யிருக்குறான்.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 12; விக்கிறம வருசம் ஆவணி மாசம் தேதி 31; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசே லாலியும் முசே லெறியும் ரெண்டு பேரும் வழுதாவூர் வாசற்படி வடவண்டை கொத்தளத்து முதல்க் கொண்டு மூலக்கொத்தளம் மட்டுக்கும் முசே லாலி ஒரு கொத்தளத்தின் பேரிலேயும் முசே லெறி ஒரு கொத்தளத்தின் பேரிலேயும் யிருந்துக் கொண்டு

வெளியிலே நம்முட தோட்டத்தண்டை யிங்கிலேசுக்காரர் மனுஷர் கும்பல் கண்டால் ஒவ்வொரு பீரங்கி போட்டார்கள். அந்தப்படிக்கி பத்துப் பதினஞ்சு பீரங்கி மட்டுக்கும் சுட்டுப்போட்டு பத்து மணிக்கு ரெண்டு பேரும் வழுதாவூர் வாசற்படி வழியாய் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். வில்லியநெல்லூர் வாசற்படியைப் பார்த்தாப் போலே போயி விட்டார்கள். அவர்கள் வெளியே வந்து விட்டபடியினாலே நாம் கோட்டைக்கிப் போகயில்லை. இத்தனாள் முசே துபுவா குமிசேரா யிருந்தவனை வாங்கிப் போட்டு முசே பிமேலுக்கு அந்த உத்தியோகம் குடுத்தார்கள். கணக்கு காரியம் யெல்லாம் குமிசேலிலே விசாரிக்கச் சொல்லியும் தண்டுக்கு கொம்மாந்தாமா யிருந்து வந்த முசே துரியை வாங்கிப் போட்டு கொம்மாந்தாம் உத்தியோகம் லாந்து வீசுமுக்கு குடுத்தார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதிலே பிமேலுக்கு யென்ன யிந்த உத்தியோகம் விசாரிக்கச் சொல்லுகுறீர் நீர் ஒருத்தர் பேச்சும் கேழ்க்கிறதில்லை. உமக்கு சுதா புத்தியுமில்லை. நீர் வரச்சே யிருந்த சீமை பூமி யென்னா யிருந்த பவுன்சு யென்னா யிதுகளெல்லாம் ஒருத்தர் விசேஷங்கேளாத படியினாலேயும் உமக்கா சுதா புத்தி யில்லாதபடியினாலேயும் பந்தர் முதலாகிய சகலமும் போயிவிட்டார். இங்கிலேசுக்காரரும் வந்து குண்டுசாலையிலே யிறங்கி யிருக்குறார்கள். யிந்த நாளையிலே யென்னை விசாரிக்கச் சொல்லுகுறீர். யினிமேல் கேழ்க்க வேணுமென்று யிதுகளெல்லாம் விவகரிச்சு சொன்னதின் பேரிலே கோபிச்சுக் கொண்டு முசே பிமேலை லப்லேன் என்கிற பிறகாத்திலே யேத்தி காவல் பண்ணச் சொல்லி மறுபடி முசே துபுவா வைத்தானே அந்த உத்தியோகம் விசாரிக்கச் சொன்னாரென்று ரெண்டொரு வெள்ளைக்காரர் வந்து சொன்னார்கள்....

இங்கிலேசுக்காரர் வந்து வழுதாவூர் வாசற்படிக்கி யெதிரே யிருக்கிற உப்பாத்துப் பாலம் முதல்க் கொண்டு நம்முட தோட்டம் துளசி மண்டபத்தின் பேரிலே பாராவும் சுந்திரமாதி பிள்ளை மாட்டுக் கொட்டாயி விசாரம் திருவிளக்கு மேடு பெருமாள் நாயக்கன் சாவடி யிதுவரைக்கும் அங்கங்கே பாரா வைச்சுக் கொண்டு அந்த மட்டிலே அவர்கள் யிருக்கிறார்கள். பிரஞ்சுக்காரருடைய பவுஞ்சு வில்லியனூர் வாசற்படி யெதிர்க்க பிளியஞ்சாலையிலே யிறங்கி யிருக்கிறார்கள். யிவர்கள் யிந்த அத்திலே யிருக்குறார்கள். ஒருத்தரும் சுடவுமில்லை துப்பாக்கி ஒண்ணும் சுடயில்லை. சாரத்திலே வீடு பிரிச்சு எடுத்து வரப்போன பறையரிலே ரெண்டு பேரை யிங்கிலேசுக்காரர் சுட்டுப்போட்டார்கள் யெங்கிறதாய் சேதிகேழ்க்கப்பட்டுது. செஞ்சியிலே நம்முடவர்கள் பவுஞ்சு யிருந்தது பாதிராப்புலியூர் வந்து சேர்ந்தார்களென்று ரெண்டு குதிரைக்காரர் சேதி கொண்டு வந்தார்கள் யென்று கேழ்க்கப்பட்டுது.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 13; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 1; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போயி பிடவை பார்க்கிற சாலையிலே நாமிருக்கச்சே கந்தப்ப முதலி வந்து பசங்கள் குஞ்சு குழந்தைகள் யிருக்கிறார்கள். அவர்களை அனுப்பிவிக்கிறதுக்கு மதாம் பெடுத்தல்மீ மதாம் பெப்ரீயே வகையிரா வெள்ளைக்காரச்சிகளை வெளியே போறதுக்கு பசுப்போடுது அழைப்பிக்குறார்கள். அவர்கள் பிறகே கூட்டி அனுப்பிவிப்போமென்று சொல்லி பேசிக் கொண்டிருக்கச்சே துரை அழைக்குறார்யென்று சோபுதாரர் வந்து அழைச்சான். போனவிடத்திலே பட்டணத்திலே யானால் வெகுசென மிருக்குதாம். அதுக்கு யென்ன யோசனை யென்று கேட்டார். யெனக்கெப்படி தெரியும் தங்களுக்கு சகலமும் தெரியும் தாங்கள் சொல்ல வேணுமென்று சொன்னதுக்கு ஆனால் செணங்களை யெல்லாம் வெளியே போகச்சொல்லுமென்று சொன்னார். மெய்தான் மூணுநாலு நாளாய் யெண்ணு யிங்கிலீசுக்காரர் வந்து குண்டுசாலை பிடிச்சுப் போட்டார்களோ அன்று முதல் செனங்கள் வந்து நாங்கள் சித்திரை வையாசி மாசத்தையிலே தானே வெளியே போயிவிட்டோம்.

இனிமேல் யிங்கிலேசுக்காரருடைய கலாபம்யில்லை யென்று தமுக்குப்போட்டு வெளியே போன செனங்கள் வந்தால் ஆச்சுது. வராவிட்டால் ஆனசிலவும் அபராதமும் வரும். வீடு வாசலுகளெல்லாம் கும்பினியிலே யெடுத்துக் கொள்ளுவோமென்று அவரவருடய வீடு வாசலுகளெல்லாம் எடுத்தெழுதி அலார் பண்ணினபடியினாலே நாங்களெல்லாம் ஆணை ஆக்கினைக்கி பயந்து வந்தோம். யிப்போ இங்கிலீசுக்காரன் வந்து குண்டு சாலையிலே யிறங்கிக் கொண்டான். யெப்படி யென்று அங்கலாய்க்குறார்கள். நீங்களும் யிந்த வேளையிலே போகச் சொன்னால் அவர்கள் யெப்படி போவார்கள். நீங்கள் ஒரு பசுப்போடுது அழைப்பிச்சு குடுத்தால் செனங்கள் போவார்கள். உங்களுக்கும் கீற்த்தியுண்டு யிந்த மட்டுக்கும் பட்டணத்திலே செனங்களிருக்கிற மட்டுக்கும் சுகமாய் வைச்சுக் கொண்டிருந்தார்கள். சத்துராதி வந்து பட்டணத்தின் பேரிலே யிறங்கி யிருக்கச்சே அவர்களுக்கு பசுப்போடுதும் அழைப்பிச்சு குடுத்து ஒரு சேதமுமில்லாமல் வெளியே அனுப்பிவிட்டார்களெங்கிற சகல செனங்களையும் யென்று சொல்லிக் கொள்ளுவார்கள். இந்த கீர்த்தியும் பிறதிஷ்டையும் சாசுவதமாய் நிற்குமென்று சொன்னதுக்கு யிப்போ சாசதமாய் உங்களுக்கு வருமென்றும் சொன்னோம். பசுப்போடுது அழைப்பிச்சுக் குடுக்க நம்மால்லே ஆகாதென்றால், ஆனால் முசே லாலியுடனே நீர் பேசிக்கொண்டிருக்கச்சே யாகிலும் சொல்லி அழைப்பிச்சுக் குடுக்க வேணும். நீர் சொல்லாவிட்டாலும் முசே துபுவாவுடனே சொல்லி

அப்படியாகிலும் சொல்லி முசே லாலிக்குச் சொல்லச் சொல்லி அவரிடம் உத்திரவு வாங்கி பசுப்போடுதும் அழைப்பிச்சுக் குடுக்க வேணுமென்று சொன்னோம். ஆனால் பட்டணத்திலே யிப்போ யிருக்கிற செனம் யெம்மாத்திரம் உண்டு யென்று கேட்டார். யிருக்கிறது முத்தியாலுப்பேட்டை, கரடிக்குப்பம், பாக்கமுடையான்பட்டு, சாரம், நெல்லுத்தோப்பு, அரியாங்குப்பம், வில்லியநெல்லூர் வகையிரா வெளிகளிலே யிருந்து அவ்விடங்களிலே யிருந்து உள்ளே வாரவர்கள் நாலாயிரம் அய்யாயிரம் பேருண்டு பட்டணத்திலே யிருக்கிறவர்கள் நாலாயிரம் அய்யாயிரம் முண்டு யேகத்துக்கு பதினாயிரம் பேருண்டு. யிதல்லாமல் பறையர் பறச்சேரியிலே பறச்சியளிலே நாலாயிரம் அய்யாயிரம் உண்டு. ஒரு சொலுதாதுக்கு ரெண்டு பறச்சியும் ரெண்டு பறையனும் ஆக நாலுபேர் யிந்தப்படிக்கி யிருந்து கொண்டு சொலுதாதுகளுக்கு குடுக்கிற தீனியும் அந்த பறச்சியள் திண்ணுபோடுகுறார்கள். பட்டணத்திலே யிருக்கிற றஸ்துகளையும் அந்தப் பறச்சியும் பறையரும் திண்ணு போடுகுறார்கள். அவர்களையும் யெப்படியாகிலும் துரத்திப் போட வேணுமோ அப்படிக்கி யோசனை பண்ணித் தொத்தி விடவேணும். முன்னே இங்கிலீசுக்காரர் வந்து யிப்படிதான் சுத்திக்கொண்டிருக்கச்சே தைரியத்துடனே யிருந்தவர் முசே துப்பிளேயிக்கிசுவைக் கண்டேன். யிப்போ உம்முடைய தைரியமிருக்கிறத்திலே செயம் பண்ணவேணும் யென்று சொன்னோம். அவர் யெல்லாக் குத்தமும் முசே லாலி பேரிலே சொன்னார். யிப்படி ஒன்பது மணி முதல்க் கொண்டு பதினோரு மணி மட்டுக்கும் யெந்தெந்தப்படிக்கி சொல்ல வேணுமோ அந்தப்படிக் கெல்லாம் சொல்லி பிறகு நயினாரையும் அழைச்சு வரச்சொல்லி அவர் முன்பாக விட்டு அவர் வாயினாலே அவரவர் சாதி நாட்டாமைக்காரரை அழைச்சு அவரவருக்கு சொல்லிப் போகச் சொல்லி பட்டணத்திலே யிருக்கிற செனங்களுக்கெல்லாம் சொல்லுமென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்து நாமும் சாதி மகானாட்டாமைக்காரரை அழைச்சு அவரவருக்குச் சொன்னோம்.

நேத்து ராத்திரி அன்பது பேர் சொலுதாதும் முப்பது பேர் கொல்லுத்துக்காரரும் போயி அரியாங்குப்பம் கோட்டையிலே மருந்து வைச்சு கொளுத்தி பிடிச்சுப் போட்டார்கள். நேத்தய தினம் தமுக்குப் போட்டு முத்தாலுப்பேட்டை, குசப்பாளையம், நெல்லுத்தோப்பு யிதுகளெல்லாம் அவரவர்கள் வீட்டை பிரிச்சு யிடிச்சுப் போட்டுப் போகச்சொல்லி தமுக்கும் போட்டார்கள். அந்தப்படியே வீட்டுகளை பிரிச்சுக் கொண்டு போயிவிட்டார்கள்.

இன்னையதினம் சிறிது செனங்கள் பட்டணத்தை விட்டு வெளியே போனார்கள். நாளை நாளை நன்னைக்கும் வெகுசெனங்கள் வெளியே போயிவிடுவார்கள்.

இத்தனாள் இங்கிலீசுக்காரர் கப்பல் சமீபத்திலே வந்தபடியினாலே கடலோரம் கொத்தளங்களிலேயும் நம்முட கப்பல் கரையிலே யிருக்கிறதிலேயும் பத்து பீரங்கி மட்டுக்கும் சுட்டார்கள். அதின்பேரிலே அந்தக் கப்பல்க்காரன் அப்பாலே வாங்கிப் போயிவிட்டான்.

முசே கொடுத்தேன் மகானாட்டாரை அழைச்சு நூறு யெண்பது காமாட்டியள் யின்னைக்கித்தானே கொண்டு வர வேணுமென்று சொன்னான். அது யெங்களாலே ஆகுமா யெப்போ வாகிலும் உண்டா? நாங்கள் ஆள் கொண்டு வந்து விட்டுதென்று அது அரும்பாத்தை கையிலே வைச்சுக் கொண்டு பணம் காசும் குடுப்பார்கள். அவர்கள் காமாட்டிகளை வைச்சுக் கொண்டு வந்துவிடுவார்கள். நயினார் மனுஷர் ஆள்பிடிச்சு வந்து விடுவார்கள். யிது யெப்போதும் நடக்கிறது யெங்களாலே ஆகாதென்று சொன்னதுக்கு, ஆள் கொண்டு வந்தாலாச்சுது யென்றும் யில்லாவிட்டால் கசோத்திலே போடுவேன். அப்படி செய்வேன் யிப்படி செய்வேன் யென்றும் யெப்படி செய்தாகிலும் யெங்களாலே ஆள் கொண்டு வந்து விட ஆகாது யென்றும் சொல்லிப்போட்டு வந்து விட்டோம்.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 14; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 2; ஞாயத்துக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கி நாம் கோட்டைக்கிப் போனோம். முசே லெறியும் முசே கில்லியாரும் பேசிக்கொண்டிருந்தார்கள். நம்மை துரை அழைக்குறாரென்று வந்து அழைச்சார்கள். போனவிடத்திலே செனங்களெல்லாம் போயிவிட்டார்களா யென்று கேட்டார். நேத்துத்தானே நீங்கள் போகச் சொல்லி சொன்னது ரெண்டு மூணு நாளைக்கி முன்னே தானே செனங்கள் வெளியே போனார்கள். வழியிலே சிலாரான படியினாலே மறுபடி வந்துவிட்டார்கள். நீங்கள் போகச்சொல்லி உத்தாரம் குடுத்த படியினாலே நேத்தும் கொஞ்சம் செனங்கள் போனார்கள். யின்னைக்கும் ஆயிரம் செனம் மட்டுக்கும் போகப் பயணமாயிருக்கிறார்கள். யின்னம் மூணு நாலு நாளையிலே வெகு செனங்கள் போயிவிடுமென்று சொன்னதுக்கு, ஆனால் பட்டணத்திலே யெம்மாத்திரம் நெல்லு யிருக்குமென்று கேட்டார். யேது நெல்லு பட்டணத்திலே கும்பினி வரிநெல்லுக் குத்தி வெகுசெனம் பிழைச்சார்கள். பத்து நாளைக்கி எட்டு நாளைக்கி முன்னே வெளியே போன செனங்கள் யிருந்த நெல்லுகளை வித்துப்போட்டு போயிவிட்டார்கள். சிறிது செனம் கொஞ்ச நஞ்சம் வாங்கினவர்கள் சாப்பிட்டுத் தீத்துப் போட்டார்கள் யென்று உங்களுடனே சொல்லிக் கொண்டு வந்தேனே. யிப்பவும் யிறுநூறு முன்னூறு வீட்டுக்குண்டு பத்து நாளைக்கும் பதினைஞ்சு நாளைக்கும் இருபது நாளைக்கும் சாப்பாட்டுக்கு வைச்சுக் கொண்டு

யிருப்பார்கள். யின்னம் பத்துப்பதினைஞ்சு வீடுகளுண்டு யிவர்கள் நாற்பது அன்பது நாளைக்கு சாப்பாட்டுக்கு நெல்லுவைச்சுக் கொண்டிருப்பார்கள். அப்படி யிருக்கச்சே முசே கில்லியாரும் தமிழர் வீட்டிலே ரொம்ப யிராதென்று சொன்னார். அதுக்கும் அப்படியா யென்று சொன்னார். அப்பிறம் மத்த சம்மதி யென்ன யென்று கேட்டார். அதுகளுக்கெல்லாம் உத்தாரம் சொல்லிக் கொண்டு வந்தோம். அதிலே கந்தப்ப முதலி யிருந்து கொண்டு துரையைக் கேழ்க்கலாமே. பசுப்போடுது பேச்சுக்கென்று சொன்னான். நாம் கேழ்க்கப் போகாது கொள்ளிக்கொண்டு தலையை சொறிஞ்சுக் கொண்டு யிருந்தாப் போலே என்று நாம் சொன்னதுக்கு ஆனால் நான் தனிச்சுக் கண்டு பேசுகுறேனென்று சொன்னான். அந்த மட்டிலே நாமும் முசே கில்லியாரும் வெளியே வந்தோம்.

கந்தப்ப முதலி உள்ளே போயி முன்னே நாங்கள் போறோமென்றால் போக வேண்டாமென்று சொன்னீர். யிப்போ கிட்டி வந்த வேளையிலே போகச் சொல்லுகுறீர் வெளியே போன மனுஷர்களை இங்கிலேசுக்காரர் பிடிச்சு நூறு குடு யிறுநூறு குடுயென்று அயிராணி பண்ணுகுறார்கள். நாங்களும் போனால் யின்னாரை சேவிச்சவர்களெல்லாம் பிடிச்சுக் கொண்டு யிம்மாத்திரம் குடு அம்மாத்திரம் குடு யென்றால் நான் யெங்கே யிருந்து குடுக்கப் போறேன். ஆனபடியினாலே இங்கிலேசுக்காரருடைய பசுப்போடுது ஒண்ணு அழைப்பிச்சுக் குடுக்க வேணுமென்று கேட்டதின் பேரிலே நீ போவியோ போகாயோ யெனக்குத் தெரியாது யென்று ஒதைச்சுக் கொண்டு கோபிச்சுக் கொண்டு போனதாக கந்தப்ப முதலி வந்து நம்முடனே சொன்னான். அப்புறமும் சொன்னது யிவனைத் தொட்டு ஆகிறதுக்கு யில்லை முசே லாலி அண்டை தானே கண்டு பேசினால் ஒரு வேளை அவன் அழைச்சு அனுப்பி கேழ்ப்பான். அந்தப் பிறயாசம் யெடுத்து பிறயத்தினம் பண்ண வேணுமென்று சொன்னான். ஆனால் முசே கில்லியாருடனே நீர் ஒரு விசேஷம் சொல்ல வேணும் யென்றும் சொன்னார்கள். நான் அந்தப் பேச்சு பேசப் போறதுக்கு முசே லெறி முன்னே தானே அந்தப் பேச்சு ஒண்ணும் பேசப் போகாதென்று சொல்லிப் போட்டார். ஆனபடியினாலே ஒண்ணும் காரியம் ஆகாது. ஆனால் முசே கொடுத்தேனைக் கண்டு பேசினாலும் யேதாகிலும் சகாயம் ஆகுமென்றும் சொன்னோம். அப்படி ஆகப் பண்ணலாமென்று சொல்லி யினிமேலிருந்தால் யின்னம் யென்ன கேழ்ப்பார்களோ யென்று மெள்ள நழுவிப் போயிவிட்டான். நாம் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் கேழ்க்கப்பட்டுது செஞ்சி கோட்டை ஆவணி மாசம் 31 தேதி சாயங்காலமாய் ரெண்டு நாழிகைக்கி இங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டார்கள். அவ்விடத்திலே யிருந்த அயிதர் னாயக்கன் பவுன்சும் நம்முடவர்களும் தியாக துற்க்கம் போய்

சேர்ந்தார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது. அல்லிக்கான் விருத்தாசலம் சாகிராய் பண்ணிக் கொண்டு திருவதி பஞ்சமால் வகையிரா சிதம்பரம் யிவ்விடங்களெல்லாம் கட்டி சிப்பந்தி வைச்சு சீமை கட்டவும் யிந்தப்படியாக பற்வானா பண்ணிக் கொண்டு சாயங்காலம் நம்மண்டை வந்து அனுப்பிவிச்சுக் கொண்டு சிறிது வெள்ளைக்காரனும் அவனும் போனான். மலையாளம் கடத்தனாட்டு ராசா உடைய மனுஷனுக்குப் பதிலுத்திரவு எழுதிக் குடுத்து ரவானா பண்ணி அனுப்பி விச்சோம். மையையிலே யிருக்கிற முசே லுயேத்துக்கும் முசே லெறி கோவற்ணதோர் காகிதமும் வாங்கி அனுப்பிவிச்சோம்.

இந்த செஞ்சி கோட்டை பிறமோதூத வருசம் ஆவணி மாசம் 31 தேதி ராத்திரி சார்ப்பனாப் பிடிச்சுக் கொள்ளையிட்டு புரட்டாசி மாசம் முதல் தேதி ஒன்பது மணிக்கி கோட்டையைப் பிடிச்சு ராத்திரிக்கி கபுறு வந்தது. யிப்போ கோட்டை போயி விட்டதுக்கும் சரியாய்ப் பத்து வருஷமாச்சுது. செஞ்சி பிடிச்சார்களென்று கேட்டு எழுதினது மறுபடி பிடிக்கயில்லை யென்று சமாச்சாரம் சொன்னார்கள். ஆனபடியினாலே பிடிச்ச பேச்சு அபத்தம்.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 15; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 3; திங்கள்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே லெறி முசே பொஷேத்து வீட்டுக்குப் போயிருந்தார். அங்கே முசே கொடுத்தேன் முசே மொற்சேன் பின்னையும் அஞ்சாறு பேர் குமிசேலியேரும் யிருந்து கொண்டு யென்னமோ யோசனை பண்ணிக் கொண்டிருந்தார்கள். கோட்டையிலே வெள்ளைக்காரர் ஒருத்தரும் யில்லை ஆனபடியினாலே நாம் துவானத்தண்டை போயிருந்து கொண்டிருந்தோம். யித்தனாள் பட்டணத்திலேயுள்ள செனங்கள் வெகுபேர் துவானத்து வழியாய் பிறப்பட்டு வெளியே போயிவிட்டார்கள். யிதிலே தெற்க்கு வழியாய் மூணு பங்கும் வடக்கு வழியாய் ஒரு பங்கும் ஆகப்போனார்கள். தெற்க்கே போன செனங்களுக்கு நம்முடவர்கள் முகத்துவாரத்துக்கு சலங்கு விட்டு அப்புறம் விட்டு விட்டார்கள். சிறிது பேர் தண்ணியிலேயும் யிறங்கிப் போனார்கள்.

அப்பால் யேகத்துக்கு செனங்களெல்லாம் கும்பலாய்ப் போகச்சே இங்கிலேசுக்காரருடய குதிரைக்காரர் அஞ்சாறு பேர் வந்து நீங்களேன் கடலோரத்து வழியாய்ப் போறீர்கள். மார்க்கமாய்த் தானே போங்கள் உங்களுக்குப் பயமில்லை யென்று சொன்னதின் பேரிலேயும் செனங்களெல்லாம் பெண்ணை யாத்தங்கரையோரம் போய்ச் சேர்ந்தார்கள். பெண்ணையாறு தண்ணீர் யிருகரையும் ஒத்துவார படியினாலேயும்

கூடலூரிலே யிருந்து யிவ்விடத்து இங்கிலீசுக்காரர் தண்டுக்கு பனிரெண்டு சலங்கிலே மருந்து குண்டு அனுப்பி விக்கிறபடியினாலேயும் சலங்குக்கும் ஒய்வுயில்லை. ஆனபடியினாலே செனங்கள் அக்கரை போகிறதுக்கு யில்லாமல்படி சிறங்கை அரிசி கிடைக்காமல் பட்டினியாய்க் கிடந்து ரொம்ப வருத்தப்பட்டார்கள். வடக்கே போன செனங்களிலே சிறிதுபேர் பறிகொடுத்து அயிராணிப்புபட்டு அவர்களும் அப்படித்தானே வெளியே போயிவிட்டார்கள். யிந்தப்படியாக யின்னைய தினம் நாலாயிரம் அய்யாயிரம் செனங்களுண்டு வெளியே போய் விட்டவர்கள். கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சோணாசலபிள்ளை வகையிரா யிப்படி அஞ்சாறு பேரும் நாமும் யோசனை பண்ணி பாத்தியளா பசகள் குஞ்சுகளை அனுப்பிவிக்கிறதுக்கு ஒரு பசுப்போடுது நிமித்தியம் ஆயிரம் ரெண்டாயிரம் சிலவு பண்ணுவோமென்னாலும் சாதகப் படாமல்ப் போச்சுது. அஞ்சாறு நாளாய் யெத்தனம் பண்ணியும் நடவாமல்ப் போச்சுது. யின்னம் ரெண்டொரு யெத்தனம் பண்ணி யிருக்கிறோம். அதுவும் நாளைய தினம் தெரியும் யிந்தப்படியாக யோசனை பண்ணிக் கொண்டு பேசிக் கொண்டிருந்து வீட்டுக்கு வந்து விட்டோம்.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 16; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 4; செவ்வாய்க்கிழமை***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே கேழ்க்கப்பட்ட சேதி நேத்து ராத்திரி பனிரெண்டு மணிக்கி முசே லாலியவர்கள் முசே கதிவேலுடனே சொல்லியனுப்பி விச்சது, "முசே லெறிக்கி சொல்லியனுப்பிவிச்சது. சாவடி ஞாயம் வந்து முசே கொடுத்தேனுக்கு கவையில்லை நான் நாளை சாவடிக்கிப் போய் அந்த ருசுசஸ்த்தீசு (Justice) விசாரிக்குறேனென்று சொல்லி யனுப்பிவிச்சார்." யெதினாலே முசே கொடுத்தேனுக்கு சாவடி ஞாயம் கவையில்லை யென்று சொன்னதென்றால் முசே லாலியவர்கள் முசே கொடுத்தேனை சிலவுக்கானால் யில்லை. பதினய்யாயிரம் ரூபாயி கொடுயென்று கேட்டதாகவும் அதுக்கு அவன் சொன்னது யிருந்ததெல்லாம் வங்காளத்திலே குடுத்து நஷ்ட்டப்பட்டேன் யென் கையிலே ஒண்ணும் யில்லை யென்று சொன்னதாகவும், "நீய் வந்து வெகு அனியாயம் பண்ணியிருக்கிறாய் ஒரு செட்டிக்கி ஆயிரம் அடியும் பிடிக்கிறதும் ஒரு வீட்டு வியாச்சியத்திலே தானே அவர்கள் பறம்பரையிலே தீத்துக் கொள்ளுகுறதை நீய் மேலே போட்டுக் கொண்டு அவனைக் கட்டிவச்சு அடிச்சும் அயிராணி பண்ணினாய் அதுகளெல்லாம் நீய் லஞ்ச பரிதானம் வாங்கலாமா அப்படி யெல்லாம் நடப்பிச்சாய் ஆனபடியினாலே நீய் வெகுசாய் அவரவர் கையிலே வாங்கியிருக்கிறாய் அந்தப்பணமெல்லாம் சொலுதாதுகளை விட்டு வாங்குறேனென்று சொன்னார்." அதுக்கு முசே

கொடுத்தேன் சொன்னது, “அப்படி நான் ஒருத்தர் கையிலே ஒரு காசளவிலே வாங்கினதுயில்லை. அப்படி வாங்கியிருந்து ருசுவு அத்தாட்சி ஆனால் யென்ன ஆக்கினை யிடுகுறீர்களோ அந்த ஆக்கினைக்கு ஆளாயிருக்குறேன் யென்று” சொன்னான். அதுக்கு முசே லாலி சொன்னது யில்லை. உன்னை தூக்கிப் போடுகுறேன் அந்தப்பணம் யெல்லாம் வாங்குறேனென்று சொன்னாரென்று ரெண்டொரு வெள்ளைக்காரர் நம்முடனே வந்து சொன்னார்கள். ஆனபடியினாலே தான் முசே கொடுத்தேனுக்கு சாவடி ஞாயம் கவையில்லை யென்று சொன்னாரென்று சொன்னார்கள்.

யிப்படி யிருக்கச்சே காலமே தான் முசே லெறி யண்டைக்கி முசே புலி (M. Pouly) ஒரு மனுஷனையனுப்பி முசே லாலியவர்கள் சாவடி ஞாயத்துக்குப் போறார் நடுச்சாலையிலே யிருக்கிற முலாம் பண்ணி முகமல் போட்டு தச்சு யிருக்கிற நாற்காலி ஒண்ணு எடுத்துவரச் சொன்னாரென்று வந்து கேட்டான். அதுக்கு முசே லெறி நகைச்சுக் கொண்டு எடுத்துப் போயென்று சொன்னார். அந்தப்படிக்கி எடுத்துப் போனான். காலமே தானே முசே பனோ வகையிராவுக்கு முசே லாலி சொல்லியனுப்பி விச்சது. நாம் சாவடி ஞாயத்துக்கு வாறோம் யென்று சொல்லியனுப்பிவிச்சார். அப்படியிருக்கச்சே முசே லெறியும் முசே கில்லியாரும் முசே துப்பிளாமும் முசே லங்கற்னையும் நாலு பேரும் பேசிக் கொண்டிருக்கச்சே நாம் போயி ஆசாரம் பண்ணினோம்.

யிப்படி நேத்துயதினம் தெற்க்கே போனவர்களை இங்கிலீசுக்காறருடய குதிரைக்காரர் நாலஞ்சு பேர்வந்து கொடி ஒன்றும் பிடிச்சுக் கொண்டு யிருந்து போற செனங்களை பெண்ணையாத்திலே கரை பிரண்டு வெள்ளம் ஒடுகிற படியினாலே தண்ணியிலே போகமுடியாமல்ப் போய் நீங்கள் கூடலூர் வழியாய் போகத் தேவையில்லை. மேற்கே வழியாய்ப் போங்களென்று சொல்லி சாலை வழியாய் பாட்டையாய் தானே போங்களென்று சொன்னார்களாம். போன செனங்கள் பெண்ணையாறு தண்ணியான படியினாலே போகக்கூடாமல் சோறுயில்லாமல் அரிசியும் யில்லாமல்ப் படிக்கி நேத்திய தினம் பட்டினி கிடந்து வெகு கஷ்ட்டப்பட்டுப் போனார்கள். ராத்திரி தினத்திக்கு கொஞ்சம் பேர் செத்துப்போனார்களென்று சொன்னார்களென்று சொன்னதுக்கு அப்படியா யென்றார். அப்போ கந்தப்ப முதலியும் சோணாசல பிள்ளையும் யிருந்தார்கள். அவர்களிருக்கச்சே நாம் சொன்னது நாமும் நம்முடய பமிலுகளும் போகத்தக்கின பேரையும் அனுப்பி விட்டோம். யின்னம் நம்முடய பெண்டுகளும் பிள்ளையளும் மருமக்கமாரும் மாத்திரம் யிருக்குறார்கள். அவர்களையும் அனுப்பி

விக்கிறத்துக்கு ஒரு வேளை பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் வந்து நடந்தவர்களல்லா வாகனத்தின் பேரிலே அனுப்பிவிக்க வேணும். வேளைக்கித் தக்கினாப் போலே ஒண்ணுத்திலே ரெண்டு பேர் மூணு பேர்களாயாகிலும் போட்டு அனுப்பிவிப்போமென்று யிருக்கிறோம். அப்படித்தான் கந்தப்ப முதலியும் சோணாசபிள்ளையும் பின்னையும் நாலஞ்சு பேரை சேத்துக் கொண்டு சொன்னோம். கந்தப்ப முதலி மெய்தான் அய்யா யென்றும் யென்னுடைய பமீலுகளையும் அனுப்பிவிட்டேன். யென் தாயும் தகப்பனும் யென்னுடைய பிள்ளையளும் யிருக்குறார்கள் யென்று சொன்னான். சோனாசலப் பிள்ளையும் அப்படித்தான் சொன்னான். யிதுகளுக்கெல்லாம் முசே லெறி வாய் திறவாமல் நிண்ணபடிக்கி உடம்பை ஆணை அசைக்கிராப் போலே அசைச்சுக் கொண்டு யிருந்தான். முசே கிலியார் (M. Guillard) மாத்திரம் நீங்கள் அனுப்பி விட்டதெல்லாம் நல்லது தானே யென்று சொன்னார். அந்தப்படிக்கி அனுப்பிவிட்ட படியினாலேயும் அதுக்கு கந்தப்ப முதலி சொன்னது பாத்தீயளா மூணு பேரும் சொன்னதுக்கு யெல்லாம் வாயைத் திறவாமல் யிருக்குறான். வாயைத்திறந்து பேசினால் அதை கேழ்க்கப் போறார்களென்றும் யோசனைப் பண்ணிக் கொண்டு பேசாமலிருக்குறானென்று கந்தப்ப முதலி சொன்னதுக்கு நாம் சொன்னது நாம் சிறிது பேரை அனுப்பி விட்டோம் யென்றும் சொன்னோம். யின்னம் சிறிது பேரை அனுப்பிவிக்கிறதுக்கு சமையம் பார்த்துக் கொண்டிருக்குறோம் ஒரு பசுப்போடுதும் வேணுமே யென்று நாலுபேர் குமிசேல்க்காரர் யிருக்கச்சே சொல்லிப் போட்டோமென்று சொன்னோம். கந்தப்ப முதலி சொன்னது வீசுப்பு பாதிரியை நேத்து சோணாசலப்பிள்ளை கண்டு பேசினானாம் நல்லது நாளை முசே லாலி யென்னைப் பார்க்க வருவார். அப்போ அந்தப்படி அவரைக் கண்டு பேசி ஆகப்பண்ணுகுறேனென்று பரவசமாய் சொன்னாரென்று சொன்னான் யென்று கந்தப்ப முதலி சொன்னான். ஆனபடியினாலே யிப்படி பேசிக் கொண்டிருந்து பதினோரு மணிக்கி நாம் வீட்டுக்கு வரவேணுமென்று பிறப்பட்டு வரச்சே சாவடி ஞாயத்திலே முசே லாலி அவர்கள் போயிருந்து வீசுப்பு வீட்டுக்குப் போயிவிட்டார்.

கூடப்போன முசே பனோவும் முசே திருவேலையும் ரெண்டு பேரும் கண்டு முசே லாலி உம்மை வரச்சொன்னாரென்று சொன்னார்களென்றும் யென்னத்துக்கென்று கேட்டதுக்கு பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெளியே போயி விட்டார்களென்று சொன்னீர்களே அவர்களுடைய நெல்லு நீர் யிருக்கிறது யெடுக்கிற நிமித்தியம் யென்று சொன்னார்கள். முசே லாலி வீட்டுக்கு நாம் போனோம். அங்கே முசே பனோவும் முசே

திருவேலும் வந்தார்கள். பிறகு முசே லாலி வந்தார். அவருக்கு ஆசாரம் பண்ணினோம். அவரும் தொப்பி கழட்டி ஆசாரம் பண்ணிப் போட்டு உள்ளே போயிவிட்டான். ஒரு நாழிகை மட்டுக்கும் யென்ன யென்றும் கேழ்க்கயில்லை. யென்னடா யிவர் பேசயில்லையே யென்று பார்த்தால் உள்ளே பீறும் குடிக்கிற சாராயம் வார்க்கிறதுக்கு அனுப்பிவிக்கிறத்திலே யிருந்தாரான படியினாலே அப்படி யிருக்கச்சே முசே பனோவும் நாமும் உள்ளே போனோம். போனவிடத்திலே முப்பது கரிசை நெல்லு நீரும் நயினாரும் ஆக கூடாயிருந்து பட்டணத்திலே யிருந்து கொண்டு வந்து ஒப்பிவியுங்களென்று சொன்னான். நாம் யிதுக்கு யெதுவாகிலும் யெதித்து உத்திரவு சொன்னால் யென்ன சொல்லுவாரோ யென்று பின்னையும் நாம் சொன்னது பட்டணத்திலேயானால் அவ்வளவு யிருக்கமாட்டாது. கும்பினி வரிநெல்லு விட்டு அதிலே சிறிதுபேர் காலக்ஷேபம் பண்ணார்கள். அதுவும் நிண்ணபடியினாலே அவர்களெல்லாம் சோறில்லாமல் வெளியே போயிவிட்டார்கள். யில்லையென்றால் நூறு யிறுநூறு வீடு மட்டுக்கும் பதினஞ்சு நாளைய சோத்துக் கிருக்கும் யிதுக்கு மேல் யிராது யென்று சொன்னதுக்கு முப்பது கரிசை நெல்லு குடுத்தாலாச்சுது யில்லாவிட்டால் சொலுதாதுகளையும் வீடுகளிலே பூருவார்களென்று சொன்னான். பூந்தேயிருக்கிறார்களென்று சொன்னோம். ஆனால் தமிழர் ஒருத்தரில்லாமல் யெல்லாரும் வெளியே தூரத்தி விடுவேனென்று சொன்னான். நீங்கள் போடுகுறதுக்கு முன்னே நேத்துதானே நாலாயிரம் அய்யாயிரம் பேர் மட்டுக்கும் போயிவிட்டார்கள். யின்னம் யிருக்கிற பேரும் போயிவிடுவார்கள் யென்று சொல்லி யிப்படியானால் யிது திட்டப்படாது அவரவரை வீட்டுகளிலே யிருக்கிற தானியங்களைக் கொண்டு வந்து யெழுதிவிக்கச் சொல்லி தமுக்குப் போட்டால் .அவரவர் கொண்டு வந்து எழுதிவிப்பார்கள். எழுதிவிய்யாதவர்களை அவர்கள் ஆஸ்தி வீடு வாசலுகள் சகலமும் கும்பினியிலே எடுத்துக் கொண்டு அவர்களை ஆக்கினை பண்ணிவைக்கிற தென்று தமுக்குப் போட்டால் யெல்லாரும் கொண்டு வந்து எழுதிவிப்பார்கள். அப்போ தெரியுமென்று சொன்னோம். அந்தப்படிக்கி தமுக்குப் போடச் சொல்லிச் சொன்னார். அந்த மட்டிலே பனிரெண்டடிச்சு அரை மணியச்சுது அந்த மட்டிலே வீட்டுக்கு வந்துவிட்டோம் வரச்சே முசே பனோ வண்டைக்கிப் போனவிடத்திலே தமுக்குப் போடச் சொன்னோம். அவரவர் வீட்டிலே யிருக்கிற தானிய தவசங்கள் யெல்லாம் சாவடியிலே கொண்டு வந்து மூணு நாளையிலே எழுதிவிக்கிறது. அதைப் பார்த்துக் கொண்டு அவரவர் மானத்துக்கு தக்கினபடியாய் குடுத்து மத்தது யெடுத்துக் கொள்ளுவோம் என்றான். அப்பிறம் லோகாபிறமமாய் சத்து நேரம் பேசிக் கொண்டிருந்து பிறகு

பிரபுஸ்தனும் புத்தி யில்லாமல் நடப்பிக்கிறான் அதைத் தொட்டு யெல்லாம் பேயாய் முடியும் யென்று சொன்னான். யிப்படி பேசியிருந்து யேழு மணிக்கி அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இன்னையதினமும் செவ்வாய்க்கிழமை நாலாம் தேதியானபடியினாலே யின்னைய தினம் முசே லாலி உத்திர விட்டத்திலே நெல்லு யெடுக்கச் சொன்னதும் அவரைத் தானே சாவடி ஞாயத்துக்கு வந்தபடியினாலேயும் யிதுக்குக்கு பலன் பனிரெண்டாம் தேதி பதிமூணாந்தேதி யறியவேணும். யின்னையதினம் முசே லாலி நடப்பிவிச்ச வார்த்தையிலே விசேஷத்தைத் தொட்டு யினிமேல் பட்டணத்திலே தமிழர் யிருக்கத் தக்கினதில்லை. பட்டணத்திலே நேத்துப் போன செனங்களுக்கு யின்னைய தினம் போன செனங்கள் கால்வரிசையுண்டு.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 17; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 5; புதன்கிழமை*

இத்தனாள் வெளியே பிறப்பட்டுப் போற செனங்களை முகத்து வாரத்துக்கப்புறம் போகச்சே இங்கிலேசுக்காரர் மனுஷரிலே சிறிது சிறிது பேர் வந்து சுகமாய் யிப்படியே போங்களென்று சொன்னதாகவும் யிப்புறம் போற சிறிது பேர் சிப்பாயிகளை வைச்சதாகவும் யேகத்துக்கு கூட வளைச்சுக் கொண்டு சருவ சொயாலும் பிடுங்கிக் கொண்டதாகவும், பிறகாலே போற பேர் கண்டு ஓடிவந்ததுக்கு அது வாதிலே மேலே விழுந்து இப்புறம் விட்டதாகவும் சிறிது பேர் பறிகொடுத்த பேரை மறுபடி புதுச்சேரியைப் போய் விடும்படி அனுப்பிவிட்டதாகவும் சிறிது பேர் பறிகுடுத்துப் போட்டு அடிச்சு துரத்தவும் யிப்படித்தானே விழுந்து கேட்டுக் கொண்டு ஓடிப் போனதாகவும் திரும்பி வந்தவர்கள். சிறிது பேர் முகத்து வாரத்தண்டையிலே தானே யிருக்கிறதாகவும் சிறிது பேர் ஊரிலே வந்து சேருகிற தாகவும் சொன்னார்கள். இதல்லாமல் நம்முடைய வீட்டு பெண்டுகளையும் பிள்ளைகளையும் வெளியே அனுப்பி விக்கத் தக்கதாக இங்கிலீசுக்காரர் பசுப்போடுது அழைப்பிச்சு குடுக்க வேணுமென்று முசே லெறி கொவற்ணதோர் அவர்களை கேட்டதுக்கு நம்மாலே ஆகாது. நீதானே யெந்த விதமாயும் பிறயத்தனம் பண்ணிக்கொண்டு உன்னுடைய பமிலை அனுப்பிவிடுமென்று சொன்ன படியினாலேயும் யிதெல்லாம் வீசுப்பு ப்ாதிரி யிதிலே முசியே செனரால் லாலி யவர்களைக் கேட்டதுக்கு நாம் அவர்களுக்கு யெழுதி கேழ்க்குறதில்லை அவர்களைத் தானே யெப்படியாகிலும் போகச் சொல்லுமென்று சொன்னபடியினாலேயும் யினிமேல் பெண்டுகளை பிள்ளைகளை யிவ்விடத்திலே வைக்கிறது கூடாதென்றும் யோசித்து சென்னப்பட்டணத்துக்குப் போய்

முத்துக்கிருஷ்ண முதலியார் மைத்தும் பெரிய மனுஷர் வர்த்தகர் வாசவப்ப செட்டி முதலாகிய பேரைக் கண்டு பேசி கிருஷ்ணபிள்ளையவர்களையும் கண்டு பேசி பகுப்போடுது வாங்கி வரச்சொல்லி ஒரு யெத்தனம் பண்ணி சோலையப்பிள்ளையையும் திருப்பள்ளி கிஷ்ணபிள்ளையையும் வெங்கிடேசன் வெங்கிடாசலம் யிவர்களையும் கண்டு பேசும்படி சொல்லியனுப்பிவிச்சது.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 18; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 6; வியாழக்கிழமை*

இத்தனாள் சிறிது பேர்கள் தெற்கு முகத்துவாரத்து வழியிலே போகச்சே திரும்பி வந்ததுக்கு யிப்பறம் பரிகுடுத்து ஓடி வந்து விட்டார்கள். யிதல்லாமல் ஊரிலே யிருக்கிற அவரவர்கள் வீட்டிலே யிருக்கிற தானியத்தை சாவடியிலே யெழுதி வைக்கச் சொல்லி தமுக்குப் போட்டு விச்ச நேத்திய தினமும் யின்னையதினமும் சாவடியிலே அவரவர்கள் எழுதி வைக்குறார்கள். நானும் நம்முடைய வளவிலே யிருக்கிற தானியத்தை யெழுதி வைத்தோம்.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 19; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 7; சுக்கிரவாரம்*

இத்தனாள் விந்தையானது ஒன்றும் யில்லை.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 20; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 8; சனிக்கிழமை*

இத்தனாள் வடக்கத்து வழியாக திருப்பதி போறோமென்றும் தாத்தானை பிறப்பட்டு தப்பும் சேமகாலமும் கொட்டிக் கொண்டு போனார்கள். யிவர்கள் பின்னாலே சிறிது செனங்கள் போனார்கள்.

### *1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 21; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 9; ஞாயத்துக்கிழமை*

இத்தனாள் நயினார் வந்து சொன்னது. மூணு மணிக்கி முசியே தினுவேல் இவ்விடத்துக்கு வருகுறோமென்று பட்டணத்திலுண்டாகிய வற்த்தகர் குடிகள் நாட்டாமைக்காரர் உத்தியோகஸ்தரர்கள் கூட்டி வைச்சிருக்கச் சொன்னாரென்று சொன்னார். நல்லது அப்படியே மூணு மணிக்கி யெல்லாரையும் அழைச்சு வந்து சேர்ந்தார்கள். நயினார் சாவடி கணக்கப் பிள்ளையள், நாட்டாமைக்காரர், குடிகள், வற்த்தகர்கள், பெரியண்ண முதலி மத்து முண்டாகிய பேர் சகலரும் யிருந்த பேர்களும்

மாத்திரம் வந்தார்கள். முசே தனுவேலும் மூணு மணிக்கி வந்தார். வந்தவுடனே அவரும் நாமுமாக யிருந்துக் கொண்டு முன்னே எழுதப்பட்ட பேர்களைப் பார்த்து முசே லாலி அவர்களானால் நூறு கரிசை நெல்லு குடுத்தாலச்சுது. யில்லாவிட்டால் யெல்லாரையும் துரத்திவிட்டு இருக்கிறதெல்லாம் கொள்ளையிட்டுக் கொள்ளுவோமென்று சொல்லுகுறார். நீங்கள் என்ன சொல்லுகிறீர்களென்று கேழ்க்க இருபது நாளைக்கு சாப்பாட்டுக்கு குடுத்து குறையை எடுத்துக் கொள்ளுங்கோளென்று சொல்ல இப்படி யனேகம் வார்த்தைகள் நடந்தது. ஆறுமணி மட்டுக்கும் தகராறு பட்டு முசே லாலி அவர்கள் சொன்னபடிக்கி முப்பது கரிசைக்கி சம்மதி யெழுதிவிச்சு கையெழுத்துப் போடச் சொல்லி முசே லாலி செனரால் அவர்கள் முப்பது கரிசை அரிசிக்குச் சொன்னது. அறுபது கரிசை நெல்லுக்கு கையெழுத்துப் போட வேணுமென்று சொன்னார். அதுக்கு சம்மதிப்படாமல் போயிவிட்டார்கள். முசே தெநுவேலும் போயிவிட்டார்.

இத்தனாள் சோலியபிள்ளை திருப்பள்ளி கிருஷ்ணபிள்ளை வெங்கிடேசன், வெங்கிடாசலம் யிவர்களை பகுப்போடுது வாங்குற நிமித்தியம் சென்னப்பட்டணம் போக பயணம் பண்ணியனுப்பி விச்சோம்.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 22; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 10; திங்கள்கிழமை*

இத்தனாள் கொண்டப்ப செட்டி வந்து சொன்னது ஒரு பிரஞ்சுக்காரர் பிறிசினேர் இங்கிலேசுக்காரர் பகுப்போடுது வாங்கிக் கொண்டு மாகுலா படகின் பேரிலே யேறிக் கொண்டு சென்னப்பட்டணம் போனான். அதிலே அவரவர்கள் தட்டுமுட்டுகள் அனுப்புறார்கள். நீங்களும் யேதாகிலும் அனுப்பிவிச்சால் யென்னுதென்று அனுப்பிவிக்கிறேன் யென்று சொன்னான். நல்லது ஆகட்டு யென்று சொல்லி அவனென்ன பெரிய மனுஷனாகியிருக்கிறானா யென்று கேட்டதுக்கு ஒரு ஒப்பிசாலாகிறேன். கிறஸ்தனா யிருக்கிறேன். ஆனால் கடலோரத்திலே உத்தியோகம் பண்ணிக் கொண்டிருக்கிறவனையும் அவனுடனே சொல்லி ஆவது என்கிறதாய் அனுப்பிவிக்கலாமெங்கிறதாய் சொன்னான். நல்லது போய்க் கண்டு பேசி வந்து சொல்லுயென்று சொன்னோம்.

*1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 23; விக்கிறம வருசம் புரட்டாசி மாசம் தேதி 11; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் விந்தையான தொன்றும்யில்லை.

***1760 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 24; விக்கிரம வருசம் புரட்டாசி மாசம் தேதி 12; புதன்கிழமை***

இத்தனாள் சாயங்காலம் அஞ்சுமணிக்கி கொண்டப்ப செட்டி வந்து சொன்னது சாபர் யெங்கிற பிரஞ்சுக்காரர் பிறிசினேர் ஒருத்தன் இங்கிலீசுக்காரர் பசுப்போடுது வாங்கிக் கொண்டு சலங்கு முஸ்தீது பண்ணிக் கொண்டு ஆறுமணிக்கிப் பயணமாய்ப் போனான். நீங்கள் கண்டு பேசச் சொன்ன சம்மதி முசே வலாறணையைக் கண்டு பேசினேன். சீக்கிரம் அந்த பெட்டியை யென் வீட்டிலே கொண்டு வந்து வையென்றும், யேத்தி சதிரங்கப்பட்டணத்திலே இறக்கிக் குடுக்கச் சொல்லுகுறேனென்று சொன்னான். ஆனபடியினாலே சீக்கிரத்துக்கு அனுப்பிவிச்சால் படகிலே யேத்தி அனுப்பிவிக்குறேன் யென்று சொன்னான். இன்னேரம் அவ்விடத்திலே யிருக்கிற சாடையும் கரைவழியாய்த் தட்டு முட்டுகள் அனுப்பக் கூடாதபடிக்கி யிருக்கிற படியினாலேயும் பெண்டுகள் பிள்ளைகளை வெளியே அனுப்புகிற யெத்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறதிலேயும் இந்த வெள்ளைக் காரன் இங்கிலீசுக்காரர் பசுப்போடுது வாங்கிக் கொண்டு போறபடியினாலே சலங்கையின் பேரிலே பின்னையும் சிறிதுபேர் தமிழர் சிறிது பேர்களுட தட்டு முட்டுகளும் கட்டுக்கார திருவெங்கிடமும் யேறிப் போனானென்று சொல்லுகிறானே. இந்த யெத்தனம் செய்யலாம் போலே காணுது யென்று யோசிச்சு காலகெதிக்கு தக்கின புத்தியாய் நல்லது. நீ கூடப் போறியா வென்று கேட்டதுக்குத் தான் போறத்துக்கு சத்து யோசனையாய் பெண்டுகளை பிள்ளையளை அழைச்சுக் கொண்டு நானும் வெளியே போக வேணும் யென்று இருக்குறேன். தாங்கள் போகச் சொன்னால்ப் போறேன். இதுக்கு சங்கையில்லை பொட்டியும் மனுஷரையும் அனுப்புவியுங்களென்று சொன்னான்.

இன்னேரம் யிதை விட யோசனை வேறே தோத்தாத படியினாலே சிரஞ்சீவி அப்பாவுவை அழைப்பிச்சு இவனானால் யிப்படி சொல்லுகுறான் தட்டு முட்டெல்லாம் செம்மரப் பொட்டியிலே வைச்சு மாலப் பொட்டியிலே வைச்சிருக்கிறதே அதை முஸ்தீதுப் பண்ணி அனுப்பிவிடு யென்று சொன்னோம். அதிலே கொண்டப்ப செட்டி ஆறு மணி அடிக்கிற வேளையாச்சுதே சீக்கிரத்துக்கு அனுப்பி வியுங்களென்றும் நான் முன்னே போய் வெள்ளைக்காரனுடனே சொல்லி திட்டம் பண்ணி ஏத்தி அனுப்பிவிக்கிறேன் என்கிறதாய் சொல்லிப் போட்டுப் போனான். சுறுக்கிலே அனுப்பிவிக்கச் சொல்லிச் சொன்னேன். அந்தப்படிக்கி ஒரு மாலப் பொட்டியிலே வைச்சு முஸ்தீது பண்ணச்சே காளத்தி அம்மாள் தன்னுடைய தட்டுமுட்டு சகலமும் கொஞ்சம் ரூபாயும் ஆக ஒன்பது பையும் லக்ஷிமி அம்மாளுது தட்டு முட்டுகளும் வைச்சு முஸ்தீது பண்ணி சாவிபோட்டு கயத்தினாலே கட்டு பாரிசு முத்திரை மோதிரத்தாலே

முத்திரை போட்டு சாவியை பொன்மலை பிள்ளை கையிலே குடுத்து கஸ்தூரி செட்டியையுங் கூடக்கூட்டி படகிலே யேறிப் போய் சதிரப்பட்டணத்திலே எறக்கி மத்து வெங்கிடாசல செட்டி வீட்டிலே ஒரு பெரிய பொட்டி ஒண்ணு வாங்கி அதிலே வைச்சு நீங்கள் ரெண்டு பேரும் அங்கே யிருங்கோளென்று அறியப்பட குறி வைத்து அனுப்பிவிச்சோம். இவர்களும் பயணமாய் பொட்டியையும் யெடுத்துக் கொண்டு ஆறு மணிக்கிப் போனார்கள். பிற்பாடு சிறிது பவழ மூட்டையும் கல்லெழைச்ச உமா பக்ஷியும் வெளியிலே யிருந்து அதையும் சுப்பிரமணியன் கையிலே குடுத்து பொன்மலை பிள்ளை கஸ்தூரி செட்டி கையிலே குடுத்துப் படகு யேறின கபுறுக் கொண்டு வரவேணுமென்று அனுப்பிவிச்சோம்.

முத்து வீட்டிலே யிருந்து சிரஞ்சீவி குழந்தையுட தட்டு முட்டும் பின்னையும் சிறிது ரொக்கமும் ஒரு பையிலே போட்டுக் கட்டி முத்திரை போட்டு கந்தன் கையிலே குடுத்து அவனையும் கூடப் போகச் சொல்லி அனுப்பிவிச்சார்கள். யேழரை மணிக்கி சுப்பிரமணியன் வந்து சொன்னது படகு பயணமாய்ப் போச்சுது நம்முட பொட்டியும் பொன்மலை பிள்ளையும் சிறிது பொட்டியளும் கஸ்தூரி செட்டியும் யேறினார்கள். பின்னையும் சிறிது பொட்டிகளும் மூட்டையும் நிறை பாரமாய் யேறி சுகமாய்ப் போச்சுது. கட்டுக்கார திருவேங்கிடம் யேறினான். வெள்ளைக்காரருதும் தமிழருதுமாய் சிறிது பொட்டிகளும் மூட்டையும் யேறாமல் நின்னு போச்சுது யென்று சொன்னான். ஆனால் யிதுவரைக்கும் நமக்கு அபசவ்விய சக்கிரத்தினுட பலன் அல்லவா நடந்து வந்தது. இதுக்கு அனுபவம் இதுவரைக்கும் பாத்து வந்தது சரிப்பட்டுது. இந்த அபசவ்விய சக்கிரத்துனுடய அந்தியத்தினாலே இந்த கஷ்ட்ட காலமும் பட்டணத்துக்கு யிந்த விபத்தும் வந்திருக்குதென்றும், யிந்தப் பட்டணத்துக்கு நூதன பிறபுவும் பிலனும் வந்து இந்தப் பட்டணம் தப்பவேணும். இல்லாவிட்டால் நமக்கு யிந்தப் பட்டணத்தை விட்டு அப்புறம் பிறப்பட்டுப் போக சவணம் காணவேணும் இது யிந்த புறட்டாசி மாசம் 12 தேதிக்கி துவக்கி சவணம் காண வேணுமென்று பார்த்து இருந்ததாச்சுதே. அதுக்கு யின்னைய தினம் நம்முடய தட்டு முட்டுகள் சலனம் கண்டுது. ஆனால் யிந்த அபசவ்விய சக்கிர அந்தியத்திலே சகலமும் வறையரவாய் அடிபட்டுப்போம். சவ்விய சக்கிரம் விக்கிரம வருசம் பங்குனி மாசம் 21 தேதி முதல் வருகுதே. அது முதலாக சகலமும் நூதனமாய் வருமென்றும் பாத்திருந்ததால் அல்லவா. அது யினிமேல் அனுபோகத்திலேயே அறிய வேண்டியது.

இத்தனாள் முசே பனோவையும் கோபாலகிஷ்ண அய்யரையும் காவலிலே வைச்சார்கள். முசே கில்லியாரை நேத்து விசாரிக்கச் சொன்னார்கள்.

## ஜனவரி 1761

***1761 வருசம் செனவரி மாசம் தேதி 10; விக்கிறம வருசம் தை மாசம் தேதி 1; சனிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ஆறுமணிக்கி முசே லெறி துபாசி யெல்லாச்சியப் பிள்ளை (Ellachiya Pillai) வந்து மகாராச ராசஸ்ரீ பிள்ளையவர்களுக்கு சின்ன முதலி தன்னுட பெமீலுக்களை வெளியே அனுப்பிவிக்க நேத்து ராத்திரி பிறயத்தனம் பண்ணி விச்சதாகவும் அதுக்கு ஒரு சலங்கும் தயாறு பண்ணிக்கொண்டு அதிலே தட்டு முட்டுகளும் யேத்திப் போக அதுக்கு ஒரு கடுதாசியும் குடுக்க வேணும் யென்கிறதாய்ச் சொன்னாரென்று சொன்னான். அதன் பேரிலே நாம் கோட்டைக்கிப் போய் ஒரு படகு கூலிக்கு அமத்தவும் வேணுமென்று கோட்டைக்கிப் போனோம். அங்கே சின்ன முதலி சொன்னது, "சலங்கை யின்னம் பாய்கட்டி பயணப்பட்டுப் போகயில்லை. ஆனால் யின்னைய தினம் பிறப்பட்டுப் போமென்றும்" சொன்னான். அதன் பிறகு நாம் முசே வாலார்முவிடம் போயி சொன்னது ரொம்ப பெரிய சலங்கு ஒண்ணு ஏராளமான தட்டு முட்டு சாமானுகளெல்லாம் ஏத்தத் தக்கினதாக யிருக்கிற சலங்கு ஒண்ணு அழைப்பிச்சுக் குடுக்க வேணுமென்று முசே வலார்முவைக் கேட்டோம். அதுக்கு அவர் சொன்னது அவ்வளவு பெரிய சலங்கை உங்களுக்கு கூடாது. அதுவும் முசே லாலி உத்தாரம் ஆனால் பின்னை ஒரு படகு அம்தினாலும் அதைத் தள்ள மக்குவா (Fishermen) கிடைக்க மாட்டார்கள் யென்று சொன்னான்.

ஆனால் நாம் கடலோரம் போய் விசாரிப்போமா யென்று போனவிடத்திலே ராத்திரி போகுற சலங்கும் ஒன்று முஸ்தீது பண்ணிக் கொண்டு முசே பிளாக்குறு (M. Flacourt) அவ்விடத்திலே யிருந்து கொண்டிருந்தான். அவனைக் கண்டு பேசினயிடத்திலே ஒரு மனுஷராகிலும் யேத்தக் கூடாதென்று சொன்னான். அவ்விடத்திலே ஒரு கப்பல் பிலோத்தான் வந்தான். அவன் தானும் அவனும் சிறிதுபேர் வெள்ளைக்காரர்களும் யேறத் தக்கதாக ஒரு சலங்கும் ஒன்றும் விலைபேசி தீத்துக் கொண்டு யிருக்கிறவனைக் கண்டு பேசி சலங்குக்கு யென்னகிரையமும் யேறுகிற சிலவு நாளும் குடுக்கிறதாகவும் யெட்டுப்பேர் மறினோர்களும் அவர்கள் நாலு அஞ்சு பேர் மாத்திரம் யேரத்தக்கதாகவும் திட்டப்படுத்திக் கொண்டு பனிரெண்டு மணிக்கி ராசஸ்ரீ பிள்ளை அவர்களுடனே சொன்னதாகவும் அவர்களும் சீரம் ஸ்திதியிருக்கிறதைப் பார்த்துக் கொண்டு சலங்கின் பேரிலேயானால் சீரம் தாளமாட்டாது.

கரை வழியாய்ப் போறதுக்கு யென்ன யத்தினமோ அந்த யத்தனம் பார்க்கிறதே யல்லாமல் சலங்குக்கு யெத்தினம் பண்ணத் தேவையில்லை. வெள்ளைக்காரனுடனே சேர்ந்த சம்மதிக்கி சீக்கிரமாய்ப் போயி சொல்லிப் போங்களென்று சொன்னார்.

சாப்பாடு மூணு மணிக்கி சாப்பிட்டு மூணு மணிக்கி அந்த வெள்ளைக்காரனை கடலோரம் போய் தேடிக்கொண்டு கடலோரத்துக்குப் போகச்சே கோட்டைக்கி தென்னண்டையிலே யெதிரே வந்து அவர் சொன்னது நான் போய் யென்னுடனே கூடவர்களுடனே யோசனை பண்ணி நீங்கள் வருகிற படியினாலே சந்தடியாகாதென்று யெல்லாரையும் கழிச்சு விட்டு நாங்கள் நாலுபேர் மாத்திரம் வரத்தக்கதாயி திட்டப்படுத்தி சலங்கும் விலை தீத்து முசே லாலியவர்களைப் போயி உத்தாரம் கேட்டதுக்கு ஒரு வேளைக் கப்பல் வந்து சலங்கு வேறேயில்லை. ஆகையினாலே சலங்கு குடுக்கப்படாதே யென்று சொன்னார். அதனாலே பயணம் நிண்ணு போச்சுது யென்று சொன்னான். அதுக்குத் தக்கதாக உத்திரவாகச் சொல்லிப் போட்டு வளவுக்கு வந்துவிட்டோம்.

***1761 வருசம் செனவரி மாசம் தேதி 11; விக்கிறம வருசம் தை மாசம் தேதி 2; ஞாயத்துக்கிழமை***

இத்தனாள் காலமே மகாராசராசஸ்ரீ பிள்ளையவர்கள் யெழுந்திருந்து பல்லு துலக்கி விட்டுப்போட்டு நடுச்சாலையிலே நாற்காலியிலே உளுக்கார்ந்து கொண்டு யிருந்து ரெண்டு மணி நேரம் மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்புறம் படுத்துக் கொண்டார். பதினோரு மணிக்கி யெழுந்திருந்து அவர் எங்களைக் கூப்பிட்டு சொன்னது. எனக்கு யென்னத்தினாலேயோ ரொம்பவும் சரீரம் பலயீனமாயிருக்கிறது என்னமோ யென்று தெரியாது என்று சொன்னார். பின்னையும் என்னுடையே சுவாசம் எப்படியிருக்கிறதென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது வழக்கம் போலே தானிருக்குது யென்று சொன்னார்கள். நாங்கள் கொஞ்ச நாளாய் மனதுக்கு மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிற படியினாலேயும் அதனாலே சாப்பாடும் சரியாய் யெடுத்துக் கொள்ளாமலிருந்ததினாலேயும் சரீரம் ரொம்பவும் பலயீனமாயிருக்கிறதாய்க் காணுது. ஆகாரம் யில்லாததினாலேயும் சரீரம் ரெம்பவும் மெலிந்து பலயீனம் யென்றும் சொல்லிக் கொண்டு பேசிக் கொண்டிருக்கச்சே, வெள்ளைக்காரர்கள் வந்து நம்முடைய வீட்டிலே யிருக்கிற தென்ன மரத்தையும் வெட்டத் தக்கதாக வந்தார்கள். அதனாலே துரைகளண்டை போயி அவர்களுக்கு விசேஷம் சொல்லி வீட்டிலே கேழ்விப்பட்ட படிக்கி அவர்களுக்கு நாலு ரூபாயி இனாம் குடுத்துப்

போட்டு மனுஷரையும் வைச்சு வீட்டின் பேரிலே விழாதபடிக்கி வெட்டி வைத்துப் போட வேணுமென்று மத்தியானம் ஒரு மணிக்கி ஸ்ரீ பிள்ளையவர்கள் கொஞ்சம் சாப்பிட்டார்கள். பிற்பாடு படுத்துக் கொண்டார்.

சாயங்காலம் சரீரமானால் ரொம்பவும் ஆயாசமாயிருக்குது. நித்திரை பிடிக்கயில்லை. நாக்கு உலர்ந்து போகுது தாகம் காணுது யென்று சொன்னார். அப்படியானால் கருக்காறு போடுவோம் யென்று சொன்னதுக்கு நல்லது போடுங்கோளென்று சொன்னார். ராத்திரி யெட்டு மணிக்கி கருக்கும் வாங்கிக் கொண்டார். திரும்பவும் பத்து மணிக்கி ராத்திரியிலே யெங்களை அழைச்சு கருக்கு சாப்பிட்டதும் தாகம் அடங்கயில்லை. தண்ணீர் குடிப்போமா வென்று கேட்டார். தண்ணீர் சாப்பிடப் போகாதென்று யின்னம் ஒரு கருக்கு வைச்சு சாப்பிட்டால் தாவளையென்று சொன்னோம். நல்லது அப்படிதான் கொண்டு வாருங்கோளென்று சொன்னார். மறுபடியும் ஒரு கருக்கு வைச்சுக் கொடுத்தோம். பின்னும் சத்துநேரத்திலே யின்னம் தாகம் அடங்கயில்லை. நல்ல தண்ணீர் குடிப்போமா யென்று கேட்டார். குடிக்கப் போகாது யென்று பாக்குப்போட்டுக் கொண்டால் தேவலை போட்டுக் கொள்ளுங்கோ ளென்று சொன்னோம். போட்டுக் கொண்டால் திரவமேயில்லை வாண்டாம் யென்று சொன்னார். ஆனால் ரெண்டு நாழிகை பொறுத்து வென்னீராகிலும் குடிக்கலாமென்று சொன்னோம். நல்லது கொளத்துக்கு வருகுது போலே யிருக்குது. பெட்டி யெடுத்துக் கொண்டு வைக்கச் சொல்லு யென்று சொன்னார். அப்படியே பெட்டியைக் கொண்டு வந்து தாழ்வாரத்திலே வைத்த பிற்பாடு குளத்துக்கு யிருந்து கால் சுத்தம் பண்ணிக் கொண்டு நாற்காலியின் பேரிலே வந்து உளுக்கார்ந்தார். யிதுக்குள்ளாகக் கண்ட ஆயாசம் யெழுதி முடியாது. அப்போ யெங்களை அழைச்சு இப்போ குளத்துக்குப் போனேனே சீவன் போயி வந்தது. குளத்துக்கு யிருக்கச்சே ஆசனத்திலே நெருப்பாயிருந்தது. செத்துப் போறபேருக்கு அப்படி யிருக்குமோ வென்று கேட்டார். காங்கையினாலே கண்டு யிருக்க வேணுமென்று சொன்னார். இன்னம் விசாரியுங்கள் யென்று சொல்லிப்போட்டுப் போயி படுத்துக் கொண்டார். பிற்பாடு ரெண்டு மணிக்கி நாக்கை ரொம்ப உலர்ந்து போகுது தாகம் காணுது ஆயாசம் ரொம்ப காணுது. சரீரம் நிற்கமாட்டாது போலே யிருக்குது. உங்களுக்கேற்க என்னமாய்த் தோணுதென்று கேட்டார்.

சயித்தியம் கண்டிருக்குது போலே காணுது. ஆனபடியினாலே ஆரையாகிலும் அழைச்சுக் கொண்டு வந்து நல்ல மருந்து அதாவது பூபதியாவது சிந்தாமணி யென்கிற மருந்தாவது கொடுக்கச்

சொல்லவேணும் யென்று சொன்னோம். நல்லது யென்று முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு வந்து குடுக்கச் சொல்லுயென்றும் சொன்னார். அதன் பேரிலே நல்லதேன் அகப்படாத படியினாலே சேஷாசல செட்டி கையிலே போயி வாங்கிக் கொண்டு வந்து விசாரிச்சு அழைப்பித்துக் கொள்ளுகிறதுக்காகப் போயிருக்கிறதினாலே அது வருகுறதுக்குள்ளாக நம்முடைய வீட்டிலே யிருக்கிற தேனையும் கொஞ்சம் லவங்கமும் கலந்து பிசைஞ்சுக் கொண்டு போய் அவருக்கு குடுக்கத்தக்கினதாக யெடுத்துக் கொண்டு போனோம். அப்போ ஸ்ரீபிள்ளை யவர்கள் யெம்மாத்திரம் மணியுண்டு யென்று கேட்டார். அதுக்கு நாங்கள் சொன்னது இன்னேரம் அஞ்சு மணி வேளையிருக்குமென்று சொன்னேன். அதன் பேரிலே மருந்து சாப்பிடுகிறதை நிறுத்தி வைத்துப் போடுவோம். பொழுது விடியட்டும் பார்த்துக் கொள்ளுவோமென்று சொன்னார். பின்னையும் சேஷாசல செட்டியையும் அழைச்சனுப்பிவிச்சு கையைக் காண்பிச்சு அவிழ்தத்தை சாப்பிடாமல் சும்மா வையுங்களென்று சொன்னார்.

### *1761 வருசம் செனவரி மாசம் தேதி 12; விக்கிறம வருசம் தை மாசம் தேதி 3; திங்கள்கிழமை*

இத்தனாள் சூரிய உதயமானவுடனே மகாளி பிள்ளையவர்களை இசுப்பித்தால் முத்தியப்பிள்ளையையும் சேஷாசல செட்டியையும் அழைத்துக் கொண்டு வரச்சொல்லி விப்போமாவென்று கேட்டோம். நல்லது அழைத்து வரச்சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கி அழைத்து வரச்சொல்லி அவர்களண்டைக்கி மனுஷனை அனுப்பிவிச்சேன். ஆனால் யிப்போ ராத்திரிக்கு யிருந்ததைப் பார்க்கிலும் யிப்போ ரொம்ப லகுவாயிருக்குது. தந்த சுத்திப் பண்ணிக்கொள்ளுவோமென்று சொன்னார். அப்போ பெலன் வந்து இசுப்பித்தால் முத்தப்பிள்ளையை வரச்சொன்னார். தந்த சுத்தி பண்ணிக்கொள்ள கூடத்துக்கு கனப்பையின் பேரிலே வந்திருந்து கொண்டு தந்த வனம் பண்ணிக் கொண்டார். அப்போ பிலன் வந்தது. இசுப்பித்தால் முத்தப்பிள்ளை வெளியே பிறப்பட்டுப் போயி அஞ்சாறு நாளாச்சுதே யென்று சொன்னான். யிப்படி யிருக்கச்சே சேஷாசல செட்டி வருகிறதைக் கண்டு அவருடனே பின்னை யொன்றுஞ் சொல்லுவிக்க வேணுமென்று யிவர் வீட்டுக்கு நாம் போறதுக்கு பல்லக்குக் காரரை அழைத்து வரப்போறானென்று சொல்லுங்கோ ளென்று சொன்னார். அப்படி யிருக்கச்சே சேஷாசல செட்டியும் வந்தார். வந்து நாற்காலியின் பேரிலே உளுக்கார்ந்தார். பிற்பாடு ராத்திரி சாப்பிட யில்லையா வென்று கேட்டார். சாப்பிட்டேனென்று சொன்னார். ஆனால் கையைப் பாருமென்றும் கையை நீட்டினார். எனக்கு தாது தெரியாதென்று

சொன்னார். அப்படியா உம்முடைய வளவுக்கு வருகுறதுக்கு பல்லக்குக்காரர் வருகுறார்கள். பின்னே சீக்கிரத்துக்குப் போயி கட்டில் பூட்டினதெல்லாம் முஸ்தீதுப் பண்ணிவையுமென்று சலுதியாகப் போகச் சொன்னார். அவரும் அப்படியே முஸ்தீப்பு பண்ணுகிறேனென்று போயிவிட்டார். பிற்பாடு அவருக்கு தாது தெரியாதே அவருடனே சொல்லவேண்டிய தென்ன யிருக்குது. பின்னையாராகிலும் தாது தெரிந்தவர்களாயிருந்தால் அனுப்பியுங்கோ ளென்று சொன்னார். அப்போ விசாரிக்குமிடத்திலே சரவண முதலிக்கி கொஞ்சம் தெரியுமென்று சொன்னார்கள். அவரை அழைத்து வரச்சொல்லி ஆள் அனுப்பிவித்தேன். அவனில்லை வெள்ளைக்காரத் தெருவுக்கு போயிருக்குரானென்று சொன்னார்கள். பிற்பாடு அவனை அழைப்பித்து வரச்சொல்லி தன்னண்டை கூப்பிட்டு அவனிடம் தன்னுட நாவை நீங்கள் தொட்டுப் பாருங்கோளென்று சொன்னதாகவும் அப்போ சத்து திரவம் குறைந்து வருகுறது. ஆனால் நேத்து ராத்திரி யிருந்த வரட்சை யிப்போ யில்லை யென்றும் சொன்னாரென்று சொன்னேன். ஆகையினாலே நான் கொஞ்சம் மருந்து சாப்பிடலாமென்று கேட்டார். நல்லது ராத்திரி முஸ்தீப்பு பண்ண மருந்து சாப்பிட்டால் தேவலை யென்று சொன்னேன். அதிலே யென்ன யிருக்குது. அவிழ்தத்தை சாப்பிட்டா மாத்திரம் செத்துப்போறவன் யிருப்பானா? அவிழ்தம் சாப்பிடாமலிருந்து செத்துப் போகாதவன் செத்துப் போவானா பிற்பாடு பார்த்துக் கொள்ளுவோமென்று சொல்லி படுத்துக் கொண்டார்.

பிற்பாடு பத்து மணிக்கி சின்ன முதலி வந்து பெண்டுகளைக் கொண்டு போயி விட்டுப்போட்டு வருகிறேன். சிதம்பரனாத பிள்ளைக்கு காகிதம் குடுத்திருந்ததைக் கொண்டு போயி அவர் கையிலே குடுத்து அவர் மாரிபத்திலே யாகிலும் பின்னை யார் மாரிபத்தினாலேயும் வழிதிட்டப்படுத்திக் கொண்டு நாளையதினம் வந்து சேருகுறேன் யென்று சொன்னான். அந்த சேதி பிள்ளையவர்களுடனே சொன்னேன். நல்லது சிதம்பரநாத பிள்ளைக்கி யெழுதுகிற காகிதத்திலே உமக்கு யெத்தனை மனுஷரை அனுப்பிவிச்சும் ஒன்றுக்கும் நீர் ஒன்றும் கவைப்படுத் தாமலிருக்கிறீர். இனிமேல் யென்னை நீர் யென்னைப் பார்க்கமாட்டீர் யென்று யிது கண்டிப்பான உத்திரவாக யெழுதி யனுப்பிவியுங்களென்று சொன்னார். அப்படியே யெழுதி ஒப்பம் போட வேண்டியதற்கு கொண்டு வந்து குடுத்தேன். படுத்திருந்தவர் யெழுந்திருந்து உளுக்'கார்ந்து கொண்டு ரெண்டு கதவையும் திறந்து விடச்சொல்லி மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு அந்தக் கடுதாசியிலே யிதுவே கடைசி கடுதாசியாகப் பார்த்துக் கொள்ளவும் யென்று யெழுதியும்

கையெழுத்தும் போட்டார். நான் கடுதாசியைப் பார்த்து என்ன யிப்படி யெழுதி யிருக்கிறார் யென்று யெண்ணிக் கொண்டு அந்தக் கடுதாசியை லக்கோடாப் பண்ணி சரவண முதலி கையிலே குடுத்து அனுப்பிவித்தோம். பிற்பாடு சரீரம் ரொம்ப ஆயாசம்.

---

